உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# புள்ளிருக்குவேளூர்த் தேவாரம், திருப்புகழ், முத்துக்குமாரசுவாமி திருவருட்பா. தனிப்பாடல்கள்.

இவை

வைத்தீசுரன் கோயில்

ச. சோமசுந்தர தேசிகரால்



சிதம்பரம் சண்முகசுந்தர விலாசம் பிரசில்

பதிப்பிக்கப்பட்டன.

1929.

ப. முத்துக்குமாரசாமி.
பல்கலைக் கல்லூரி — தருமபுரம்
26.6.1956

உ

# இதிலடங்கியவை.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# முகவுரை



## திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார்

### தேவாரம்

"கள்ளார்ந்த பூங்கொன்றை மதமத்தங் கதிர்மதியம்
உள்ளார்ந்த சடைமுடியெம் பெருமானா ருறையுமிடந்
தள்ளாய சம்பாதி சடாயென்பார் தாமிருவர்
புள்ளானார்க் கரையனிடம் புள்ளிருக்கு வேளூரே"

வேதாகம புராணேதிகாச முதலிய கலைகளுக்கும் எட்டாத சுத்த சாட்குண்ணிய பரிபூரண பதியாகிய பரமசிவன் ஆன்மாக்கண்மீது முகிழ்த்த பெருங் கருணையினாலே அவ்வான்மாக்கட் குண்டாகும், நாலாயிரத்து நானூற்று நாற்பத்தெட்டு வியாதிகளையுந் தீர்த்து, வேண்டிய வரங்களைக் கொடுத்து அனுக்கிரகஞ்செய்து உய்வித்தற் பொருட்டு வைத்தியக் கோலங் கொண்டு தையலம்மை தைலபாத்திரமுஞ் சஞ்சீவி வில்வமண் மருந்தும் எடுத்துக் கொண்டு உடன்வரக் கைலையினின்றும் எழுந்தருளி வந்து வெள்ளெருக்குவனமாகிய புள்ளிருக்குவேளூராம் வைத்தீசுரன் கோவிலென்னுந் தலத்தில் வீற்றிருந்து தம்மிடம் வந்து வேண்டுதல் செய்கின்ற அடியார்களுடைய உடல்

* மந்திரமுந் தந்திரமும் மருந்துமாகித் தீராநோய் தீர்த்தருளவல்லான் என்பது இங்கே சிந்திக்கற்பாலது.

நோயையும் உயிர் நோயையும் நீக்கி அவர்களுக்கு இன்ப வாழ்வு அளிக்கின்றாரென்பது புராணப் பிரசித்தமாகலானும், அது வைத்தீசுரன் கோயிலென்னுந் தலப்பெயரானும், வைத்தியநாதர் என்னும் சுவாமி திருப்பெயரானும் நன்றாய் அறியப்படுதலாலும், தரிசித்தன் மாத்திரத்தே முத்திதரும் சிதம்பரம் முதலிய திவ்ய மஹா ஸ்தலங்களிற் பிறந்தவர்களும், வசிக்கின்றவர்களும் பேய் பிடித்தல், நோய் பிடித்தல் முதலியவற்றால் வருத்தமுறுங் காலங்களில் புள்ளிருக்குவேளூருக்கே சென்று வைத்தியநாதரைத் தரிசித்து வணங்கி வரங்கிடந்து அவ்வத் துன்பங்கள் நீங்குமாறு பிரார்த்தித்துக் குறித்தகாலத்தில் அவை நீங்கப் பெற்றுப் பெருமகிழ்ச்சியோடு தத்தந்தலங்கட்குச் செல்லுதலை இன்றுங் காண்கின்றோமாகலாலும், சிவபெருமான் தமது அருட்சத்தியாகிய தையனாயகியம்மையைப் பார்த்தருளி, பூமியிலுள்ள பற்பல சிவஸ்தலங்களுள்ளும் மதுரை, திருக்கேதாரம், திருவானைக்கா, திருவாஞ்சியம், வைத்தியநாதம் என்னும் ஐந்தும் விசேஷித்தன; அவற்றுள்ளும் மதுரை இகபோகத்தையும் சீவன் முத்தியையும் தன்கண் வாழ்வார்க்குக் கொடுத்து முடிவில் பரமுத்தியையும் கொடுத்தலால் மிக விசேஷத் தலமென்றும், அதிலும் வைத்தியநாத ஸ்தலம் இப்பலன்களைக் கொடுத்தலோடு முத்துக் குமாரன் அவதாரஞ் செய்தமையால் நம்மால் விரும்பப்பட்ட மிக விசேஷ ஸ்தலமென்றும் திருவாய் மலர்ந்தருளினமையானும், தையனாயகியம்மை, சுப்பிரமணியக் கடவுள், பிரமதேவர், இந்திரன், சந்திரன், சூரியன், சடாயு, முதலியோர் பூசைசெய்து வேண்டிய வரங்களைப் பெற்றுக்கொண்ட ஸ்தலமாதலாலும், வைத்தீஸ்வரன் கோயிலாகிய புள்ளிருக்குவேளூர் எவராலுஞ் சொல்லுதற்

கரிய மகா மஹிமை பொருந்திய, திவ்விய ஸ்தலமென் பது எவர்க்குந் தெற்றெனவிளங்கும்.

இன்னும் அதன்பெருமை திருஞானசம்பந்தமூர்த்திநா யனார் திருவாய்மலர்ந்தருளிய "கள்ளார்ந்த பூங்கொன்றை" என்பதை முதலாகவுடைய திருப்பதிகத்தானும் "திருநா வுக்கரசுநாயனார் திருவாய் மலர்ந்தருளிய 'வெள்ளெருக் கர வம்விரவுஞ்சடை" என்பதை முதலாகவுடைய திருப்பதிகத் தினாலும் "ஆண்டானை அடியேனை" என்பதை முதலாக வுடைய திருப்பதிகத்தானும் நன்குக அறியலாம்.

இத்துணை மகிமை வாய்ந்த புள்ளிருக்கு வேளூர்த்தல புராணம் இவ்விவ் வடமொழிப் புராணங்களிலிருந்தெடுத் துத் தொகுத்துக் கூறப்பட்டதென்பது

எண்ணியிடு புராணமீ ரொன்பதனிற்
புள்ளிருக்கு வேளூ ரென்னும்
புண்ணியநற் றலமகிமை பவிடியமேற்
பிரமாண்ட புராணங் காந்தம்
வண்மைபெறு சைவபுரா ணதநின்வகுத்
தெடுத்து முனிவார்கள் கேட்ப
வுண்மைபெற முழுதுணர்ந்த சூதமா முனிவன்
மகிழ்ந் துரைத்தல் செய்தான்

என்னுஞ் செய்யுளால் அறிக.

இப்புராணம் ஏறக்குறைய நாற்பத்தைந்து வருடங்களு க்குமுன் அச்சிட்டு வெளிப்படுத்தப்பட்டதாயினும் இப் போது கிடைக்காமையான் பல அன்பர்கள் அப்புராணத் தை வசனத்தோடு அத்தலத்திற்குரிய பிரபந்த முதலியவற் றைச் சேர்த்து சுத்தமாக அச்சிட்டு வெளிப்படுத்தவேண்டு மென்று வற்புறுத்திக் கூறினர்கள். கீழைச்சிவல்பட்டி மு.சா.மு.மு. சொக்கலிங்க செட்டியாரவர்கள் பன்முறை

என்னைத்தூண்டினமையாலும், எனக்கும் அக்கருத்து இயல்பாக உண்மையானும் எனது அறிவுச்சுருக்கத்தை நோக்காது அவ்வாறு செய்யக்கருதி முதனூலைத் தேடிப்பெற்று பிரம்மஸ்ரீ சுப்பிரமணிய சாஸ்திரிகளை வைத்துக்கொண்டு வழிநூலோடு ஒப்புநோக்கி, சுருங்கச்சொல்லல் என்னும் வனப்புப்பற்றி வழி நூலாசிரியர் சுருக்கியவற்றுள் விஷய விளக்கத்திற்கு வேண்டியவற்றை முதனூலிலும் பிறபுராணங்களிலுமிருந்தெடுத்து வசனமெழுதும்போது ஆங்காங்குப் பொருத்தமான இடங்களில் சேர்த்து நன்றாக விளங்கும்படி எழுதியிருக்கின்றேன். ஆதலால் வழிநூலில் இவைகள் காணப்படவில்லையேயென்று ஐயுறவேண்டாம்.

யான் புள்ளிருக்கு வேளூர்ப்புராண ஏட்டுப் பிரதி தேடும்போது ஸ்ரீமத் தி. சோமசுந்தர தேசிகர், கூறைநாடு ம-ா-ா-ஸ்ரீ இராமசாமிச் செட்டியாரவர்களிடமிருந்து ஒரு ஏட்டுப்பிரதி வாங்கித் தந்தனர். அதனை வேணவாவோடு பார்த்தபோது அது சடாயுபுரிப் புராணமாகக் காணப்பட்டது. அங்ஙனமாயினும் புள்ளிருக்கு வேளூர்ப் புராண பரிசோதனைக்கு அது மிக உபகாரமாயிருந்தது. அது நிற்க, வடமொழி முதனூலையும் சடாயுபுரிப் புராணத்தையும் அச்சிடுதற்குக் கருதி யிருக்கின்றேன். சைவ சமயிகள் என்னை ஊக்கி வேலை கொள்ளும்படி சிவபெருமான் திருவருள் புரிவாராக.

---

## ஸ்ரீலஸ்ரீ சுவாமிநாத பண்டிதரவர்கள் செய்த பேருதவி.

இவர்கள், ஏறக்குறைய எட்டு வருடங்களாகச் சிவஞானபோதமாபாடியம் அச்சிடுதற்காகத் தமிழிலும் சமஸ்கிருதத்திலுமுள்ள பிரமாண நூல்கள் தேடி, பிரம்மஸ்ரீ

செந்திநாதையரவர்களைச் சமஸ்கிருத நூலாராய்ச்சிக்குத் துணையாகக் கொண்டு எழுத வேண்டியவற்றை எழுதி வருங்காலத்து அவர்கள் சிவபத மடைந்தார்கள். பின், பிரமஸ்ரீ அ. அருணாசல சாஸ்திரிகளைத் துணைக்கொண்டு அவ்வேலைகளைச் செய்கின்றார்கள். அதனோடு தேவாரம் இரண்டாம் பதிப்பிற்குரிய வேலையுஞ் செய்கின்றார்கள். இவைகளேயன்றி, செந்திநாதைய ரவர்களிடமிருந்து பிற் காலத்தில் தாம் பெற்றுக்கொண்ட மகுடாகம முதலிய ஆகமங்களையும் தமிழ்ச் சைவசித்தாந்த நூல்களையும் அச்சிட்டுச் சைவவுலகத்திற்குப் பயன்படுத்த வெண்ணிச் சாஸ் திரிகளைக் கொண்டு வடமொழி யாகமங்களைப் பரிசோதிப் பிக்கின்றார்கள். தமிழ் நூல்களைத் தாம் பரிசோதிப்பிக் கின்றார்கள். இன்னும் சைவசமயிகள் பிரசங்க முதலிய நல்ல காரியங்களுக்கு அழைத்தால் கஷ்டநஷ்டங்களைச் சிறிதும் கருதாது போகவேண்டிய தலங்களுக்குப் போய் அத்தொண்டுகளையும் செய்கின்றார்கள். இங்ஙனமாகவும் யான் புள்ளிருக்குவேளூர்ப் புராண முதலியன பரிசோ திக்க ஆரம்பித்த காலந்தொடங்கி அச்சிட்டு முடிகிறவரை விரும்பிய போதெல்லாந் தமது அரும்பெரும் வேலைகளை நிறுத்திவிட்டு அவ்வப்போதுவந்து கூடஇருந்து தமது பொ ருளைச் செலவழித்துக்கொண்டு வித்தை விஷயத்தில் செய்த பேருபகாரம் என்றும் என்னுள்ளத்தை விட்டகலாது.

இனி, அவ்வுபகாரம் எனக்குமாத்திரமன்று, உலகத் திற்குஞ் செய்த உபகாரமாய் முடிந்தமையின், அது, அறி வுள்ள உலகத்தாருள்ளத்திலும் என்று நின்று நிலவுமென் பது எனது துணிவு.

உடல்பொருள் ஆவி மூன்றையும் பொது நன்மை சிறப்பு நன்மைகளுக்கே ஒப்பித்து, “ தனக்கென வாழாப்

பிறர்க்குரி யாளராய் வாழ்பவர்" என்பது உலகப் பிர சித்தம்

"இப்பெருங் கொடிய பாவ விருஙகலி" யுகத்திலே, இத்தகைய பரம தருமங்களை உலோகோப காரமாகச் செய்து பயனடைவிக்கும் பண்டிதரவர்கள் எடுத்துக் கொண்ட ஞானசாத்திர வெளியீடும், திருச்செந்தூர்ச் சுப்பி ரமணிய வித்தியாசாலையின் எஞ்சியபாகமும் பூர்த்தியாகும் வண்ணமும், பூரண ஆயுளோடிருந்து சைவவிருத்தி தமிழ்க் கல்விவிருத்திகளை மேலும் மேலுஞ் செய்து உலகிற்குப் பெருநன்மை பயக்கும்வண்ணமும் பேரருள்செய்யவேண்டு மென்று எல்லாம் வல்ல இறைவராகிய வைத்தியநாதர், வாலாம்பிகை, முத்துக்குமாரர் என்னு மூவராகிய எகரு டைய பூவடி முடிமிசைப்புனைந்து போற்றுகின்றேன்.

நான் வைத்தீசுரன் கோயிலிலிருந்து தெரிவித்த வண் ணம் இந்நூல்களை அச்சுக்கூடத்திற் கொடுத்து அச்சிடு வித்துப் புரூப்பார்த்துத் திருத்தித் தங்கள் சிரமத்தை நோக்காது அச்சுக்கூடத்திற்குச் சென்று கவனித்துச் சிறப்புற அச்சிடுவித்துதவிய சென்னை மயிலாப்பூர் தமிழ்ப் பண்டிதர் ஸ்ரீ சோமசுந்தரம் பிள்ளை யவர்களும் அவர்கள் தம்பியார் போஸ்ட்மாஸ்ட்டர் ஜெனரல் ஆபீஸ் உத்தியோ கம் ஸ்ரீ ஜம்புலிங்கம்பிள்ளையவர்களும் ஸ்ரீ சிவப்பிரகாச தேசி காவர்களும் ஸ்ரீ குஞ்சிதபாத தேசிகரவர்களும் என்னுட னிருந்து புரூப் பார்த்துதவி செய்த நன்றி மறக்கற்பால தன்று. இவர்கள் சந்ததி பெருகிப் பூரணாயுளோடு எல்லாச் செல்வமும் ஒல்காது பெற்று என்றும் நல்வாழ்வடையும் வண்ணம் பேரருள் சுரக்குமாறு கலியுக வாதர் ஒலி கழற் சேவடி ஒருவாதுளத்து மருவுதல் செய்கின்றேன்.

# பொருளுதவி செய்தவர்கள்.

திருப்பனந்தாள்.

ஸ்ரீலஸ்ரீ, சொக்கலிங்க சுவாமிகள்.

வரவுகுடி.

ம-ா-ா-ஸ்ரீ. அம்பலவாணபிள்ளையவர்கள்
,, திருவேங்கிடம் பிள்ளையவர்கள்.

வைத்தீசுவரன் கோவில்.

தமிழ்வேத பாராயணம் தேவாரக் கோஷ்டி பரிபாலகர்
,, பசு. பழ பழநியப்ப செட்டியாரவர்கள்

நகர அன்னதானமடம் விசாரணை.

,, எ. பெரி. கரு சித. பெரிய கறுப்பன் செட்டியாரவர்கள்

அன்னசத்திரம்.

,, தூ. ராம. சித. சிதம்பரஞ் செட்டியாரவர்கள்

பாடசாலை.

,, பி. கு. நா. நாகப்ப செட்டியாரவர்கள்

வேதபாராயணம்.

,, மு. குப. மு. சிதம்பரஞ் செட்டியாரவர்கள்

கானாடுகாத்தான்.

,, மு. சித. மு. முத்தைய செட்டியாரவர்கள்

கீழச்சிவல்பட்டி.

,, மு சா. மு.மு. சொக்கலிங்கஞ்செட்டியாரவர்கள்

நெற்குப்பை.

,, சுப.மு.சுப. சுப்பிரமணியஞ் செட்டியாரவர்கள்

இவர்கள் செய்த நன்றியையும் என்றும் மறவேன்.

ச. சோமசுந்தர தேசிகர்.

திருச்சிற்றம்பலம்.

# புள்ளிருக்குவேளூர்த்தேவாரம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

### இரண்டாந்திருமுறை. பண்—சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

**க**ள்ளார்ந்த பூங்கொன்றை மதமத்தங் கதிர்மதியம்
உள்ளார்ந்த சடைமுடியெம் பெருமானா ருறையுமிடம்
தள்ளாய சம்பாதி சடாயென்பார் தாமிருவர்
புள்ளானார்க் கரையனிடம் புள்ளிருக்கு வேளூரே. க

**தை**யலா ளொருபாகஞ் சடைமேலா ளவளொடும்
ஐயந்தேர்ந் தழல்வாளோ ரந்தணா ருறையுமிடம்
மெய்சொல்லா விராவணனை மேலோடி யீடழித்துப்
பொய்சொல்லா துயிர்போனான் புள்ளிருக்கு வேளூரே. உ

**வா**சநலஞ் செய்திமையோர் நாடோறு மலர்தூவ
வீசனெம் பெருமானா ரினிதாக வுறையுமிடம்
யோசனைபோய்ப்பூக்கொணர்ந்தங்கொருநாளுமொழியாமே
பூசனைசெய் தினிதிருந்தான் புள்ளிருக்கு வேளூரே. ௩

**மா**காயம் பெரியதொரு மானுரிதோ லுடையாடை
ஏகாய மிட்டுகந்த வெரியாடி யுறையுமிடம்
ஆகாயந் தேரோடு மிராவணனை யமரின்கண்
போகாமே பொருதழித்தான் புள்ளிருக்கு வேளூரே. ச

---

௩. சடாயு இத்தலத்திற்குக் காததூரத்திலுள்ள காவிரிப்பூம் பட்டினத்தில் தன்றமையன்சம்பாதி உண்டாக்கிய நந்தனவனத்தில் நாடோறுஞ் சென்று புட்பமெடுத்து வந்து வைத்தியநாதரைப் பூசை புரிந் திருந்தமையின் "யோசனை போய்ப்பூக்கொணர்ந்தங் கொருநாளுமொழியாமே பூசனைசெய் தினிதிருந்தான்" எனப் பட்டது.

கீதத்தை மிகப்பாடு மடியார்கள் குடியாகப்
பாதத்தைத் தொழநின்ற பரஞ்சோதி பயிலுமிடம்
வேதத்தின் மந்திரத்தால் வெண்மணலே சிவமாகப்
போதத்தால் வழிபட்டான் புள்ளிருக்கு வேளூரே. ரு

திறங்கொண்ட வடியார்மேற் றீவினைநோய் வாராமே
அறங்கொண்டு சிவதன்ம முரைத்தபிரா னமருமிடம்
மறங்கொண்டங் கிராவணன்றன் வலிகருதி வந்தானைப்
புறங்கண்ட சடாயென்பான் புள்ளிருக்கு வேளூரே. சா

அத்தியினீ ருரிமூடி யழகாக வனலேந்திப்
பித்தரைப்போற் பலிதிரியும் பெருமானார் பேணுமிடம்
பத்தியினால் வழிபட்டுப் பலகாலந் தவஞ்செய்து
புத்தியொன்ற வைத்துகந்தான் புள்ளிருக்கு வேளூரே. எ

பண்ணொன்ற விசைபாடு மடியார்கள் குடியாக
மண்ணின்றி விண்கொடுக்கு மணிகண்டன் மருவுமிடம்
எண்ணின்றி முக்கோடி வாணாள துடையானைப்
புண்ணொன்றப்பொருதழித்தான்புள்ளிருக்குவேளூரே, அ

வேதித்தார் புரமூன்றும் வெங்கணையால் வெந்தவியச்
சாதித்த வில்லாளி கண்ணாளன் சாருமிடம்
ஆதித்தன் மகனென்ன வகன்ஞாலத் தவரோடும்
போதித்த சடாயென்பான் புள்ளிருக்கு வேளூரே. கூ

கடுத்துவருங் கங்கைதனைக் கமழ்சடையொன் றாடாமே
தடுத்தவரெம் பெருமானார் தாமினிதா யுறையுமிடம்
விடைத்துவருமிலங்கைக்கோன்மலங்கச்சென்றிராமற்காய்ப்
புடைத்தவனைப்பொருதழித்தான்புள்ளிருக்குவேளூரே. ௧0

கூ. அவர் – இராமர் இலட்சுமணர். ௧0. விடைத்து – கோபித்து.

செடிபாய வுடறீர்ப்பான் றீவினைக்கோர் மருந்தாவான்
பொடியாடிக் கடிமைசெய்த புள்ளிருக்கு வேளூரைக்
கடியார்ந்த பொழிற்காழிக் கவுணியன்சம் பந்தன்சொல்
மடியாது சொல்லவல்லார்க் கில்லையா மறுபிறப்பே. கக

திருச்சிற்றம்பலம்.

## திருநாவுக்கரசுநாயனுர்.

### ஐந்தாந்திருமுறை. திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

வெள்ளெ ருக்கர வம்விர வுஞ்சடைப்
புள்ளி ருக்குவே ளூரரன் பொற்கழல்
உள்ளி ருக்கு முணர்ச்சியில் லாதவர்
நள்ளி ருப்பர் நரகக் குழியிலே. க

மாற்ற மொன்றறி யீர்மனை வாழ்க்கைபோய்க்
கூற்றம் வந்துமைக் கொள்வதன் முன்னமே
போற்ற வல்லீரேற் புள்ளிருக் குவேளூர்
சீற்ற மாயின தேய்ந்தறுங் காண்மினே. உ

அரும றையனை யாணொடு பெண்ணனைக்
கருவி டம்மிக வுண்டவெங் கண்டனைப்
புரிவெண் ணூலனைப் புள்ளிருக் குவேளூர்
உருகி நைபவ ருள்ளங் குளிருமே. ந

தன்னு ருவையொ ருவர்க்க றிவொணு
மின்னு ருவனை மேனிவெண் ணீற்றனைப்
பொன்னு ருவனைப் புள்ளிருக் குவேளூர்
என்ன வல்லவர்க் கில்லையி டர்களே. ச

செங்கண் மால்பிர மற்கும றிவொணா
அங்கி யின்னுரு வாகிய ழல்வதோர்
பொங்க ரவனைப் புள்ளிருக் குவேளூர்
மங்கை பாகனை வாழ்த்தவ ருமின்பே. ௫

குற்ற மில்லியைக் கோலச்சி லையினாற்
செற்ற வர்புரஞ் செந்தழ லாக்கியைப்
புற்ற ரவனைப் புள்ளிருக் குவேளூர்
பற்ற வல்லவர் பாவம்ப றையுமே ௬

கையி னோடுகால் கட்டியு மரெலாம்
ஐயன் வீடின னென்பதன் முன்னநீர்
பொய்யி லாவரன் புள்ளிருக் குவேளூர்
மையு லாவிய கண்டனை வாழ்த்துமே. ௭

உள்ள முள்கி யுகந்து சிவனென்று
மெள்ள வுள்க வினைகெடு மெய்ம்மையே
புள்ளி னார்பணி புள்ளிருக் குவேளூர்
வள்ளல் பாதம் வணங்கித் தொழுமினே. ௮

அரக்க னார்தலை பத்து மழிதர
நெருக்கி மாமலர்ப் பாத நிறுவிய
பொருப்ப னுருறை புள்ளிருக் குவேளூர்
விருப்பி னாற்றொழு வார்வினை வீடுமே. ௯

திருச்சிற்றம்பலம்.

## ஆறாந் திருமுறை. திருத்தாண்டகம்.

---

திருச்சிற்றம்பலம்.

ஆண்டானை யடியேனை யாளாக் கொண்டு
வடியோடு முடியயன்மா லறியா வண்ணம்
நீண்டானை நெடுங்களமா நகரான் றன்னை
நேமிவான் படையானீ ரூரவோ னாகங்
கீண்டானைக் கேதார மேவி னானைக்
கேடிலியைக் கிளர்பொறிவா ளரவோ டென்பு
பூண்டானைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே யாற்றநாள் போக்கி னேனே. க

சீர்த்தானைச் சிறந்தடியேன் சிந்தை யுள்ளே
திகழ்ந்தானைச் சிவன்றன்னைத் தேவ தேவைக்
கூர்த்தானைக் கொடுநெடுவேற் கூற்றந் தன்னைக்
குரைகழலாற் குமைத்துமுனி கொண்டவச்சம்
பேர்த்தானைப் பிறப்பிலியை யிறப்பொன் றில்லாப்
பெம்மானைக் கைம்மாவி னுரிவை பேணிப்
போர்த்தானைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே யாற்றநாள் போக்கி னேனே. உ

பத்திமையாற் பணிந்தடியேன் றன்னைப் பன்னாட்
பாமாலை பாடப் பயில்வித் தானை
எத்தேவு மேத்து மிறைவன் றன்னை
யெம்மானை யென்னுள்ளத் துள்ளே யூறும்
அத்தேனை யமுதத்தை யாவின் பாலை
யண்ணிக்குந் தீங்கரும்பை யரனை யாதிப்
புத்தேளைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே யாற்றநாள் போக்கி னேனே. ந

இருளாய வுள்ளத்தி னிருளை நீக்கி
யிடர்பாவங் கெடுத்தேழை யேனை யுய்யத்
தெருளாத சிந்தைதனைத் தெருட்டித் தன்போற்
சிவலோக நெறியறியச் சிந்தை தந்த
அருளானை யாதிமா தவத்து ளானை
யாறங்க நால்வேதத் தப்பா னின்ற
பொருளானைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே யாற்றநாள் போக்கி னேனே. ச

மின்னுருவை விண்ணகத்தி லொன்றாய் மிக்கு
வீசுங்கா றன்னகத்தி லிரண்டாய்ச் செந்தீத்
தன்னுருவின் மூன்றாய்த் தாழ்புனலி னான்காய்த்
தரணிதலத் தஞ்சாகி யெஞ்சாத் தஞ்ச
மன்னுருவை வான்பவளக் கொழுந்தை முத்தை
வளரொளியை வயிரத்தை மாசொன் றில்லாப்
பொன்னுருவைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே யாற்றநாள் போக்கி னேனே. ரு

அறையார்பொற் கழலார்ப்ப வணியார் தில்லை
யம்பலத்து ணடமாடு மழகன் றன்னைக்
கறையார்மூ விலைநெடுவேற் கடவு டன்னைக்
கடனாகைக் காரோணங் கருதி னானை
இறையானை யென்னுள்ளத் துள்ளே விள்ளா
திருந்தானை யேழ்பொழிலுந் தாங்கி நின்ற
பொறையானைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே யாற்றநாள் போக்கி னேனே. சா

---

ச. இருளாயவுள்ளத்தின் என்புழி ஆய உவமவுருபு. இருள் ஆய இருள், உள்ளத்தின் இருள் எனத்தனித்தனிகூட்டுக. இருள் இரண்டனுள் முன்னையது பூதவிருள், பின்னையது அஞ்ஞானம்,

நெருப்பனைய திருமேனி வெண்ணீற் ருனை
நீங்காதென் னுள்ளத்தி னுள்ளே நின்ற
விருப்பவனை வேதியனை வேத வித்தை
வெண்காடும் வியன்றுருத்தி நகரு மேவி
இருப்பவனை யிடைமருதோ டங்கோய் நீங்கா
விறையவனை யெனையாளுங் கயிலை யென்னும்
பொருப்பவனைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றுதே யாற்றநாள் போக்கி னேனே. எ

பேராயி ரம்பரவி வானோ ரேத்தும்
பெம்மானைப் பிரிவிலா வடியார்க் கென்றும்
வாராத செல்வம் வருவிப் பானை
மந்திரமுந் தந்திரமு மருந்து மாகித்
தீராநோய் தீர்த்தருள வல்லான் றன்னைத்
திரிபுரங்க டீயெழத்திண் சிலைகைக் கொண்ட
போரானைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றுதே யாற்றநாள் போக்கி னேனே. அ

பண்ணியனைப் பைங்கொடியாள் பாகன் றன்னைப்
படர்சடைமேற் புனல்கரந்த படிறன் றன்னை
நண்ணியனை யென்னாக்கித் தன்னா னானை
நான்மறையி னற்பொருளை நளிர்வெண் டிங்கட்
கண்ணியனைக் கடியநடை விடையொன் றேறுங்
காரணனை நாரணனைக் கமலத் தோங்கும்
புண்ணியனைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றுதே யாற்றநாள் போக்கி னேனே. கூ

அ. பேர் ஆயிரத்தைச் சகத்திரநாமத்துட்காண்க. பெயர் பேரென்றாயது. பரவுதல் –சொல்லுதல். பிரிவிலாவடியார் –அத்துவிதமாகக்கலந்த பத்தர். வாராத செல்வம் – முன்னொருகாலத்தும் அநுபவத்திற்கு வ ர ா த முத்திச்செல்வம். இக்கருத்தேபற்றி "நுகர்ச்சியிலுலகம்'' என்றார் பிறரும்.

இறுத்தானை யிலங்கையர்கோன் சிரங்கள் பத்து
மெழுநரம்பி னின்னிசைகேட் டின்புற் றானை
அறுத்தானை யடியார்தம் மருநோய் பாவ
மலைகடலி லாலால முண்டு கண்டம்
கறுத்தானைக் கண்ணழலாற் காம னாகம்
காய்ந்தானைக் கனன்மழுவுங் கலையு மங்கை
பொறுத்தானைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே யாற்றநாள் போக்கி னேனே, ௧௦

திருச்சிற்றம்பலம்.

---

௧௦. இறுத்தல் — ஈண்டு நெரித்தன்மேற்று. எழுநரம்பு — ஓசை யெழுகின்ற நரம்பு. இனி, குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்னும் ஏழென்றலுமாம். சிவபெருமான் இன்னிசைகேட்டின் புறுதலை "அளப்பில கீதஞ் சொன்னார்க் கடிகடா மருளு மாறே" என்றற்றொடக்கத்த செந்தமிழ்ச் சுருதிகளாலு முணர்க. அருநோய் — பிறரானீக்குதற் கரியநோய்; சகித்தற்கரிய நோய், ஆணவமுதலியநோய்கள். முன்னையவிரண்டும் உடல்நோய்கள். பின்னைய உயிர்நோய்கள். "அருநோய்கள்கெட" என்புழியும் அவை. பாவம் — வேதாகமங்களில்விலக்கப்பட்டவற்றைச் செய்தல்,

உ

திருச்சிற்றம்பலம்.

அருணகிரிநாதர்அருளிச்செய்த

# புள்ளிருக்குவேளூர்த்திருப்புகழ்.

---

தனத்தன தானத் — தனதான

உரத்துறை போதத் தனியான
உனைச்சிறி தோதத் தெரியாது
மரத்துறை போலுற் றடியேனும்
மலத்திருள் மூடிக் கெடலாமோ
பரத்துறை சீலத் தவர்வாழ்வே
பணித்தடி வாழ்வுற் றருள்வோனே
வரத்துறை நீதர்க் கொருசேயே
வயித்திய நாதப் பெருமாளே. க

தத்தன தானதான தத்தன தானதான
தத்தன தானதான — தனதான

எத்தனை கோடிகோடி விட்டுட லோடியாடி
எத்தனை கோடிபோன — தளவேதோ
இப்படி மோகபோக மிப்படி யாகியாகி
இப்படி யாவதேது — இனிமேலோ
சித்திடில் சீசிசீசி குத்திர மாயமாயை
சிக்கினி லாயுமாயும் — அடியேனைச்
சித்தினி லாடலோடு முத்தமிழ் வாணரோது
சித்திர ஞானபாதம் — அருள்வாயே
நித்தமு மோதுவார்கள் சித்தமெ வீடதாக
நிர்த்தம தாடுமாறு — முகவோனே
நிட்கள ரூபர்பாதி பச்சுரு வானமூணு
நெட்டிலை சூலபாணி — அருள்பாலா

---

உ. சிக்கினி லாகிமாயும் எனப்பாடமோதுவாரு முளர்.

பைத்தலை நீடுமாயி ரத்தனை மீதுபீறு
பத்திர பாதநீல — மயில்வீரா
பச்சிள பூகபாளை செய்க்கயல் தாவுவேளூர்
பற்றிய மூவர்தேவர் — பெருமாளே. ௨

தானதத்தனந் தானதத்ததன
தானதத்தனந் தானதத்ததன
தானதத்தனந் தானதத்ததன — தனதான

பாடகச்சிலம் போடுசெச்சைமணி
கோவெனக்கலந் தாடுபொற்சரணர் [நூலார்
பாவைசித்திரம் போல்வர்பட்டுடையின் — இடை

பாரபொற்றனம் கோபுரச்சிகர
மாமெனப்படர்ந் தேமணிப்பரித
பாகுநற்கரும் போடுசர்க்கரையின் — மொழிமாதர்

ஏடகக்குலம் சேருமைக்குழலொ
டாடளிக்குலம் பாடநற்றெருவி
லேகிபுட்குலம் போலபற்பலசொல் — இசைபாடி

ஏறியிச்சகம் பேசியெத்தியிதம்
வாருமுற்பணம் தாருமிட்டமென
ஏணிவைத்துவந் தேறவிட்டிடுவர் — செயலாமோ

சேடனுக்கசண் டாளரக்கர்குல
மாளஅட்டகுன் றேழலைக்கடல்கள்
சேரவற்றநின் றாடயிற்கரமி — ரறுதோள்மேல்

சேணிலத்தர்பொன் பூவைவிட்டிருடி
யோர்கள்கட்டியம் பாடவெட்டரசர்
சேசெயொத்தசெந் தாமரைக்கிழவி—புகழ்வேலா

நாடகப்புனங் காவலுற்றசுக
மோகனத்திமென் றோளிசித்ரவளி
நாயகிக்கிதம் பாடிநித்தமணி — புனைவோனே

ஞானவெற்புகந் தாடுமத்தர்தையல்
நாயகிக்குநன் பாகரக்கணியும்
நாதர்மெச்சவந் தாடுமுத்தமருள்— பெருமாளே.

தானதான தத்ததந்த தானதான தத்ததந்த
தானதான தத்ததந்த — தனதான.

**மா**லினாலெ டுத்தகந்தல் சோறினால்வ ளர்த்தபொந்தி
மாறியாடெ டுத்தசிந்தை — அநியாய
மாயையாலெ டுத்துமங்கி னேனையாவெ னக்கிரங்கி
வாரையாயி னிப்பிறந்து — இறவாமல்

வேலினால்வி னைக்கணங்கள் தூளதாவெ ரித்துவுன்றன்
வீடுதாப ரித்தஅன்பர் — கணமூடே
மேவியானு னைப்பொல்சிந்தை யாகவேக ளித்துகந்த
வேளெயாமெ னப்பரிந்து — அருள்வாயே

காலினாலெ னப்பரந்த சூரர்மாள வெற்றிகொண்ட
காலபானு சத்தியங்கை — முருகோனே
காமபாண மட்டனந்த கோடிமா தரைப்புணர்ந்த
காளையேறு கர்த்தனெந்தை — அருள்பாலா

---

௪. பொந்தி — உடம்பு. தொந்தி எனவும், வெரித்து முன்றன் எனவும், வேளையா எனவும், காலினார் எனவும்பாடம். காலின் பரந்த சூரர் — வாயுவைப் போல இடமின்றிப் பரந்தகாலாள் வீரர். ஆல், அசை. நாலெனப்பரந்த எனப்பிரித்து நால்வகைச்சேனையுள் ஒன்றெனச் சொல்லப்பரந்த என்றலுமாம்.

சேலைநேர்வி ழிக்குறப்பெ ணுசைதோளு றப்புணர்ந்து
சீரையோது பத்தரன்பில் — உறைவோனே
தேவர்மாதர் சித்தர்தொண்டர் ஏகவேளூ ருக்குகந்த
சேவல்கேது சுற்றுகந்த — பெருமாளே. ௬

தானதானன தாத்ததந்தன
தானதானன தாத்ததந்தன
தானதானன தாத்ததந்தன — தனதான.

மூலாதாரமொ டேற்றியங்கியை
ஆருதாரமொ டோட்டியக்திர
மூலாவாயுவை யேற்றிநன்சுழி — முனையூடே

மூதாதாரம ரூப்பிலந்தர
நாதாகீதம தார்த்திடும்பர
மூடேபாலொளி யாத்துமந்தனை — விலகாமல்

மாலாடுனெடு சேர்த்திதம்பெற
நானாவேதம சாத்திரஞ்சொலும்
வாழ்ஞானபுரி யேற்றிமந்திர — தவிசூடே

மாதாநாதனும் வீற்றிருந்திடும்
வீடேமூனொளி காட்டிசந்திர
வாகார்தேனமு தூட்டியென்றனை — உடனுள்வாய்

---

ரு. ஏற்று நன்சுழி என்றும் பாடம். மரூப்பில் — மருப்பில். நானாவேதம் — பலவகைப் பொருள்களைக்கூறும் வேதம், இருக்கு, யசுர், சாமம், அ த ர் வ ண ம் எனப்பலதிறப்படுதலின் நானாவேதம் என்றார். நானாவாகமம் என்றும் பாடம். ம சாத்திரம்— மா சாத்திரம். மா, ம எனக்குறுக்கல். மாசாத்திரம் சிவமேபசுபதியெனக் கூறும் ஆகமம்.

சூலாள்மாதுமை தூர்த்தசம்பவி
மாதாராபகல் காத்தமைந்தனே
சூடோடீர்வினை வாட்டிமைந்தரெ— னெமையாளும்

தூயாள்மூவரை நாட்டுமெந்தையர்
வேளூர்வாழ்வினை தீர்த்தசங்கரர்
தோய்சாரூபரோ டேற்றிருந்தவள் — அருள்பாலா

வேலாவேழ்கடல் வீட்டிவஞ்சக
மூடார்சூரரை வாட்டியந்தகன்
வீடேவிய காத்திரம்பரி —மயில்வாழ்வே

வேதாநால்தலை சீக்கொளும்படி
கோலாகாலம தாட்டுமந்திர
வேலாமான்மக ளார்க்கிரங்கிய — பெருமாளே. ௫

தானதானதன தானதன தானதன
தானதானதன தானதன தானதன
தானதானதன தானதன தானதன — தனதான.

மேகவார்குழல தாடதன பாரமிசை
யாரமாடகுழை யாடவிழி யாடபொறி
மேனிவாசனைகள் வீசவல்குல் மோதிபரி — மளமேற

௫. சூலம் என்பது அம்முக்கெட்டுச் சூல் என நின்றது. சூலாள் — சூலத்தையுடையவள். தூர்த்தசம்பவி (மகிடாசூரனை) அழித்த சாம்பவி. தூர்த்தல் — அழித்தல். சாம்பவி சம்பவியெனக் குறுகிற்று. மற்றொருபொருள்:— அழித்த வழிவினை யுடையவள்; எனவே, அழிவில்லாதவள் என்றபடி. சம்பவம் - அழிவு. சம்பவத்தை யுடையாள் சம்பவி. சீர்த்தசம்பவி என்றும்பாடம். ரா — வடமொழி; தமிழிலக்கணவிதி பெறாது நின்றது. மைந்தர் என் எம்ம ஆளும் எனப்பிரிக்க, மைந்தரி னெமையாளும் என்றும் பாடம். மைந்தரென் றெமையாளும் எனப்பாட மோதுவாரு முளர். வேழ் கடலும் பாடம்.

மீனுலாடையிடை யாடமயில் போலநடை
யோலமோலமென பாதமணி நூபுரமு
மேல்வில்வீசபணிகீரகுயில்போலகுரல் — முழவோசை
ஆகவேயவைகள் கூடிடுவர் வீதிவரு
வோரைவாருமென வேசரச மோடுருகி
ஆசைபோலமனை யேகொடணை வார்கள்குவ—டதிபார
ஆணிமாமுலையின் மூழ்கிசுக வாரிகொடு
வேர்வைபாயவணை யூடமளி யாடியிட
ரானசூலைபல நோய்கள்கட லாடியுடல் - உழல்வேனோ
நாகலோகர்மதி லோகர்மக லோகர்விதி
நாடுளோர்களம ரோர்கள்கண நாதர்விடை
நாதர்வேதியர்கள்ஆதிசரசோதிதிகழ் — முனிவோர்கள்
நாதரேநரர்ம னாரணர்பு ராணவகை
தேவகீதவொலி பூரையிது பூரையென
நாசமாயசுரர் மேவுகிரி தூளிபட — விடும்வேலா
தோகைமாதுகுற மாதமுத மாதுவினல்
தோழிமாதுவளி நாயகமி னானசுக
சோகமோடுருகிமார்முலைவிடாமலணை-புணர்வோனே
தோளிராறுமுக மாறுமயில் வேலழகு
மீதெய்வானவடி வாதொழுதெ னையனர்
சூழுகாவிரியும் வேளூர்முரு காவமரர் — பெருமாளே.

புள்ளிருக்குவேளூர்த்திருப்புகழ்முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

௬. மின்நூல்ஆடை - பீதாம்பரம்; மீனுலாடை நீட்டலும், குறுக்கலும், தொகுத்தலும் பெற்றது. மீதிலாடையிடை என்றும் பாடம். கீரம்— பால். ஈறுகெட்டுக் கீர் எனநின்றது. அசுரர்மேவு கிரி—கிரவுஞ்சமலை. பாடபேதங்கள் அச்சுப்புத்தகங்களில் உள்ளன.

திருச்சிற்றம்பலம்.

திருக்கைலாயபரம்பரைத்

தருமபுர ஆதீனம்,

சிவஞானதேசிகசுவாமிகள்

அருளிச்செய்த

புள்ளிருக்குவேளூர்

# முத்துக்குமாரசுவாமி

## திருவருட்பா.

---

### ஆசிரிய விருத்தம்.

மதிவதன மாடவிரு காதினவ ரத்நமணி
மகாகுண்டல மாடநாண்
மலர்புண்ட ரீகவிழி யாடவரு ளாடமன
மகிழ்மந்த காசமாடக்
கதிருதய மாயிரங் கோடியென வேயிலகு
காருண்ய மேனியாடக்
கனவச்ர புயவலய மாடவண் டாடக்
கடப்பமலர் மாலையாட
விதமணி யிழைத்தபரி புரமாடு சரணர
விந்தங்க ளாடநீள்கை
வெற்றிவே லாடமயி லாடவென் கண்முனே
விளையாட வோடிவருவாய்
முதுமறைக ளாகம முழங்குபுள் ளூரனே
முக்கட் குருக்கள்குருவே
முத்தர்குரு வேயோக சித்தர்குரு வேபால
முத்துக்கு மாரகுருவே. க

---

க. காருண்ணியம்— ஞானம். ஞானம், காருண்ணியம், அருள், சத்தி, கருணை, என்பன ஒருபொருட்சொற்கள். "ஞானந் தானுருவாகிய நாயகன்" என்றார் கந்தபுராணத்துள்ளும்.

பொன்னெடுங் குன்றே யனந்தசந் த்ரோதயம்
போலவரு ஞானவொளியே
பொய்யிருளை நீக்கியிடு மெய்யிரவி யுதயமே
பூரணா னந்தசுகமே
யன்னையினு மன்புமிகு மன்புருவ மேயிருவ
ரறிவரிய வொருபிரமமே
யருமருந் தேயமுத சலதியே யடியா
ரறிந்தகரு கூலமேயென்
றுன்னையே பாடிநின் றாடியிரு கண்ணினீ
ரோடரோ மஞ்சிலிர்ப்ப
வுள்ளங் கரைந்துருக வடியனே னானந்த
வுல்லாச மாவதென்றே
முன்னைவினை தீர்த்தருளு மன்னனே புள்ளூரின்
முக்கட் குருக்கள்குருவே
முத்தர்குரு வேயோக சித்தர்குரு வேபால
முத்துக்கு மாரகுருவே, ௨

அடியருள மண்டபமு மையர்செஞ் சடிலமு
மன்னையர்க ளிருவர்வயிறு
மம்புயா சனன்விழியு மிந்திரா திபர்தலையு
மருமறை யனந்தமுகமும்
படியுண்ட மால்புயமு நெடியமயி லின்முதுகும்
பரங்குன்று பழநிசெந்தூர்
பலதலமு மெந்நேரம் விளையாடு முனதுபய
பரிபுர பதாம்புயங்கள்

---

௨. முன்னைவினை — என்றது இங்கே பக்குவப்படுங்காறும் புத்திதத்துவம் பற்றுக்கோடாகக் கிடக்குஞ் சஞ்சிதவினையை, இனம்பற்றித் தின்னுவினை பின்னை வினைகளும் அடங்கும்.
௩. மயின் முதுகு என்றும் பாடம்.

குடிகொண்ட வஞ்சகம் பொய்கபட நாடகங்
கொலைகளவு காமமெல்லாங்
கொள்ளைகொளு மென்னுடைய கள்ளவித யத்திலே
க்ஷேம மென்றுவருமோ

முடியினு லமரர்கள் வணங்குபுள் ளூரனே
முக்கட் குருக்கள்குருவே
முத்தர்குரு வேயோக சித்தர்குரு வேபால
முத்துக்கு மாரகுருவே. ௩

அன்னைசொற் கொருசெவி யையர்சொற் கொருசெவி
யம்மான் றுதிக்கொருசெவி
யானைசொற் கொருசெவி வீரர்சொற் கொருசெவி
யயன்றுதிக் கொருசெவிவிணோர்

மன்னர்சொற் கொருசெவி வள்ளிசொற் கொருசெவி
வான்வனிதை சொற்கொருசெவி
மறைதுதிக் கொருசெவி யடியர்சொற் கொருசெவி
வல்லசுரர் சொற்கொருசெவி

பன்னிரண் டுங்கொடுத் தென்சொல்கே ளாமற்
பராமுக மதாயிருந்தாற்
பாவியேன் மெலிவுகுறை யெவர்செவியி லேற்றிப்
படுந்துயர் களைந்துகொள்வேன்

முன்னமறை நாலும்வந் துன்னுபுள் ளூரனே
முக்கட் குருக்கள்குருவே
முத்தர்குரு வேயோக சித்தர்குரு வேபால
முத்துக்கு மாரகுருவே. ௪

---

௪, யானை — மூத்த பிள்ளையாராகிய விநாயகர்; ஆகு பெயர்; இருமடி. என்னை? யானை முகத்தையுணர்த்த அது பிள்ளையாரை உணர்த்தினமையின்.

உன்புவன மென்புவன முன்வடிவ மென்வடிவ
முன்பொறிக ளெனதுபொறிக
ளுன்கரண மென்கரண முன்மொழிக ளென்மொழிக
ளுன்விடய மென்விடயமென்
றன்பினுட னின்றெனை யுனன்பர்பெறு மின்பவடி
வாகவரு ளேகமுதலே
யண்டருறை யண்டநவ கண்டமு முவந்தருளு
மம்பிகைத்ரி யம்பகரிருந்
தின்பவமு தேவருக வெங்கள்மக னேவருக
வெங்களுயி ரேவருகவிங்
கெங்கள்தன மேவருக வெங்களர சேவருக
வெங்கண்மணி வருகவெனவே
முன்புவந் தவருடன் விளையாடு புள்ளூர
முக்கட் குருக்கள்குருவே
முத்தர்குரு வேயோக சித்தர்குரு வேபால
முத்துக்கு மாரகுருவே. ரு

சந்த்ரனீ தென்னவும் பெற்றதா யென்னவுந்
தயையொடு குளிர்ந்தமுகமுந்
தழைந்ததிரு வருண்மழை பொழிந்துமல வெப்பந்
தணிக்குங்கரு பைப்பார்வையு
மந்தமில் லாச்சச்சி தானந்த மாம்வடிவு
மழகொழுகு புன்சிரிப்பு
மத்தந் தரித்திடுசின் முத்திரையு நின்றில
கருட்குரவ னாகியிங்கே

ரு. அம்பிகை திரியம்பகர் இருந்து வருக வருக வென முன்பு வந்து அவருடன் விளையாடு புள்ளூர என்க,

வந்திருந் துன்னடியை யென்முடியில் வைத்துலக
வாதனை யெலாமிறக்க
மாளாத பேரின்ப வாரியினி லாழவருள்
வாலாம்பி கைக்குமகனே

முந்திரா மன்பணிய வந்துபுள் ளூரில்வாழ்
முக்கட் குருக்கள்குருவே
முத்தர்குரு வேயோக சித்தர்குரு வேபால
முத்துக்கு மாரகுருவே. சு

அருவங்க ளுலன்றி யுருவங்க ளுலன்றி
யுருவுருவ மானதன்றி
யண்டபகி ரண்டநவ கண்டங்க ளன்றிமே
லழியாத கரணமன்றி

யுருவங்க ளன்றியாங் குளபோக மன்றியுயிர்
தங்குமுட லங்களன்றி
யுளதன்றி யிலதன்றி யுட்புறம் பன்றிமே
லுண்டாகி யழிவதன்றி

நிருமல நிராதார நிர்க்குண சிதாகாச
நித்யசக சானந்தமா
நின்சரணை யேநினைவ தல்லாம லென்மன
நினைக்குமொரு பொருள்வேறிலை

முருகுவிரி சோலைமலர் பெருகுபுள் ளூரில்வாழ்
முக்கட் குருக்கள்குருவே
முத்தர்குரு வேயோக சித்தர்குரு வேபால
முத்துக்கு மாரகுருவே. எ

எ. அருவங்கள் நாலு — சிவம், சத்தி, நாதம், விந்து, உருவங்கள் நாலு — பிரமா, விஷ்ணு, உருத்திரன், மகேசுரன்.

உருவங்க ளானுநீ யருவங்க ளானுநீ
யுபயமொன் றானதுவுநீ
யுலகங்க ளெங்கும்வரு காணங்கள் யாவுநீ
யுருவங்க ளெல்லாமுநீ

வருபெரிய போகங்கள் யாவுநீ மண்ணுநீ
வாரிமுதலொண் புனலுநீ
வடவைமுத லனலுநீ வாயுநீ வானுநீ
மதியுநீ மார்த்தாண்டனீ

யருவங்க ளாமுயிர்கள் யாவுநீ யின்பதுன்
பாவதுவு நீயென்பதை
யடியனெங் நேரமுங் கண்டுகண் டுல்லாச
வானந்த மாவதென்றோ

முருகசர வணபவா பெரியபுள் ளூரனே
முக்கட் குருக்கள்குருவே
முத்தர்குரு வேயோக சித்தர்குரு வேபால
முத்துக்கு மாரகுருவே. அ

பாகம்வரு நிமிடத்தி லகிலசக மெல்லாம்
படைத்துத் திதித்தழித்துப்
பரமசுக சானந்த சலதிவிளை யாடவிடு
பரமசிவ மாமுன்னைநா

னேகதே சத்திலய னைப்புடைத் துப்படைத்
தெதிர்சூர பத்மனைக்கொன்
றிந்த்ராதி யோரைரட் சித்திருந் தாயென்
றியம்புவது பெரியபுகழோ

---

அ. இச்செய்யுள் நின்றதிருத்தாண்டக முதலியனபோலச் சர்வவியாபகங்குறித்தது. உபயம்—அருவுருவமாகிய சதாசிவவடிவம்.

மாகமுறை தேவர்க்கு மனிதர்க்கு முனிவர்க்கு
மண்ணுண் டையானீற்றினல்
வறுமையொடு தேகத்தில் வருபிணிக ளெல்லாமு
மரணசன னங்களாகு

மோகநோ யுந்தவிர் வருளுதவு புள்ளூர
முக்கட் குருக்கள்குருவே
முத்தர்குரு வேயோக சித்தர்குரு வேபால
முத்துக்கு மாரகுருவே. ௬௧

எள்ளளவி லாயிரத் தொன்றளவு பத்தியுன்
னிணையடியில் வைத்தபேர்கட்
கிந்த்ராதி பதமுமுயர் சந்த்ரசூ ரியர்பதமு
மிமையவர்க ளரியபதமுந்

தெள்ளுபுகழ் நான்முகக் கடவுள்பத முநெடிய
செங்கண்மால் பதமுமெல்லாச்
செல்வமும் வருமென்று சொல்லவுங் கேட்டுமுன்
றிருவடிக் கன்பிலாத

---

௧. மண்ணுண்டையா நீற்றினல் என்றும் பாடம். சனனமர ணமோகத்தை,

"கருப்பா சயமே கட்டதா மதனினதிகங் கடுங்காலும்
முரிக்க மிகவு மோகமுற முன்னை யுணர்வு மங்கிலையே
மரிக்க வாலைக் கரும்பெனவே யோனி வழியின் வலிதொலைய
நெருக்கப் பட்டு நிலமிசையே தோன்று முபிரு னிலையுடனே".

என்னுஞ் சிவதருமோத்தரத் திருவிருத்த முதலியவற்றானு முணர்க.

கள்ளமா னிடரையொரு காசும்பெ றுதசீக்
கந்தையென் றேவிட்டுநான்
கற்றமெய் யடியவர்கள் குற்றேவல் செய்யக்
கடாட்சம்வைத் தருள்வேலவா
முள்ளுருடைய தாண்முளரி கள்ளுதவு புள்ளூர
முக்கட் குருக்கள்குருவே
முத்தர்குரு வேயோக சித்தர்குரு வேபால
முத்துக்கு மாரகுருவே. ௧0

முத்துக்குமாரசுவாமிதிருவருட்பாமுற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

௧0. சீக்கந்தை — சீயென்று அருவருத்துத்தள்ளிவிடும் பலவாகக்கிழிந்த கறைபிடித்த துணிகள்; சீ பிடித்த துணியுமாம். சீ — சிதல்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# புள்ளிருக்குவேளூரைச்சுட்டிப்

பலநூல்களிலுள்ளபாடல்களும்,

பலவித்துவான்கள் ஒவ்வோரமையத்து அத்தலத்தைச்

## சுட்டிப்பாடிய பாடல்களும்.

---

### சிவஞானசித்தியார்.

அருளினு லுரைத்த நூலின் வழிவரா ததன்மஞ் செய்யின்
இருளுலா நிரயத் துன்பத் திட்டிரும் பாவந் தீர்ப்பன்
பொருளுலாஞ் சுவர்க்க மாதிபோகத்தாற்புணியந்தீர்ப்பன்
மருளுலா மலங்க டீர்க்கு மருந்திவை வைத்ய நாதன்.

### பெரியபுராணம்.

போற்றியகா தல்பெருகப்புள்ளிருக்குந் திருவேளூர்
நாற்றடந்தோ ளுடைமூன்று நயனப்பிரான் கோயினண்ணி
யேற்றவன்பெய் தவணங்கி யிருவர்புள்வேந் தரிறைஞ்சி
யாற்றியபூ சனைசாத்தி யஞ்சொற்பதி கமணிந்தார். ௨

### பட்டணத்தார்பாடல்.

கையொன்றுசெய்யவிழியொன்றுநாடக்கருத்தொன்றெண்
பொய்யொன்றுவஞ்சகநாவொன்றுபேசப்புலால்கமழு [ணப்
மெய்யொன்று சாரச்செவியொன்று கேட்க விரும்புமியான்
செய்கின்ற பூசையெவ் வாறுகொள் வாய்வினை தீர்த்தவனே.

### சிதம்பரபுராணம்.

தள்ளற் கரிதாம் வினைசா டியெழுஞ்
சம்பா திசடா யுவெனும் பெருமைப்
புள்ளுக் காசா னவரெம் மையருட்
பொற்பூ டணையா முற்பூ சனைசெய்

துள்ளக் கனிமேல் கொள்ளப் புவிமே
லுண்டா மெவருங் கொண்டா சுறுநோய்
வெள்ளத் துலையா துமருத் துவனாய்
மேவும் பதியவ் வேளூர் நகரம். ௪

## க்ஷேத்திரக்கோவைப்பிள்ளைத்தமிழ்.

செவிக்கொரு பன்னிரண் டுங்கேட்க வயனையுந்
தேவர்பணி யுங்குருவையுந்
தேவர்கோ னென்றசத மகனையுஞ் செந்தமிழ்சொல்
தென்பொதிய மலைமுனியையும்

புவியினக் கீரரையு மௌவையையு நீமுன்
புகழ்ந்தபொய் யாமொழியையும்
புகழ்கொண்ட வருணகிரி நாதரையும் வெகுசித்தர்
போற்றுகரு வூராரையும்

குவியுமன மருச்சிறு புலவரையும் வருபுலவர்
கொண்டாடு நல்லபகழிக்
கூத்தரையும் வளர்காசி வாழுஞ் சிவானந்த
குமரகுரு பரமுனியையுங்

கவிசொலென் றேயடி யெடுத்துக்கொ டுத்தவன்
கனிவாயின் முத்தமருளே
கந்தனே புள்ளூரில் வந்தமுத் துக்குமர
கனிவாயின் முத்தமருளே. ரு

## சிவாலயவெண்பா.

புள்ளிருக்கும் வேளூர்ப் புனிதன்மலர்த் தாளென்னெஞ்
சுள்ளிக்கும் வேளூ ருய்யரண்சுட் — டொள்ளிழையைப்
பாலமைத்த மேன்மையற்காட் பட்டேனே மேதிவரு
காலமைத்த மேனியாய் காண். சா

உறையூர்ப்புராணம்,

கள்ளிருக்கு மிதழியொடீர்ங் கதிரிருக்குஞ் செஞ்சடையும்
வள்ளிருக்குஞ் சூலமழு வைத்திருக்குங் கைகளுமென்
உள்ளிருக்குந் திருவடியு முற்றிருக்கு மொருமுதலைப்
புள்ளிருக்கு வேளூரிற் போய்த்தொழுதா னுதங்கமுனி. எ

சிவத்தலமஞ்சரி.

மருவுபுள் ளிருக்குங் கந்தனுங் கதிரு மன்னிய பூசனை யியற்றி, இருநல மடைய வருள்புரிந் தவனே யிசைப்பதற் கரியவே ளூர்வாழ், பெருமணிச் சுடரே தையலை மணந்த பித்தனே வயித்திய நாதா, திருவள ருன்றாட் பதநிழ லருள்வாய் செல்வமே கருணைவா ரிதியே. அ

மூவரம்மானை.

விரிந்தபுகழ்ப் புள்ளிருக்கு வேளூர் வயித்தியனார்
பரிந்துவினை தீர்க்கவல்ல பண்டிதர்கா ணம்மானை
பரிந்துவினை தீர்க்கவல்ல பண்டிதரே யானக்கால்
மருந்துவிலை கைக்கூலி வாங்காரோ வம்மானை
வாயிலே மண்போட்டு வாங்குவர்கா ணம்மானை. கூ

பூங்கா வனஞ்சூழும் புள்ளிருக்கு வேளூரார்
பாங்கான தென்மதுரைப் பாணர்கா ணம்மானை
பாங்கான தென்மதுரைப் பாணரே யாமாயின்
தாங்கா திழையெடுத்துத் தைப்பரோ வம்மானை
தையலுக்கு நல்ல சமர்த்தர்கா ணம்மானை. கo

துறைசைக்கலம்பகம்.

இடரேது மினியில்லை புள்ளிருக்கு வேளூரி லென்றுங் கோது, படராத துறைசைநமச் சிவாயருக்கு முன்னின்ற பரமர்தம்மை, நடராச ரொடுபூசை திருச்சிற்றம் பலவர்செயு நாளி லோர்நாள், விடரேனுந் தவரேனுந் தரிசித்தால் வினைகளெல்லாம் விடுந் தானே. கக

## காளமேகப்புலவர்.

வாதக்கா லாந்தமக்கு மைத்துனற்கு நீரிழிவாம்
போதப் பெருவயிறும் பிள்ளைதனக் — கோதக்கேள்
வந்தவினை தீர்க்க வகையறியார் வேளூரர்
எந்தவினை தீர்த்தா ரிவர். கஉ

மண்டலத்தி னுளும் வயித்தியராய்த் தாமிருந்து
கண்டவினை தீர்க்கின்றார் கண்டீரோ — தொண்டர்
விருந்தைப்பார்த் துண்டருளும் வேளூரென் றாதர்
மருந்தைப்பார்த் தாற்சுத்த மண். கந

அச்சுதற்கு முன்றேகண் ணுபிரங்க ணிந்திரற்குப்
பத்திலக்கங் கண்ணுடைய பச்சைவடம் — நித்தநித்தம்
புள்ளிருக்கு வேளூர்ப் புராந்தகா வென்றுணியி
லெள்ளிருக்க வில்லை யிடம். கச

தீத்தானுங் கண்ணிலே தீத்தானுங் கையிலே
தீத்தானு முன்றன் சிரிப்பிலே — தீத்தானும்
மெய்யெலாம் புள்ளிருக்கு வேளூரா வுன்னையிந்தத்
தையலா ளெப்படிச்சேர்ந் தாள். கரு

### வேறு.

மருகிருக்கும் வேளூரின் வைத்யர்மகன் குறமகளை மணந்தா னென்றே, உருகியர னஞ்சுண்டா னுமையவளுந் தவம்புரிந்தா ளுபர்மால் மேனி, கருகிமிக மண்டின்றான் கமலன்முக நாலானன் கடவு ளோர்கள், இருவிழியு மிமையாம லிரவுபக லுறங்காம லிருக்கின் றாரே. கசு

---

கஉ. பேதப் பெருவயிறு என்று பாடமோதி, சிறுவயிற்றிற்கு மாறாய பெருவயிறு என்று பொருள் கூறுவாருமுளர். வகையறியா வேளூரர் என்றும், வேளூரார் என்றும், எந்தவினை தீர்ப்பா ரினி என்றும் பாடம். கந. தாமிருந்துங் என்றும் பாடம். கச. பச்சை வடங்கள் உடையன எனப்பன்மை முடிபாக்குக; துவ்வீறுதொக்கதென்று ஒருமை முடிபாக்கலுமாம்.

### நமச்சிவாயப்புலவர்.

சொல்வாரார் வள்ளியுடன் றேய்ந்தருண்முத் தையனுக்கு
வல்வாரார் மானேயென் மையறனை — வில்வாய்ந்த
தெள்ளிருக்கு வேளூர் சிறுகாலுண் பானுமிசை
புள்ளிருக்கு வேளூர் புகுந்து, கஎ

### அபிதானம் அறியப்படாத புலவர்.

இத்தா ரணியிலெவருடைய நோய்பிணியுஞ்
சித்தாமிர் தக்கரையிற் றீருமே — சத்திதையல்
மாதுக் கிசைந்த வயித்தியரே நீர்மருந்தை
ஏதுக்கு மண்ணாக்கி னீர். கஅ

ஈறுமுத லில்லா திருக்குமொரு தெய்வமினி
வேறுலகி லுண்டோ விளம்புங்கால் — மாறுபடுங்
கள்ளிருக்கும் பூவாளிக் காமனைக்கண் ணாலெரித்த
புள்ளிருக்கு வேளூர் போல். க௯

தெற்கிற் கணேசன் றிகழ்மேற்கிற் பைரவனுந்
தொக்க வடக்கிற் றொடர்காளி — மிக்ககிழக்
குள்ளிருக்கும் வீரனையு முற்றுப் பணிந்துய்ந்தோம்
புள்ளிருக்கு வேளூரிற் போய். உ௦

வேலனே வேளூர் வினைதீர்த் தவருதவும்
பாலனே சேனா பதிவேளே — சீலனே [ளங்கை
தோங்கரும்பிற் கொக்குகொங்கை கூந்தல்கொண்டல் காந்த
பூங்கரும்பிற் காங்கடம்பிற் பூ. உக

கற்பகப் பிள்ளையார் கண்டவினை தீர்த்திடுவார்
பொற்பகத் தையலார் புரிமுத்தர் — சிற்பதத்தை
வேளூரிற் கண்டு விமலமுற்றேன் செவ்வாயை
நாளுமப் படிசெய்தே னன்று. உஉ

காத்தவனே யென்னையென்றுங் காருணிய மீதூரத்
தீர்த்தவனே முன்னைவினை தீர்த்தநேர் — பார்த்ததையல்
மாயவனே வாம வலம்வதியும் வேளூர
தாயவனே நேயமிகத் தா. உங

வேறு.

இந்திரன் செல்வம் வரும்புவி யாள விசையுமருள்
வந்திடு மன்மதன் போலழ கேறு மனையுமக்கள்
செந்திரு வும்வருந் தீர்க்கா யுளும்வருஞ் சீர்க்கவிசொல்
சுந்தரர் தூதர் வினைதீர்த்தார் பாதந் தொழுதிடினே. உச

மானைத் தரித்த வயித்தியலிங் கேசர் வரையிடத்தே
தேனைப் பழித்த மொழியணங்கேயொன்றுசெப்புவன்கேள்
பானைக் கிணையெனப் பாகலுங் காய்த்ததிப் பார்தனிலே
ஆனைக் கழுத்தி லணின்முட்டை யிட்ட ததிசயமே. உரு

புள்ளிருக்குவேளூர்த்தனிப்பாடல்கள்முற்றிற்று.

---

உங. காருணியமீதூர்தல் இடைநிலைத் தீபகமாய்க் காரண காரியப் பொருளில் வந்தது. காரியப்பொருளில் காருணியம் அன்பு. முன்னைவினை மூலவினையுமாம். மாயவனே என்பதில் ஏகாரம் அசைநிலை. தாயவன் — எங்கும் வியாபித்தவன், தாய்போலக் கருணையுடையவன். உரு. பாகல் — பலா, ஆனை — யானை, பரியாயநாமத்தால் அத்தி, இருமடியாகுபெயராற் பனை. அணில் — அன்றில்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# புள்ளிருக்குவேளூர்
# முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்

குமரகுருபர சுவாமிகள்
அருளிச்செய்தது.



வைத்தீசுரன்கோயில்
ச. சோமசுந்தர தேசிகரால்

சென்னை
சாது அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

1929.



திருப்பனந்தாள்

ஸ்ரீ குமரகுருபரஸ்வாமிகள்.

உ

திருச்சிற்றம்பலம்

முருகன் துணை.

புள்ளிருக்குவேளூர்

# முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்.

---

## மூத்தபிள்ளையார் ஏத்தெடுப்பு.

1. பொன்பூத்த குடுமிப் பொலங்குவட் டிமவான்
பொருப்பிற் பிறந்துதவளப்
பொழிநிலவு தவழுமுழு வெள்ளிவே தண்டத்தொர்
போர்க்களிற் றைப்புணர்ந்து
தேன்பூத்த பாட்டளி துதைந்தபைங் கூந்தற்
செழும்பிடி பயந்தளித்த
சிறுகட் பெருஞ்செவிக் குஞ்சரக் கன்றினிரு
செஞ்சரணை யஞ்சலிப்பாம்
மின்பூத்த சிற்றிடைப் பேரமர்க் கட்கடவுள்
வேழங் கடம்படுபடா
வெம்முலைக் கோடுகொண் டுழுதுழு துழக்கமுகை
விண்டுதண் டேன்றுளிக்குங்
கோன்பூத்த தெரியற் கடம்பணி தடம்புயக்
குரிசிலைப் பொருசிலைக்கைக்
குமரனைக் கந்தபுரி முருகனைப் பரவுமென்
கொழிதமிழ்க் கவிதழையவே.

# க. காப்புப்பருவம்

## திருமால்

2. பூமேவு சற்பகப் பொங்கரிற் செங்கட்
புலோமசை வளர்த்தகும்பப்
புணர்முலைக் களியானை விளையாடு பன்னிரு
பொருப்பனை விருப்பனைத்துங்
கோமேவு சாரற் குறச்சிறுமி மேல்வைத்த
குழகனைக் கழகந்தொறுங்
கொத்துமுத் தமிழ்மொய்த்த கந்தபுரி முத்துக்
குமாரனைத் தனிபுரக்க
தேமேவு கடவுட் பொலங்கிரி திசைக்கரிக
டிகிரிகிரி குலகிரியொடுந்
திரியத் திரித்துமத் தெறியத் தடங்கடற்
றெண்டிரை முகட்டுதித்த
பாமேவு மதுரம் பழுத்தமுத மொழுகும்
பசுங்குதலை மழலையஞ்சொற்
பங்கயச் செல்வியிரு கொங்கைக் குவட்டுவளர்
பச்சைப் பசுங்கொண்டலே. க

## வைத்தியநாதர்

### வேறு

3. ஒருபுறத்துமா கதமிமைப்ப வொளிர்
மாமேருமற்றொரு மேருவைச்சாய்த்தெ தன
உலகளக்கநிமிர் வடபொருப்பையொரு
தோளால்வளைத்தபி னுகியைத்தீக்கன
லுமிழுமுக்குடுமி யயிறிரித்துவரு
வாய்வாண்மழுப்படை வீரனைப்பார்த்தனோ
டடலுமற்றொழிலி னறவிளைத்துமெதி
ரோடாதுடற்றுகி ராதனைக்கூடக்குரால்

விரிகடற்புடவி முழுதுணச்சமையு
மோர்காளைகட்டுப்ர தாபனைக்கார்க்கடு
விடமெடுத்தரிய திருமிடற்றிலிடு
காமாரியைக்கவு மாரியைப்போற்றிரு
விழிமுனிற்கும்வடி வழகுடைக்கடவுண்
மாமோகினிக்கும ணாளனைச்சுக்கும
வெளியினிற்பரம நடநவிற்றுதிறல்
வேளூர்வயித்திய நாதனைப்போற்றுதுங்

தூரவுசெச்சையொடு நறவுயிர்ப்பவிரி
தேனுறுவட்டெழு மார்பனைப்பேய்த்திரள்
குர்வையிட்டவுணர் தடிசுவைத்திடவொர்
கூர்வேல்விடுத்தகு மாரனைப்பார்ப்பதி
குமரனைச்சமரி லுருமுகக்குளிறு
காலாயுதக்கொடி யாளனைக்கோட்டிய
குறுநகைக்குமன முருகவெற்பவர்த
மானேடுமெற்பொரு தோளனைத்தாக்கிய

திரண்மருப்பினமர் பொருதனிக்கடவுண்
மால்யானையைப்புணர் காளையைச்சாற்றிய
செழுமறைப்பொருளி னுரைவிரித்துமெனும்
வேதாமுடித்தலை மோதுகைக்காய்ப்பொடு
திருவடித்துணையின் முடிபதித்தவடு
வாறுதமெய்ப்புக ழாளியைப்பூட்டிய
சிறைவிடுத்தமரர் குறைமுடித்துதவு
சேனாபதிப்பெரு மாடனைக்காக்கவே. ௨

தையனாயகி

வேறு

4. குழையடர்ந்துவடி கணைதுரந்துசெறி
குமிழ்மறிந்தவிழி நவ்வியைக்கோட்டொடு
குவடெறிந்தமுத கலசம்வென்றதட
முலைசுமந்தமலை வல்லியைச்சேற்றுளிர்

குமுதம்விண்டசுவை யமுதமுண்டினிய
கொழுநர்கொஞ்சுசிறு கிள்ளையைத்தாட்டுணைக்
குறுகுதொண்டர்பிழை யறமறந்துபிறர்
குணமிகழ்ந்ததக வில்லியைச்சேட்செலு

மேழுபெரும்புவன முழுதொருங்குதவு
மிறைவியென்றுமறை கையெடுத்தார்க்கவு
மிடைநுடங்குமட நடையிளங்குமரி
யெனவிருந்தகன கள்வியைப்பூத்தவென்
னிதயபுண்டரிக மலரிலெந்தையொடு
மினிதமர்ந்தவொரு செல்வியைப்பாற்றொருகு
மிருவர்கண்கள்கது வரியசெஞ்சுடரி
னிடமருங்குடைய தையலைப்போற்றுது

முழுதுணர்ந்துமுணர் வரியதொன்றையொரு
மொழியின்விண்டசிறு பிள்ளையைச்சூர்ப்பெயர்
முதுபழம்பகையை யறவெறிந்தவுணர்
முதறடிந்ததனி வில்லியைப்பாட்டளி
முரலவிண்டதரு நிழறொழும்புகுடி
புகவழங்குகொடை வள்ளலைப்போற்றடி
முடியுமின்றிவெறு வெளிகடந்துமறை
முடிவினின்றுநிறை செல்வனைக்காத்தொறு

மழலைவண்டுதட மலர்குடைந்துபுது
மதுவருந்திநறு மல்லிகைச்சேக்கையின்
வடிபசுந்தமிழி னிசைபயின்றபெடை
யொடுதுயின்றினிய செவ்வழிப்பாட்டினை
வருவிபஞ்சிபயி றருமதங்கர்தெரு
மாமுரன்றுநெடு வைகறைப்போய்ச்செழு
மலரிலஞ்சிதொறு முலவுகந்தபுரி
மருவுகந்தனையெம் மையனைக்காக்கவே. ௫

## கற்பக விநாயகர்

### வேறு

5. கடாமுமிழ் கைக்கதக் கிம்புரிக் கோட்டொரு
கராசல மிட்டமெய்க் கஞ்சுகிக் கேற்பவொர்
பட்டாமணி மத்தகத் தந்தியைத் தீர்த்தர்கள்
பராவரு கற்பகக் கன்றினைப் போற்றுதும்
வடாதுபொ ருப்பினிற் றுன்றுபுத் தேட்கெதிர்
மனேலைய முற்றமெய்ப் பண்பினைக் காட்டிய
சடானன னைத்தலைச் சங்கம்வைத் தாற்றிய
சடாயுபு ரத்தருட் கந்தனைக் காக்கவே. ௪

## பிரமா

### வேறு

6. பைங்காய்க் கமுகு செம்பழுக்காய்ப்
பவள முதிர்ப்பக் கதிர்ச்செந்நெல்
பனிமுத் துகுக்குஞ் சோணாட்டின்
பரிசு பாடி ஞிமிறிரப்பக்
கோங்கார்த் திறைக்கு நறைக்காந்தள்
குறிஞ்சி மலர்சேர் டணிந்தநறுங்
குஞ்சிப் பெருமாள் வேதபுரி
குமரப் பெருமா டனைக்காக்க
செங்காற் கருங்கட் பைந்தொடியார்
சிற்றூய்ப் பாடிப் பெருங்குடியிற்
றீம்பா றிருடிக் கட்டுண்டு
திரியா வண்ணந் திருத்தாதைக்
கங்காப் பட்டங் கப்பாறயிர்நெ
யருந்தேன் கடலோ டிருந்துண்ண
வகிலம் படைத்துத் தனக்கேற
வன்னம் படைத்த பெருமாளே. ரு

## தேவேந்திரன்

### வேறு

7. கானுறு கற்பகக் காவுமூ வுலகுமக்
காவென நிழற்று மொற்றைக்
கவிகையுங் குணதிசைக் காவலும் பிறவுமுள
காணியுங் காணியாக
வானுறு கோட்டிமய மலைவயிறு வாய்த்ததலை
மகளுக்கு மணமகற்கு
மருமகளை யுரியதன் றிருமக ளெனப்பெற்ற
மாலடி களைத்துதிப்பாம்
பானுறு செந்நெற் பசுங்கதிர் கறித்துமென்
பைங்குவளை வாய்குதட்டும்
பணைமருப் பெருமைமடு மடிமடை திறந்ததீம்
பாலாறு பங்கயச்செந்
தேனுறு டன்கடவுள் வானு றெனப்பெருகு
சித்தாமிர் தஞ்சிவபிரான்
சீர்த்திப்ர தாபநிகர் தினகர புரித்தேவ
தேவனைக் காக்கவென்றே. சு

## திருமகள்

### வேறு

8. மானிறக் கடவுடிரு மறுமார்பி னறவிரி
வனத்துழாய்க் காடுமூடி
மாயிருள் வழங்குதன் றிருமாளி கைக்கந்தண்
மணிவிளக் கிட்டுமுட்டாட்
கானிறைக் குங்கமல வீட்டுக்கு நெட்டிதழ்க்
கதவந் திறந்தளித்துங்
காதன்மை காட்டுங் கவுத்துவத் துடன்வந்த
கன்னிகையை யஞ்சலிப்பா

மீனிறப் புணரியை விழுங்குங் கடற்றனை
வெள்ளமொடு கள்ளமன்று
மெய்யுமிரு ளத்திரளு மவுணக் கருங்கங்குல்
விடியக் கடுங்குரல்விடுந்
தீநிறக் குடுமிவெண் சேவலை யுயர்த்துவண்
சிறைமயிற் பரிநடாத்துஞ்
சேவகப் பெருமானை வேதபுரி வருமிளஞ்
சேயைப் புரக்கவென்றே. எ

## கலைமகள்

9. துறைபட்ட மறையவன் செந்நாப் படிந்துதன்
சுவைநிறஞ் சிதைவுறுமே
தொன்மறை கனிந்தூறு மன்பனீ ரூறலிற்
றூத்துகி னனைப்புறுமே
நறைபட்ட வெண்டோட்டு நளினப் பொகுட்டெமது
நன்னெஞ் செனக்குடிபுகு
ஞானப் பிராட்டியைச் சொற்கடற் றெள்ளமுதை
நாத்தழும் பத்துதிப்பாஞ்
சிறைபட்ட தண்டுறைச் சித்தாமிர் தப்பெருந்
தீர்த்தந் திளைத்தாடிய
செஞ்சுடர்க் கடவுளும் வெண்சுடர்க் கடவுளிற்
றெள்ளமுத மயமாகலா
னுறைபட்ட சுவைநிலவொ டிளவெயிலு மளவளா
யுண்ணச் சகோரம்வெஃகு
மோங்கெயிற் பரிதிபுரி முருகனைச் சண்முகத்
தொருவனைக் காக்கவென்றே. அ

## சத்தமாதர்

### வேறு

10. பயிறரு முதுமறை நூலைத் தெரித்தவள்
பகைதொகு புரமெரி மூளச் சிரித்தவள்
பனிவரை பகநெடு வேலைப் பணித்தவள்
படுகடல் புகையெழ வார்விற் குனித்தவ

ளெயிறுகொ டுழுதெழு பாரைப் பெயர்த்தவ
ளெறிதரு குலிசம்வி டாமற் றரித்தவ
ளிடுபலி கொளுமொர்க பாலக் கரத்தின
ளெனுமிவ ரெழுவர்க டாளைப் பழிச்சுதுங்

கயறிரி சரவண வாவிக் கரைக்குரை
கழலொடு பரிபுர மோலிட் டிடக்கட
களிறொடு களிறெதிர் மோதத் திசைத்திசை
கடுநடை யுளதக ரேறச் சமர்த்தனை

முயறரு கறையொடு தேய்வுற் றிளைத்தொரு
முழுமதி குறைமதி யாகத் துகிற்கொடி
முகிலொடு தடமதில் வேதப் பதித்தனி
முதல்வனை யறுமுக வேளைப் புரக்கவே. கூ

## முப்பத்துமுக்கோடி தேவர்கள்

### வேறு

11. மூறுக்குடை நறைச்சத தளத்திரு மலர்த்தவிசு
சொர்க்கத் தலத்தோடு சேடசய னத்தையு
முடித்தலை யடித்தலை பதித்தெதிர் துதித்தவர்த
மக்குக் கொடுத்தானை மாதிரமொ ரெட்டையு

மிறைப்பொழு தினிற்பொடி படுத்தருள் கொடுக்கவல
சத்திக் கரத்தானை யூதியமெ னத்தனை
யிருப்பினு நடப்பினு நினைப்பவ ரிருக்கவெமர்
சித்தத் திருப்பானை யாறிரு புயத்தனை

வெறுப்பொடு விருப்பினை யறுத்தவ ருளத்துமலர்
பத்மப் பதத்தானை வேதபுரி யிற்சின
விடைக்கொடி வலத்தினு மடக்கொடி யிடத்துமுள
முக்கட் டிருத்தாதை யார்பணி குருக்களை

மறைக்கிழ வனைத்தலை புடைத்துல கனைத்தினையு
மொக்கப் படைத்தானை மூவிரு முகத்தனை
மருத்துவர் வசுக்கதி ருருத்திர ரெனப்பொலியு
முப்பத்து முக்கோடி தேவர்கள் புரக்கவே. க0

## உ. செங்கீரைப்பருவம்.

12\. இருக்கோ லிடும்பரி புர்க்கோல முந்நுதலி
லிட்டபொட் டுஞ்சுட்டியு
மெரிமணிப் பட்டமுங் கட்டுபொன் னரைஞாணு
மிள்ஞாயி றுதயஞ்செயு
முருக்கோல முஞ்சூழி யக்கொண்டை யும்முச்சி
யுச்சியும் வாளிமுத்து
மொள்ளொளி ததும்புங் குதம்பையுங் கண்டுகண்
டோட்டரிக் கண்களிக்கு
மருக்கோல நீலக் குழற்றைய லாட்கரு
மருந்தா யிருந்ததெய்வ
மகக்கோல மேமுதிர் கிழக்கோல மாய்க்குற
மடந்தைமு னடந்துமற்றத்
திருக்கோல முட்டென்ரு மணக்கோல மானவன்
செங்கீரை யாடியருளே
செத்துப் பிறக்கின்ற தெய்வங்கண் மண்வாள
செங்கீரை யாடியருளே. க

13\. கும்பாதி காரிய மெனத்தமை நிமித்தமாக்
கொண்டவகி லாண்டங்களின்
குழுவுக்கு மற்றுத்த மிருவர்குறி யுந்தலைக்
கூடினுந் தான்றனக்கச்
சோம்பாதி யன்மைக் கனைத்துந்தன் மயமெனுஞ்
சுருதிகரி யாவைத்துமச்
சுருதிக்கு மெரிசுடர்ப் பரிதிக்கு மிரவிகுல
தோன்றற்கு மிளவலுக்குஞ்
சம்பாதி யொடுநெற் சடாயுவுக் கும்பெருந்
தவமுனிவ ரெழுவ ருக்குந்
தண்ணளி சுரந்திட்ட தீராத வினைதீர்த்த
தம்பிரான் றிருமேனியிற்

சேம்பாதி யுங்கொண்ட தையனு யகிகுமர
செங்கீரை யாடியருளே
செத்துப் பிறக்கின்ற தெய்வங்கண் மணவாள
செங்கீரை யாடியருளே. உ

14. கைக்கெட்டு மெட்டுக் களிற்றைப் பிடித்தக்
களிற்ருேடு முட்டவிட்டுக்
ககனவட் டத்திெனடு பரிதிவட் டத்தைவளை
திகிரிவட் டத்திலிட்டு
மூக்கட் டிருத்தாதை கோதண்ட மெனவைத்த
வேதண்ட மாதண்டமா
மூதண்ட கூடந்த்ரி கூடத் தொடுஞ்சாடி
மூரிக் கடாசலமவன்
மெய்க்கிட்ட சட்டைக்கு நேரிட் டிடப்பட்ட
மேகபட லத்துமொண்டு
மேல்கட லிளைப்பெருங் கீழ்கடல் புகப்பெய்து
விளையாட்டு வீரர்களொடுங்
திக்கெட்டும் விளையாடு சேனு பதிக்கடவுள்
செங்கீரை யாடியருளே
செத்துப் பிறக்கின்ற தெய்வங்கண் மணவாள
செங்கீரை யாடியருளே. ௩

15. மைவிழிச் செங்கமல வல்லிக்கு நேமியான்
மணிமார்பு வாணிக்குநான்
மறைமுதலி செங்நாத் தடந்தைய லாளொடும்
வயித்தியக் கடவுளார்க்கு
மெய்விரிக் குந்தொண்ட ருள்ளத் தடத்திெனடு
வேதச் சிரங்கடுப்ப
வேதபுரி கந்தபுரி புள்ளூ ரெனப்பொலியும்
வேளூர திசைதிசைதொறுங்

கைவகுத் தரமகளிர் குரவையாட் டயர்பெருங்
கயிலைத் தடஞ்சாரலும்
கனகாச லத்தும்வள ரிமயா சலத்துமுயர்
கந்தமா தனவெற்பெனத்

தேய்வதப் பிடியோடும் விளையாடு மழகளிறு
செங்கீரை யாடியருளே
செத்துப் பிறக்கின்ற தெய்வங்கண் மணவாள
செங்கீரை யாடியருளே. ௪

16. மீனேறு குண்டகழி தீவாய் மடுத்ததனி
வில்லியா ரிளவலோடும்
விதிமுறை வணங்கச் சடாயுபுரி யிற்கருணை
வெள்ளமென வீற்றிருக்கு

மானே றுயர்த்திட்ட வையற்கு மம்மைக்கு
மருமருந் தாகிநின்ற
வாதிப் பிரானென்று மும்முதற் கடவுளு
மடித்தொழும் பாற்றமற்றக்

கூனேறு மதிநுதற் றெய்வக் குறப்பெண்
குறிப்பறிந் தருகணைந்துன்
குற்றேவல் செய்யக் கடைக்கண் பணிக்கெனக்
குறையிரந் தவடொண்டைவாய்த்

தேனூறு கிளவிக்கு வாயூறி நின்றவன்
செங்கீரை யாடியருளே
செத்துப் பிறக்கின்ற தெய்வங்கண் மணவாள
செங்கீரை யாடியருளே. ௫

வேறு

17. செம்பொ னடிச்சிறு கிண்கிணி யோடு
சிலம்பு கலந்தாடத்
திருவரை யரைஞா ணரைமணி யொடுமொளி
திகழரை வடமாடப்

பைம்பொ னசும்பிய தொந்தி யொடுஞ்சிறு
பண்டி சரிந்தாடப்
பட்ட நுதற்பொலி பொட்டொடு வட்டச்
சுட்டி பதிந்தாடக்

கம்பி விதம்பொதி குண்டல முங்குழை
காது மசைந்தாடக்
கட்டிய சூழியு முச்சியு முச்சிக்
கதிர்முத் தொடுமாட

அம்பவ ளத்திரு மேனியு மாடிட
வாடுக செங்கீரை
ஆதி வயித்திய நாத புரிக்குக
னாடுக செங்கீரை. ௬

18. குழையொடு குழையெதிர் மோதிக் காதணி
குண்டலம் வெயில்வீசக்
குமுத விதழ்க்கனி வாயமு தூறிய
குறுநகை நிலவூர

முழுவயி ரப்புய வலயமு முன்கை
முதாரியு மொளிகால
முத்த மரும்பி யெனக்குறு வேர்வு
முகத்தி லரும்பியிடப்

புழுதி யளைந்த பசுந்திரு மேனிப்
பொங்கொளி பொங்கியெழப்
புண்டரி கங்கண் மலர்ந்த விழிக்கடை
பொழியருள் கரைபுரள

அழகு கனிந்து முதிர்ந்த விளங்கனி
யாடுக செங்கீரை
ஆதி வயித்திய நாத புரிக்குக
னாடுக செங்கீரை. ௭

19. விரல்சுவை யுண்டு கனிந்தமு தூறிய
மெல்லிதழ் புலராமே
விம்மிப் பொருமி விழுந்தழு தலறியுன்
மென்குரல் கம்மாமே

கரைவுறு மஞ்சன நண்டுளி சிந்திக்
கண்மலர் சிவவாமே
கலுழ்கலு ழிப்புன லருவி படிந்துடல்
கருவடி வுண்ணமே
யுருவ மணிச்சிறு தொட்டி லுதைந்துநி
ஞெண்பத நோவாமே
யொருதா ளூந்தி யெழுந்திரு கையு
மொருங்கு பதித்துநிமிர்ந்
தருள்பொழி திருமுக மசைய வசைந்தினி
தாடுக செங்கீரை
ஆதி வயித்திய நாத புரிக்குக
னாடுக செங்கீரை. அ

வேறு

20. கும்ப மதக்களி யானை யிரண்டே யொன்றேமைக்
கொண்டல் விழிக்கயன் மீனு மிரண்டே கொண்டேகிச்
சம்ப ரனைப்பொரு சேவகன் வந்தான் வந்தான்முற்
சண்டை கொளற்கென நேர்வரு பெண்பா லன்பாயே
யம்ப வளக்கொடி யேவளர் கொம்பே யென்றேநீ
யன்று புனத்துயிர் சோர்வது கண்டே முன்போதுங்
கம்ப மதத்தர் சகோதர செங்கோ செங்கீரை
கந்த புரிக்கரு ணாநிதி செங்கோ செங்கீரை. கூ

21. திங்க ளுதற்றிரு மாதொடு நின்றே மன்றாடுஞ்
செங்கண் விடைக்கொடி யோனருள் கன்றே யொன்றேயா
யெங்க ளுளத்தமு தூறு கரும்பே யன்பாளர்க்
கின்ப மளிக்குமெய்ஞ் ஞான மருந்தே யெந்தாயின்
கோங்கலர் மைக்குழல் வாழ்பொறி வண்டே வண்டேதுங்
கொந்தள கக்குற மான்வளர் குன்றே யென்றேதுங்
கங்கை மகட்கொரு கான்முளை செங்கோ செங்கீரை
கந்த புரிக்கரு ணாநிதி செங்கோ செங்கீரை. க0

## ௩. தாலப்பருவம்

22. பில்கும் பசுந்தே னசும்பிருந்த
பின்று ழளகத் தரமகளிர்
பேதைக் குறும்பு விளையாடும்
பேரா யத்துச் சிறுமருங்குற்

கோல்குங் கொடிபோய் நுடங்கியிட
வோங்கும் பளிக்கு நிலாமுற்றத்
துயர்சூ ளிகையின் மரகதத்தி
ளொளிகால் வீசத் தெளிவிசும்பிற்

பல்குஞ் சுரபி தாங்கநெடும்
பாகீ ரதியின் கரைகிளைத்த
பசும்புல் லெனச்செந் நாவளைக்கும்
பைம்பொற் றலங்கள் பலகோடி

மல்குஞ் செல்வக் கந்தபுரி
வாழ்வே தாலோ தாலேலோ
மலையாள் வயிறு வாய்த்தமுழு
மணியே தாலோ தாலேலோ. க

23. தொடுக்குந் தொடைவெண் டுகிற்கொடிக
டொடுநீர்ப் பரவை முகம்புழுங்கத்
தோன்றும் பரிதி மணித்திண்டேர்
தூண்டுங் கலிண வாம்பரியை

முடுக்குஞ் சுடர்ப்பொற் றலத்திழைத்த
முழுநீ லத்தி னெழுகொளியின்
முழுகுங் கடவுண் மால்யானை
முகிலிற் றேன்ற வகவிடநின்

றடுக்குங் களிறென் றமகளி
ரையுற் றிடத்தன் வெளிறுமுடம்
பளறு படிந்த தெனக்கங்கை
யாற்றுப் பசும்பொ னசும்புபுனன்

மடுக்குஞ் செல்வக் கந்தபுரி
வாழ்வே தாலோ தாலேலோ
மலையாள் வயிறு வாய்த்தமுழு
மணியே தாலோ தாலேலோ ௨

24. தீற்றுஞ் சுதைவெண் ணிலவெறிப்பத்
திரண்மா மணிகள் வெயில்விரிக்குஞ்
செம்பொற் றலத்துப் பேரமர்க்கட்
சிறியார் நறிய வகிற்புகையிட்

டாற்றுங் குழற்காட் டினைப்புயலென்
றாடு மயில்கண் டம்பவளத்
தரும்பு நகையைச் சகோரப்புள்
ளருந்த விரிந்த முழுநகைவிண்

டேற்று நிலவுக் கிந்துசிலை
யொளிர்மா ளிகையுஞ் சூளிகையு
முருகிப் பெருகுங் கலுழிவெள்ள
முவரோ டெரிக் கடற்புலவு

மாற்றுங் கடவுட் கந்தபுரி
வாழ்வே தாலோ தாலேலோ
மலையாள் வயிறு வாய்த்தமுழு
மணியே தாலோ தாலேலோ. ௩

25. கிளைக்குஞ் சகர் தொட்டபெருங்
கிடங்கென் றிடங்கர் மாவியங்குங்
கீழ்நீ ரழுவக் குண்டகழி
கெழுமு புனற்றெண் டிரைமேய்ந்து

திளைக்குங் கமஞ்சூ னெடும்புயலைச்
சிறுகட் பெருங்கைப் பகடென்றோர்
செங்கட் களிறு பிளிறநிமிர்
திகிரி கிரியென் றிவர்ந்துடல

மிளைக்கும் படிவிண் டொடநிவந்த
வெழிற்பொற் புரிசை விண்டுபதத்
தேறு மேணி பொற்றருவுக்
கிடுவே லியுமா யேழுலகும்

வளைக்குங் கடவுட் கந்தபுரி
வாழ்வே தாலோ தாலேலோ
மலையாள் வயிறு வாய்த்தமுழு
மணியே தாலோ தாலேலோ. ௪

26. சோலைப் புறமுப் புடைக்கனிக
டேக்கு முடத்தெங் கிமையவர்தந்
தோன்றற் றிருவோ லக்கத்துத்
தோகை மயிலி னடங்குயிற்று

மேலக் கருங்கொந் தளவளகத்
திளமா தருக்கு முதிர்வேனி
விளைப்பாற் றுதற்குத் தாற்றெருடுஞ்செவ்
விளநீர் கொடுப்ப வீற்றுளைந்த

காலப் புயலின் முகந்துடைக்குங்
கமுகு பழுக்காய்ப் பவளமுடன்
கதிர்முத் திட்டுச் செழும்பாளைக்
கற்றைக் கவரி புடையிரட்டும்

மாலைப் பழனப் பரிதிபுரி
வாழ்வே தாலோ தாலேலோ
மலையாள் வயிறு வாய்த்தமுழு
மணியே தாலோ தாலேலோ. ௫

வேறு

27. மாலி மயத்து மடப்பிடி பெற்று
வளர்த்த விளங்களிறே
மழவிடை யேதிரு மாமடி கட்கென
வைத்த கவுத்துவமே

மூல மெனக்குல நான்மறை யோலிடு
முழுமுத லேழுவா
முக்கட் கனிகனி யுஞ்சுவை யேதனி
முத்திக் கொருவித்தே

காலை யிளங்கதி ருக்கெதிர் முதிருங்
கதிர்செம் பவளமுடன்
கதிர்முத் திட்டு வணங்கக் கன்னல்கொல்
கமுகுகொ லெனவளருஞ்
சாலி வயற்றமிழ் வேளூ ரடிகேள்
தாலோ தாலேலோ
சங்கத் தமிழின் றலைமைப் புலவா
தாலோ தாலேலோ. சு

28. கருமுகி லுக்கரி தாமடி வாரங்
கண்டிரு பறவைகடங்
கண்களி பொங்கவொர் பறவை முடித்தலை
காணு துட்குவரப்
பொருபுன லருவித் தலையின் மிசைத்தவழ்
புதுமதி நிலவொழுகப்
புள்ளூ ரிற்பொலி வெள்ளி மலைக்கட்
பொன்மலை யைக்குவவு
தருமணி வயிரப் புயமெனு மெட்டுக்
குவடுஞ் சுவடுபடக்
குத்திப் பொருமிரு கோடு படைத்தவொர்
கூந்தற் பிடிபெற்றுத்
தருமொரு தொந்தித் தந்திக் கிளையாய்
தாலோ தாலேலோ
சங்கத் தமிழின் றலைமைப் புலவா
தாலோ தாலேலோ. எ

29. உண்ணெகிழ் தொண்ட ருளத்திருள் சிந்திட
வொளிவிடு முழுமணியே
யுயர்மறை நூற்கலை முடிவின் முடிந்திடு
மொழுகொளி மரகதமே

விண்ணொடு மண்ணை விழுங்கி யருட்கதிர்
விரியு மிளஞ்சுடரே
மெய்ப்புலன் வேய்ந்து சமைந்ததொர் வீட்டை
விளக்கும் விளக்கொளியே

புண்ணிய நாறுமொர் பெண்கனி கனியும்
புனித நறுங்கனியே
புள்ளூ ரெனவெம துள்ளத் தடநிறை
புத்தமு தக்கடலே

தண்ணொளி பொங்கிய கருணை நிதியே
தாலோ தாலேலோ
சங்கத் தமிழின் றலைமைப் புலவா
தாலோ தாலேலோ. அ

வேறு

30. தோலா தமுத்தமிழ் நாவா மூவா மாவாமச்
சூர்வே ரறத்தொடு வேலா நூலா நூலோதுஞ்

சீலா மலைக்கொடி பாலா கீலா மேலாகுந்
தேவா திபற்கொரு தேவா வோவா தேகூவுங்

காலா யுதக்கொடி வீரா வேரா வேறேறுங்
காபா லிபெற்றகு மாரா வீரா பேராளா

சேலார் வயற்குரு கூரா தாலோ தாலேலோ
சேனா பதிப்பெரு மாளே தாலோ தாலேலோ. கூ

31. ஊனா யுயிர்க்குயி ரானாய் தாலோ தாலேலோ
வோதா துணர்ந்திடு போதா தாலோ தாலேலோ

வானா வருட்கனு பானா தாலோ தாலேலோ
வாயா தசொற்சொலு பாயா தாலோ தாலேலோ

நானா யெனக்கரி தானாய் தாலோ தாலேலோ
நாதா திகட்கனு பூதா தாலோ தாலேலோ

தேனார் பொழிற்குரு கூரா தாலோ தாலேலோ
சேனா பதிப்பெரு மாளே தாலோ தாலேலோ. கo

## ௪. சப்பாணிப்பருவம்

32. முடங்குந் திரைப்பரவை வயிறுளைந் தீன்றநறு
முளரிப் பிராட்டிவைத்து
முத்தாடு பச்சைப் பசுங்கிள்ளை யெனமழலை
முதிருமென் குதலைகற்பத்
தொடங்குங் குறப்பாவை கற்றைக் குழற்கிற்
றாமமொடு தாமமிட்டுச்
சுடிகைநுதல் வெயர்வுந் துடைத்தொழுகு கத்தூரி
தூரியங் கொண்டுதீட்டிக்
தடங்கைக் கடங்கா நெடுங்கட் கடைக்கழகு
கூரவஞ் சனமெழுதிமென்
கொங்கைத் தடத்தும் பசுங்களப மப்பியவள்
குற்றேவன் முற்றுமாற்றித்
தடங்குங் குமப்புயங் கொட்டிநட மிட்டவன்
சப்பாணி கொட்டியருளே
தையனா யகிமருவு தெய்வநா யகன்மதலை
சப்பாணி கொட்டியருளே. க

33. மழைக்கொந் தளக்கலப மயிலிளஞ் சாயனெடு
மதாரிக் கொண்டையுண்கண்
மான்கன்றை யமருலகு வாழப் பிறந்திடு
மடப்பிடியை வானவில்லைக்
குழைக்குந் தடக்கைத் திருத்தாதை நீரொடு
கொடுப்பக் குடங்கையேற்றுக்
கொழுமலர் மணங்கமழ் மணப்பந்தர் நிற்பவக்
கொம்புமின் கொடியினொல்கி
யிழைக்கும் பசும்பொற் றசும்பென வசும்புபொன்
னிளமுலை முகங்கோட்டிநின்
றெய்யாமை நோக்கும் படைக்கட் கடைக்கணோக்
கின்னமுத மூற்றவின்பங்

தழைக்கும் பெருங்காதல் வெள்ளந் திளைத்தவன்
சப்பாணி கொட்டியருளே
தையலு யகிமருவு தெய்வநா யகன்மதலை
சப்பாணி கொட்டியருளே. ௨

34. உண்ணிலா வுவகைத் தடங்கடல் படிந்திட்ட
வும்பருஞ் செங்களம்பட்
டொண்பரிதி யுடல்கிழித் தோடுங் கடற்றானை
யொளிறுவா ளவுணர்குழுவுந்
தேண்ணிலா மதிநுதற் றெய்வப் பிணாக்கள்வாய்த்
தேனமுது மமுதவாரித்
தெள்ளமுது முடனிருந் துண்ணப் பணித்திட்ட
செங்கைவேல் பைம்புனத்துப்
பண்ணுலா மழலைப் பசுங்கிளவி யெயினர்பொற்
பாவைவிழி வேலொடொப்புப்
பார்க்குந் தொறுந்தலை கவிழ்த்துநின் றவடிருப்
பவளத்து முத்தரும்புந்
தண்ணிலா வுக்கொண் சகோரமென நின்றவன்
சப்பாணி கொட்டியருளே
தையலு யகிமருவு தெய்வநா யகன்மதலை
சப்பாணி கொட்டியருளே. ௩

35. மடநடைத் தெய்வக் குறப்பாவை திருவுருவின்
மயிலிளஞ் சாயலுநிலா
மணிவட மறப்புடைத் திறுமாந்த கனதன
வனப்புங் குறித்துநோக்கி
யிடுகிடைப் பாவிக் கினிப்பிழைப் பில்லைகொ
லெனுத்திரு வுளங்குழைந்தாங்
கேந்திளங் கொங்கையை யிணைப்புயத் தேந்திநின்
றெல்லா வுறுப்புநிற்கக்

தடமுலைக் கேயிவள் குடிப்பிறப் புக்கிணைய
குணங்கிடைத் ததுகொலென்னக்*
கோதைநெடு நாணெய்த வவயவங் கட்குள
குணுகுணந் தனிதெரிக்குந்
தடமலர்க் கைத்தலஞ் சேந்தொளி துளும்பவொரு
சப்பாணி கொட்டியருளே
தையனா யகிமருவு தெய்வநா யகன்மதலை
சப்பாணி கொட்டியருளே. ௪

36. விண்ணென் கடற்புவன முடவுப் படத்தேந்து
வேந்துபொலி பாந்தள்வைப்பும்
விரிநீர் வரைப்புமெழில் விஞ்சைய ரிருப்புமுகை
விண்டுநறை விரிமுண்டகக்
கண்ணன் றிருப்பதமு நான்முகக் கடவுள்பூங்
கஞ்சமுங் குலிசப்பிரான்
கற்பகக் காவுநின் றொண்டர்க டொழும்புக்கொர்
காணியா வைத்துமற்றத்
திண்ணென் றடக்கைவெஞ் சிலைவேடர் குடிகொண்ட
சீறூரு மூரூர்தொறுஞ்
செந்தினைப் புனமூடு தண்சாரல் பிறவுமாஞ்
சீதனக் காணிபெற்றத்
தண்ணென் குறிஞ்சித் தலந்தலை யளிப்பவன்
சப்பாணி கொட்டியருளே
தையனா யகிமருவு தெய்வநா யகன்மதலை
சப்பாணி கொட்டியருளே. ௫

வேறு

37. கடலைச் சுவற வடித்து மிடித்துக்
கனவரை துகள்கண்டுங்
கடிதிற் றிரிய வகுப்பதை யொப்பக்
காரவு ணக்கடலி

*லென்றக் என்று பாடங்கொள்வாருமுளர்.

னுடலிற் பெருகிய குருதிக் கடல்பிண
வோங்கலொ டோங்கவமைத்
தொட்டிய வொட்டல ரிற்பிற கிட்டவ
ரொழியப் பிறரையெலாந்

தடவுத் தாழியின் மத்தெறி தயிரிற்
றத்துதி ரப்புனலிற்
றசைகுடர் நிணமொடு மூளை குழம்பச்
சமர்விளை யாடல்செயுந்

துடுமிச் சுடர்வடி வேலைத் தொட்டவ
கொட்டுக சப்பாணி
கொழிதமிழ் வேத புரிக்கும ரேசன்
கொட்டுக சப்பாணி. ௬

38. சமரிற் பட்டவர் வெட்டிய பூதத்
தலைவர்க ணிற்பமுதற்
றுமறை நாயகன் வயிறு கிழித்துத்
தந்தொழி றலைநின்றுங்

கமரிற் குரிய மடக்கொடி யாரை
யலைத்தனர் பற்றியெயிற்
றவுண ரெனத்தமை யுணரார் கணவர்க
ளார்ப்பில் வெடித்தபெருங்

கமரிற் குருதி பிலத்தை நிரப்பிடு
களமெதிர் கண்டினியக்
காரவு ணக்கடல் சூரொடு மாளக்
கடிதிற் றடிதியடற்

குமரக் கடவு ளெனப்பணி வேலவ
கொட்டுக சப்பாணி
கொழிதமிழ் வேத புரிக்கும ரேசன்
கொட்டுக சப்பாணி. ௭

39. அற்ற வுடற்குறை யிற்ற முடித்தலை
யங்கைத் தலம்வைத்திட்
டாடு பறந்தலை யோடுதி ரப்புன
லாறு கடத்துகெனுஞ்

சிற்றல கைக்கொரு போலகைப்பெண்
டோழி யக்கழியுந்
திகிரிப் பரிசில் விடப்படு சுழியிற்
றெருமரல் மட்பகைஞன்

பற்றிய திரிகை திரித்து விடத்திரி
பரிசென வுஞ்சுழலும்
பம்பர மெனவும் வரும்படி யவுணர்
படக்கள வேள்விசெயாக்

கோற்ற மகட்புண ருஞ்சுடர் வேலவ
கொட்டுக சப்பாணி
கொழிதமிழ் வேத புரிக்கும ரேசன்
கொட்டுக சப்பாணி. ௮

## வேறு

40. வளரிள வனமுலை மலைமக ளுக்கொர் தவப்பேறே
மறிதிரை பொரநிமிர் கருணை கொழித்த பெருக்காறே
யளியுமி னமுதெழு வெளியினில் வைத்த சுவைத்தேனே
யறமுது தவமொடு வளர வளர்த்திடு நற்றாயே
களிமயில் கடவிவி ணடைய முடுக்கிய புத்தேளே
கலைமறை யெனுமுரல் வரியளி மொய்த்த மலர்க்காவே
தெளிதமிழ் பழகிய மதவலி கொட்டுக சப்பாணி
தினகர புரிவரு தனிமுதல் கொட்டுக சப்பாணி. ௯

41. கனியொடு சுவையமு தொழுகிய சொற்பயி றத்தாய்வேள்
கணையொடு பிணையென வுலவு கடைக்கண் மடப்பாவாய்
நனைமலர் பொதுளிய வெழிலி தழைத்த குழற்கோதாய்
நளிர்புன மிசைவளர் கலபம் விரித்த மயிற்பேடே
யெனவொரு குறமக ளடிமுடி வைத்தனை முத்தேவா
மிறைவரு முறைமுறை பணிய விருக்கு முதற்றேவே
சினவிடை யவரருண் மழவிடை கொட்டுக சப்பாணி
தினகர புரிவரு தனிமுதல் கொட்டுக சப்பாணி. ௪௰

---

# ரு. முத்தப்பருவம்

---

42. குருகு நாறு செந்தளிர்க்கைக்
கொடிநுண் ணுசுப்பிற் கோட்டிமயக்
குலப்பூங் கொம்பு நறவூழ்த்த
கொழுந்தா மரையோ டவிழ்ந்ததுழாய்ச்

சருகு நாறு முடைத்தலையின்
றூம நாறு திரடிண்டோட்
டாதை யாருங் கண்டுகெண்டு
தடங்கண் களிப்பக் குரவுவிரிந்

தருகு நாறு திருமேனி
யந்தீங்குதலை மழலைகனிந்
தமுத மூறு பசுந்தேற
லசும்பு நாறத் தெய்வமண

முருகு நாறுஞ் செங்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி
முருகா முத்தந் தருகவே. க

43. நறவு விரிந்த விரைத்தோட்டு
நளினத் தொட்டிற் றடமுலைப்பா
னல்கி வளர்த்த கைத்தாயர்
நகைவாண் முகத்து மார்பகத்துந்

தூறுமெ னடைய சிறுபசுங்காற்
குருதி ததும்ப வுதைந்துசில
குறும்பு செயத்தா ணேமெனமென்
கோல்கொண் டோச்சப் பெரும்புவன

நிறுவு மொருநின் பெருந்தன்மை
நினைந்தாய் போலக் கனிந்தமுது
நெக்குப் பசுந்தே னசும்பூற
நெடுவெண் ணிலவு விரிந்தகுறு

முறுவ லரும்புஞ் செங்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி
முருகா முத்தந் தருகவே. உ

44. பொழியுங் கருணைப் பெருவெள்ளப்
புணரி பெருகி யலையெறியப்
பொங்கி யெழுந்த பெருங்காதற்
புளகம் போர்ப்பப் போதுசெயும்

விழியு மனமுங் குளிர்தூங்க
விரிநீர்ச் சடிலத் தொருவனிரு
வீணைக் குதவுந் திருச்செவிகள்
விருந்தாட் டயர விரைகொழித்து

வழியுங் கொழுந்தேன் பிழிந்திட்டு
மதுர வமுது குழைத்தூற்று
மழலை ததும்பப் பழமறையை
வடித்துத் தெளித்த வார்த்தையொன்று

மொழியும் பவளச் செங்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி
முருகா முத்தந் தருகவே. ௩

45. கலைப்பா னிறைந்த முதுக்குறைவிற்
கல்விச் செல்வர் கேள்விநலங்
கனியக் கனிய வமுதூறுங்
கடவுண் மறையு முதற்சங்கத்

தலைப்பா வலர்தீஞ் சுவைக்கனியுந்
தண்டே னறையும் வடித்தெடுத்த
சாரங் கனிந்தூற் றிருந்தபசுந்
தமிழு நாறத் தடங்கரைகொ

லலைப்பாய் புனற்றெண் கடல்வைப்பு
மகிலாண் டமும்பன் முறையீன்று
மழகு முதிர முதிராவென்
னம்மை யமுது சூற்கொண்ட

முலைப்பா லூறுஞ் செங்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி
முருகா முத்தந் தருகவே. ௯

46\. புயலுண் டிருண்ட கொந்தளமும்
பொன்னங் குழையு மின்னகையும்
புளகம் பொதிந்த விளமுலையும்
புருவச் சிலையும் போர்த்தடங்கட்

கயலுங் கலப மயிலியலுங்
கன்னிப் புனத்தோர் பெண்ணமுதின்
காமர் நலனும் பன்னிரண்டு
கண்ணூன் முகந்துண் டின்னமுதி

னியலுஞ் சுவைநல் லவியொடுநீத்
தேக்கற் றிருந்தத் தாக்கணங்கி
னிழுமென் குதலை கனிந்தூறு
மிதழ்த்தேன் சுவைகண் டேமாப்பான்

முயலுங் குமுதக் கனிவாயான்
முத்தந் தருக முத்தமே
மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி
முருகா முத்தந் தருகவே. ௰

வேறு

47\. கோடுபடு கொங்கைக் குவட்டுக் கிளைத்திட்ட
கொடியிடைக் கடைசியர்குழாங்
குரவையிடு துழனியிற் கொண்டறிரை யத்தாவு
குழவுப் பகட்டுவாளை

சேடுபடு புத்தே ணிலத்துப் புனிற்றிளஞ்
சேதா வயிற்றுமுட்டச்
செங்கன் றெனைத்தடவு மடிமடை திறந்தூற்று
தீம்பால் சினைக்கற்பகத்

தேடுபடு தடமலர்த் தேனருவி யொடுசொரிந்
தேரியொடு காணிரம்ப
விழுதுபடு கழனியுந் தெய்வமண நாறவேன்
றின்சுவை முதிர்ந்துவிளையுங்

காடுபடு செந்நெல்லைங் கன்னனிகர் புள்ளூர
கனிவாயின் முத்தமருளே
கங்கைக்கு நெடியவன் றங்கைக்கு மொருமகன்
கனிவாயின் முத்தமருளே. சு

48. துளிதூங்கு மழைமுகிற் படலங் கிழிக்குந்
துகிற்கொடிகள் சோலைசெய்யத்
தோரண முகப்பிற் றவழ்ந்தேறு கலைமதித்
தோற்றத்தை யறுகான்மடுத்

தளிதூங்கு தேனிரு லிதுதம்மின் வம்மினென்
றழிநரு வார்ந்துநிற்கு
மங்கலார் கைகூப்ப வாடவர் பிழிந்தூற்று
மளவினப ராதமிதெனு

ஒளிதூங்கு முகமதிக் கொப்பென்கி லேன்விடுதி
ருயிரொன்று மெனவிடலுமவ்
வுடுபதிக் கடவுணற வுண்டமற் றவரினு
முய்ந்தோ மொழிந்தோமெனக்

களிதூங்கு மாடமலி கந்தபுரி வருமுருக
கனிவாயின் முத்தமருளே
கங்கைக்கு நெடியவன் றங்கைக்கு மொருமகன்
கனிவாயின் முத்தமருளே. எ

49. பூமரு வுயிர்க்குங் கருங்கொந் தளத்துவிரி
பூந்துகட் பட்லமுமணம்
பொங்கிய நறும்புகைப் படலமுங் காலமழை
பொழிமுகிற் படலஞ்செயத்

தாமரை முகச்சோதி யெழவெழுஞ் சிறுமுறுவ
 றண்ணிலவு செயவெயில்செயத்
தழன்மணிக் கலனக ணிதம்பமொடு வெம்முலை
 தடங்கடலு மலையுஞ்செயத்

தேமரு குழற்கோதை மயிலனீர் கோசிகன்
 செம்மலென வேறுபுவனஞ்
செயவும்வல் லீரென மணந்திடை தணந்தவர்சொல்
 செஞ்சொற் பசுங்கிளிசொலக்

காமரு மனங்குழைய மாதர்பயில் வேளூர
 கனிவாயின் முத்தமருளே
கங்கைக்கு நெடியவன் றங்கைக்கு மொருமகன்
 கனிவாயின் முத்தமருளே. அ

வேறு

50. மதியு நதியு மரவும் விரவு மௌலி யொருவன் முக்கணும்
 வனச முகமு மகமு மலர மழலை யொழுகு சொற்சொலும்

புதல்வ விமய முதல்வி யருள்செய் புனித வமரர் கொற்றவன்
 புதல்வி தழுவு கொழுந குறவர் சிறுமி குடிகொள் பொற்புய

கதிரு மதியு மொளிர வொளிரு மொளிய வளிய கற்பகக்
 கனியி லினிய வுருவ பருவ மழையி னுதவு கைத்தல

முதிரு மறிவி லறிஞ ருணரு முதல்வ தருக முத்தமே
 முனிவர் பரவு பரிதி புரியின் முருக தருக முத்தமே. கூ

51. வடிவி னழகு மெழுத வரிய புயமு நறிய செச்சையு
 மருமம் விரவு குரவு மரையின் மணியு மணிகொள் கச்சையுங்

கடவு மயிலு மயிலு மொழுகு கருணை வதன பத்மமுங்
 கமல விழியும் விழியு மனமு மெழுதி யெழுதி நித்தலு

மடிக ளௌனவு னடிகள் பணியு மடிய ரலது மற்றும்வே
 றமரர் குழுவு மகில மறையு மரியு மயனு முற்றுநின்

முடியு மடியு முணர வரிய முதல்வ தருக முத்தமே
 முனிவர் பரவு பரிதி புரியின் முருக தருக முத்தமே. கO

## ௬. வருகைப்பருவம்

52. செம்பொற் கருங்கழ லரிக்குரற் கிண்கிணி
சிலம்பொடு கலின்கலினெனத்
திருவரையி லரைமணி கிணின்கிணி னெனப்பொலந்
திண்டோளின் வளைகலிப்ப
வம்பொற் பகட்டுமார் பிற்சன்ன வீரமு
மாரமுந் திருவில்வீச
வணிமகர குண்டலம் பரிதிமண் டலமென்ன
வலர்கதிர்க் கற்றைசுற்றப்
பைம்பொற் சுடர்ச்சுட்டி கட்டுசூ ழியமுடன்
பட்டமொளி விட்டெறிப்பப்
பங்கய மலர்ந்ததிரு முகமண் டலந்தொறும்
பனிமுறுவ னிலவரும்பக்
தும்பப் படாமுலை மலைப்புதல்வி செல்வக்
குமாரநா யகன்வருகவே
குரவுகமழ் தருகந்த புரியிலருள் குடிகொண்ட
குமரகுரு பரன்வருகவே. ௧

53. மழவுமுதிர் கனிவாய்ப் பசுந்தேறல் வெண்டுகின்
மடித்தல நனைப்பவம்மை
மணிவயிறு குளிரத் தவழ்ந்தேறி யெம்பிரான்
மார்பினிற் குரவையாடி
முழவுமுதிர் துடியினிற் சிறுபறை முழக்கியனன்
மோலிநீர் பெய்தவித்து
முளைமதியை நெளியரவின் வாய்மடுத் திளமானின்
முதுபசிக் கறுகருத்தி
விழவுமுதிர் செம்மேனி வெண்ணீறு தூளெழ
மிகப்புழுதி யாட்டயர்ந்து
விரிசடைக் காட்டினின் றிருவிழிகள் சேப்பமுழு
வெள்ளநீர்த் துளையமாடிக்

துழவுமுதிர் செவ்விப் பெருங்களி வரச்சிறு
குறும்புசெய் தவன்வருகவே
குரவுகமழ் தருகந்த புரியிலருள் குடிகொண்ட
குமரகுரு பரன்வருகவே. ௨

54. இருளற விமைக்குநின் றிருவுருவி னலர்சோதி
யிளஞாயி றெனமுகையவிழ்ந்
தேடவிரி தாமரைக் காடுமுகிழ் நகைநில
வெறிப்பவலர் குமுதவனமுங்

கரைபுரள வலைமோது கடலைக் கலக்குமழ
களிறென வுழக்கியொருநின்
கண்மலர்கள் செம்மலர்க ளாகமோ கப்பெருங்
கலவியங் கடலின்மூழ்கும்

வெருளின்மட ணேக்கினீ ரரமகளி ருடனுடும்
விளையாட் டெனத்திரைபொரும்
வெள்ளநீர்ச் சரவணப் பொய்கையந் துறையினீள்
வீரர்க ளெனுங்கோளரிக்

குருளைக ளொடும்புனல் குடைந்துவிளை யாடிய
குமாரநா யகன்வருகவே
குரவுகமழ் தருகந்த புரியிலருள் குடிகொண்ட
குமரகுரு பரன்வருகவே. ௩

55. கட்டுண்ட படர்சடைக் காட்டெம் பிரான்வைத்த
கலைமதியொ டையநீயக்
கவுரிதிரு முடியினித் திலமிட் டிழைத்திட்ட
கதிரிளம் பிறையிணைப்பத்

தேட்டுண்ட போன்முழுத் திங்களென் றேக்கறுஞ்
செழுமணிச் சூட்டுமோட்டுச்
செம்பாம்பு பைவிரித் தாடுதலு மோடிநின்
சிறுநறுங் குஞ்சிக்கிடு

மட்டுண்ட பைங்குலைக் காந்தளென் றணையவம்
மாசுணம் வெருண்டோடலு
மணிமுடியி னருதலையை மற்றெமை நகைத்தியான்
மலரவன் றலைநீமுனங்
குட்டுண்ட தறியாய்கொ லெனவித ழதுக்குங்
குமாரநா யகன்வருகவே
குரவுகமழ் தருகந்த புரியிலருள் குடிகொண்ட
குமாரகுரு பரன்வருகவே. ௪

56. அங்கைத் தலத்தம்மை செங்கண் புதைத்தற்
கடங்காமை யாலெம்பிரா
னலர்விழிகள் பொத்தலு மிருட்படல மூடவுள்
ளஞ்சிநின் றேங்கவேங்கிச்
செங்கைத் தலங்கொண் டெடுத்தணைப் பாட்குந்
திருத்தாதை யார்க்குமுத்தந்
திருமுகமொ ராறுங் கொடுப்பக் கதுப்பிற்
றெறித்துமுத் தந்தருகெனுங்
கங்கைக்கு நல்கா தெழுந்தலறி யோடலுங்
கண்ணீர் துடைத்தெடுத்துக்
கான்மலரு நீவித்தன் மார்புற வணைக்குமக்
கவுமாரி யருண்மாரியிற்
கொங்கைக் குடங்கொட்டு பாலருவி யாடுங்
குமாரநா யகன்வருகவே
குரவுகமழ் தருகந்த புரியிலருள் குடிகொண்ட
குமாரகுரு பரன்வருகவே. ரு

வேறு

57. பைந்தண் கமல வட்டவணைப்
பாவை யனையார் பூவிரியும்
பசுமென் குழற்கூட் டகிற்புகையின்
படல மூட முடைநறவின்

கந்தம் பொதிந்த செந்துவர்வாய்க்
கடைசி மகளிர் செந்நெலைப்பைங்
கன்ன லெனவுங் கன்னலைப்பூங்
கமுக மெனவுங் கடைக்கூடாத்
தந்தங் கருத்துக் கமைந்தபடி
சாற்றிச் சாற்றி முழுமாயச்
சலதி மூழ்கித் தடுமாறுஞ்
சமயத் தவர்போற் றலைமயங்கு
மந்தண் பழனக் கந்தபுரிக்
கரசே வருக வருகவே
யருளா னந்தக் கடற்பிறந்த
வமுதே வருக வருகவே. ௬

58. வள்ளைக் குழையிற் ருவடிபோ
மடமா ஞேக்கிற் கடைசியர்கண்
மாலைக் குழல்வண் டோலமிட
மடுவில் வெடிபோம் வரிவாளை
பள்ளத் திருநேங் கழுவநீர்ப்
பரப்பென் றகல்வான் மிசைத்தாவப்
பாகீ ரதித்தீம் புனல்கிடைத்த
பரிசு வீட்டின் பயன்றுய்க்கு
முள்ளக் கருத்தாற் பிறிதொன்றை
யுண்மைப் பொருளென் றுள்ளவுந்த
முணர்விற் றெய்வங் கடைக்கூட்ட
வுறுதி கிடைத்த படிபோலு
மள்ளற் பழனப் புள்ளூருக்
கரசே வருக வருகவே
யருளா னந்தக் கடற்பிறந்த
வமுதே வருக வருகவே. ௭

59. நஞ்சிற் றோய்த்துக் கொலைதீற்று
நயன வேலுங் கரும்புருவ
நாமச் சிலையு மகலல்கு
னகுபொற் றேரு மிகல்கடந்து
வஞ்சிக் கொடிநுண் ணிடைசாய்த்து
மதர்த்துக் களித்த மால்களிறு
மற்றும் படைகள் பற்பலவும்
வகுத்துக் கொண்டு மடலவிழ்ந்த
கஞ்சத் தவிசிற் றிருவன்னார்
கடலந் தானைக் கைநிமிரக்
காமன் படைவீ டெனப்பொலியுங்
காட்சி யானு மப்பெயரிட்
டஞ்சொற் றமிழோர் புகழ்வேளூர்க்
கரசே வருக வருகவே
யருளா னந்தக் கடற்பிறந்த
வமுதே வருக வருகவே. ௮

வேறு

60. உலகு குளிர வெமது மதியி லொழுகு மமுத கிரணமே
யுருகு மடிய ரிதய நெகிழ வுணர்வி லெழுந லுதயமே
கலையு நிறையு மறிவு முதிர முதிரு மதுர நறவமே
கழுவு துகளர் முழுக நெடிய கருணை பெருகு சலதியே
யலகில் புவன முடியும் வெளியி லளியு மொளியி னிலயமே
யறிவு ளறிவை யறியு மவரு மறிய வரிய பிரமமே
மலையின் மகள்கண் மணியை யனைய மதலை வருக வருகவே
வளமை தழுவு பரிதி புரியின் மருவு குமரன் வருகவே. ௯

61. இழுமெ னருவி சொரியு மிமய முதல்வி புதல்வன் வருகவே
யியலு நடையும் வடிவு மழகு மெழுத வரியன் வருகவே
யொழுகு கருணை முழுகு கமல வதனன் வருக வருகவே
யொருவ னிருவ ரொடுகை தொழுந லுபய சரணன் வருகவே
விழுது விடுவெ ணிலவு பொழியு நகையன் வருக வருகவே
விளரி பயிலு மளியு ஞிமிறும் விரவு குமரன் வருகவே
மழலை முதிர முதிரு மதுர வசனன் வருக வருகவே
வளமை தழுவு பரிதி புரியின் மருவு குமரன் வருகவே. ௰

## எ. அம்புலிப்பருவம்

62. மண்டலம் போற்றுருவ மமுதமய மாய்முழு
மதிக்கடவு ளெனவருதலால்
வானுறு தலைமடுக் கப்பொங்கு மானந்த
மாக்கட லிடைத்தோன்றலாற்

றண்டலில் கொடிச்சிவாய்க் குமுதம்விள் ளக்காத்
தாமரை முகிழ்த்திடுதலாற்
சகலபுவ னத்திலு முயிர்ப்பயிர் தழைப்பநற்
றண்ணளி சுரந்திடுதலாற்

றுண்டமதி நதியொடு பொதிந்தவே ணிப்பரஞ்
சோதிகட் பொறியாதலாற்
றோன்றலிவ னின்னையொத் துளனு னினக்குமொரு
துணையிவன் போலில்லைகா

ணண்டரண் டத்தொடகி லாண்டம் படைத்தவனொ
டம்புலீ யாடவாவே
யழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுட
னம்புலீ யாடவாவே. க

63. சொற்றரு பெரும்புலவர் கலையமுது கொளவிருந்
தோகைமேல் கொண்டருளினய்
தோற்றிமுன் பொங்கிமலை போலவலை மோதுமச்
சோதிவேலையுமுகந்தாய்

குற்றமில் குணத்தைக் குறித்தவிர வலர்முகங்
கோடா தளித்தல்செய்தாய்
கோகனக நாயகன் வரக்கூ விடுங்குக்
குடங்கொடிய தாகவைத்தா

யுற்றிடு மிதழ்க்குமுதம் விண்டுதண் டேனொழுக
வொளிநிலா நகைமுகிழ்த்தா
யுன்செய்கை யெம்பிரான் றன்செய்கை போலுமா
லுனையுமிவ னெவ்வாதிரா

ணற்பொதி களத்தவ னளித்தகும ரேசனுட
னம்புலீ யாடவாவே
யழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுட
னம்புலீ யாடவாவே. ௨

64. கங்கைமுடி யடிகட்கொர் கண்ணு யிருத்தியக்
கண்ணினுண் மணியிவன்காண்
கலைகள்சில நிறைதிபின் குறைதியிவ னென்றுமொண்
கலைமுழுது நிறையநின்ற

னேங்குமிர வோனெனத் திரிதியிவ னடியவ
ரெவர்க்குமிர வினையொழித்தா
னிருநிலத் தங்குரிக் கும்பயிர் வளர்த்தியிவ
னெவ்வுயிரும் வாழச்செய்தான்

பொங்கமுத மமுதா சனர்க்குதவி னுயிவன்
புத்திமுத் தியுமளித்தான்
புவனம் படைத்தவிவ னின்னின்மிக் கானெனப்
புகல்வதோர் பொருளன்றுகா

ணங்கண்மறை யோலிட் டாற்றநின் றவனுட
னம்புலீ யாடவாவே
யழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுட
னம்புலீ யாடவாவே. ௩

65. பாயிருட் போதத் திருட்டன்றி யகவிருட்
படலங் கிழிப்பதுணாய்
பனிவிசும் பிற்பொலிவ தொன்றலாற் புவனப்
பரப்பெலாம் பொலிவதோராய்

சேயிதழ்க் குமுதக் திறப்பதல் லாதுளத்
திருமலர் திறக்கவறியாய்
சிறைவிரி சகோரப்பு ளன்றியெவ் வுயிருந்
திளைத்தின்ப மாரச்செயாய்

நீயிவற் கொப்பன்மை செப்புவதெ னிப்பரிசி
னின்பெருந் தவமென்சொல்கே
னெடியவன் முதற்றேவர் குறைகிற் பவுமுனை
நினைத்தழைத் தருளினன்கா
ணுயிர மறைக்குமொரு பொருளா யிருப்பவனொ
டம்புலீ யாடவாவே
யழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுட
னம்புலீ யாடவாவே.

66. தருமன்னு பொன்னுலகு மண்ணுலகு மொக்கத்
தலைத்தலை மயங்கத்தொகுஞ்
சன்னிதி யடைந்தவர்கள் பையுணோய் முற்றுந்
தவிர்ந்தக மகிழ்ந்துதவிராக்
கருமன்னு மூழிப் பெரும்பிணியு மாற்றிடுதல்
கண்டனை யிருத்தியானின்
கயரோக முடன்முயற் கறையுந் துடைத்திடக்
கருதிடுதி யேயெலம்பிரான்
றிருமுன்ன ரள்ளியிடு வெண்சாந்து மற்றைத்
திருச்சாந்து நிற்கவற்றுச்
சித்தாமிர் தத்தடத் தீர்த்தத் துறைக்குறுந்
திவலையொன் றேயமையுமா
லருவென்ன வுருவென்ன வன்றென்ன நின்றவனொ
டம்புலீ யாடவாவே
யழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுட
னம்புலீ யாடவாவே.

67. ஒழியாத புவனத் துயிர்க்குயிர தாய்நிற்ப
தொருதெய்வ முண்டெனவெடுத்
துரையா லுணர்த்துவதை யொழியவெவ ரெவர்கட்கு
மூன்கண் ணுளக்கண்ணதாம்

விழியாக முன்னின்று தண்ணளி சுரந்தவர்கள்
வேண்டிய வரங்கொடுப்பான்
மெய்கண்ட தெய்வமித் தெய்வமல் லாற்புவியில்
வேறில்லை யென்றுணர்தியாற்

பொழியாத புயறங்கு புவனமுந் திசைமுகப்
புத்தேள் பெரும்புவனமும்
பொன்னுலகு மண்ணுலகு மெவ்வுலகு வேண்டினும்
பொருளன் றிவற்குமற்றை

யழியாத வீடுந் தரக்கடவ னிவனுட
னம்புலீ யாடவாவே
யழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுட
னம்புலீ யாடவாவே. ௬

68. நெட்டுடற் பைங்கட் கரும்பேய்கள் செம்மயிர்
நிரைத்தூணம் வீக்கியார்த்து
நிற்குங் குறட்பூத மொன்றினை விடுத்துடலி
னெடியபழு வென்புநெரியக்

கட்டெனப் பிடியெனக் கொடிறுடைத் தடியெனக்
கணநாதர் கடுகமுடுகிக்
கடல்வாய் திறந்தெனப் பிலவாய் திறந்தலறு
காட்சிநீ காணுயலை

மட்டுடைத் தாறுந் தடங்கமலன் முதலியோர்
வாய்புதைத் தஞ்சிநிற்ப
வருகென் றழைத்திடவும் வாரா திருத்தியான்
மற்றிவன் முனிந்தாலுனக்

கட்டதிக் கினிலுமொரு திக்கிலையெ மையனுட
னம்புலீ யாடவாவே
யழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுட
னம்புலீ யாடவாவே. எ

69. குன்றைத் திறந்திட்ட குடுமிவேல் குருயிர்
குடித்திட விடுத்துநின்றான்
குண்டிகைக் கள்வனைக் குடுமித் தலைப்பசுங்
குருதிபொங் கப்புடைத்தா
னின்றைக் குழந்தையென் றெண்ணாது குலிசன்முத
லெண்மரும் பிறருமொருஞான்
றெதிர்நின் றுடற்றியவர் பட்டபா டறியா
திருத்தியலை யதுகிடக்க
முன்றக்கன் வேள்விக் களங்கொலைக் களமென்ன
முடியமரர் மொத்துண்டநாண்
முழுமதிக் கடவுணீ யவமதிப் புண்டதை
மொழிந்திடக் கடவதன்று
லன்றைக் கணக்கின்றும் வந்திருக் கின்றதினி
யம்புலீ யாடவாவே
யழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுட
னம்புலீ யாடவாவே. ௮

70. தள்ளும் பவக்கட லுழக்குமெனை முத்தித்
தடங்கரை விடுப்பவனுனைத்
தலையளிப் பான்வர வழைப்பவும் வராவிடிற்
றண்ணளி சுரந்துகருணை
வெள்ளங் கொழிக்குங் கடைக்கண் சிவப்பவிவன்
வெகுளாது விடினுமழுது
விழிசிவப் பக்காணி லிரவிபகை சாய்த்தவிள
வீரன் பொறுப்பானலன்
கள்ளம் பழுத்தகட் கடைசியர் சிறார்திரைக்
காவிரித் தண்டுறைதொறுங்
கதிர்நித் திலங்குவி மணற்குன்ற மேறிநின்
கலைமதிக் கலசவமுதை

---

70. எறியக்கலைமதி என்று பாடங்கொள்வாருமுளர்.

யள்ளுந் தடம்பணைச் சோணாட
னிவனுட னம்புலீ யாடவாவே
யழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுட
னம்புலீ யாடவாவே. ௯

71. தன்னொத்த தெய்வச் சிறாருமிள வீரருந்
தாணிழற் கீழ்நிற்பவிச்
சகதண்ட மண்டல மடுக்கழியு நாளமரர்
தமையழக் காண்பவனிவ

னின்னைப் பொருட்படுத் தொருவிரற் றலைசுட்டி
நீள்கழற் றாளுதைந்து
நெடுமலர்க் கண்பிசைந் தழுதழூ தழைத்தன
னினக்கிதில் வியப்பில்லைகாண்

பின்னற் றிரைச்சுர நதித்தண் டுறைத்தேவர்
பேதைக் குழாங்களென்னப்
பெருகுந் தடம்புனற் காவிரிப் பூவிரி
பெருந்தண் டுறைச்சிறைவிரித்

தன்னக் குழாந்திளைத் தாடுசோ ணாடனுட
னம்புலீ யாடவாவே
யழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுட
னம்புலீ யாடவாவே. ௧0

---

72. சூறுமென் னடையு நெடுவெணிலாக்
கோட்டு நகையும் வாட்டடங்கண்
குளிர முகந்துண் டொளிர் சுட்டிக்
குஞ்சி திருத்தி நறுங்குதலை

மூறுகு நறைத்தேன் கனிபவள
முத்துண் டுச்சி மோந்துகொண்டுன்
முகமுந் துடைத்து விளையாட
முன்றிற் புறத்துப் பொன்றதும்பி

யீறுகும் புளகக் கும்பமுலை
யெம்பி ராட்டி விடுத்ததுமற்
றிளையார் மறுக மறுகுதொறு
மிடுக்கண் செயற்கோ வெந்தாய்நின்

சீறுகிண் கிணிச்செஞ் சீறடியாற்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செந்நெற் பழனப் புள்ளூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. க

73. கொழுநாண் மலர்க்கற் பகமுநறைக்
குரவு நாறு நறுங்குஞ்சிக்
கோமான் மகனே நங்கள்குலக்
கொழுந்தே யென்று குறையிரந்து

தொழுவா னவர்த முடிசூட்டுஞ்
சோதி முடியிற் றுகளெழநின்
றுணைத்தாள் வண்டற் றுறைப்புழுதித்
தூளி படினும் படுகசுடர்க்

கழுவா மணியு நிலவுவிரி
கதிர்நித் திலமு முமையம்மை
கண்ணி லுறுத்த வடிகேணின்
காலி லுறுத்தல் கடனன்றாற்

சேழுநான் மறையின் பெருஞ்செல்வச்
செருக்கே சிற்றில் சிதையேலே
செந்நெற் பழனப் புள்ளூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. உ

74. வழிக்குப் புறம்பா யாமிழைத்த
வண்டன் மனையவ் வசுரேசன்
வான்கூட் டுண்பா னடுக்கடலில்
வகுத்த நகரொன் றிகழாமே
கோழிக்குஞ் சிறுமுற் றினில்வாரிக்
கொடுவெந் தடியே மனைமுன்றிற்
குவியா நின்ற மணிக்குவையக்
குருகு பெயர்க்குன் றமுமன்றூற்
சூழிக்குண் டகழி வாய்மடுப்பச்
சுடர்வால் வளைத்தெண் டிரைக்கரத்தாற்
சுரபி சொரிபான் மடையடைத்த
சோற்றி னோடுங் கலந்தூட்டிச்
சேழிக்குந் தடங்கா விரிநாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செந்நெற் பழனப் புள்ளூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. ௩

75. மூரிக் களிறே மழவிடையோ
முடுகிற் றெனப்பார்த் துழியுனது
முகத்தி னழகெம் வடிக்கண்ணோன்
மொண்டுண் டனம்யா *மென்றுமிகப்
பாரித் தோங்கிப் பூரித்த
பைம்பொற் புயத்தைக் கண்ணேறு
பட்டே மெனவு மடிகள்பகை
பாராட் டுவதோர் பண்பன்றால்

* மெனவு மிகப் என்றும் பாடம்.

வேரிக் கொழுந்தாற் றிளம்பாளை
விரிபூங் கமுகும் பால்பாயும்
வேழக் கரும்பு மிருட்பிழம்பை
விழுங்கிக் கக்குஞ் சுடர்ப்பரிதித்

தேருக் கெழில்செய் சோணாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செந்நெற் பழனப் புள்ளூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. ச

76. பொன்னங் கொடிபோ னுடங்குமிடைப்
புத்தேண் மகளிர் விளையாடப்
புனைமா ளிகையுஞ் சூளிகையும்
புதுக்கிக் கொடுத்தாய் பொதுஞான

மெய்ந்நின் றவருள் விழிப்பாவை
விளையாட் டயரவழியாத
வீடுங் கொடுத்தா யெம்மனையும்
விடுத்துச் சென்றான் மிகையுண்டோ

பின்னுந் திரைத்தீம் புனற்கங்கைப்
போராற் றூற்று நனைக்கோட்டுப்
பெருங்கற் பகத்தின் கழுத்தொடியப்
பிறழும் வாளைப் பகடுதைத்த

தேன்னம் பழம்வீழ் சோணாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செந்நெற் பழனப் புள்ளூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. ரு

77. கானக் குறப்பெண் குடியிருந்த
கன்னிப் புனத்துத் தினைமாவுங்
கமழ்தேன் றெளிவு முண்டுசுவை
கண்டா யென்றே மதுவல்லான்

மீனத் தடங்க ணவண்மிச்சின்
மிசைந்திட் டதுவு நசைமிக்கு
விரைத்தீங் குமுதத் தமுதடிகள்
விருந்தா டியதும் விண்டோமோ
கூனற் பிறையின் கோடுரிஞ்சுங்
கொடிமா டத்து வெயில்விரிக்குங்
குருமா மணியாற் சுரநதியிற்
கொழுந்தா மரைகண் முறுக்குடைந்து
தேனக் கலருஞ் சோணாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செந்நெற் பழனப் புள்ளூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. ௬

78. பிள்ளை மதிச்செஞ் சடைச்செருகும்
பெருமா ஞர்க்கு முலகேழும்
பெற்ற தாய்க்கு நீயருமைப்
பிள்ளை யெனிலெம் பேராய
வெள்ள மமைத்த சிறுசோறு
வேண்டி லிடுகே மலதெளியேம்
விளையா டிடத்துச் சிறுகுறும்பு
விளைத்தாற் பொறுக்க விதியுண்டோ
கள்ள விழிச்சூ ரரமகளிர்
காமன் கொடியேற் றெனவியப்பக்
கற்ப தருவிற் படர்ந்தேறு
காமர் கொடிச்செங் கயல்பாயுந்
தெள்ளு புனற்கா விரிநாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செந்நெற் பழனப் புள்ளூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. ௭

79. மடல்வா யவிழ்ந்த குழற்பேதை
யொருத்தி திருத்தும் பகிரண்ட
மணற்சிற் றிலையோர் கணத்தின்கண்
மட்டித் தாடு மைந்தனருள்

விடலாய் தமியேஞ் சிற்றின்முற்றும்
விளையாட்டாக வொருநீயும்
வீட்டா நிற்பத் தொடங்கினையால்
வித்து முளையும் வேறன்றே

கடமா மருப்புஞ் சுடர்மணியுங்
கதிர்நித் திலமு மகளிர்முலைக்
களபத் தொடுகுங் குமச்சேறுங்
கரைத்து விடுத்தக் கடற்குட்டந்

தீடராச் செயுங்கா விரிநாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செங்நெற் பழனப் புள்ளூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. அ

80. வாமாண் கலைப்பே ரகலல்குன்
மடமா னேக்கி னரமகளிர்
மகிழ்பூத் திருப்பப் புத்தேட்கு
வந்த விடுக்கண் மாற்றினையால்

கோமா னினக்கப் பெருந்தேவர்
குலமே யன்றி யடியேமுங்
குற்றே வலுக்கா மகம்படிமைக்
குடியாக் கொண்டாற் குறையுண்டோ

காய்மாண் குலைச்செவ் விளநீரைக்
கடவுட் சாதி மடநல்லார்
கதிர்ப்பூண் முலையென் றேக்கரப்பைங்
கமுகு நகைவாண் முத்தரும்புங்

தேமாம் பொழிற்றீம் புனலூடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செங்நெற் பழனப் புள்ளூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. க

81. கருவீற் றிருந்த பெருங்*கருணை
கடைக்கண் பொழிய வீற்றிருக்குங்
கடவு ணீயே பகிரண்டங்
கண்டா யெனின்வண் டடைகிடப்ப

மருவீற் றிருந்த குழன்மகளிர்
வண்டற் றுறைக்கு மணற்சிற்றின்
மனைகோ லுவது மற்றடிகேள்
வகுக்குந் தொழிற்கு மாறன்றே

குருவீற் றிருந்த மணிமாடக்
கொடிமா நகரந் தொறுமலர்ந்த
கொழுந்தா மரைப்பூங் கோயிலிற்பல்
கோடியுருவங் கொண்டெழுந்

திருவீற் றிருந்த சோணாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செங்நெற் பழனப் புள்ளூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. கO

---

* கருணைக் கடைக்கண் எனப் பாடங்கொள்வாருமுளர்.

## ௯. சிறுபறைப்பருவம்

82. ஊற்றும் பசுந்தே னுவட்டநெட் டிதழ்விரியு
மொண்காந்தண் முச்சியுச்சி
யொருவனீ மும்முதற் கடவுளு மிளைப்பாற
வுலகெலாந் தலையளித்துப்
போற்றுந் திறத்தினப் பழமறைக் கிழவன்
புரிந்தபகி ரண்டங்கடாம்
புதுக்குவ கடுப்பநெடு வெளிமுகட் டுக்குவிரி
புதுநிலாக் கற்றையிட்டுத்
தூற்றும் பெயர்க்கரு முகிற்படாத் தையும்வெண்
டுகிற்படா மாக்கிவீக்கித்
தொடுகடற் புவனப் பெருந்தட்டொ டண்டச்
சுவர்த்தலத் துக்கும்வெள்ளை
தீற்றுஞ் சுதைத்தவள மாடமலி வேளூர
சிறுபறை முழக்கியருளே
தென்கலைக் கும்பழைய வடகலைக் குந்தலைவ
சிறுபறை முழக்கியருளே. ௧

83. விளைக்கும் பெரும்புவன மொக்கக் கரைத்தகடை
வெள்ளஞ் சுருங்கவீங்கி
வேதண்ட மெட்டினொடு மூதண்ட கூடத்தும்
விளையாடி யுலகமேழும்
வளைக்குங் கருங்கடல் பெரும்புறக் கடலொடும்
வாய்மடுத் தெதிரெடுப்ப
வருபுனற் காவேரி வடநாட னாடொறு
மதிக்கடவு ளேறியேறி
யிளைக்கும் பளிக்கறை முயற்கறை யறக்காலு
மிளநிலா வெள்ளமூழ்கி
யெறிதிரைப் பாகீ ரதிப்புனல் குடைந்திடு
மிடைக்கொடி நகிற்கொடியெனத்

தீளக்குந் துகிற்கொடி முகிற்கொடிசெய் வேளூர
சிறுபறை முழக்கியருளே
தென்கலைக் கும்பழைய வடகலைக் குந்தலைவ
சிறுபறை முழக்கியருளே. உ

84. இருளுந் தரங்கக் கருங்கடன் முகட்டெழு
மிளம்பிறை முயற்குழந்தைக்
கேறவிடு மோடமென வான்மீன் றடந்திரை
யெடுத்தெறியு நெடுமீனெனத்

தாளம் பதிந்திட்ட மணிமுறுவ லவரோடு
தருநிழற் செல்வருய்க்குந்
தமனிய விமானமும் வெயிற்கதிர்ப் போர்வையான்
றனியாழி திசையுருட்ட

வுருளுங் கொடித்தேரும் வீற்றுவீற் றெழில்புனைந்
தோட்டுபொற் றெப்பமென்ன
வுலகேழு மலையெட்டு மொழுகுகதிர் விழுதுவிடு
மொண்ணிலாப் புணரிகோப்பத்

தீளும் பளிக்குமா டங்கள்பொலி வேளூர
சிறுபறை முழக்கியருளே
தென்கலைக் கும்பழைய வடகலைக் குந்தலைவ
சிறுபறை முழக்கியருளே. ௩

85. மொய்ம்பிற் பெரும்புவன மொக்கச் சுமக்கின்ற
மோட்டாமை முதுகுளுக்க
முடவுப் படங்கிழிந் தாவாசி ஞயிர
முடித்தலையு மூளைபொங்கக்

கம்பக் கடாயானை யெட்டும் பிடர்த்தலை
கழுத்தொடு முரிந்துகவிழக்
கதிர்மணிச் சூட்டுநெட் டரவெட்டும் வடவைக்
கடுங்கனற் கண்பிதுங்க

வம்பொற் றடம்புரிசை யெழுபெருந் தட்டுருவி
யண்டகூ டத்தளவலா
லவரவர் வழங்குதற் கிடுதலைக் கடையென
வடுக்கேழு நிலையேழுமாஞ்

செம்பொற் றிருக்கோ புரங்கள்பொலி வேளூர
சிறுப்பறை முழக்கியருளே
தென்கலைக் கும்பழைய வடகலைக் குந்தலைவ
சிறுபறை முழக்கியருளே. சு

86. தரிக்குஞ் சுடர்ப்பரிதி முழுமதிக் கடவுளொடு
தடமதில் கடந்தகநகர்
சாரவரி தாற்புவன கோடிகட் கொளிசெயச்
சதுர்முகன் கற்பந்தொறும்

விரிக்கின்ற விருசுடரு மொருவழித் தொக்கென
வியன்கதிர்ப் படலமூடி
வீங்கிருள் விழுங்குசெம் மணிமாட நிரையுமொளி
விளைபசுங் கதிர்வெண்புரி

புரிக்குஞ் செழுந்தரள மாடமும் வெயிலினொடு
பொழிநிலாப் போர்ப்பமுற்றும்
போதுதெரி யாமையிற் குமுதமொடு சதவிதழ்ப்
போதுமே யிருபோதையுந்

தெரிக்குந் தடம்பணை யுடுத்ததமிழ் வேளூர
சிறுபறை முழக்கியருளே
தென்கலைக் கும்பழைய வடகலைக் குந்தலைவ
சிறுபறை முழக்கியருளே. ௬

வேறு

87. மழைமுகில் பிளிறு முழக்கென விரிசிறை
மடமயி லினமகவ
மால்கட லோலிடு மொலியென விரக
மடந்தையர் மனநெகிழப்

பழமறை யார்ப்பென வாகுதி வேட்டெழு
பண்ணவ ருண்மகிழப்
பாநா தத்தொலி யெனவனு பூதி
பலித்தவர் நெக்குருக
வழலவிர் சோதியெ மைய னடஞ்செய
வாயிர மங்கையினோ
ரண்ணறு வைத்திடு குடமுழ வொடுசுட
ராழி யவன்கொட்டு
முழவென வமரரு முனிவரு மார்ப்ப
முழக்குக சிறுபறையே
முத்தமிழ் பயில்பரி திப்பதி முருகன்
முழக்குக சிறுபறையே. சு

88. பெருவெளி முகடு திறந்திட் டண்டப்
பித்திகை வெடியாமே
பேரண் டத்துள,வேதண் டங்கள்
பிதிர்ந்துதி ராகாமே
திருமணி சிதறிய வென்ன வுடுத்திரள்
கொட்டுண் டுதிராமே
குவடு படுந்திசை செவிடு படச்சிலர்
குடர்கள் குழம்பாமே
திருவிர லொடுநக கண்களி னுஞ்செங்
குருதி ததும்பாமே
சேயொளி நின்று துளும்பிட நின்சிறு
செங்கை வருந்தாமே
முருகலர் தாரவ னொருமுறை மெல்ல
முழக்குக சிறுபறையே
முத்தமிழ் பயில்பரி திப்பதி முருகன்
முழக்குக சிறுபறையே. எ

89. வம்மி னெனப்புல வோரை யழைத்திடு
வண்கொடை முரசமென
வடகலை தென்கலை யொடுபயி லுங்கவி
வாணர்க ளோடிவா
வம்மென் மடப்பிடி பொன்னுல கீன்ற
வணங்கை மணம்புணரு
மணிகிளர் மணிமுர சென்னவெ மையனெ
டம்மை மனங்குளிரத்
தெம்முனை சாயச் சமர்விளை யாடிச்
செங்கள வேள்விசெயுந்
திறன்முர செனவிமை யவர்விழ வயரச்
செழுநகர் வீதிதொறு
மும்முர சமுமதிர் காவிரி நாடன்
முழக்குக சிறுபறையே
முத்தமிழ் பயில்பரி திப்பதி முருகன்
முழக்குக சிறுபறையே. அ

வேறு

90. பெருகுசு வைத்தெளி நறவொழு கக்கனி கனியமுதே
பிடிநடை கற்றிட வடிகள் பெயர்த்திடு மடவனமே
கருவரை நெக்குட னுருகமி ழற்றுமொர் கிளியரசே
கருணை செயத்தகு மளிய னிடத்தெனு மொழிபுகலா
வருளில்பு னத்தவர் மகளிரு பொற்பதம் வருடல்செயா
வவண்மு னெடுத்தநின் முடியின் முடித்திடு காமலராற்
பருவயி ரப்புய சயிலன் முழக்குக சிறுபறையே
பரிதிபு ரிச்சிறு குமரன் முழக்குக சிறுபறையே. கூ

91. இழுமென் மொழித்தெளி தமிழின் வடித்திடு நவரசமே
யிதய விருட்டற வுணர்வி லுதித்திடு சுடரொளியே
கழுவு மணிக்கல னடுவி லிழைத்திடு குலமணியே
கனிதரு முக்கனி யொடுவடி கட்டிய சுவையமுதே
யொழுகு நறைச்செழு மலர்விரி யக்கமழ் புதுமணமே
யுருகு முளத்தருள் பெருகி யுவட்டெழு சலநிதியே
பழமறை கட்கொரு முதல்வன் முழக்குக சிறுபறையே
பரிதி புரிச்சிறு குமரன் முழக்குக சிறுபறையே. ௧0

## ௧௦. சிறுதேர்ப்பருவம்.

92. போரோடு படைதுறந் துடறிறந் தோடுசெம்
புனலோட வோடிநிமிரும்
புணரிப் பெருந்தானை யவுணப் படைத்தலைவர்
பூதப் படைத்தலைவர்முன்
றோ டவிழ்ந்திட்ட குஞ்சிக் கிமைத்திட்ட
தழல்விழிக் கெதிர்செலாத
தாளுக்கு வாள்சோர் தடக்கைக்கு நாமநுந்
தாலிக்கு வேலிகொலெனப்
பீரோடு கொங்கைக்க ணீரோடு வெள்ளருவி
பெருகக் கடைக்கணிற்கும்
பெய்வளை யவர்க்கோத வவர்விழிக டொறுமிளம்
பேதையர்கள் கண்டொறுமெனத்
தேரோடு மொருபெருஞ் சிலையோடு நின்றவன்
சிறுதே ருருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதே ருருட்டியருளே. க

93. கம்பக் களிற்றுக் கடற்றானை வீரர்கட்
கடைவிற் கடைக்கனலெழக்
கண்டொட் டுணுஞ்சில மருட்பேய் கரிந்தெழு
கடுங்குருதி வெள்ளமூழ்கித்
தும்பைத் தலைச்செம் மயிர்ச்சிகை யினைச்சுடு
கனற்சிகை யெனப்பதைப்பச்
சூட்டிறைச் சிக்குச் சிணுங்குங் குறட்பேய்க்கொர்
சூர்ப்பேய் கொழுந்தசைகள்கோத்
தும்பிற் சுடத்தான் கவந்தமொடு தொந்தமிட்
டாடும் பறந்தலைநிலத்
தானைப் பிணக்குன்று மவுணப் பிணக்காடு
மளறுபட் டொழியநின்றோர்

92. நாமனுந் என்றும் பாடம்.

செம்பொற் றடந்தே ருருட்டிவரு சேவகன்
சிறுதே ருருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதே ருருட்டியருளே. ௨

94. வண்டேறு செந்நிறப் பங்கித் தலைக்கமல
வனமூடு குருதியாற்று
மால்யானை கையெடுத் தார்த்துநீந் தப்புணரி
மகரமீ னெனநினைந்து

கொண்டேகு சிறுகுடர் பெருவலை யெடுத்தெறி
குறட்பேய் நெடுஞ்சினமுறக்
குறுநரி பிடித்தீர்ப்ப வலறுவதும் வீரர்தொடு
கொலைநேமி யவுணருயிரை

யுண்டேகு வதுமொருவன் விடவோ லிடுங்கரிக்
குதவவரு திகிரியேய்க்கு
மொல்லென் பறந்தலை மறந்தலைக் கொண்டகு
ருய்த்திட்ட விந்த்ரஞாலத்

திண்டேரை யுருளாது நிற்கப் பணித்தவன்
சிறுதே ருருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதே ருருட்டியருளே. ௩

95. பைங்கட் சிறைக்கால் கடைக்கால் செயக்கிரிகள்
விரிசிறை படைத்தெழுவபோற்
படருந்தன் வேகத்தி னெக்கப் பறக்கப்
பறந்தலைச் செந்தலையறும்

வெங்கட் டயித்திய ருடற்குறை தலைக்குறை
விரைந்துயி ரினைத்தொடர்ந்து
மீச்செல்லு மாச்செல் லெனச்செலப் பூமாரி
விண்டோர்ப்ப தெனவுடுவுகப்

போங்கற் கடற்குட்ட மட்டதிக் குந்தமிற்
போர்செயப் பார்கவிழவெம்
பொறியுடற் சேடன் படந்தூக்கி யார்க்கும்
புகைப்படலம் வடவாமுகச்
செங்கட் பசுந்தோகை வாம்பரி யுகைத்தவன்
சிறுதே ருருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதே ருருட்டியருளே. ௪

96. நெய்வைத்த கூந்தற் பிடிக்குதவ நாற்கோட்டு
நிகளத் தடங்குன் றுவா
னிமிருங் கதிர்க்குலைச் செந்நெலைப் பாகுபடு
நெட்டிலைக் கன்னல்கொலெனுக்
கைவைத் திடப்பரி முகஞ்செய்து வெய்யோன்
கடும்பரியை நட்புக்கொளுங்
கழனிவிரி காவிரித் திருநாட கற்பகக்
காட்டிற் பிறந்துபிரியா
மெய்வைத்த காதன்மை யரமகளிர் போரய
வெள்ளந் திளைத்தாடியோர்
மென்னடைக் கேக்கற்ற பிடிபின் பிடிக்கமுலை
வேழங்க ளுடனுலாவுந்
தெய்வப் பிடிக்குக் கிடைத்ததொரு மழகளிறு
சிறுதே ருருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதே ருருட்டியருளே. ௫

97. பற்றுவிற் காமன் கொடிப்படைக் கூரெலாம்
படைவீடு கயல்கடாவும்
பழனங்க ளோவத்ர சாலைபூஞ் சோலைப்
பரப்பெலாங் காற்றேரோடுங்

கோற்றவங் கங்குற் கடாயானை யுங்கட்டு
கூடமே யெனினுமருதக்
கோமகன் குடிகொண்ட சோணாட சோணாடு
குங்குமங் கொட்டுதிண்டோட்

போற்றடங் குன்றினிரு கொங்கைப் பொருப்புமொரு
பூங்குழற் காடும்வெயில்கால்
புனைமணிக் கலையல்குன் மாக்கடலு மேந்தியொர்
புனத்தின்கண் மிகநுடங்குஞ்

சிற்றிடைக் கொல்குமென் கொடிபடர நின்றவன்
சிறுதே ருருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதே ருருட்டியருளே. ௬

98. கோல்பாய் பசும்புண் ணசும்புகும் பத்தடங்
குன்றுகவுண் மடைதிறந்து
கொட்டுநெட் டருவியொடு தேனருவி யுந்திரை
கொழித்துடன் கோப்பமேதிப்

பால்பாய் பெருக்கா றுவட்டெழுத நன்றுணைப்
பாவைய ரொடுங்குறுகுமப்
பாகீ ரதிக்குநிகர் தண்டுறை தொறுந்திக்கு
பாலர்மேற் படையெடுத்து

வேல்பாய் நெடுங்கட் கடற்றானை யொடுமொருவன்
மேற்செல்ல நாற்றிசையிலும்
வெற்றிக் கயற்கொடி யெடுத்தெனை வெடுத்தெறியும்
வெண்டிரை கிழித்துவெடிபோஞ்

சேல்பாய் தடம்பணை யுடுத்தகா விரிநாட
சிறுதே ருருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதே ருருட்டியருளே. ௭

---

98. குடையுமப் என்றும் பாடம்.

99. மீத்தந்த மாகத்து மேகத்தி னோடுமுடு
மீனிரியல் போகவுகளும்
வெடிவாளை மதியக டுடைத்தூற்று தெள்ளமுத
வெள்ளருவி யாற்பசுந்தண்

காத்தந்த சண்பகப் பூவேரி மாரிசெய்
காவேரி யாயிரமுகக்
கங்கையா கச்செய்து மீட்டுநாற் கோட்டுவெங்
களிறுபிளி றத்தாவிவான்

பூத்தந்த கற்பகக் காட்டினை யுழக்கிவிரி
பொற்ரு தெழுப்பிமற்றப்
பூந்துகட் படலத்தி னூற்றெய்வ நதியையும்
பொன்னிநதி யாகச்செயுந்

தேத்தந்த தண்பணை யுடுத்ததீம் புனனுட
சிறுதே ருருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதே ருருட்டியருளே. அ

100. கள்ளவிழ் நறுங்கொடிகள் கமுகிற் படர்ந்துபூங்
கற்பகத் தும்படர்தலாற்
காமன் பெருஞ்செல்வ மன்னவர்கள் குழுமியக்
கமுகின் கழுத்தில்யாத்த

வோள்ளொளிய செம்மணிப் பொன்னூசல் பன்முறை
யுதைந்தாட வாடுந்தொறு
மொண்கமு கொடுந்துணர்ப் பைங்கற் பகக்காடு
மொக்கவசை யத்தலையசைத்

தள்ளிலை யலங்கல்வே லெம்பிரா னைப்பாடி
யாடுகின் றூரெனத்தா
மலர்மாரி பொழிவபோ லங்கற் பகத்தெய்வ
மம்பொன்மலர் மாரிதூர்க்குந்

தெள்ளுதமிழ் விரிபுனற் காவிரித் திருநாட
சிறுதே ருருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதே ருருட்டியருளே. ௯

101. வாராட்டு தடமுலைப் பாலொழுகி வழிவதென
மணிமுறுவ னிலவுகாலு
மழலைவாய் முத்துண்டு முச்சிமோந் துந்திரு
மடித்தலத் தினிலிருத்திப்

பாராட்டி யுந்தம்து கண்மணிப் பாவைநின்
படிவமா கக்காட்டியிப்
பாலரொடும் விளையா டெனப்பணித் துந்தங்கள்
பார்வைகளி யாடச்செயுந்

தாராட்டு மதிமுடித் தீராத வினைதீர்த்த
தம்பிரா னுந்தம்பிரான்
றழலுருவி லொருபாதி குளிரவொரு புறநின்ற
தையனு யகியும்வைத்துச்

சீராட்டி விளையாடு சேனு பதிக்கடவுள்
சிறுதே ருருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதே ருருட்டியருளே. ௧௦

புள்ளிருக்குவேளூர்
முத்துக்குமாரசுவாமிபிள்ளைத்தமிழ்முற்றுப்பெற்றது.



உ

சிவமயம்

# அரும்பொருள் விளக்க முதலியன

1. குடுமிப் பொலங்குவடு=இடைப்பிறவரல் வந்த பண்புத் தொகை; குடுமியாகிய குவடு எனவிரிக்க. குவடு=கொடுமுடி. பொழி தவள நிலவு தவழும் எனப் பிரித்துக் கூட்டுக. சிவபெருமான் கைலாய மலையிலே களிற்று யானை வடிவங் கொண்டமையாற் களி றெனப்பட்டார். யானை குறிஞ்சிநிலக் கருப்பொருளாதலால் வெள்ளி வேதண்டக்களிறென அதனைக் குறிப்பித்தார். களிற்றைப் போர் விசேடித்தது. 'தூம்புடை நெடுங்கை வேழந் துற்றிய வெள்ளில்' என் புழி, கை வேழத்தை விசேடித்தவாறுபோல. சிவபெருமான் களிற்று யானை வடிவங்கொண்ட காலத்து உமாதேவியார் பிடியானை வடிவங் கொண்டமையால் பிடியெனப் பட்டார். அப்பனும் அம்மையுங் களி றும் பிடியுமாகச் சேர்ந்து பெற்றமையின் மூத்தபிள்ளையார் குஞ்சரக் கன்றெனப்பட்டார். இம்முப்பொருளையும்,

"பிடியத னுருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்
கடிகண பதிவர வருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை யிறையே"

என்னுந் தேவாரத்தா னினிதுணர்க.

தெய்வயானை யம்மையாரைக் கடவுள்வேழம் என்றதற்கிலயைய அவர் தனத்தைக் கோடாக உருவகஞ் செய்தார். உவமையினும் உரு வகஞ் சிறந்த தென்பது அணிநூற்றுணி பென்றுணர்க. கடவுள் வேழம், தெய்வயானை யென்பன ஒரு பொருட்சொற்கள். தெய்வ யானையால் வளர்க்கப்பெற்றமையின் அம்மையார் தெய்வயானை யெனப்பட்டார். திருமால் காப்பில் புலோமசை வளர்த்த என்று கூறப்படுதலால் அதனோடு இது முரணுதோவெனின், ஐராவதம் செவி லித்தாயும் புலோமசை நற்றாயுமாகக் கருதப்படுதலின் இருவர்க்கும் அவ்வுரிமையுண்மையின் முரணுதென்க. கடம்படு படா முலை - குடம் உவமை கெடுதற்குக் காரணமாகிய சாயாத்தனம். படுதல் -

கெடுதல். போகத்துக்குரிய மாலை யாதலின் கடம்பும் உடன் கூறினர். கந்தபுரி-வேளூர். அது, முருகக் கடவுள் வைத்திய நாதரைப் பூசித்த மையால் வந்த காரணப் பெயர். கொழிதமிழ் - செந்தமிழ்; கொழித் தல் - ஆராய்ந்து சுத்தஞ்செய்தல்.

2. புணர்முலை என்னும் அடையானே யானையென்றது தெய்வ யானையை யுணர்த்திநின்றது. யானை விளையாடுதற்குரிய இடம் மலையாதலின் சுப்பிரமணியப் பெருமான் பன்னிரு புயங்களும் பன்னிரண்டு மலைகளாக உருவகஞ் செய்யப்பட்டன. விருப்பினைத்தும் சிறுமிமேல் வைத்த குழகனென்க. கோமேவு குறிச்சி, சாரற் குறிச்சி எனத் தனித்தனி கூட்டுக. கோமேவு சிறுமியெனக் கூட்டி நம்பி என்னும் வேட்டுவ அரசனால் விரும்பப்பட்ட சிறுமி எனறலுமாம். கோ - வேட்டுவ அரசனாகிய நம்பி. மேவுதல் - விரும்பு தல். அது "நம்பும் மேவும் நசையா கும்மே" என்னுந் தொல் காப்பியச் சூத்திரத்தானுணர்க. கழகம் - கல்லூரி. இயல் இசை நாடகம் என்னும் மூன்றையும் முத்தமிழென்று சொல்லுதலி ஞல் கொத்து முத்தமிழென்றார். கொத்து-கூட்டம். மொய்த்த வென் பது மிகுதிப்பாட்டை யுணர்த்தி நின்றது. தனிபுரத்தல்-பிறிது துணை வேண்டாது தானே காத்தல். தேமேவு கடவுட் பொலங்கிரி - தேவர் கள் விரும்பும் தெய்வத் தன்மை பொருந்திய பொன் மலையாகிய மந்தரமலை. பொலங்கிரி மத்துத் திரியத் திரித்து எறிய எனக்கூட்டுக. திரிதல் - இடம் விட்டுப் பெயர்ந்து செல்லுதல். திரித்தெறிதல் - இடம் வலமாகச் சுழற்றல். தெண்டிரைத் தடங்கடல் முகட்டு உதித்த அமுது, பாமேவு மதுரம்பழுத்த அமுது என்க. பழுத்தமுது என் புழி, பெயரெச்சத்தகரம் தொக்கது; 'புகழ்புரிந்தில்' என்புழிப் போல. ஒழுகுஞ்சொல் மழலைச்சொல் அஞ்சொல் எனத் தனித்தனி கூட்டுக. குதலையாகிய மழலை எனப் பண்புத்தொகையாகக் கொள்க. கொங்கை யைக் குவடாக உருவகஞ் செய்தமையால் விட்டுணுவைக் கொண்ட லாக உருவகஞ் செய்தார்; கொண்டல் படிதல் குவட்டிலாகலான். குவடு - மலை.

3. ஒருபுறத்து மரகத மிமைப்ப வொளிர் மாமேரு அபூத வுவமை. சாய்த்ததென என்பது சாய்த்தென ஈறுதொக்கு நின்றது.

சாய்த்தாலென என்பது சாய்த்தென விகாரப்பட்ட தென்றலு மாம். உலகளக்க நிமிர் என்றது உயர்ச்சியின் மிகுதியை யுணர்த்தி யது. மேருமலை தென்றிசைக்கு வடக்கில் நிற்றலின் வடபொருப் பெனப்பட்டது. ஒரு தோளால் வளைத்த என்பது இலேசாக வளைத்ததென்பதைக் குறித்து நின்றது. பிநாகம்-சிவபெருமான் வில் லின் பெயர். பிநாகத்தை யுடையவன் பிநாகி. மேருமலை வாசுகியென் னும் நாணாற் பிணிக்கப்பட்டமையின் பிநாகமென்னுங் காரணப் பெயரையுடையதாயிற்று. பின்னுதல் - பிணித்தல் ; நாகம் - மலை. தீக் கனல் - மிகுதிப் பொருட்கண் வந்த பண்புத்தொகையுமாம். முத்தலைச் சூலத்தை 'முக்குடுமி அயில்' என்றல் செய்யுள் வழக்கு. வாய்வாள் - சிறந்த ஒளி. வாய் - நுதியுமாம். மழுப்படை வீரன் - மழுவாளி யென்னுந் துணையாய் நின்றது. உடலல் - மாறுபடுதல். அற இளைத் தல் - மிக எய்த்தல். உடற்றல் - போர் செய்தல். கிராதன் - வேட் டுவ வடிவங் கொண்ட சிவபெருமான். கூவுகுரல் - விகுதிகெட்டுக் கூக்குரல் என நின்றது. மிக்கொலித்தலென்பது பொருள். உல கத்துப் பயிரை உண்ண எத்தனிக்குங் காளைகளை உண்ணுமற் கட்டி வைப்பவர் பலராக, உலக முழுவதையும் உண்ண உண்டாக்கப்பட்ட காளையை உண்ணுது கட்டுவோர் சிவபெருமான் ஒருவரே என்னும் பொருள் தோன்றக் காளைகட்டுப்ரதாபனென்ருர். புடவியுணச் சமையுங்காளை விட்டுணுமூர்த்தி. சமைதல் - உண்டாக்கப்படுதல். விட்டுணுமூர்த்தி இடபமாகச் சிவபெருமானைத் தாங்கினமையின் இங் ஙனங் கூறினர். இதனற் சிவபெருமானுடைய அலுப்த சத்தி அனந்த சத்திகளைத் தெரித்தவாறு காண்க. பிரதாபம் - மகாமகிமை. கடுதிருமிடற்றிலிடுதல் - பிறப் பிறப்பின்மையோடு சுதந்தரத்தையும் உணர்த்திற்று. காமாரி என்பது வேண்டுதல் வேண்டாமையோடு திருப்தி யென்னும் வரம்பிலின்பத்தையும் "யோகியாயிருந் துயிர்க்கு யோகத்தைப் புரித"லையும் உணர்த்திற்று. கௌமாரியைப் போல் மோகினிக்கு மணுளனென்பது "போகியாயிருந்து உயிர்க்குப் போகத் தைப் புரி"வித்தலை யுணர்த்திற்று. "நால்வகைப்பட நண்ணிய சத்தி யுள் " மோகினி வடிவங் கொண்ட திருமாலும் ஒரு பரிக்கிரக சத்தி யாதலால் மோகினிக்கு மணுளனே என்ருர். என்ருரேனும் கௌமாரிக்கும், மோகினிக்கும் சத்தியென்னுஞ் சொன் மாத்திரையி

னன்றி ஏனைத் தன்மையிற் பேதம் பெரிதாமென்க. சூக்கும வெளி - ஞானாகாசம். ஐந்தொழிற் கூத்தாகலின் பரமநடமென்றார். பரமம் - மேல். உடற்பிணிக்கும் உயிர்ப் பிணிக்கும் மருத்துவராகலின் வைத்திய நாதரெனப்பட்டார்.

4. குழையடர்தல் - காதொடுமோதுதல். வடிகணை என்னும் வினைத்தொகையை வடித்த கணையென இறந்த காலத்தால் விரிக்க. வடித்தல் - வசப்படுத்தல். குமிழ் - ஆகுபெயராய் மூக்கை யுணர்த்திற்று. மறிதல் - திரும்புதல். அடர்தல் முதலிய இவை; விழியின் தொழிற் சிறப்புக்கள். நவ்வி - ஆகுபெயராய்த் தையலாகியை யுணர்த்திற்று. கோட்டொடு குவடெறிந்த என்புழி ஒடு உடனிகழ்ச்சியன்றி உம்மைப் பொருளுமாம். கோடு யானைக்கோடு - குவடு-மலை. எறிதல் - வெல்லுதல். அமுத கலசம் - பாற்கலசம். தடம்- உயர்ந்த இடம். குமுதம் - செவ்வாம்பல்; ஆகுபெயராய் வாயை யுணர்த்திற்று. சுவையமுதம் - எயிற்று நீராகிய சுவையையுடைய தேன். வாயைக்குமுதம் என்றதற்கிசைய நீரைத் தேன் என்று உருவகஞ் செய்தாம். அறமறத்தல் - முற்றுமறத்தல். பிறர் குணம் - அடியவரல்லாதார் குணம். தகவு - நீதி, தகுதி, உவமை. சேண் - நெடுந்தூரம். உதவுதல் - சிருட்டித்தல். கை - சாகையாகிய கை. மடநடை - மந்தநடை. கனம் - பெருமை. கள்வி - அடியரல்லார்க்குக் காணப்படாதவள். பூத்தல் - விரிதல். சிதசித்துப் பிரபஞ்சம் முழுமையும் அடிமையும் உடைமையுமாகக் கொண்டிருத்தலின் ஒரு செல்வி யென்றார். பாற்றெருகும் - இருமங்கினுங் கூடிய. கதுவுதல் - பற்றுதல். செஞ்சுடர் - சிவந்த அக்கினிப் பிழம்பாய் எழுந்த சிவபெருமான். ஒன்று - ஏகவஸ்து. ஒரு மொழியின் - பிரணவத்தால். விண்ட - கூறியருளிய. சூர்ப்பெயர்ப் பகை யெனக் கூட்டுக. பகை ஆகுபெயராய்ப் பகைவனை யுணர்த்திற்று. முதுபழம் - பண்புத் தொகை. அறவெறிதல் - முற்றுங்கெடுத்தல். பகைச் சூர்ப்பெயரை அறவெறிந்து எனக்கூட்டி, பகைவனாகிய சூரபன்மனுடைய பெயரை முழுதும் இல்லையாக்கி (மயில் சேவலென்னும் பெயரை யுண்டாக்கிய) என்றலு மொன்று. முதல் தடிதல் - வேரோடு அழித்தல். பாட்டு - இசைப்பாட்டு. விள்ளுதல் - அலர்தல். தொழும்பு - ஆகுபெயராய்த் தேவரை யுணர்த்திற்று.

போற்றுதல் - அடியார்களைக் காத்தல், அடியார்கள் துதித்தல். வெறு வெளி - வெட்டவெளி. மறை முடிவு - உபநிடதம். நிற்றல் - மந்திர நியாசத்தானன்றித் தானே தயிரில் நெய்போல விளங்கி நிற்றல். நிறை செல்வன் - கடந்த விடத்திலும் பாலில் நெய்போல வியாபித்து மறைந்து நிற்கும் அருட்செல்வத்தை யுடையோன். மழலை வண்டு - இளம் வண்டு. தடமலர் - பெருமையை யுடைய மலர். குடைதல் - கிண்டுதல். தமிழினிசை - தமிழ்போல வினிமை பயக்கும் இசை. இன் - உவமவுருபு. செவ்வழிப்பாட்டு - செவ் வழிப் பண்ணோடு பாடும் பாட்டு. விபஞ்சி - யாழ். மதங்கர் - பாணர். தெருமரல் - மனஞ் சுழலுதல். மலரிலஞ்சி - மலரையுடைய தடாகம்.

5. கடாமுமிழ் கராசலம், கைக்கராசலம், கோட்டுக்கராசல மென்க. ஒரு - ஒப்பற்ற. கராசலம் - கயாசுரன் கொண்ட யானை வடிவம். கஞ்சுகத்தை யுடையவன் கஞ்சுகி; சிவபெருமான். கஞ் சுகம் - போர்வை. தந்தை யானைத்தோலைப் போர்த்தமைக்கேற்பத் தனயர் முகபடாமணிந்தனரென்க. பசுவினைப் பாலினைக் கறந்தா னென்புழிப்போல, தந்தியை, கன்றினைப் போற்றுவாமெனச் செயப்படு பொருள் இரண்டு வந்தன. தீர்த்தர் - பரிசுத்தர். கள் - அசை, பராவருதல் - ஒருசொல்; துதித்தலென்பது பொருள். அடியார் வேண்டியது கொடுத்தலின் கன்றிற்குக் கற்பகம் உவமை யாயிற்று. வடாது - வடக்கு. வடாது பொருப்பினில் துன்று புத் தேள் - பிரமா. அவர் அங்கே மனோவதி நகரத்திலிருப்பர். மனோலய முற்ற மெய்ப்பண்பு-அவருடைய மனவெழுச்சி மனத்தில் ஒடுக்கமுறு தற்குக் காரணமாகிய திருமேனியின் வன்மைத் தன்மை. ஆற்றிய வென்னும் பெயரெச்சம் கந்தன் என்னும் பெயர் கொண்டு முடிந்தது.

6. மூத்துப்பிறக்கும் இருபது இடங்களுள் செந்நெல்லு மொன்றாதலின் கதிர்ச்செந்நெல் பனிமுத்துகுக்கு மென்றார். கொங்கு- வாசனை. ‘கொங்குதேர் வாழ்க்கை’ என்புழியும் அது. நறை-தேன். வேத புரி-வைத்தீசுரன் கோயில்; காரணப்பெயர். செங்கால், கருங்கண், பைந் தொடி என்பன முரண்டொடை. ஆய்ப்பைந்தொடியாரெனக் கூட்டுக. சிறுபாடியென்க; பாடி முல்லை நிலத்தூர். கண்ணபிரான் இடைக்குடி

யிற் பிறந்தமையின் அதனைப் பெருங்குடி யென்றார். தாதைகட்டுண்டல் தம்பெருமைக்கிழுக்காகலின் அது நிகழாவண்ணம் பால் தயிர் நெய் தேன் இவற்றைத் தனயர் கடலாகப் படைத்தமை கூறப்பட்டது. அங்காத்தல் கிடையாத பொருள் கிடைத்த பொழுது அதனையுண்ண விரும்பி வாயைத் திறத்தல். அகிலம் - எல்லாம், உலகம். தாகத்திற்கு நின்றுண்ணக்கூடிய பதார்த்தங்களே யன்றிப் பசிக்கு இருந்துண்ணக்கூடிய அகிலமும் படைத்த பெருமானென்க. இதனால் விட்டுணு பூமியை யுண்டமை விளக்கினார். ஏறுதல் - அதிகப்படல், இவர்தல். அன்னம் - சோறு, அன்னப்பட்சி. பிதாவுண்ண மண்ணைப் படைத்துத் தாமுண்ண அன்னத்தைப் படைத்த பெருமானெனப் பிறிதுமோர் பொருள் தொனித்தல் காண்க.

7. கான் - சாதியடை ; என்னை ? கற்பக மலர் பொன் மலராகலின். இக்கருத்துப்பற்றியே ‘சொல்வன்மை யின்றெனினென்னு மஃதுண்டேற் - பொன்மலர் நாற்றமுடைத்து’ என்றார் நீதிநெறி விளக்கத்தினும். காணி - முன்னையது நிலம் ; பின்னையது உரிமை. நாறுதல் - தோற்றுதல். வாய்த்தல் - பிறத்தல் ; இது உபசாரம். மால் - இந்திரன் ; மாமடிகளென்றும் பாடம். மாமடி - மாமன் ; கள் அசை. பால் - இளங்கதிர் நெல்லில் பால்போலிருக்குஞ் சத்து. குதட்டல் - மெல்லுதல். மடுமடி - பால் நிறைந்த மடி. மடுத்தல் - நிறைத்தல். சீர்த்தி - மிகுபுகழ். சீர்த்தியாகிய பிரதாபமென்க. தினகாபுரி - காரணப்பெயர். தினகரன் - சூரியன். தேவதேவன் - முத்துக்குமாரரோடு சிவபிரானுக்கு வேற்றுமையின்மை தெரிப்பார் சிவநாமத்தால் தேவதேவ னென்றார். சிவபெருமானை வேதம் தேவதேவனென்னுந் திருநாமத்தால் போற்றுதலை,

“தேவதேவன் மாதேவன் சிறப்புடை யீச னெங்கோன்
மூவரின் முதல்வ னேகன் முடிவிற்கு முடிவாய் நின்றோன்
ஆவியு ளாவி யானோ னந்தண னாதி யென்றே
ஏவரை யிசைத்த வம்மா வெல்லையின் மறைக ளெல்லாம்”

என்னுங் கந்தபுராணத் திருவிருத்தத்தானும் உணர்க.

8. 'குறியதன் கீழாக் குறுகலும்' என்பது இலக்கணமாகலின் நறுவிரியென்பது நறவிரி யென்றாயது. நறு - தேன். வனத் துழாய் - புனற்றுளசியுமாம். வனம்-புனல். "வனத்துச் செல்லுமீன்" என்புழியும் வனம் அது. வனம் அழகுமாம். காடு மிகுதிப் பொருட்கண் வந்தது. மாயிருள் - ஆகாரவீறு சிறுபான்மை யகர உடம்படுமெய்பெற்று வந்தது; இதனை "மாயிருஞாலம் மறுவின்றி விளங்க" என்பதனானுமறிக. திருமாளிகை - திருமால் மார்பு. திறந்தளித்தல் - ஒருசொல்விழுக்காடு. கௌத்துவ மணியி னொளியைச் சூரியனொளியெனக் கருதிக் கமலந் தானே மலர, கௌத்துவம் மலர்த்தியதென்பது உபசாரம். காரண காரியவொற் றுமைபற்றி அங்ஙனம் கூறியதெனினும் அமையும். காதன்மை - நட்பு. மீனிறப் புணரி - நிலத்தியல்பாற் கருமையாய்த் தோன்றி னும் இயற்கை வெண்மையே என்பார் மீனிறப்புணரி யென்றார். மீன் - நட்சத்திரம். ஓடு - உடனிகழ்ச்சி. தானையோடு அவுணக் கருங்கங்குல் விடிய என்க. அவுணரைக் கங்குல் என்றதற்கியைய விடிய என்றாரேனும் இறக்கவென்பது பொருள். அச்சத்தை விளைக்குங் குரலென்பார் கடுங்குரலென்றார். கடுமை - கொடுமை. குரல்விடுதல் - ஒருசொல். இது உருவகவணி.

9. துறைபட்டமறை - பல மார்க்கங்கள் பொருந்திய வேதம். துறை - மார்க்கம்; சாகைகள் என்றலு மொன்று. அறம்பொரு ளின்பம் வீடாகிய துறையுமாம். மறையவன்பல், தொன்மறைகளிந் தூறும் பல் எனத் தனித்தனிக் கூட்டுக. அன்பன் எனப் பிரித்து அதற்கியையப் பொருள்கோடலும் இழுக்காது. நளினப் பொகுட் டென எமது நல்நெஞ்சங் குடிபுகும் ஞானப்பிராட்டி யென்க. என உவம உருபு. நிறஞ் சிதைவுறாமலும் துகில் நனைப்புறாமலும் நெஞ்சத்திற் குடிபுகுந்தா ளென்க. இக்குற்றங்கள் நிகழாப் பொற்பிடந் தேட வல்லள் என்பார் ஞானப்பிராட்டி யென்றார். பாற்கடற் பிறந்த தேவாமிர்தம் போலாது கலைக்கடற் பிறந்த ஞானமிர்த மென்பார் சொற்கடற் றெள்ளமுதமென்றார். சொல் - ஆகுபெயர். ஞானமிர்தமென்பது மேலே ஞானப்பிராட்டி யென்பத னாற்பெற்றாம். இரண்டமிர்தும் பிறப்பிடத்தால் வேறுபடினும் நிறத் தாலும் கழிபெருஞ் சுவையோடு உறுதி பயத்தலானும் தம்முள் ஒத்த

பண்புடையனவென்க. சிறை - மதில். அது 'சிறைகாக்குங் காப் பெவன் செய்யும்' என்றதனாலும் அறிக. சிறைபட்ட சித்தாமிர்த மென்க. சுதைபட்ட உறை நிலவு எனமாறி வெண்ணிறம் பொருந் திய அமிர்த கிரணமெனப் பொருள் கொள்க. உறை - அமிர்தம், மேன்மை.

10. தெரித்தவள் அபிராமி. சிரித்தவள் மாகேசுவரி. பணித்த வள் கௌமாரி. குனித்தவள் நாராயணி. பெயர்த்தவள் வாராகி. தரித் தவள் இந்திராணி. காத்தினள் - காளி. ஒலிட ஏறு அச்சமர்த்த னென்க. மோது அக் கடு நடையுள தகரென்க. அகரம் உலகறிசுட்டு. துகிற்கொடி முழுமதி குறைமதியாக முகில் தொடுந் தடமதிலென்க. தொடுமதில் - படுசொல்லற்றுப் படுபொருளாய் வந்தது. அறுமுக வேள் பிறிதினியைபு நீக்கிய விசேடணம்.

11. சதம் - நூறு. தளம் - இதழ். தவிசு - ஆகுபெயராய்ச் சத்திய லோகத்தை யுணர்த்திநின்றது. சயனமும் அவ்வாறே வைகுந்தத்தை யுணர்த்திற்று. சத்தி - வேல். ஊதியம் - நன்மை. கொடிகள் ஆகுபெயர். தாதையார் பணி குருக்கள் என்றதனல் சிவகுரு என்னும் திருநாமத்தைக் குறிப்பித்தார். மறைக்கிழவனைத் தலை புடைத்து உலகனைத்தினையு மொக்கப்படைத்தமையை,

"எட்டொ ணுதவக் குடிலையிற் பயனினைத் தென்றே
கட்டு ரைத்திலன் மயங்கலு மிதன்பொருள் கருதாய்
சிட்டி செய்வதித் தன்மைய தோவெனுச் செவ்வேள்
குட்டி னைய னுன்குமா முடிகளுங் குலுங்க."

"மறைபு ரிந்திடும் சிவனருண் மதலைமா மலர்மேல்
உறைபு ரிந்தவன் வீழ்தரப் பதத்தினு லுதைத்து
நிறைபு ரிந்திடு பரிசன ரைக்கொடே நிகளச்
சிறைபு ரிந்திடு வித்தனன் கந்தமாஞ் சிலம்பில்."

"ஒருக ரந்தனிற் கண்டிகை வடம்பரித் தொருதன்
காத லந்தனிற் குண்டிகை தரித்திரு கரங்கள்
வாத மோடப யந்தரப் பரம்பொருண் மகனோர்
திருமு கங்கொடு சதுர்முகன் போல்விதி செய்தான்"

என்பனவற்று லுணர்க.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# புள்ளிருக்குவேளூர்க்கலம்பகம்.

சைவாசாரியராகிய

படிக்காசுப்புலவர்

இயற்றியது.

---

வைத்தீசுரன்கோயில்

ச. சோமசுந்தர தேசிகரால்

சென்னை

சாது அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1929.

உ

சிவமயம்

சண்முகன்றுணை

திருச்சிற்றம்பலம்

# புள்ளிருக்குவேளூர்க்கலம்பகம்

## காப்பு

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நற்பகத்தை யற்கொடித்தே னண்பகத்தை
நிகராக்கி நலங்கொண் மாதர்
பொற்பகத்தை நாடவுணன் மார்பகத்தைப்
பிளந்தாவி போக்கி ஞனை
*வெற்பகத்தை யடியவர்கள் விருப்பகத்தைப்
புள்ளிருக்கு வேளூர் மேய
கற்பகத்தைக் கைதொழுது கலம்பகத்தை
யிலம்பகமாய்க் கழறி னேனே.

ஒருபோகு மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா.

சீர்கொண்ட நெடுமாலுந் திசைமுகனு மடிவருடக்
கார்கொண்ட திருமிடற்றுக் கருணையுருக் கொண்டாங்கு
வடதிசையி லுறையிமய மலைமகடென் றிசைநோக்கக்
குடதிசையை யெதிர் நோக்கிக் குணதிசையிற் கதிரவன்போற்
கள்ளிருக்கு மலர்ச்சோலைக் களிவண்டியா ழிசைமுரலும்
புள்ளிருக்கு வேளூரிற் பூங்கோயி லமர்ந்தனையே.

இது ஆறடித்தரவு.

---

* வெற்பகத்தை நிகரடியர் விருப்பகத்திற் புள்ளிருக்கு என்றும் பாடம்.

சம்பாதி யருச்சிப்பத் தம்பிசடா யுவும்பரவச்
செம்பாதி யவள்வணங்கத் திருப்பாத மளித்தனையே.

நிருபதங்க னளகேச னேரியர்கோன் சோணாட்டில்
வருபதங்கன் குகன்செவ்வாய் மாபதங்கன் றனைப்போல
விருபதங்கண் டருச்சிப்ப வென்பதங்க முருக்கினையே.

இருங்குழலும் வீணையும்போ
லிசைமுரல்வண் டறையொலியா
வொருங்குழலும் பெருங்கணையைந்
துடையோனை வென்றடர்த்துங்
கருங்குழலும் பசுந்தோடுங்
கனதனமுஞ் சுமந்துசிறு
மருங்குழலுந் தையலுமை
மையலுமை வருத்தியதே.

இம்மூன்றும் ஈரடியுமூவடியுநாலடியுமாய்வந்த தாழிசை.

குழையணி குழையினை குனிசிலை சிலையினை
யுழைமழு வுழையினை யுடையத ளுடையினை.
பலிவிர விரவினை பணியணி பணியினை
யுலகுரு வுருவினை யொருவிடை விடையினை.
சரணுறு சரணினை தலைமலை தலையினை
யருளளி யளியினை யகலெரி யகலினை.
ஒருவினை யொருவினை யுளமறை மறையினை
புரமம ரமரினை புரைதவிர் புரையினை.

இவைநான்கும் ஈரடியராகம்.

வீசலை முழக்கமும் விழாவும் பூசையுங்
கோசலை மகன்புரி கோயில் கொண்டனை.
சிரம்வெகுண் டறுத்தவத் தீமை தீர்ந்திடப்
பிரமகுண் டத்தினிற் பெரிது வாங்கினை.

இவையிரண்டும் நாற்சீரீரடி யம்போதரங்கம்.

கண்டல்வீ ழயன்சிரங் கரத்தி லேந்தினை.
கொண்டன்மே னியன்விழி காலிற் கொண்டனை.
சந்திர கலையினைத் தலையிற் றாங்கினை.
கந்திரு வரையிரு காதிற் சேர்த்தனை.

இவைநான்கும் நாற்சீரோரடி யம்போதரங்கம்.

கடகரி யுரிவை யுரித்தனை.
கதழ்திரி புரமு மெரித்தனை.
விடமுமிழ் கரிய மிடற்றினை.
விறன்மத னெரிய வுடற்றினை.

இவைநான்கும் முச்சீரோரடி யம்போதரங்கம்.

மலைவ ளைத்தனை. அமர்வி ளைத்தனை.
மறைது தித்தனை. முறைவி தித்தனை.
அலர்மு டித்தனை. சபைந டித்தனை.
அரவ சைத்தனை. யறமி சைத்தனை.

இவையெட்டும் இருசீரோரடி யம்போதரங்கம்.

எனவாங்கு,

இது தனிச்சொல்.

கள்ளூர் கழனிப் புள்ளூ ரடைந்துந்
தென்புலத் தமர்ந்த நன்புன லாடியு
மாவண வீதி மூவலம் வந்துந்
தள்ளையை யறுமுகப் பிள்ளையை வணங்கியும்
விண்மருந் துதிக்கு மண்மருந் தருந்தியுங்
குருவடி வாயநின் றிருவடி யடைந்தேன்
நாயினை யிதுவுமோர் பேயென விகழாது
சிறப்புறத் தமியேன் பிறப்பறுத் தருளா
யாரா வமுதே யடியார்தந்
தீரா வல்வினை தீர்த்தவெம் பரனே.

இது பத்தடி நேரிசையாசிரியச் சுரிதகம். க

நேரிசைவெண்பா.

பரமானந் தத்தற் பரஞ்சுடரென் றேத்தப்
பிரமானந் தத்தினிலை பெற்றார்—வருமானைக்
கந்தனையும் பெற்றார் கருதியபுள் ளூர்வணங்கி
வந்தனையும் பெற்றார் மகிழ்ந்து. உ

கட்டளைக்கலித்துறை.

மகமத் தனையும் புரிவித் தவனையும் வாழ்வித்தகோன்
சகமத் தனையு மனையுமில் லானென்று சாற்றுமைந்து
முகமத் தனையுமப் புள்ளூரை யுந்தொழு முத்தர்கண்டீர்
சுகமத் தனையும் பெறவாழ்ந் திருந்து சுகிப்பவரே. ௩

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

சுகத்திலே யிருந்துவளர் பிரமபதம் விண்டுபதஞ் சுவர்க்க மெல்லா
மிகத்திலே யின்பமல்லா லத்தனையு முத்தியென வெண்ண வேண்டா
செகத்திலே புகழ்படைத்த வேளூர ரிருபாதஞ் சேவித் தோர்கண்
முகத்திலே விழித்தாலும் போதுமையா வவர்சீவன் முத்தர் தாமே. ச

மேற்படி வேறு.

தாது வண்டறை யூது கொன்றையர் தாம மர்ந்தபுள்ளூர்
நாதர் தொண்டர்தம் வீட றிந்தொரு நாள ருந்தினர்தா
மோத நஞ்சொடு வேட னுண்டதொ ரூனு முண்டனர்மா
மாதர் தங்கிய மாவ னந்தனின் மாவி ருந்தினரே. ரு

மேற்படி வேறு.

மாவிருக்குந் தலத்திரண்டு மருந்திருக்கு
மவரிடத்தில் வைத்திய நாதர்
சேவிருக்குங் கொடியுடையார் சென்றிருக்குந்
தேடரியார் செவியின் மூவர்

பாவிருக்கு மவர்சடைமேற் பாம்பிருக்கு
மால்பணியும் பாதத் தேகட்
பூவிருக்கு மடையாளம் புள்ளிருக்கு
வேளூரெம் புனித ரைர்க்கே. சு

கேசவனு நான்முகனு மறுமுகனுங்
கிம்புருடர் கெருடர் விண்ணோர்
வாசவனு நீள்விசும்பு வழிக்கொள்ளிற்
புள்ளூரை வலமாய் வான்புண்
ணேசவன மயில்யானை முதலான
வாகனங்க ணீத்தெம் பாவ
நாசவனங் கொன்றைவன மென்றிழிந்து
பார்மீது நடப்பர் தாமே. எ

நடப்பர்சிலர் வேளூரர் சந்நிதிக்கே
சேர்வர்சிலர் நண்ணி நீட்டிக்
கிடப்பர்சிலர் நல்வரங்கள் கேட்பர்சிலர்
'கேட்டவரங் கிட்டி யவ்வூர்
கடப்பர்சிலர் தலமகிமை கற்பர்சிலர்
நிற்பர்சிலர் கண்டு சேவித்
திடப்பயணத் திளைப்பர்சிலர் கண்டுசில
ரதிசயப்பட் டிருப்பர் தாமே. அ

கட்டளைக்கலித்துறை.

தாதுண்டு வண்டறை வேளூ ரரனுண்டு தையலென்னு
மாதுண்டு கொண்ட மருந்துண் டிதைப்பற்ற மாநிலத்தி
லேதுண் டுனக்கு மடநெஞ்ச மேயிசை கேட்கவிரு
காதுண்டு கூப்பக் கரமுண்டு நோக்கவுங் கண்களுண்டே. கூ

## அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

**க**ண்ணுண்டு வானவர்க்கோர் மதியுண்டு
கதியடையக் கருத்து முண்டு
தண்ணுண்டு வலைதெறித்தான் முத்திதாத்
தீர்த்தமுண்டு தைய லென்னும்
பெண்ணுண்டு நல்லமுத்துப் பிள்ளையுண்டு
வினைதீர்த்த பெருமான் பக்கல்
மண்ணுண்டு பிறப்பறுக்க மாட்டாமன்
மருந்துண்டு மயங்கு வாரே. கo

## நேரிசைவெண்பா.

**ம**யங்காது வேளூரர் மாலைதந்தா லுள்ளந்
தியங்காது சிந்தைநோய் தீரு—முயங்காது
மையலாங் கண்டீர வத்தையினி வெல்லலா
முய்யலாங் கண்டீ ருயிர். கக

## இரங்கல். தாழிசை.

**உ**ய்யலாகு மெனநினைந்து வொப்பில்புள் ளிருக்குவே
ளூரைநாடி யும்மைநாடி யுற்றுவந்த பேர்களைக்
கையினு லழைக்கின்முன்பு கண்டபேர்க ளென்சொலார்
காமனைக் கடிந்தபேர்கள் காமநோ யுழப்பரோ
மையநோய் தனக்குநீர் மருந்தறிந்த தில்லையோ
வந்தவந்த பேர்களுக்கு மண்மருந் தளிக்கிறீர்
தையலம்மை காணினென்ன சண்டைவந்து விளையுமோ
சடையினன் மருட்டுகின்ற சலுகையென்ன **சலுகையே.**

## புயவகுப்பு.

**கை**யினுக்குநே ராம்வரிச்சிலை யாயொரு
கனகக் கிரியைக் குனித்தெதிர்ந்தன
கல்லிழைத்தபூ ணூர்மணிப்பணி யாகிய
கனபொற் பணியைப் பெறச்சுமந்தன

கையரைக்கொல்கூர் வாய்மழுப்படை யோடொரு
கழுமுட் படையைச் செலுத்துகின்றன
கைவசப்படா தான்மகத்திடை மேவிய
கதிர்பற் சிதறத் தகர்த்தறைந்தன, கஉவ

ஐயமிட்டசோ றேயிரப்பவ ராய்நக
ரகரத் தெருவிற் பலிக்குழன்றன
வல்லலுற்றவா ஞேர்பயப்படும் வேளையி
லருள்வைத் தபயத் தினிற்புரந்தன
வைவருக்குளோர் கோவடித்திட வேபொரு
தவனெய்த் திடமற் பிடித்துடன்றன
வல்லையொத்தகூர் வாளரக்கனை நேமிகொ
டறம்விட் டவனைக் கழுத்தரிந்தன, கஉ௭

தையலுக்குமா லாய்வளைக்கையி ஞலவ
டழுவத் தழுவத் தவக்குழைந்தன
சைவருக்குமே லாயுதித்திடு மூவர்க
டலைமைத் தமிழைத் தரித்திருந்தன
சையமுற்றபால் போல்வெளுத்திட வேநல
தவளப் பொடியைக் குழைத்தணிந்தன
தள்ளிலத்திபோ லேவிழப்பிர மாவொரு
தலையைத் திருகிப் பறித்தெறிந்தன, கஉ௮

பொய்யுரைத்தலா லேயகற்றிய கேதகை
பொருமப் பொருமத் தவிர்த்தொழிந்தன
புல்லெருக்குவேர் கூவிளத்தொடு தாதகி
புனையப் புனையப் பொறுத்தமர்ந்தன
புள்ளிபட்டகூர் வாளெயிற்றொடு தாவிய
புலியைக் கரியைப் புடைத்துவென்றன
புள்ளிருக்குவே ளூர்வயித்திய நாயகர்
புளகக் களபத் திருப்புயங்களே. கஙு

## கட்டளைக்கலித்துறை.

புயலார் வரையொன் றிருசுடர் தீயிற் பொருந்துகண்மூன்
றயலார் துதிக்கு மறைநான் கெழுத்தஞ் சறுமுகன்சே
யியலா ரெழுசுர மெண்டோள் வடிவங்க ளென்பதொன்பான்
செயலா லழித்தனர் வேளூரர் வீரன் சிரங்கள்பத்தே. கச

## சம்பிரதம்.

### பதினான்குசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பத்தா யிரங்கோடி யண்டபகி ரண்டங்கள்
பண்ணுவன் கண்ணனைப்போற்
பாரினை யளப்பன்வட மேருவுங் கடுகெனப்
படிறுபொய்க் களவு செய்வ
னித்தா ரணிக்குளக் கடுகுமலை யாக்கிடுவ
னிரவினைப் பக லாக்குவ
னித்தனையு நம்முடைய சீடனுடை வித்தையிவை
யிந்த்ரசா லங்க ளல்ல
முத்தான பிள்ளையுந் தேவியுந் தானுமாய்
மூவர்க்கும் வா மருளியே
முப்பத்து முக்கோடி தேவருந் தெண்டனிடு
மூர்த்திபுள் ளிருக்கு வேளூர்
சித்தாமிர் தக்குளத் தீர்த்தநீ ராடினோர்
திவலைக டெறித்த வுடனே
தீராத நோயையும் போகாத பேயையுந்
தேடிப் பிடிப் பிப்பனே. கரு

### அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

பிடிநடை மலர்மகள் புவிமகள் புடையது பெரியது கரியதுநீ
ளடிமுடி யுடையது நிசிசர ரொடுமிடி யனையது மனையதுநீள்
கடியுடை யிதழியர் கதழெரி யனையவர் கழுமல முடையவர்கூர்
வடிவுடை மழுவினர் மருவுபுள் ளூறைபதி மதியினர் மழவிடையே.

## மேற்படி வேறு.

விடவிப்பே தைமைதவிர்த்தே வினைதீர்த்தா
ரடைந்தவர்க்கும் விதனந் தீரத்
தடவிப்பே ரருள்புரியுந் தம்பிரான்
வேளூரைச் சார்ந்தோர்க் கெல்லா
மடவிப்பே யெனச்சுழலு மாசைப்பேய்
சந்நிதிக்கே யாடு கின்ற
புடவிப்பேய் தொடர்ந்துவரும் பிறவிப்பே
யத்தனையும் போக்க லாமே. கஎ

## இரங்கல். பதின்முச்சீர்க்கழிநெடில்விருத்தம்.

போரார் மழவிடை யுகைப்பவர் வாழ்வுறு
சோணு டையவர் புடைத்திட வேவளர்
பூணார் கனதன கிரித்தைய லாளுமை—யொருபாகர்
வேரார் சதுர்மறை துதித்திட வேவளர்
நீள்கா விரிவட கரைத்திசை மேவிய
வேளூ ருடையவர் வயித்திய நாயகர்—வரைபோல்வீ
ராரா மயலிது பொறுக்கறி யேனொரு
பேய்போ லறிவினை மயக்குதை யோவினி
யாரா கிலுமொரு மருத்துவ ராலிது—தணியாதோ
நீரா கிலுமிதை நிறுத்திடு வீரெனி
ஞறு கிலுமினி விலைப்படு வேன்மிக
நீள்சா தனமுறி யெழுத்திடு வேனினி—மடவீரே. கஅ

## வஞ்சிவிருத்தம்.

மடவர றிருமகண் மாலோடே
புடவிமின் வழிபடு போதாலே
விடமிட றுடையவர் வேளூரே
யடல்விடை யுடையவ ராரூரே. ககூ

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஆருண்டா ரெனினுமவ ரண்டாராய்ப்
பிறப்பேழு மகற்று நின்றார்
காருண்ட திருமேனிக் கண்ணனார்
கண்ணாரக் கண்டி லாரோ
பாருண்ட மண்ணையெல்லா மேனுண்டார்
வேளூரெம் பரம ருண்டத்
தோருண்டை மண்ணையுண்டா லையிரண்டு
பிறப்புமவர்க் கொழிக்க லாமே. ௨0

ஆவணத்தார் சூடிவரு காவணத்தா
ரேறியவா வணத்தார் செஞ்சொற்
பாவணத்தார் மறையோது நாவணத்தார்
மேகலையம் பணத்தா ராழி
மாவணத்தார் மழவிடையாந் தீவணத்தா
ரிதழியந்தார் மணத்தார் நாக
கோவணத்தா ரினிதுறையும் பூவணத்தார்
வேளூரெண் குணத்தார் தாமே. ௨௧

பிச்சியார்.

தாண்டிச்சென் மதர்விழியும் வெண்ணீறுங்
கஞ்சுளியுந் தனமுங் கண்டாற்
பூண்டிச்சி யாதவரு மிச்சிக்குந்
தகைச்சியார் புளகக் கொங்கைத்
தோண்டிச்சி யார்வேளூர்ப் பிச்சியா
ரெனவந்து தோன்று மிந்த
வாண்டிச்சி யாரழகைக் காண்டிச்சி
யாதவரா ரவர்நச் சாரே. ௨௨

கழிக்கரைப்புலம்பல். கட்டளைக்கலிப்பா.

சால மேவுங் கருங்கடற் சங்கமே
சபையெ லாமென் விரகப்ர சங்கமே
மாலு லாவுங் கழிக்கரைக் கம்புளே
மதன னேவும் விழிக்கரைக் கம்புளே
கோல மேவுங் கரும்பனை யன்றிலே
கொடுமை செய்தன டாயெனை யன்றிலே
வால முண்டவர் வேளூரி லன்னமே
யருந்தி லேன்றவ ராரமு தன்னமே. உரு

கார்காலம். எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மேகமெனும் பசுநிரைகள் கடனீர் மாந்தி
வெற்பேறி மேய்ந்திடையன் விடுகாற் ருக
மாகமெனும் பெருவெளிக்கே பரந்து சென்று
மழையெனும்பால் பொழிந்துயிரை வளர்க்குங் காலம்
போகமெனும் பசலைமழை பொழியுங் காலம்
புள்ளிருக்கு வேளூரார் புணராக் காலங்
காகமிடம் வளர்ந்தகுயில் கூவாக் காலங்
கான்மோதுங் கார்காலங் காலந் தானே. உசு

கிள்ளைவிடுதூது. கட்டளைக்கலித்துறை.

காலையு மாலையுங் கைகூப்பு வேனென்னுங் காமனெய்யும்
வேலையு மாலையும் வேளூரார்க் கேசொல்லு மென்கிள்ளைகாள்
சோலையு மாலையுஞ் சூழ்பொன்னி நாடர்த் தொழுதெனக்கோ
ரோலையு மாலையுந் தாருமென் றோடி யுரைசெய்யுமே. உரு

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

ஓடெடுத்தா ரொருகாது தோடெடுத்தார்
வேளூ ருடுத்தார் தோலு
மாடெடுத்தா ரோரிரண்டு மாடெடுத்தா
ரவரூருக் கடுத்தார் மேல்பால்

வீடெடுத்தா ரண்டையிலே காடெடுத்தார்
கீலாலம் விட்டி ராத
வேடெடுத்தா ரொருகையிலே கோடெடுத்தார்
யாவருக்கு மிறைவர் தாமே. ௨௬

இரங்கல். வெளிவிருத்தம்.

இறையவர்க்கு மெண்ணரிய விறையவர்க்கு
மிறையவனம் வேளூர்முன்னே
னிறைவளைக்கை யிவள்புலம்ப விறைகயற்கண்
ணீர்தணியான் வேளூர்முன்னே
னிறைபொறுத்த லரிதுகலை யிறையிறுத்த
றனைநினையான் வேளூர்முன்னே
னிறைதொடுக்க வரிதுநிறை யிறைவெறுத்த
தெனவணையான் வேளூர்முன்னேன். ௨௭

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

மூன்னுடைய திருக்குளமு மூர்த்திகளுந்
தொழும்வேளூர் முருக பாலன்
றன்னுடைய திருக்குளமு மதியாக
வேபடைத்த தைய லென்னு
மின்னுடைய திருக்குளமு மிடமாக
வேயிருந்தார் வியன்வே ளூர
ரென்னுடைய திருக்குளமு மிடமாக
வேயிருந்தா லென்ன தானே. ௨௮

நேரிசைவெண்பா.

என்னுடைய பங்குக் கிடஞ்சிறிது மில்லைகொலா
மின்னுடையுஞ் செஞ்சடையார் வேளூரா—வுன்னுடைய
வாகநகக் கிள்ளை யறிந்தேன்கா ணெங்கையந்தக்
கோகநகக் கிள்ளை குறி. ௨௯

கலித்துறை.

குறைமதி யிறைவர்புள் ளூறைபதி யினின்மலர் கொய்வேனே
யுறைமதி நுதலிவள் குழல்செரு கிடின்மன முய்வேனே
மறைபயில் சதுர்முகன் மதியில னெனமிக வைவேனே
நறைமலர் புனையினு மிடையொடி படுமென நைவேனே. ௩௦

தரவு கொச்சகக்கலிப்பா.

நையலுக்குத் தம்பமென நம்பலுக்குத் தம்மடியா
ருய்யலுக்குக் குண்டமெடுத் துண்டைமருந் தையளிப்பார்
தையலுக்குச் சடாயுபுரிச் சங்கரிக்குத் தான்கொண்ட
மையலுக்கு வேளூரர் மருந்தறிய மாட்டாரே. ௩௧

ஈற்றடிமிக்குவந்த நான்கடிக்கலித்தாழிசை.

மாடுதிகழ் கலைக்கோட்டு மதிதவழ்செஞ் சடைமௌலி
பீடுதிகழ் மணிமன்றிற் பெரும்பற்றப் புலியூரி
லாடுமலர்க் கழலுடையா னம்மான்றென் பெருவேளூர்
பாடுதுமஞ் செழுத்தோதிப் பரவுதுநின் சீரே
பாண்டரங்க னெனத்தினமும் பகருதுநின் சீரே. ௩௨

கலித்துறை.

சீரார் பேரா ரேரார் தேரார் வேளூரா
ராரார் சூரார் நாரா ரோரா ராரரரே
சேரார் பாரார் நேரார் சாரார் தீரார்தார்
தாரார் தாரார் வாரார் நீரார் தாராவே. ௩௩

மறம். அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

வேல்போலுங் கண்ணிபங்கர் வேளூரின்
மறவர்பெண்ணை வேட்க வேந்தன்
கோல்போல வளைந்ததொன்று கொண்டுவந்த
தூதனைநாங் கோற லாமோ

கால்போல விரலமைத்துக் கவிபோல
வொருகோலங் காட்டிப் பின்பே
வால்போல நாலவிட்டுத் திரிகொளுவி
யிவ்வூரை வலங்கொள் வேமே. ௩௪

இதுவுமது.

வேலைகொண்ட விடமுண்டார் வேளூரின்
மறவர்பெண்ணை வேட்கச் சந்த
மாலைகொண்டு சேலைகொண்டு வந்திடுதூ
தாமுன்னாள் வந்த மன்னர்
காலைகொண்ட கூர்வாளால் வெட்டிடுவேம்
வெட்டிலிழை கட்ட வேண்டி
யோலைகொண்டு வந்தநீ யூசிகொண்டு
வந்தனையோ வுரைசெய் வாயே. ௩௫

வார்த்தைவே றின்றிவினை தீர்த்ததே
வெனும்பேரே மந்த்ர மாகப்
பார்த்தபேர் மகிழ்திருச்சாந் துண்டைமருந்
தாய்மருந்துப் பையுந் தாங்கிக்
கூர்த்தவேற் குகன்றாதை வைத்தியநா
யகர்தமது குளத்தி லுள்ள
தீர்த்தமே மருந்தாகத் தீராத
நோய்களெல்லாந் தீர்க்கின் றாரே. ௩௬

இரங்கல். கட்டளைக்கலித்துறை.

தீரத் தரைக்கடல் பொங்கார வாரந் திகழுமந்தி
நேரத் தரைக்கட லானது மேகலை நீலவிழித்
தாரத் தரைக்கட கப்பாணி யாளர் தமிழ்பயில்வே
ளூரத் தரைக்கட னன்றினி நோவதென் னூழ்வினையே. ௩௭

## தாழிசை.

உளூளையாடு பேயொடாடும் வள்ளல்புள் ளிருக்குவே
ளூரர்வீதி பவனிவந் துலாவுநா டொடங்கியே
நாளுநாளு முடல்வெதும்பி யூணுறக்க மின்றியே
நஞ்சுதின்ற பேர்கள்போல நாவரண்டு சோர்வளால்
வேள்விகார மோவலாது மருள்பிடித்த தன்மையோ
மிஞ்சுமஞ்ச னங்தெளித்து வெள்ளைநீறு பூசியே
கேள்வியாக வேணுமையர் சந்நிதிக்கு முன்வரங்
கிடந்தபேரொ டிவளையுங் கிடத்திவைத்து வாருமே. ௩அ

## கைக்கிளை. மருட்பா.

வாரணங்கண் மீதெழுதி வாள்விழிகள் வந்திமைப்பத்
தார்வணங்கி வேர்வரும்புந் தன்மையாற்—பாரணங்காம்
வேளூர் விமலர்வெற் பணங்கின்
றோளூர் கலன்களுந் தொழில்புனைந் தனவே. ௩௯

## வலைச்சியார்.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

புலைச்சியார் வளங்கொழிக்கும் புள்ளிருக்கு
வேளூரர் பொன்னி நாட்டில்
வலைச்சியா ராகவந்து விழிக்கயலுங்
காட்டிவரை விலையாக் கொள்வார்
கலைச்சியார் கோகனகக் கைச்சியார்
பிச்சியார் கருமென் கூந்தல்
வலைச்சியா ரிருபுருவச் சிலைச்சியார்
கொங்கையெனு மலைச்சி யாரே. ௪0

### பதின்முச்சீர்க்கழிநெடிலடிச்சந்தவிருத்தம்.

ஆசா ரமுநல் லொழுக்கமு ஞானமு
மேலார் முனிவரர் வழுத்திட வேநல
வாசா ரியர்தம திலக்கண மாயொரு—குருவானோர்

வீசா மறலியை யுதைத்திடு தாளினர்
நீடூருகவன மழித்தவர் காணவர்
வேளூர் மருவிய வயித்திய நாயகர்—மயற்றே
மாசா கியமருள் பிடித்தவர் போலெதிர்
பூசா ரிகள்கடு புகைக்கிற தேனவர்
வாழ்கோ யிலினெதிர் கிடத்திவை யீர்பின்னை-வெளியாமே
பேசாள் வளவினி லிருக்கையி லேயிவ
ளேதோ வெருளவும் விழிப்பளை யாவொரு
பேயோ விதுவுமொர் பயித்திய மோவென—வறியோமே.

குறம். எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அறப்பள்ளி நாதர்கொல்லி மலையுங் கண்டே
னகத்தியமா முனிபொதிய வெற்புங் கண்டேன்
சிறப்புள்ள வள்ளிதனைக் கொடுத்த நாளிற்
*சீதனமாக் கொடுத்தகுறச் சிறுமி யம்மே
யிறப்பில்லா நம்பெருமான் வேளூர் மேய
வெம்பெருமான் முத்தையன்பே ரிட்ட வைக்குங்
குறப்பிள்ளா யென்னுடைய குஞ்சே யுன்றன்
குஞ்சிதனக் கெண்ணெய்கேள் கூறை கேளே. சஉ

வேற்றொலிவெண்டுறை.

கேதகையிற் குடியிருந்த பணியும் பூணர்
கிளைவைதும்பை யறுகினொடு கிழமை பூண்பார்
பேதையரா கிலுமன்பர் தம்மை யெண்ணிப்
பிரமனையு மெண்ணுத பெரியர் மூதூ
ரோதரிய சிறுவேளூ ரோங்குபெரு வேளூர்
பூதலமேற் கீழ்வேளூர் புள்ளிருக்கு வேளூர். சங

* சீதனமுங் கொடுத்த என்றும் பாடம்.

## நேரிசைவெண்பா.

**உள**ரும் புழுவினுக்கு மும்பருக்கு மோரன்பே
கூறும் பெருமானே கொங்கையின்மே—லார
வடங்கொடாத் தையன் மணாளாநின் பாதத்
திடங்கொடா யைய வெனக்கு. சச

## ஈற்றடிமிக்குவந்தநான்கடிக்கலித்தாழிசை.

**எ**ன்னுடை நாயக மென்னுடை மாதவ மென்னுடை யாருயிரென்
றுன்னுடை யானை மறந்து கழங்குட னூசலு மாடுவதே
மின்னிடை யாளுமை தையல் பராபரை யம்பிகை வேளூர்வா
ழன்னையு நீயுமுத் தையனும் வாழ்கென வாடுக வம்மனையே
யாரமு தேயெனை யாள்பவ னேயென வாடுக வம்மனையே. சரு

## வஞ்சித்துறை.

**ம**னைதீர்த்து நாயேன், சினைதீர்த்த லானே
னனைதீர்த்த மாடே, வினைதீர்த்த தேவே. சசு

## நிலைமண்டிலவாசிரியப்பா.

**வே**ற்பதி தடக்கை வேள்பூ சனையும்
பார்ப்பதி பூசையும் பரிந்தருள் புரிந்தனை
நாரணன் பூசையு நான்முகம் படைத்த
வாரணன் பூசையு மன்புற மகிழ்ந்தனை
திருமகள் பூசையுந் திருமக டனக்கு
மருமகள் பூசையும் மகிழ்ந்துவீற் றிருந்தனை
பரிதியங் கடவுளும் பழமறை யாகிய
சுருதியுந் தடமலர் சொரிந்திட மகிழ்ந்தனை
கொங்கார் கருங்குழற் குவலய மடைந்தையோ
டங்கா ரகன்செயு மருச்சனைக் குவந்தனை
தக்கசம் பாதி சடாயுவர்ச் சனையுந்
துர்க்கைபூ சனையுந் துகளற மகிழ்ந்தனை
யிந்திரன் வருண னியம னிருதி

சந்திரன் பூசனை மந்திர முவந்தனை
யனைத்துள முனிவ ரருச்சனை நேமி
வனத்துள முனிவழி பாடு மகிழ்ந்தனை
மருப்பொதி சோலை மருதூ ருடையான்
றிருப்பணி மகிழ்ந்து தெரிவையை மகிழ்ந்தனை
சாத்தனுஞ் சண்டியு மேத்த மகிழ்ந்தனை
குணங்கெழு பதினெண் கணங்கள்பூ சனையும்
வணங்குமா னுடவர் வரிசையு மகிழ்ந்தனை
பன்னிரு பெயரும் படைத்திடு பழம்பதித்
தென்னிரு தியின்பாற் றிசையமர்ந் தருளினை
யங்கா ரகபுர மம்பிகா நகரம்
பொங்கிய பானு புரமீ தெனவுங்
காவிரி வடபாற் கமழ்மறை குகன்பேர்
மேவுபுள் ளிருக்கு வேளூ ரெனவு
மறுவகை நாமமு மெழுவகைத் தீர்த்தமுஞ்
சரம்வெகுண் டெனவெழு சடாயு குண்டமும்
பிரமகுண் டமுமுள பெரும்பதி யமர்ந்தனை
தீரா வல்வினை தீர்த்த தேசிக
தாரார் கருங்குழற் றையன் மணாள
மண்மருந் துதவும் வைத்திய நாயக
பெண்மருந் திவளுயிர் பெறமருந் தருளே. சஎ

இரங்கல். மடக்கு. தாழிசை.

அருவித் திரளே கொழுந்தினையே
யகன்றே னசைக் கொழுந்தினையே
யந்தோ வாரத் தழையீரே
யவரை யிதணத் தழையீரே
யிருவிப் புனமே குஞ்சரமே
யெயினர் சொலிறைக் குஞ்சரமே
யேனல் காக்கு மஞ்சுகமே
யெனக்கோ வொருநா ளஞ்சுகமே

பொருவிற் காம னம்புறவே
புனத்திற் காணே னம்புறவே
பூவார் காவில் வருந்தேனே
* போனூர் மீளில் வருந்தேனே
வெருவித் திரிமான் பிணையினமே
வேங்கை யெனக்கோர் பிணையினமே
வேளூ ரிறைவர் கேள்வரையே
விலக்கா ரிரதி கேள்வரையே. சஅ

கட்டளைக்கலித்துறை.

வரைச்சிலை யேதொட்ட வேளூரர் வெற்பர்நல் வாய்மொழிக
ளுரைச்சிலை யேநினைந் தாரிலை யேயுற்ற வேருடனஞ்
சரைச்சிலை யேதின்றும் போகா திருந்ததென் னுவியின்னங்
கரைச்சிலை யேயன்ன மேயின்ன மேயன்பர் கன்னெஞ்சையே. சகூ

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

கின்னன்மொழிப் பேதையொடும் பிள்ளையொடுந்
தமியடியேன் கண்டு போற்ற
வின்னமொரு பிறப்பெனக்கு வேண்டுமெனில்
வரமிதனை யீய மாட்டார்
தன்னமறத் தவம்புரிந்தும் வேளூரில்
வினைதீர்த்த தம்பி ரானூர்
கின்னமறக் கேட்டவரந் தருவரெனுங்
கீர்த்தியென்ன கீர்த்தி தானே. ரு௦

கீரனெடும் பொருதவர்தென் வேளூர்வாழ்
பஞ்சவனக் கிள்ளை யன்னூர்
மாரனெடும் பொருதவிழி மையனங்கா
கமத்திலிடு மையே போலு

* புனலா ரமுது மருந்தேனே என்பதூஉம் பாடம்.

மோரநெடு விழியிமைவா ளுறைபோலு
முவையென்னுட் டுளைத்தா டாடல்
சூரனெடும் பொருமகன்றிற் குன்றினெடும்
பொருதுகந்த சுடர்வேல் போலும். ருக

துரப்பவருந் தீப்பிணியைத் தொலைப்பவரென்
றெடுத்தவரைத் துதிக்க வேண்டா
வுரப்பவரும் பசிப்பிணியைத் தவிர்ப்பவரு
மவரல்லா லொருவ ருண்டோ
புரப்பவரு மல்லாமற் பொக்கணமும்
கையுமாய்ப் புகுந்து பிச்சை
யிரப்பவரும் வினைதீர்த்தார் திருவுளமுண்
டாகவென விருப்பர் தாமே. ருஉ

கலித்துறை.

இரவலர் மனமிடி களைபவ ரெனிலெனை யெள்ளீரே
புரவல ரினிதுறை புள்ளூர் மருவிய புள்ளீரே
குரைகட லொலியென முறையிடு மெனதுரை கொள்ளீரே
நரைவிடை யுடையவ ரிரவிடை வரவென நள்ளீரே. ருங

வஞ்சிவிருத்தம்.

நள்ளிருக்கும் வேளூர் நமையாளூர்
முள்ளிருக்கும் வேளூர் முகிலாருங்
கள்ளிருக்கும் வேளூர் கழிசூழும்
புள்ளிருக்கும் வேளூர் புகழ்வீரே. ருச

அம்மானை. மடக்கு. கலித்தாழிசை.

புள்ளிருக்கு வேளூர்ப் புனிதனூர் தந்தமுத்துப்
பிள்ளைதனக் கிந்திரனூர் பெண்கொடுத்தா ரம்மானை
பிள்ளைத்தனக் கிந்திரனூர் பெண்கொடுத்தா ராமாகில்
வள்ளிதனைக் கொள்ள வழக்குண்டோ வம்மானை
வள்ளியம்மை யம்மான் மகளல்லோ வம்மானை. ருரு

நேரிசைவெண்பா.

அப்பிறப்பும் வேளூரர்க் காளானே மில்லையே
யெப்பிறப்பும் யாமில்லா தில்லையே—யிப்பிறப்புஞ்
சோகாடுஞ் செந்தீச் சுடுகாடுஞ் சாக்காடுஞ்
சாகாடு போலவருஞ் சார்ந்து. ருசு

எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

வருண முடையார் தவள விடையார்
மதனை முனிவா ரிதழி புனைவார்
கருணை வடிவா ரருண கிரியார்
கவுரி நகர்சூழ் மறுகு தனிலே
திரண மறவே யலகு மிடுவார்
திவலை விடுவார் தெரியல் புனைவார்
சரண மடைவார் மரண மடையார்
தமரு மடையார் தரும புரமே. ருஎ

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

தருந்தேனே யனையமொழித் தையல்பங்கர்
வேளூரர் தண்டார் வேட்டுக்
கருந்தேனே தினமுனக்குச் செந்தேனே
தந்தேனே கறிசோ றின்ன
மருந்தேனே யிணைவிழிகள் பொருந்தேனே
கொன்றையந்தா ரளித்தா லாவி
வருந்தேனே யுனைவழிபார்த் திருந்தேனே
யிருகாத வழிவந் தேனே. ருஅ

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

வந்தனை புரிந்தனர் வருந்தினர் நயந்தனர்
மணந்தனர் புணர்ந்தனர் விடாய்
தந்தனர் நினைந்தனர் நடந்தன ரிருந்தனர்
தணந்தனர் மறந்தனர் கொலாங்

கொந்தளவு கந்தமலர் சந்தன மணிந்தவர்
குணந்தனை நினைந்தில னியான்
கந்தபுரி யெந்தைதிரு மைந்தரென வந்திரிவர்
கந்தருவர் வந்தொ ருவரே. ருகூ

## கட்டளைக்கலித்துறை.

ஒழுகா தமருங் குழையார்புள் ளூரி லுரைக்குமன்பு
பெருகா தமருங் குலவா வருங்கண்கள் பெண்மைகண்டான்
முருகா தமருங் குழைவார்கள் பார முலைசுமக்க
விருகா தமருங் குளதாகி னிற்கு மிடையிவட்கே. சு௦

## பாதவகுப்பு.

இடமார் கயிலையி லேரா வணன்முய
லிசைகேட் டிடலைத் தகர்த்திரங்கின
வெழிலார் திசைமுகன் மாயோ னெனுமிவ
ரிருவோர்க் கொருவிசை யொளித்திருந்தன
வியலார் தமிழ்கொள வாரூர் மறுகினி
லிருகாற் பரவைதன் மனைக்குவந்தன
வெழுகூர்ப் பிறவியும் வேரோ டறவவ
ரிடர்தீர்த் தடியவர் மனத்திருந்தன. சு௦௧

உடனே யெதிரிட லாலே மதுரையி
லொருகாற் புலவனை யெடுத்தெறிந்தன
வுருகா தவர்கதி போலே யடியவ
ரொழியாப் பிறவியை யொழித்திரங்கின
வுடையாள் வருடுத லாலே யனுதின
முதிராப் புதுமல ரெனச்சிவந்தன
வுமையா டிருநுதல் போலே முழுமதி
யுடறேய்த் துளமதி யெனத்துணர்ந்தன. சு௦௨

முடியா விருவர்கள் வானோர் முனிவரர்
முடிமேற் சுடர்மணி யெனப்பொலிந்தன
முதலா கியதமி ழோர்மூ வர்கள்புக
ழிசைகேட் டருண்மழை யெனப்பொழிந்தன
முகில்போ லடல்புரி சூலா யுதமுடன்
வருகூற் றுவன்விழ வுதைத்துவென்றன
முதுதா ருகவன மானார் மயல்கொள
வவரூர்த் தெருவினி லிரக்கவந்தன. சுO

விடமார் பணிபுலி வானோர் தொழவளர்
புலியூர்ச் சபையினி னடித்துநின்றன
வெறியார் நறுமலர் தேனோ டுறைதலி
னறுகாற் பறவைக ளிரைத்தெழுந்தன
வெயிலார் சுடலையின் மீதே நடமிட
மறைபோற் பரிபுர மாற்றுகின்றன
வெறியார் பொழிறிகழ் வேளூர் மருவிய
வினைதீர்த் தவரிணை மலர்ப்பதங்களே. சுக

வேனிற்காலம். அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

கள்ளருக்கு நிகராயென் கரவளையுங்
குரவளையுங் கடிந்து சென்றென்
னுள்ளுருக்கி முடிந்தபின்பென் னூரினுக்கு
வருவார்நாட் *டுண்டு போலுந்
தெள்ளிருக்குந் தெரிவரியார் தேனிருக்குஞ்
சடைமுடியார் திகழுஞ் சோலைப்
புள்ளிருக்கு வேளூரர் பூணினுக்கு
விருந்தான பொதியத் தென்றல். சுஉ

* நாட்டில்லை போலும் என்றும் பாடம்.

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

அல்லையொத்த சூர்மேல் வில்லெடுத்த கூர்வே
லையனுக்கு வாழ்தா தையுமாவார்
வல்லியொத்த பூணு ரையலுக்கு மாலாம்
வள்ளலுக்கு வாழ்வா கியமூதூர்
செல்லுழக்கி வேள்போர் வில்லொடித்து மீனு
செய்யழித்து வாடா வயல்வாளை
புல்லொதுக்கி லேபோய் நெல்வரப்பி லேசேர்
புள்ளிருக்கு வேளூர் நகர்தானே. சுங

தரவுகொச்சகக்கலிப்பா.

தான்யாமந் தலைப்பிரிந்த தலைவன்போன் மறந்திருப்ப
வான்யாறு பெறமுயன்ற மன்னவன்போல் வருந்தினனே
மீன்யானை யுடன்பொருதும் வேளூரர் திருநாட்டிற்
கான்யாறே யிருங்கழியே கருங்கடலே காவிரியே. சுச

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

விரித்தசடைக் கொருத்தியிடத் தொருத்திதனைப்
பரித்தசிவன் வேளூர் வெற்பா
பொருத்திமிகப் பொருத்தியெனைத் திருத்தியதைச்
சிறுக்கியவள் பொறுக்க மாட்டா
டெரித்தவளைக் கனத்தகுழைத் துடித்தவிதழ்த்
தரித்தவெழிற் சிரித்த மூரற்
பருத்தமுலைச் சிறுத்தவிடைக் கறுத்தவிழிச்
சிவத்தநிறப் பரத்தை தானே. சுரு

தழைநயப்பு.

படுத்ததுவுந் தழையிவண்மேற் படைமதனன்
பகழிபட்ட பசும்புண் ணுற
வடுத்ததுவுந் தழைவீசி யடித்ததுவுந்
தழைவேளூ ரமலர் வெற்ப

வுடுத்ததுவுந் தழையன்றே கடைமுறையி
லெங்கண்மா னுயிர்போ காமற்
றடுத்ததுவுந் தழையின்று தந்ததுவு
முனதுகையிற் றழைகண் டாயே. ௬௬

ஆகாசம் பூமியுமுள் ளன்றுமுத
லின்றளவு மெனைவிட் டப்பாற்
போகாமற் றொடர்ந்துவரும் பிறப்பென்னும்
பேயையிவர் போக்கி டாரோ
பாகாரு மொழிபங்கா புள்ளிருக்கு
வேளூரெம் பரமா வென்னைக்
காகாவென் றழுவதுவுங் கோகோவென்
றரற்றுவதுங் கண்டு தானே. ௬௭

நேரிசைவெண்பா.

கண்டனைய செஞ்சொற் கவுரிபங்கர் வேளூர்சூழ்
தண்டலையிற் கண்டு தழைவுற்றேன்—பண்டயனார்
துங்கமலை யன்ன டுணைமுலையா கப்படைத்த
வங்கமலை யன்ன ளவள். ௬அ

பதினன்குசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

அவளைவா ரிதியி லவளைநா கணையி
லவளையேந் தியமுகின் மகனை
லவளைநா டனவே யவளையு மறந்தா
ளவளைமத் தெனவுயிர் சுழன்று
ளவளைவார் குழையா ளவளைவேல் விழியா
ளவளைமோ தியவிரு தனத்தா
ளவளைசேர் கரத்தா ளவளைநேர் மிடற்று
ளவளைநீர் நினையுநா ளுளதோ

பவளமே னியினிற் றவளநீ றணிந்து
குவளைநேர் மணிமிட றிலங்கப்
பாருகா வண்ணந் தாருகா வனத்திற்
பலிக்குழன் றிடுபரம் பரனே
கவளமால் யானை யீருரி போர்த்த
கண்ணுத லெண்ணுதற் கரிய
கற்பகா டவிசூழ் பொற்பமர் வேளூர்க்
கடவுளே கருணைவா ரிதியே. சுகூ

பனிக்காலம். கட்டளைக்கலித்துறை.

கருங்கொண்ட லேநிகர் கண்டர்தண் டார்தரிற் கண்டொருவர்
மருங்கொண்ட லேதினி மாகொண்ட லேதென்றல் வாடையுட
னிருங்கொண்ட லேவரில் வேளூரர் மீதினி லிச்சையமர்
தருங்கொண்ட லேவிழி துஞ்சாம லாவி தணந்தவரே. எ௦

சித்து. எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

திரைக்குங்கா விரிநாடு தனக்கு மீசர்
தையல்பங்கர் வினைதீர்த்த தம்பி ரானூர்
நிரைக்குங்காற் றொழுதிறைஞ்சுஞ் சித்த ரப்பா
நெய்தயிர்பா லுண்டானு னிதியு முண்டா
முரைக்குங்கான் மிக்கதுத்த நாகஞ் செம்பை
யுறநீட்டி யொளியிரத வாதஞ் செய்வோ
மிரைக்குங்கார்க் கடல்கடந்தோர் நாட்டை யெல்லா
மீழநா டாக்குவித்தோ மெளிதிற் றானே. எக

காலம்.

எழுந்தநில வெழுந்தணலை விழுங்க மாட்டா
திளநெஞ்சா யுள்ளஞ்சி யேங்கி யேங்கிக்
கொழுந்தணலை விழுங்குகின்ற குருகு போலக்
கோகிலங்கண் மாந்தளிரைக் கோதுங் கால

மழுந்தாள மிளமுலைமேற் கொழிக்குங் கால
மத்தாளங் கூடலைவந் தழிக்குங் காலஞ்
செழுந்தாள மணிகொழிக்குஞ் செம்பொன் வேளூர்ச்
சிவபெருமா னெம்பெருமான் சேராக் காலம். எஉ

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

சேருமந் தணர்வாழ்புள் ளூரிலம் பிகையோடு
தேவுமங் கிறவாத பேர்
பேரிறந் திடுதேவர் கோலமுஞ் சதகோடி
பேர்களுஞ் சதகோடி யே
வாரணன் சதகோடி யாதவன் சதகோடி
வாவுசந் திரர்கோடி மா
நாரணன் சதகோடி நான்முகன் சதகோடி
ஞாலமுஞ் சதகோடி யே. எஙூ

மதங்கியார். அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

சதங்கைநூ புரமொலிப்ப வளையொலிப்ப
வண்டொலிப்பத் தடந்தோள் கொங்கை
பதங்கையா னனமிருப்ப விழியிருப்ப
வேளூரெம் பரமர் முன்னே
மிதங்கையார் முழவதிர்ப்ப மாதங்கி
பாடிடவாள் வீசி யாடு
மதங்கியார் மருங்குறனை வாங்கியா
ரொற்றியாய் வைத்த பேரே. எசு

பதினன்குசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

பேரா யிரங்கண்கள் பதினாயி ரம்புயம்
பெருவரைக ளெண்ணா யிரம்
பிறையா யிரம்புனையு முடியா யிரம்பணி
பிறங்குசடை பதினா யிர

மீரா யிரஞ்செங்கை யங்கைபதி னாயிர
மிலங்குகூ ருகிரா யிர
மிறையா யிரங்கொண்ட விரல்கள்பதி னாயிர
மிரத்னவல யங்கள் கோடி
யோரா யிரங்குழைக ளாறு யிரஞ்சரண
மொலிகொள்பரி புரமா யிர
முதயதின கரர்கோடி யனையபத் தர்கள்பரவு
மும்பர்சத கோடி பேர்கள்
வீராதி வீரன்ற சக்ரீவ ராவணனை
வென்றவன் புள்ளி ருக்கு
வேளூரில் வினைதீர்த்த தம்பிரான் கயிலாய
வெற்புடைய கடவு ளுக்கே. எரு

பாண். எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

வெற்பலகை யளித்தமுலை வேசி தன்மேல்
விருப்பம்போ லவர்க்கிசைமேல் விருப்பம் பாணா
கற்பலகை யளித்தவர்பாற் சென்று பாடு
கனவரிசை யுண்டாலங் காட்டின் முன்னா
ளற்பலகை யளித்தவனு மால வாயி
லன்றுனக்குப் பொற்பலகை யளித்த கோவு
நற்பலகை யளித்தவுணன் கீதங் கேட்டு
நயந்தவனும் வேளூரி னம்பன் றானே. எசு

கட்டளைக்கலித்துறை.

நம்பப் படாது விலைமாதர் நேய நளினமுகக்
கும்பப் படாமுலை பங்கர்புள் ளூரர்தென் கொல்லிவெற்பா
வெம்பப் படாநின்ற கட்கூற்றம் பார்க்க விதியுமுண்டோ
வம்பப் படாது பிரிந்தே யிருக்கு மவருள்ளமே. எஎ

ஊசல். எண்சீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

உள்ளிருக்கு மயலாலுள் ளுருகி யோடி
யுலையிலிடு மெழுகாக வுடலம் வாடித்
தெள்ளிருக்கு மறியாத வினைகள் கோடி
செனனமற வேசாடிச் செல்வ நீடிக்
கள்ளிருக்கு மலர்க்கொன்றைத் தாரை நாடிக்
கலைவாணர் மொழிந்திடுநற் கவிக டேடிப்
புள்ளிருக்கு வேளூரர் புகழே பாடிப்
புதுப்புனன்மஞ் சனமாடி யாடி ரூசல். எஅ

ஊசலிடு மனத்தடியேன் வேளூ ரையா
வுச்சியினிற் கரங்கூப்பி வைத்தே னுற்ற
நாசியினி லணியிதழி நாற்றங் கொண்டே
னாவினிலு மஞ்செழுத்தை நாட்டி வைத்தேன்
காசினிநின் சந்நிதியிற் சிறப்பை யெல்லாங்
கண்களுக்கே விருந்திட்டேன் காய மெங்கும்
பூசுதிருச் சாந்துண்டை மண்ணைப் பூசிப்
புந்தியினி னடிச்சுவடு பொறித்திட் டேனே. எகூ

கொற்றியார். அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பொறியமருங் கொற்றியார் புள்ளிருக்கு
வேளூரர் பொன்னி நாட்டி
னெறியமருங் கொற்றியார் முகிலொடுமின்
மறையுமென நீத்த தல்லால்
வெறியமருங் கற்றையார் கருங்குழலை
யிவரெங்கே விற்றூர் கண்கண்
மறியமருங் கொற்றியார் சிறியமருங்
கொற்றியார் வைத்த பேரே. அ௦

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

வையக மதனிற் பிறந்துளா ரீகை
மறந்துளா ரெனின்மறு பிறப்பிற்
கையகந் தனிலோர் கடிஞையு மேந்திக்
கடைதொறும் பலியிரந் துழல்வார்
வெய்யதோர் பிறப்பு முனக்கிலை யிரந்துண்
வினைப்பய னெவ்விதத் ததுநீ
யையமேற் றுண்ட தென்கொலோ வேளூ
ரப்பனே யொப்பிலா மணியே. அக

எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

ஒப்பொருவ ரிலையுனக்கோர் துணையு மில்லை
யுலகமெலா முனைப்பணியு மொளிர்பொன் மேரு
வப்பெரிய மலையிருக்கத் தைய லம்மை
யருகிருக்க முத்தையனு மாங்கே வைகச்
செப்பரிய புலித்தோலுந் திருவெண் ணீறுஞ்
செஞ்சடைமேற் படவரவுஞ் செங்கை மீதோர்
கப்பரையும் வெண்டலையும் பெறல்கண் ணேறு
கழிக்கவென்றோ வேளூரெங் கடவு ளானே. அஉ

நேரிசையாசிரியப்பா.

கடல்கிழித் தெழுந்த கருமுகிற் குழாங்களின்
குடல்கிழித் தெழுந்த கொடிக்கோ புரங்களி
லசுணம் விசும்பி லமர்ந்த கின்னா
ரிசையுண விருந்தாங் கிருசெவி மடுப்ப
வெயிறுபுரை யிந்துவி னிளநிலாச் சகோரம்
வயிறுகுழி வாங்கி வாய்மடுத் தருந்தத்

தென்றலுக் கிடைந்து சேவலொடு சினைஇய
வன்றிலம் பேடை யழுதயர் வுயிர்ப்பக்
கரும்புகள் களுலிய கயத்திரை யருந்திக்
குரம்பக ஞரைகள் குடம்பையடை கிடப்பச்
சேண்டனிற் பிறந்து செங்கதிர் வரவை
யாண்டலைப் பொறிப்புள் ளாமினத் தொடுவிஞஅய்ப்
பெதும்பையிற் றழீஇய பேடையோ டேபு
பொதும்பிடைக் கிடந்து புறவுகள் புலம்ப
மேருவிற் கிளர்தலின் வெயில்கண்டு பிரிந்து
கூரிருட் கிடைந்த கோகமுன் றடிப்பக்
கொஞ்சிப் பார்ப்பொடுஞ் சினையொடுங் குழுமிக்
கிஞ்சுக வளைவா யஞ்சுக மிழற்றக்
குலமுத லியற்றிய கொள்கைகண் டெம்ப
ரலமரு முவணமு மலம்பா வதிந்துறப்
பைந்தமிழ் வேளூர்ப் பரவையு ணிலவிய
மந்தா மெனச்சுரர் வாசுகி பிணிப்பக்
கீழுற வெழுதிய கேழலின் வடிவமு
மேலுற வகுத்த வெண்சிறை யன்னமு
முன்னந் தேடிய கேழலு மெகினமு
மின்னுந் தேடிய வியல்பெனப் பொலிந்த
வந்நெடுங் கோபுரத் தணிநிரை தயங்கப்
பன்னெடுஞ் சிகரமும் படர்விடைக் கொடியு
மாடமுந் தெற்றியு மகரவாய்க் குடுமிக்
கூடமுந் தடமுங் கொடிஞ்சியு மதிலுங்
கனகமா ளிகையுங் கழுமிய வேளூர்ச்
சினகரத் தமர்ந்த தெய்வ நாயகன்
வில்லவன் புரக்குங் கொல்லியம் பொருப்பின்
கரும்பினை விரும்பா வரம்பின ருளரே
பண்டலர் பொழிந்த பதியினில் வணங்கிய
கொண்டலி னிருண்டது குழலே திண்டிறன்
மற்றா னவுணர் வலிகெட வாங்கிய
கொற்றவில் லனையன பிருகுடி வெற்றி

முருகவேள் வாங்கிய மூரிவேல் விழிக
ளிருகணை யருகணை யிந்துவாண் முகமே
யவ்வா யரனை யருச்சனை புரிந்த
செவ்வா யனையது செவ்வாய் சிறந்த
திருச்சா ணிருகாஞ் சிறந்த சடாயு
வருச்சனை புரிந்த வரவிந்த மலரே
மண்டபத் துமையவ டண்டமிழ் மிழற்றிடு
மொழிபயில் கிள்ளை மழலையுந் திருத்துங்
கன்னியிங் கிவட்குச் சந்நிதி யடைந்தோர்
நோயினுஞ் சிறிதிடை நுடங்கும்
பேயினும் பெரியது பிணமுலைத் தடமே. ௮௩

கிள்ளைவிடுதூது. நேரிசைவெண்பா.

தடந்துறைசூழ் வேளூரர் தண்டார் விரும்பி
யுடைந்தெனது நெஞ்ச முருகிக்—கிடந்து
கருகவிருந் தத்தாய்கண் ணற்றவ ருள்ள
முருகவிருந் தத்தா யுரை. ௮௪

இதுவுமது. கட்டளைக்கலித்துறை.

உரையிற் படவரைந் தோலையும் போன துயிருமின்று
நரையிற் படவருந் தன்மையெல் லாந்தத்தை காளுரையீர்
திரையிற் படவர் திமிங்கிலத் தோடமர் செய்யும்புள்ளூ
ரரையிற் படவர வார்த்துநின் றுடிய வத்தனுக்கே. ௮௫

களி. எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

அத்தியின்மே லரசிருக்கு மரசின் மீதே
யாத்திபனை வேம்பிருக்கு மவையின் மீதே
நித்தியமு மாவிருக்கு மயக்க மின்றி
நிச்சயமா யறிந்துரைத்த களிய ரப்பா

*சித்திவிநா யகன்மூத்த தமைய னீசன்
திருமடந்தை தலைமகன்மா யவனே யாகு
முத்தையன்வே ளூரர்மரு மகனென் பார்கண்
முகுந்தனுக்குக் காமனண்ணன் முறைகண் டாயே. அசு

பதினன்கு சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

முறையென வெழுத வோலையாய் விடுத்தன்
முடியினிற் சேரலன் பரித்தன்
முடைந்துபா யிடுதல் கொள்கல மாக்கன்
முகடுவேய்ந் திடல்கணக் கெழுத
லுறையுளாக் கிடுதல் வில்லென வளைத்த
லொருவன்முன் பதாகையா யுயர்த்த
லூர்மட லாதல் காணியாய்ப் பிணித்த
லுயர்பரி யங்கமே யாதல்
பறவைக ளுறைத னிழலிட னுடங்கும்
பழங்கிழங் கொடுநற வருத்தல்
படுவிற காத லெதிர்வரு மடவார்
பயோதரங் கூந்தனே ராத
லிறைவர்வே ளூரர் திருப்பணிக் கமைத
லிவையெலா மேயகற் பகத்தை
யெழும்பனை யதுவென் றிகழுவா ரதனு
ளெழுதியு மூடரா யினரே. அஎ

கூதிர்காலம். எண்சீர்க்கழிநெடில்விருத்தம்.

மூடுபனி நெடுவாடைக் குளிர்பொ ருமன்
முகிலென்னுங் கரும்படாம் போர்த்து வெய்யோன்
காடுபரந் தாகாசத் தெழுந்த வன்றன்
காத்திறல் விரகத்தீ காயுங் காலங்

* முத்தசித்த விநாயகர் தமைய னீசன் என்றும் பாடம்.

காடுபரந் தெழுந்தாலைக் கரையின் மேவுங்
காய்ச்சலெனக் காமகனல் கடுகுங் கால
மேடுகுழி பரவுவயல் வேளூ ரன்பர்
விரைந்துவந்து புரந்தனையே மேவாக் காலம். ௮௮

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

**கா**லமே யெழுந்திருந்து புள்ளூர்க்குப்
போதுமென்று *கழறிற் பேய்கள்
சூலமே தெதிரென்னும் யாத்திரைக்கு
நாள்கேட்குஞ் சோறுந் தூக்குஞ்
சாலமே வியவிந்தா டவிக்குவழி
யேதென்னுஞ் சகுனம் பார்க்குங்
கோலமே புனைந்துகொள்ளுங் குருக்கட்பேய்
முன்புவிடை கொள்ளுந் தானே. ௮௯

இடைச்சியார்.

**வி**டைக்குலமார் கொடியுடையார் வேளூரில்
விலைகூறி விற்கு முங்கள்
படைக்குலமாம் விழிகண்டால் மால்கொள்வ
ரல்லாமற் பால்கொள் வாரோ
நடைக்குலமோ தோகைமயிற் பெடைக்குலமோ
நீருமந்த நந்த கோப
னிடைக்குலமோ வல்லதொரு கோகிலமோ
வின்னதென வியம்பு வீரே. ௯௦

நேரிசை வெண்பா.

**வீ**ர மதனுவுன் வென்றித்தேர் வேளூரா
ரார மதனுக் களித்திடுவேன்—சூரர்
தொழுந்திருந்தார் முப்புரமுந் தூளிபடப் போருக்
கெழுந்திருந்தார் வந்திருந்தா ரின்று. ௯௧

---

* கழறிப் பேய்கள் என்றும் பாடம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

இன்றுதா னுடம்பெல்லா *மிருந்தபடர்
தாமரையுற் றிருந்தா ருக்கு
மன்றுதா னவருடம்பு காய்ந்துகிடந்
தவர்க்குநிறுத் தறிய மாட்டார்
சென்றுதான் பணிந்தவர்க்குத் தீராத
நோயையெல்லாந் தீர்த்தோ மென்பார்
கொன்றுதா னிறந்தபிள்ளை யெழுப்பினே
மெனவிருதுங் கூறு வாரே. ௧௨

தரவுகொச்சகக்கலிப்பா.

வாழிவாய் நேமிபெற மாயோன் மலர்சாத்த
வீழிவாய் மேகங்கொள் வேளூர்த் திருநாட்டின்
கோழிவாய் வெங்குரலிற் கூகைவா யுங்கொடிதா
மாழிவா யோய்ந்திடினு மன்னைவா யோயாதே. ௧௩

கட்டளைக்கலித்துறை.

ஓயாப் பிறப்பிற் பிறந்தநெஞ் சேபல் லுயிர்கட்கெல்லாம்
தாயாய்ப் பிறந்தருள் தையல்பங் காளர்தஞ் சந்நிதிக்கே
யீயாய்ப் பிறக்கி னெறும்பாய்ப் பிறக்கினு மேதுங்கெட்ட
நாயாய்ப் பிறக்கி னரியாய்ப் பிறக்கினு நன்றுனக்கே. ௧௪

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

நண்ணிடுவார் போகாமற் றளையிடுவா
ரடியவர்க்கு நட்ட மாக
வெண்ணிடுவார் தண்ணீரி னமிழ்த்திடுவார்
காணிக்கை யிடவே சொல்லிச்

* மிருந்தபடர் என்றும் பாடம்.

சண்ணிடுவார் வினைதீர்த்த தம்பிரா
னம்பினுர் தங்கள் வாயின்
மண்ணிடுவா ரடிபடவு நினைந்திடுவா
ரவர்க்கன்பு வைக்கொ ணாதே. ௧௫

இரங்கல். தாழிசை.

**வை**க்ரவுஞ்ச வேலெடுத்த பிள்ளைதைய லத்தனுர்
வள்ளல்புள் ளிருக்குமூரர் மையல்கொண்டி டாதபே
ரக்ரமங்கள் செயவெழுந்த மதியமென்பர் மதியெனி
லனலைமொண் டிறைக்குமோவி தாழிவட்ட வடவையி
னுக்ரமாகு மியமராச னெனையழைத்து வரவிடு
மோலைவட்ட மதனராச னுலவட்ட முயிரிறுஞ்
சக்ரவட்ட மல்லதொன்று பரிதிவட்ட மிவையலாற்
சலதிவட்ட மீதெழுந்த சந்த்ரவட்ட மல்லவே. ௧௬

நேரிசைவெண்பா.

**அ**ல்ல லறுத்தாண்ட வம்மானே வேளூரா
தில்லை வனத்துறையுந் தேசிகா—தொல்பிறவிப்
பித்தங் கொழிக்கும் பெருமானே பேதைவிழி
முத்தங் கொழிக்கு முலை. ௧௭

குறளடி வஞ்சிப்பா.

**மு**லைமுகையினர் மொழியாம்பல்
கலவியின்மகிழ் களியாம்பல்
விதிரிணைபுய முதுகாம்பல்
முகையனையது நகையாம்பல்
வெங்கதிர்முலை வெள்ளாம்பல்
செங்கவிரிதழ் செவ்வாம்பல்—எங்கோன்
வேளூர் விழவணி நாளி
லாளு தாம்பா லவர்சிறு மருங்கே ௧௮

இன்னிசைச்சிந்தியல்வெண்பா.

மருமருவும் வேளூர் வயித்தியனூர் வெற்பிற்
கருமருந்து தம்மிதெனக் கைக்கொண்டோர் வெள்ளை
யருமருந் தண்டத் தவர்க்கு. ௯௯

கட்டளைக்கலித்துறை.

அண்டர்க் கரியவர் வேளூரர் முன்னுண்ட வாலவிடங்
கண்டத் திருப்பது கண்டோர் தமக்கன்பர் காதலினு
லுண்டற் கவாவு நறுநாவ லொண்கனி யுண்டவர்தந்
தொண்டைக் குழியினி னின்றது போல்வந்து தோன்றிடுமே.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

தோன்றுகரி யுரிபோர்த்த புள்ளிருக்கு
வேளூரர் துணைத்தாள் பெற்றே
னீன்றுவரு பிறப்பொழிய மைந்தர்களு
மொழியாத வின்பும் பேற்றேன்
மூன்றுபிறப் பையுமறுத்தே முத்தையனுந்
தையலுமென் முன்னே நிற்பார்
தேன்றுவலைக் கொன்றையந்தார் தர்ப்பெற்றே
னருள்பெற்றேன் சீர்பெற் றேனே. ௧0௧

**புள்ளிருக்குவேளூர்க்கலம்பக முற்றிற்று.**

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

காத்தியாயனரிருப்பு

வடுகநாததேசிகரியற்றிய

# புள்ளிருக்குவேளூர்ப்

# புராணமூலம்.



வைத்தீசுரன் கோயில்

ச. சோமசுந்தர தேசிகரால்




சிதம்பரம் சண்முகசுந்தர விலாசம் பிரசில்

பதிப்பிக்கப்பட்டது.

1929.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிறப்புப்பாயிரம்.

---

திகழ்சிவ ஞான தேசிக னருளாற்
றெளிந்துளஞ் சகலசாத் திரமும்
புகழ்பெற வுணர்ந்தோ னட்சய லிங்கப்
புண்ணிய முனிவரன் புகல
அகழ்கட லுலகில் வடமொழி வேளூர்ப்
புராணந்தென் மொழியினி லருளி
புகழ்பெற வரங்கேற் றினனெழில் வடுக
நாதன்வாழ் வள்ளிநா யகன்முன்.

சிவமயம்.

# நூலாசிரியர் சரித்திரச் சுருக்கம்.

—❀—

இந்நூலாசிரியர் சோழநாட்டிலே * காத்தியாயனரிருப்பு என்னும் தலத்திலே பரம்பரைச்சைவாசாரியர் மரபிலே அவதரித்தவர். இவர் தமது நண்பரும், திருக்கைலாய பரம்பரைத் தருமபுரவாதீனத்து வேளூர்த் தேவஸ்தானக் கட்டளைவிசாரணை செய்தவரும் † அட்டமாசித்திவல்லுநரும் ஆகிய அட்சயலிங்கசுவாமிகள் விருப்பத்தின்படியே இப்புள்ளிருக்கு வேளூர்ப்புராணத்தைப் பாடினர். அது "அட்சயலிங்கப் புண்ணிய முனிவரன் புகல, அகழ்கடலுலகில் வடமொழி வேளூர்ப்புராணந்தென் மொழியினிலருளி" என்னும் அபியுக்தர் சிறப்புப்பாயிரக் கவியிறைலினிது விளங்குகின்றது.

அவர்காலம் கல்வெட்டு, செப்புப்பட்டயம் முதலியவற்றால் ஏறக்குறைய நூற்றறுபது வருடமென்று தெரிகின்றது. புராணமியற்றிய காலமுமதுவே யென்பது கூறுமேயமையும்.

சுவர்ணாம்பிகை பிள்ளைத்தமிழும் இவ்வாசிரியர் பாடியதென்பது கர்ணபரம்பரை. வேறு தாரங்கிடைத்திலது. இன்னும் இவரைப்பற்றிக் கூறுஞ் சரித்திரங்களை ஆதாரங்கிடைத்தபோது வெளிப்படுத்துவேன்.

ச. சோமசுந்தர தேசிகர்,

வைத்தீசுரன் கோயில்.

---

*இத்தலம் காத்தியாயனமுனிவர் சுவர்ணபுரீசரையும் சுவர்ணப்பிரதாம்பிகையையும் வழிபட்டு வேண்டியவரம் பெற்று வசிக்கப்பெற்றமையா லிக்காரணப் பெயர் பெற்றது.

† "அட்டமாசித்திவல்ல அட்சயலிங்கசாமி" என்று பட்டயத்தில் எழுதப்பட்டிருக்கின்றது.

# சருக்கவகராதி.

---

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# * புள்ளிருக்குவேளூர்ப்புராணம்.

## கற்பகவிநாயகர்காப்பு.

திங்களுட னெழில்கொழிக்குங் கொன்றையந்தார் தரித்திலகு சிவனெங் கோமான், மங்களசின் மயமான வைத்யலிங்கம் விளங்குதல மகிமை யோங்கிப், பொங்கு சிறப் பிணைமதுரம் பொழிந்திடுசெந் தமிழினாற் புகல வாய்ந்த, கங்கையணி மதஞ்சொரியுங் கற்பகக்குஞ் சரத்திரு தாள் கருத்துள் வைப்பாம்.

## கடவுள் வணக்கம்.

### வைத்தியநாதர்.

திருமாலும் பதுமம்வள ரயன்முதலாங் கடவுளருந் திகழு மேன்மை, தருமாலி னிழலுறையுஞ் சனகாதி யரும்வேளூர் தன்னிற் போற்றக், கருமாவின் றொடர்பகற்றிப் பதவிபெற மருந்தளித்துக் கருணை செய்ய, வருமாலை யிளம்பிறைசேர் வைத்ய லிங்கம் பொன்னடியை வணக்கஞ் செய்வாம். க

---

* புள்ளிருக்குவேளூர் – வைத்தீசுரன் கோயில். சம்பாதி சடாயு என்னும் பறவைகளாலும், வேதங்களாலும், முத்துக்குமார சுவாமியினாலும் பூசிக்கப் பெற்றமையின், 'புள்ளிருக்குவேளூர்' எனப்பட்டது. அவர் பூசை செய்தமை இப்புராணத்துள் ஆண்டாண்டுக் காண்க. போற்ற வரும் வைத்தியலிங்கம், அகற்றிப்பெற அளித்துச்செய்ய வரும் வைத்தியலிங்கம் எனத் தனித்தனி கூட்டுக. கருணைசெய்யும் என்றும் பாடம்.

## தையனாயகி.

பன்னரிய மகிமைநிறை யானந்தப் பெருகொளியே படிவ மாகி, உன்னருமங் களநிறைந்து விளங்கியிருந் தெழில்கொழிப்ப வுலகுக் கெல்லாம், அன்னையா யைந்தொழிற்கும் வித்தாகிப் புவனங்க ளனைத்து முய்ய, மன்னுபெருங் கருணைபொழி தையனா யகிமலர்த்தாள் வணக்கஞ் செய்வாம். உ

கரும்புருவச் சிலையும்வரிக் கயல்விழியும் வள்ளைவார் காது முல்லை, அரும்புமிள நகையுஞ்செங் கனிவாயும் பிறைநுதலு மமுத வாக்கும், பொருந்தியமங் கல்நாணு மலர்க்குழலும் விளங் கவெழிற் புள்ளூர் மேவுந், திருந்துமணங் கமழ்சாந்துக் கழுத்து மைவா லாம்பிகைதாள் சிரமேற் கொள்வாம். ந

## வினைதீர்த்தவிநாயகர்.

ஏராரும் பிறைமருப்புஞ் சிந்துரச்சுந் தரமுகமு மிலகச் செம்பொன், வாராருங் களபமுலை மாதுதைய லுமையளித்த மைந்த னாகிக், காராரும் பொழில்புடைசூழ் புள்ளூரிற் கருணை மதஞ் சொரிந்தெந் நாளுந், தீராத கொடும்பாச வினைதீர்த்த பிள் ளைபதஞ் சிரமேற் கொள்வாம். ச

## குடவறைவிநாயகர்.

முத்திவிநா யகன்மகிழ மன்பனுக்கிவ் வுலகினிருண் முழுது நீக்குய, அத்திவிநா யகனெனவே யகத்திருளை நீக்கிவா மளித்து மன்னும், எத்திவிநா யகன்மேலாஞ் சிவஞானச் செல்வனிவ னெனவே செய்யுஞ், சித்திவிநா யகன்வேளூர்க் குடவறைவி நாயகன்றாள் சிரமேற் கொள்வாம். ரு

---

ச. வினைதீர்த்தவிநாயகர் — கீழைவீதிக்குக் கிழக்கே கோயில் கொண்டு வீற்றிருக்கின்றார். ரு. குடவறைவிநாயகர் — கீழைக்கட் டைக் கேர்புரவாயிற் குடவறையில் வீற்றிருக்கும் விநாயகர். குட வறை — குகைபோலுஞ்சிறிய அறை. நீக்குவாம் எனவும் பாடம்.

## குமரகுருபரசுவாமி.

தூங்குபெரும் புவனமெலாம் பணியுமிரு திருவடித்தாமரையு நீங்காத், தேங்குபெருங் கருணைவழிந் தொழுகுதிரு முகங்களோ ராறுந் தெய்வத், தேங்கமழுங் கடம்பணியும் பன்னிரண்டு தடம்புயமுந் திகழ மன்னுங், காங்கெயனைப் பரிதிபுரி வளர் குமர குருபரனைக் கருத்துள் வைப்பாம். ௬

## முத்துக்குமாரசுவாமி.

அளிதருசிந் தையரான வமரர்பெருஞ் சிறைமீள வகிலம் வாழப், பிளிறுமயி ராவதமும் பொன்னுலகும் விண்ணவர்கோன் பெறமே லண்ட, வெளிமுகடு மதிரவெதிர் வருசூர னுளங்கலங்க விளங்கு செங்கை, ஒளிதிகழ்வே லெடுத்தமுத்துக் குமரநா யகன் மலர்த்தா ளுளத்துள் வைப்பாம். ௭

## திருநந்திதேவர்.

பொடியணியு மேனியுமுப் புரிநூல்சூழ் மணிமார்பும் புனையூ மின்னற், கொடிதிகழுஞ் செஞ்சடையும் விழிமூன்றுங் கரநான்குங் குலவு மானும், வடிமழுவுஞ் சுடர்வாளு மணிப்பிரம்பும் விளங்கவெள்ளி வரைகாத் தையன், முடிவரிய திருவாய்மை செலுத்துநந்தி நாயகன்றாள் முடிமேற் கொள்வாம். ௮

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பூழியன்வெஞ் சுரநீங்கக் கூனிமிரச் சமணொழியப் புனித வெண்ணீ, றேழுலகுந் தொழுதேத்த வெடுத்தளித்துச் சிவசமய மிலகச் செய்தே, ஊழிகடற் கொண்டிடினு மூரினுள்வந் தணுகா தென் றுரைக்குஞ் செல்வக், காழிநகர் விளங்கவளர் கவுணியர்தங் குலமணியைக் கருத்துள் வைப்பாம். ௯

---

௬. இவர் இரண்டாம் பிரகாரத்தில் மேற்றிசையில் ஆறுதிருமுகங்களோடு எழுந்தருளியிருக்கின்றார். காங்கேயன் காங்கெயன் எனக் குறுகிற்று. ௭. இவர் முதற்பிரகாரத்தில் மேற்றிசையில் ஒருதிருமுகத்தோடு எழுந்தருளி இருக்கின்றார். மேவண்டம் எனவும் பாடம். ௯. ஊழிகடல் எதுகைநோக்கிஇயல்பாயிற்று.

## திருநாவுக்கரசுநாயனர்.

அருகரமைத் திடுநீற்றி னறைமுதலாந் தீங்கடியார்க் கனு கா தென்னும், பெருமையெடுத் துலகறியக் காட்டிமக ரஞ்சுழ லும் பெருநீர் மல்குங், கருநிறத்தெண் டிரைக்கடலிற் கன்மி தப்ப வருநாவுக் கரசின் செம்பொற், றிருவடித்தா மரைமலரைப் பவக்கடலின் கரையேறச் சிந்தை செய்வாம். ௧0

## சுந்தரமூர்த்திநாயனர்.

அரவையர் மணியல்குற் றடமிலக வளருமிள வன்னம் போலும், பரவையார் திருமனைக்கெம் பெருமான்ற னிரண்டு திருப் பாத மோவ, இரவையார் நடுயாமத் தேவலா ளாய்த்தூதுக் கேவு நல்லோப், புரவையர் தோழனெனுஞ் சுந்தரன்பொன் னடிபணிந்து போற்று வோமே. ௧௧

## மாணிக்கவாசகசுவாமிகள்.

வழுதிமனு நெறிசெலுத்து மந்திரியாய்ப் புரவிகொள்ள வந்த செம்பொன், முழுதும்வளர் திருப்பணிசெய் திலகுதிரு வா சகமு மொழிந்து பாரோர், தொழுதுசிர மேற்கொண்டு துதிப்ப நிறை கோவையார்த் துறைகள் யாவும், பழுதுபடா தெடுத்து ரைத்த வாதவூ ரன்பர்பதம் பணிதல் செய்வாம். ௧௨

## சண்டேசுரநாயனர்முதலியோர்.

மண்டுபுனல் பரந்துவரு மண்ணிநதி வெண்மணலின் மா ரூக் காதல், கொண்டிறைவன் முடிமீது குடத்துநிறை பால்சொ ரிந்து கோலா லங்கு, மிண்டுசெயுந் தாதைதா டடிந்துமே தினி யின்மிகு மேன்மை பெற்ற, சண்டியிரு தாள்வணங்கிச் சிவனடி யார் மலர்ப்பாதந் தலைமேற் கொள்வாம். ௧௩

## புள்ளிருக்குவேளூரைப் புந்திவைக்குந்திருத்தொண்டர்.

வெள்ளெருக்கின் வனப்பாங்கர் விளரியளி யினமுரல விண்ண ளாவிக், கள்ளிருக்கு மலர்ச்சோலை கவினவருத் தெண் ணரிய கற்ப காலந், தெள்ளிருக்கு முதனன்கு வேதமித மருச்ச னைசெய் திருக்கு மேலாம், புள்ளிருக்கு வேளூரை நினைக்குமன் பர் தாள்பணிந்து போற்று வாமே. ௧௪

## வாழ்த்து.

### வேறு.

வான்வளஞ் சுரந்து பெய்க மன்னவன் செங்கோல் வாழ்க
நான்மறை யவர்கள் வேள்வி நன்னெறி வழாது செய்க
நூன்முறை யுணர்ந்த கல்வி நுண்ணறி வுடையோர் சூழ்க
மேன்மையாஞ் சைவ மோங்கி விளங்குக வுலக மெல்லாம். கரு

## நூற்பயன்.

### வேறு.

திருவிளங் கியமர் நிலந்தனிற் புகழ்சேர் செழித்திடு வயித்திய நாதன், அருமையாத் தலநன் மகிமையைக்கேட்போ ரளப்பருஞ் செல்வரா குவர்மேல், வருபெரும் பகையை வெல்குவர் கல்வி மகப்பெறு குவர்பிணி யெய்தார், நிருமல ஞான சிவண் மலர்ப் பாத நிலைமைபெற் றினிதுவாழ்ந் திருப்பார். கசு

## அவையடக்கம்.

### வேறு.

எண்ணி ரண்டு கலைகளு மெய்திய
தண்ம திக்குமுன் றாரகை தாரொளிர்
வண்மை யாமவை யோர்முன் வருத்தியற்
பண்ணை மைத்தெழு மென்றமிழ்ப் பாடலே. கஎ

வளங்கொண் மால்விடை யண்ணன் மகிமைதான்
விளங்கு மாதலின் மேவுமென் சொற்குறுங்
களங்க மெண்ணிலர் கைக்கொள்வ ரென்றெண
துளங்கொ ளாசை துரப்ப வுரைசெய்வென். கஅ

கடவுள்வணக்க முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ககூ.

---

கஅ. செய்வென், என்பதில் என் விகுதி.

## பாயிரம்.

நதிபொதியுங் கயிலைவரை நாதனந்தி நாயகற்கு நவில வன்னோன், சதுர்மறையு முணர்ந்திலகு சனற்குமாற் குதவவவன் றலைமை சான்ற, மதிகொள்வியா தனுக்களிக்க வவன்சூத முனிக் கருள மகிழ்ந்து சூதன், பதவிபெற வகுத்துரைத்த பதினெட்டுப் புராணவகை பகருங் காலே. க

### வேறு.

தருபிரமம் பதுமம்விண்டு சைவம்பா கவதந் தயங்குபவி டியமகிமை தருமார்க்கண் டேயம், கருதருநா ரதமாக்கி னேயமே பிரம கைவர்த்த மிலிங்கஞ்சீர் வராகமே காந்தம், வருபெருவா மனங்கூர்ம மச்சங்கா ருடமே மன்னுபிர மாண்டமிவை வளர் பதினெண் புராணம், தெரிகிரந்தத் தொகைபகரிற் சிவகதைமூன் றிலக்கந் திகழ்நெடுமா லயன்பரிதி செங்கனற்கோ ரிலக்கம். உ

### வேறு.

குவியிளந் திங்கட் கொழுந்தணி முக்கட் குரிசில்வண் புகழ்நிறை புராணம், கவினுறு சைவம் பவிடியம் வளர்மார்க் கண் டேய மிலிங்கமே காந்தம், புவிபுகழ் வராகம் வாமன மச்சம் புக லரு மகிமைசேர் கூர்மம், செவிநுக ரமுத மாமென விளங்கித் திகழ்பிர மாண்டமீ ரைந்தே. ங

### வேறு.

கரியமால் புராணம் விண்டு காருட நார தஞ்சொல்
அரியபா கவத மோர்நான் காகும்வா ழயன்பு ராணம்
பிரமமே பதும மாகும் பிரமகை வர்த்தம் வெய்யோற்
குரியதா மாக்கி னேய மொளிர்கனற் புராண மாமே. ச

### வேறு.

எழில்பெருகு சிவகதையிற் காந்தநிறை கிரந்தமோ ரிலக்க மாகும், தழுவியசங் கிதையாறு வள்காண்ட மோரைம்ப தாகு மிப்பால், கெழுமியசங் கிதையாறும் பகர்க்கிடின்முற் சனற்கு மாரங் கிளருஞ் சூதம், விழுமியசீர்ச் சங்கரமேல் விண்டுபிர மஞ்சூரா மென்ப தாமே. ரு

எண்ணியிடு புராணமீ ரொன்பதனிற் புள்ளிருக்கு வேளூ ரென்னும், புண்ணியநற் றலமகிமை பவிடியமேற் பிரமாண்ட புராணங் காந்தம், வண்மைபெறு சைவபுரா ணத்தின்வகுத் தெடுத்துமுனி வார்கள் கேட்ப, உண்மைபெற முழுதுணர்ந்த சூதமா முனிவன்மகிழ்ந் துரைத்தல் செய்தான். ௬

திருந்துபுகழ் மிகுகடவுள் வணக்கமுடன் பாயிரஞ்சீர் செல்வ மோங்கிப், பொருந்தியிடு திருநாட்டுச் சிறப்புநவ மணிகொ ழிக்கும் பொற்பு வாய்ந்தே,. இருந்ததிரு நகர்ச்சிறப்பு நைமிசா ரணியவெழிற் சருக்க மென்றும், தருந்தகுதி மகிமைவளர் தலச் சருக்க மேற்றீர்த்தச் சருக்க மாமே. எ

கருதுமிரு டியர்முறைமை கங்கைபா வந்தீர்ந்த சருக்க மாத, வருபலன்கூ றியசருக்கந் தருப்பணஞ்செய் பலச்சருக்கம் வந்து தக்கன், அருள்பெறுமரன் மியமதன்மே லிரணியவன் மச் சருக்க மரிய தான, தருமநிறை தவம்புரியுஞ் சதானந்தச் சருக் கமினிப் புருடன் றன்னை. அ

கோலைபுரியும் பவந்தீர்ந்த சருக்கமுடன் பாரிதனைக் கொன்ற பாவம், தொலையுநெறி பகர்சருக்கஞ் சத்தியசன் மச்சருக் கஞ் சுருதி யாய்ந்த, நிலைமைமுனி வார்தீர்த்தச் சருக்கம்வரு வீர கத்தி நீங்கும் வண்மை, மலரினுறைந் திடுபிரம தீர்த்தஞ்சூ ரியதீர்த் தச் சருக்க மன்னும். ௯

தக்கனியற் றியதீர்த்தச் சருக்கம்வித்தி யாதரதீர்த் தச்ச ருக்கம், மிக்கசுத ரிசனன்சா பத்துரிசு விடுசருக்கம் வில்வ தீர்த் தம், தொக்கசுவு தமன்கபிலன் சோமனொடு பராசரன்சூழ் புகழி ராமன், அக்கிரம மகற்றுதுசீ லன்சருக்க மாதிகா வேரி யாமால். ௧௦

கந்தருவ ருறுசாபந் தவிர்சருக்க மிருதசஞ்சீ வனங்க ளிந்த, சிந்தையுள சனார்த்தனன்றன் சருக்கம்வளர் சூலதீர்த் தத்தின் மேன்மை, வந்திடுநற் சேடதீர்த் தச்சருக்க மெண்டிசையின் மகி மை வாய்ந்த, விந்திரன்சா பந்தவிர்ந்த சருக்கமேற் றுருவாசச் சருக்க மெய்தும். ௧௧

அருமைபெறு மங்கசந்தா னச்சருக்கஞ் சிவதன்மச் சருக்க மப்பால், வருதிருச்சாந் துண்டைசெயு முறைமைவகுத் திடுசருக் கம் வள்ளி நாதன், றிருவவதா ரச்சருக்கம் வரம்பெறுநற் சருக்கஞ் சேவேறு நாதன், தருமதல மகிமைகாட் டியசருக்கம் போர்புரி யுஞ் சருக்க மாமால். கஉ

தாரகா சுரன்றன்வதைச் சருக்கமச் சீரிவாக் களித்த தன் மை, யாருமெழிற் சருக்கமுயர் தேவருச் சனைசெய்யுஞ் சருக்க மன்பாற், சீருறவா லாம்பிகைவந் தருச்சனைசெய் சருக்கமேற் றிருவி ழாச்செய், பேருவகைச் சருக்கமப்பாற் குமரநா யகன்பூ சைச் சருக்கம் பின்னர். கங

அருள்பெறுமா தித்தனல் வேதமங்கா ரகன்சருக்கஞ் சந்தி ரன்சேர்த், தெருளுமெழிற் சடாயுமகி ழருச்சனைகா லவச்சருக்கஞ் சித்திர கேது, வெருளகலும் வீரசே னச்சருக்கம் புகழ்சில விருத் தன் மேன்மை, சுருளக மிலகுசுவா சினிச்சருக்கந் துச்சீலச் சருக்கந் துன்னும். கச

உண்மைபெறு முதங்கனெழிற் சருக்கமுடன் றொகையறு பத்தொன்றும் வாய்ந்த, வெண்மதியு நதியுமணி வேணிவயித் தியநாதன் புராண மேவும், வண்மைபெறு மான்மியமிவ் வான்மு றைமை வழாதுபுவி யதனின் வாழ்வோர், கண்மணியாஞ் சூதமுனி வானுரைத்த படிசுருத்தி லமையச் சொல்வேன். கரு

வல்லியந்தா மரைபயிலுங் குறிஞ்சியண்ணல் பூசைசெய்மா நகர மாகும், பல்லியந்தா மறையிருளின் கண்ணுமுறங் காததிரும் பசுந்தேன் பில்கு, மல்லியந்தா மரைப்பழனப் புள்ளூரின் மான் மியப்பா யிரமா ராய்ந்து, சொல்லியந்தா மரைச்சேரா நல்லினஞ் சேர் திருநாட்டுச் சிறப்புச் சொல்வேன். கசு

பாயிர முற்றிற்று.

ஆஉ திருவிருத்தம் ருகு.

# திருநாட்டுச்சிறப்பு.

எல்லை காணரு மிறைவனை யிமயமீன் றெடுத்த
அல்லி யங்குழ லுமையடிழ் தலந்தொறு மன்பாற்
புல்லி டும்புது மலரினாற் பூசைதான் புரிய
நல்ல மாதவஞ் செய்தது சோழநன் னாடு. க

கலைவ ளர்ந்திடு மதிக்குமோர் கறுப்புவந் திருக்கும்
உலைய நாளினு மவருளத் தொருகறுப் பின்றித்
தலைமை பெற்றநல் லொழுக்கமுந் தக்கபே ரறிவும்
நிலைமை பெற்றவர் நிறைவது சோழநீர் நாடு. உ

இன்மை பெற்றிரப் பவர்க்கெலா மிருநிதி யளித்துத்
தொன்மை பெற்றநீள் புகழையே பொருளெனத் தொகுக்குந்
தன்மை பெற்றபல் பெருங்குடி தழைக்குமென் றுரைக்கும்
நன்மை பெற்றது நாட்டினிற் சோழநன் னாடு. ௩

கற்பு மேவிய மனைவியைக் கலந்துறு காதற்
பொற்பி னின்வழா தில்லறம் புரிந்துதான் புகன்ற
சொற்றி றம்பிடா தரிந்துடற் றசைதுலை நிறைக்கப்
பெற்றமேன்மையும் படைத்தது பெருகுநீர் நாடு. ௪

வேறு.

மறுபு லப்பகை வேந்தர்கள் வந்துதாள் வணங்கிட மனுநீதி, பெறந டத்துசெங் கோன்முறை பிறழ்ந்திடாப் பெற்றியி னரசாட்சி, முறைசெ லுத்தலாற் றிங்கண்மும் மாரிமூ துலகினிற் பொழிந்தோங்கக், குறைவில் பல்வளங் கொழித்துநா டுயர்புகழ் கொண்டெழின் மிகுமாதோ. ௫

வேறு.

குவிம ணிக்கொழித் தருவிசூழ்ந் திடுமுயர் குறிஞ்சி
கவிய மாத்திரள் சார்ந்திடுங் கலுழிசேர் முல்லை
விவித மீன்குவை மேவிடுங் கழிமிகு நெய்தல்
புவிதொ ழும்புதுப் புனல்பரந் திடும்புகழ் மருதம். ௬

---

௬. விவிதம் – பலவகை.

நீடு காதல்சூழ் புணர்ச்சியி னெறிமிகுங் குறிஞ்சி
வாடி யேபிரிந் திருப்பது மல்கிடு முல்லை
யாட வர்த்தமை நினைந்திரங் கிடுமடர் நெய்த
லூடல் செய்குத னிகழ்ந்திடு மொளிர்புனன் மருதம். எ

பசுந்தி னைக்கிளி கடிகுவர் கொடிச்சியர் பதலை
யுசந்த வெண்டயி ராய்ச்சியர் கடைகுவ ரொளிர்நீ
ரிசைந்த நித்திலம் பரத்தியர் குவியல்செய் திடுவா
ரசைந்து நெற்பொலி கடைச்சிய ராற்றுவர் கொழிப்பார். அ

மேவி நல்வெறி யாடுதன் மிகுந்திடுங் குறிஞ்சி
பாவு பாளிதம் பிரப்புமல் கிடும்பனி முல்லை
யாவ லிற்சுறு முள்ளணங் கயர்வன நெய்த
றேவ வள்ளைபா டுதனிறைந் திடுஞ்செழு மருதம். கூ

கார கிற்செழுங் குங்குமந் தடிந்துமேற் கமழு
மாரம் வேரகழ்ந் தெடுத்தெறிந் தவிரொளி மணிநற்
போர்கு வித்துழு திடுந்திறற் கானவர் புதிய
வார்தி னைவிதைத் திடுவன மிகுமலைச் சாரல். கO

ஒன்று கம்பலக் கொடுமடிப் போர்வைய ரூதுங்
கொன்றை வேய்ங்குழ லாயர்தம் பாடியிற் குழைந்து
துன்று காதல்கூர் தாய்வருஞ் சுரநெறி பார்த்து
முன்றி லான்குழக் கன்றுநின் றிரங்கிடு முல்லை. கக

வெண்ம ணற்பரந் திளநிலா வெறிப்பமே வியநீள்
வண்ண வார்கட லிருள்பரந் தெனவதி தரமே
னண்ணு பைந்தளிர்த் துவர்ப்பின்ன னெடுங்கொடி நாப்பட்
கண்வ லைப்பெருங் குவியல்சூழ்ந் திடுங்கழிக் கானல். கஉ

பிள்ளை வண்டுசூழ்ந் தெழுந்துபாண் மிழற்றிடப் பெருகுங்
கள்ள விழ்ந்தசெந் தாமரைக் கிடங்கினுக் கயல்சூழ்
பள்ள வோடையின் மறிபடா தகன்றுநீள் பசிய
வள்ளை தின்றுகார் மேதிகண் ணுறங்குநீண் மருதம். கங

மிசைவி ளங்கிய குறிஞ்சியு முல்லையும் விரவிப்
பசிய மெல்லிலைக் காந்தளங் கொடிபடர்ந் திடநின்
றசையு நீணிற மலர்கொள்கா யாவின்மே லமர்ந்தே
யிசையு நல்லெழின் மயில்சிற கினைவிரித் திருக்கும். கச

கருநி றக்கட னெய்தலு மருதமுங் கலந்து
விரவு வெண்மடற் கைதையின் றுதுமேற் றிமிர்ந்தே
மருவு தாமரை மலரினல் விளரிவண் டினங்க
ளுருகு மன்பர்போற் செவ்வழி பாடியே யுறையும். கரு

புணர்கு றிஞ்சிநன் முல்லைபொற் புறுநெய்தன் மருதந்
திணைம யக்குறு நிலங்களுஞ் செறியுநா னிலத்தி
லணையு நண்பகற் பொழுதுசேர் பாலையு மடுத்தே
யிணையில் காளிகோட் டங்களுஞ் சிற்சில விருக்கும். கசா

ஆறலைத்திடும் வேடரு மலைக்குற வருமா
னேறு மேய்த்திடும் பொதுவரும் பரதரு மிளகு
சேறு செய்திடு முழவருஞ் செறியுமந் நிலத்தில்
வேறு வேறுதா மிகுதியாய் விளங்குவ ரம்மா. கஎ

மல்கும் வெண்முகி னீணிறக் கடலினை மடுத்துப்
பல்கி டும்பசும் பொன்னென மின்னிமேற் பசந்து
நல்வ ளங்கொழித் திருந்திடு சையநல் வரைமேற்
புல்கும் வெள்ளிவீ ழெனமிகப் பொழிந்தது மாதோ. கஅ

வளங்கொண் மாமணி யலைநெடுங் கரத்தினல் வாரித்
துளங்கி வீழும்வெள் ளருவிமேற் பரந்துசூழ்ந் தோடிப்
பிளந்து சாரல்சேர் குறிஞ்சியைப் பெருமலைக் குறவர்
தளர்ந்தி ரைந்திட முல்லையிற் சார்ந்தது தக்கவே. ககூ

தூங்கு மத்தடஞ் சினைமுரித் தெழுந்துகோ ழரைநற்
றுங்க வாரம்வேர் கிழிந்திடப் பிடுங்கியே சுழித்துத்
தங்கு காரகிற் குறடெறிந் தாசினி தகர்த்துப்
பொங்கி வெண்டிரை கொழித்துமேற் போந்தது மருதம். உ0

இடைசெ றிந்திடு பாலையி னீணிலத் தெய்தும்
வடவை வெந்தழ லாமெனப் பரன்மடுத் திருந்த
விடர்பு குந்துபா தலமுத லாழ்ந்துமே லெழுந்து
புடைப ரந்துசூழ்ந் தாயிடை வெம்மையும் போக்கி. உக

வேக மோடேழும் பொன்னியின் வெள்ளநீர் பரந்து
நாக ஞாழல்சூழ் கழிக்கரை மருதநன் னிலம
தாக வேயுவர் முழுவது மகற்றியாழ் கடலின்
சேகு சேர்புலா னாற்றமுங் கடியமே வியதே. உஉ

ஒழுகு தீம்புனற் பொன்னிமா நதிசுழித் தோடி
முழுதும் வெண்சுதை தீற்றிய மதகினுண் மோதிக்
கழனி மேவுகால் வாயிரு கரைதொறும் வழிந்து
செழிய வல்விசை யம்பினும் விரைந்துசென் றதுவே. உங

அங்கண் மாநிலத் தமுதெனப் பரந்திடும் பொன்னிப்
பொங்கு நீள்புதுப் புனல்செழுந் தாமரைப் பொய்கை
துங்க வார்கரைக் குளம்பல நிரம்பிடச் சூழ்ந்தே
செங்க யற்பழ னந்தொறுஞ் செறிந்திட நிறையும். உச

துள்ளி வாளைசெங் கயல்பிறழ்ந் திடச்சுழித் தோடிப்
பள்ள நீண்மடை யுடைந்திடப் பரந்திடும் பொன்னி
வெள்ள நீர்ச்சிறை செய்குவர் விரைந்தெழுந் தநேக
மள்ளர் மைம்முகிற் குழாமெனப் பரவினர் மகிழ்ந்தே. உரு

உழுவ ரெங்கணும் பரந்துநின் றுழுதிடு கருஞ்சேற்
றிழுதின் வான்முளை வித்துவ ரிந்திர தெய்வந்
தொழுது நாற்றினை யெடுத்துநீள் கோட்டகந் தோறுங்
கழனி வாழ்கெனக் களிப்பொடு கடைச்சியர் நடுவார். உசா

கள்ள நீள்விழிக் கடைச்சியர் களிமது வார்க்க
மள்ளர் தாமகிழ்ந் துண்ணுமவ் வழிமதுப் பெருகும்
புள்ள லம்புதண் பணைதொறும் புதுமது நுகர்ந்தே
துள்ளி வாளைக ளேசெங் கமலமே லுறங்கும். உஎ

உறுப தம்மறிந் துழவர்கள் காட்டவொண் புருவ
நறுநு தற்கடைச் சியர்கணீள் கழனியி னளின
மிறையுந் தந்திரு முகத்திணை பெறுதெனப் பிடுங்கி
யெறிவ ராம்பல்வா யிணைபெறா தெனமிதித் திடுவார். உஅ

தழைந்து நென்முதற் பசேலெனச் செறிந்தசெஞ் சாலி
யெழுந்து வெள்ளறி வினரெனச் சூன்முதிர்ந் திலகு
செழுங்க திர்த்தலை நிமிர்ந்துமேன் முதிர்ச்சிசெய் திறைஞ்சிக்
கொழும்ப யன்மிகு மன்பர்போற் குலவிய தன்றே. உகூ

பரவி நின்றுசெஞ் சாலியைத் தடிவர்பற் பலநல்
வரையெ னப்பல போர்கள்கட் டிடுவர்வண் பகடு
நிரைநி ரைமிகப் பூட்டிநெற் சூடடித் திடுவ
ரரசு கொள்கட னளித்துமேன் மிகுதிகொண் டம்மா. ங0

எண்ண ருப்பல தானங்க டருமங்க ளியற்றி
வண்மை சேர்மலை யெனமிகக் குவிந்தநெல் வாரி
நண்ணு பண்டியி லேற்றுவர் நன்னெறி யொழுக்க
முண்மை யோங்குநீ ரேர்தொறு மூர்தொறு முவந்தே. ஙக

வேறு.

அம்பியனல் விழிமாத ரணிகலவை கமழ்பொன்னித் துறைவனை, செம்பியன்செங் கோன்முறைமை செலுத்துதிரு நாட்டிலகு சிறப்புச் சொன்னேன், பம்பியன்மா வலிமெலிய வெயிலுமிழ்பன் மணிமாடம் பலசூழ்ந் தென்று, நம்பியநல் லெழில்கொழிக்கு நலங்கொடிரு நகர்ச்சிறப்பு நவில்வன் மாதோ. ஙஉ

திருநாட்டுச்சிறப்புமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் கூஎ.

---

ஙஉ. நம்பிய என்பது செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம். நம்பு—விருப்பம். "நம்பு மேவு நசையாகும்மே" என்றார் தொல்காப்பியனாரும்.

## திருநகரச்சிறப்பு.

இன்ன வண்புகழ் நாட்டினி லிலகிய மகிமை
மன்னு புண்ணிய வளநகர் வயித்திய நாதந்
தன்னை நேரரு மாடமா ளிகைபல தழைத்துப்
பொன்னி லங்குவா னுலகினும் பொற்புறு மன்றே. க

நயங்கு சந்திர காந்தநன் மேடைபொற் றசும்பு
நயங்க னிந்தெழில் கொழிக்கும்வே திகைநவ மணிகள்
வயங்கு சித்திரத் தூணெடு மண்டப மன்னி
இயங்கு நீணிலைச் சாளர மெங்கணு மிலகும். உ

அன்ன சத்திர நான்மறை வேதிய ரகரம்
பன்ன ருஞ்சிவா கமம்பயின் றிடுமடம் பலவே
றுன்னு நால்வகை யாச்சிர மம்பயி லுறையுள்
மன்னு வீதியி னிருபுற நெருங்கியே மல்கும். ங

மந்தி ரத்துறை வழாதுவே தியர்மனை தோறுஞ்
சிந்தை கூர்தரும் வேள்விசெய் செழும்புகை கமழும்
பிந்து மூவர்தம் மனைதொறும் பிறங்குநற் சடங்கு
தந்த மக்கியல் பாம்விதி முறைதழைந் திடுமே. ச

பொன்னும் வெள்ளியு நவமணிக் குவியலும் பொருந்து
மந்ந லாரணி கலன்களும் வெயில்கொழித் தம்மா
துன்னு தூங்கிருள் கிழித்திடுஞ் சுதைசெய்நன் மாடம்
மன்னு நீடெழின் மனைதொறு மனைதொறு மாதோ. ரு

வேறு.

திரைதவழ் தலினற் கொடிப்பவ ளங்கள் செழித்தினி திருத்த லால்வெண்முத், திரையும்வெண் சங்க மிகுந்திடு மதனு லிலக்குமி வாசநண் ணுதலா, லுரைசெய்தெண் ணரிய கலன்பரப் பிடுஞ்சீ ரொளிர்தலா லோங்குமாக் கடல்போல், விரைகமழ் நெடிய வாவண வீதி விளங்கியே தழைந்திடு மாதோ. சு

வேறு.

அளகை மாநகர் வளமெலா மாவண வீதி
உளதெ ருத்தனி லொன்றினுக் கிணைபெற் றொளிசேர்
நளின மங்கையு நற்கலை மடந்தையு நகர்வாழ்
இளகு மன்பினர் மனைதொறு மினிதுவீற் றிருப்பார். எ

மகர தோரணம் வான்முக டுரிஞ்சியே மல்கு
நிகரில் வீதியி னெகிழ்செழுஞ் சந்தனக் கலவைப்
பகரு ரும்பனி நீர்பரந் தெழுந்துகள் படியத்
தகர வார்குழற் றையலார் தாந்தெளித் திடுவார். அ

கற்பி னின்வழாக் கணங்குழை மாதர்கள் கவின்சூழ்
சிற்ப நூன்முறை மணிகளைப் பரப்பிவே திகைமேல்
நற்ப சும்பொனும் வெள்ளியு நகுசுட ரெறிக்கும்
பொற்ப மைந்திடு பூரண கும்பம்வைத் திடுவார். கூ

புனையும் பொன்மதி லெடுத்தபுள் ளிருக்குவே ளூரில்
மனையி டந்தொறு மங்கல மணவணி மன்னும்
சினவி டைப்பிரான் சிவகண மாவரந் நகரில்
அனைவ ரும்முதித் திடுங்கிரு மியுஞ்சிவ கணமாம். கo

செருந்தி சண்பகம் பாடலங் கூவிளந் தேமாக்
குருந்து தாதகி வகுளமந் தாரநற் கோங்கம்
திருந்து மஞ்சரி திகழ்தரு தாடிமம் வெள்ளி
அரும்பு பொன்மலர்ப் புன்னைநந் தனவன மனேகம். கக

முட்பு றக்கனி வருக்கையின் முதிர்சுளை கனிந்து
விட்பு லத்தினின் றொழுகுசெந் தேனுமென் முகைகள்
பெட்ப வொண்முறுக் கவிழ்ந்திடப் பெருகுசெந் தேனும்
கட்பு லன்மகிழ் தரமலர்ச் சோலையிற் கவினும். கஉ

---

கூ. கணங்குழை — பல இரத்தினக்கூட்டத்தையுடைய குண்டலம்; இக்கருத்துப்பற்றியே, "பலவாகத்திரண்ட குண்டலம்" என்பர் உரையாசிரியர்கள். கனங்குழை என்பது பாடமாயின் கனத்த குண்டலம் என்க.

குறைவி லங்கிய கந்தரக் கடவுள்வாழ் வேளூர்
நிறைவ ளஞ்சொல செட்டிதழ்த் தாமரை மலர்மேல்
உறையு நான்முக னொளிருமா மணிமுடி யனந்தன்
அறையி னெண்ணரும் பிறப்பினை வேண்டுவ ரம்மா. கரு

இன்ன தொன்னகர் வளமுழு வதுமினி தெடுத்தே
உன்னி யோதுதற் கரியதா லுலகெலாந் துதிக்கும்
அன்ன மான்மிய மறிந்தவா றுரைத்தன னளந்து
பன்ன ருந்தவர் நைமிசா ரணியமேற் பகர்வேன். கசு

திருநகரச்சிறப்புமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் அக.

---

## க. நைமிசாரணியச்சருக்கம்.

திருக்கிள ரிதழ்முறுக் கவிழ்ந்து தேன்றுளித்
துருக்கிய பசும்பொனி னொளித ழைந்திடும்
மருக்கமழ் தாமரை மலரின் மேலினி
திருக்குநான் முகனெழிற் காஞ்சி யெய்தினன். க

எய்திய விரணிய கருப்ப னேர்மிகும்
செய்திகழ் கருங்குழ னிமலி பாகனைப்
பெய்திடு மதுமலர்ப் பெரித ருச்சனை
செய்திருந் தனனுளந் தெளிவு கூரவே. உ

வேறு.

பணிமலர்ப் பொழில்சூழ் காஞ்சிப் பதியில்வெண் பதும மேவுங்
கனியிதழ் முத்த மூரற் கலைமக ளுடனி ருந்து
புனிதனைப் பூசை செய்யும் போதனை வேத வாய்மை
முனிவர்கள் மகிழ்ச்சி கூர முன்னர்நல் வினையாற் கண்டார். ௩

---

ங. முன்னர்நல்வினை — முற்பிறப்பிற்செய்த சற்கருமம்.

வேறு.

சூலகிரி யெனக்குண முயர்ந்து குற்றநீத்
திலகிய வில்லறம் புரிந்தி ருந்துதொல்
உலகிய லாய்ந்துநல் லொழுக்க முற்றிய
அலகின்மா தவரய் னடிவ ணங்கினர். ச

வேறு.

முகங்குளி ரினிமை கூறி முகிழ்த்தகைத் தலத்த ராய்நின்
றகங்குழைந் தைய கேணின் னடியமில் வாழ்க்கை யாற்றி
இகந்தனி னகர மெங்கு மிருந்தனந் தவமி யற்றி
மகம்புரிந் தினியா முய்யும் வனமதொன் றருள்செய் யென்றார். ரு

விருப்பமும் பரவு வாய்மை விளக்கமு முருகிக் கண்டு
மருப்பயில் கமலத் தண்ணல் வளர்ந்துகூர் நுனிய தான
தருப்பையொன் றெடுத்த னேக தவஞ்செய்நல் வழிதான் காட்டும்
உருப்பொலி நேமி யாக்கி யொய்யென வுருட்டி விட்டான். சு

வென்றிசேர் மறைக ணான்கும் விரித்துரை செய்யும் வேதாத்
துன்றிய முனிவர் தம்மைச் சுபந்தரு மமுத வாக்கால்
இன்றிது விரைவி னெய்தி யிருநிலங் கிழிய வோடி
நின்றிடு வனத்தி னீவிர் நிலைபெற விருத்தி ரென்றான். எ

குணதிசை தனிலெ ழுந்து குடதிசைச் சாருஞ் வெய்யோன்
வணமலி விம்பம் போன்று வளர்ந்தெழில் கொழிக்கு நேமி
கணமதி லனேகங் காதங் கடுகியோ டியது கண்டே [றார்.
உணர்வுகூர் விடைகொண் டன்னோ ருளமகிழ்ந் ததன்பின் சென்

சாருமா தவர்பின் செல்லத் தண்மதி தபன ளுதி
யாருமு வுலகி லுள்ள வனைவரும் வலஞ்செய் தோங்கு
மேருமால் வரையின் றென்பான் மிக்கநல் வளங்கள் வாய்ந்து
சேருமா ரணியந் தன்னிற் செழிப்புற நின்ற தன்றே. அ

க செய்து - செயவென்னுமெச்சத் திரிபு.

நிலங்கொள்சீர் நேமி யோடி நின்றகா ரணத்தால் வாய்மை
இலங்குமா தவர்முன் னுள்ள விடுகுறிப் பெயரை மாற்றி
நலங்கிளர் வனத்தி னுமை நைமிசா ரணிய மென்றே
வலங்கொள்கா ரணப்பேர் கூறி மகிழ்ச்சிபூத் திருந்தார் மாதோ. க0

வேறு.

வள்ளி தழ்ச்செழும் புன்னையின் செருந்தியின் மலரும்
எள்ளி டற்கிட மின்றிவீழ்ந் திருந்திடுங் காட்சி
அள்ளி யப்பொழின் மாதருந் தவர்வரு மகிழ்வால்
வெள்ளி நற்பசும் பொன்மல ரிறைத்தென விளங்கும். கக

பூனை த ருக்களின் கோடுவண் புவிமிசை வளைந்து
துனைவின் மேலெழுந் தெழுந்துதாழ்ந் திடும்பொழிற் றோற்றம்
நனைம லர்வன மாதுநண் பொடுதனித் தனியே
அனைய மாதவ ரடிபணிந் தெழுவது போலும். கஉ

திருந்த ளிக்குரன் முரல்வனத் தினிற்செழுஞ் சுனைகள்
பொருந்த வெண்ணிறம் பொற்புறப் புணர்ந்திருந் திடனற்
பெருந்த வத்தினர் வழிநடைப் பேரிளைப் பாற்றி
அருந்த வைத்திடு மின்சுவை யமுதென லாமால். கங

வழங்கு மாதவர் தமையுயர் வருக்கைமா வாழைப்
பழங்கு ளிர்ந்தசெந் தேன்படர் பசுங்கொடி வள்ளிக்
கிழங்கு காயுள தருந்துமி னெனக்கிளர்ந் தெழுந்து
முழங்கு பாட்டளி முரல்வகூப் பிடுமுறை யாமால். கச

புள்ளெ ழச்சிற கடித்துதிர் பூங்கனி யுடைந்த
கள்ளெ திர்த்துநீள் கால்கரைத் தோடுமக் கானில்
முள்ளெ யிற்றரா முடிகொள்சூட் டணிமயின் முறைகொண்
டுள்ளெ ழுச்சியோ டுறவுசெய் மகிழ்ச்சியுண் டாமால். கரு

தேனி னம்முரன் றுடுமவ் வனந்தனிற் சிறுகன்
றூனி னம்புலி சேர்ந்தொரு சுனையினீ ரருந்தும்
வானி டிக்குரன் மதகரி வாலுளை மடங்கல்
தானி னைந்துவந் தோரிடந் தன்னினின் றிடுமே. கசு

அசும்பி கழ்ந்துசூழ் பொழிலினிற் கோங்கரும் பவிழ்தேன்
தசும்பி னின்வழி மதுவெனப் பெருகிடுந் தழைந்த
பசும்பி டிக்கயல் வளர்ந்திடு பாளைவாய்க் கமுகு
விசும்பி னைக்கடி தளவிட வெழுந்தென விளங்கும். கஎ

குளவி கண்மது மலரையீன் றிடுங்கொடு வரிப்பேர்
வளர்த ருப்புலிக் குருளையை மகிழ்ந்துபூத் தளிக்கும்
இளகி ணர்க்குர வெழின்மிகு பாவையை யீனும்
அளவில் பொறபினுக் ககமதா நைமிசா ரணியம். கஅ

வளமை நல்குநல் வரநல்கு நரைதிரை வாரா
திளமை நல்குமெண் சித்தியு நல்குமெண் ணரிதாய்
உளபி றப்பினை யொழித்திட வுபாயமு நல்கும்
அளவி லற்புதம் படைத்தது நைமிசா ரணியம். கசு

---

கஎ. பசும்பிடி - பச்சிலைமரம். கஅ. குளவி – காட்டுமல்லிகை. கொடுவரிப்பேர்த்தரு – வேங்கைமரம். புலிக்குருளை – புலிக்குட்டி போன்ற பூ; இது ஆகுபெயர். வேங்கைப்பூ, புலிக்குட்டிபோறலை "நறமனை வேங்கையின் பூப்பயில் பாறையை நாக நண்ணி – மற மனை வேங்கை யெனநனி யஞ்சு மஞ்சார் சிலம்பா" என்னும் திருக்கோவையானும், "கருங்கால் வேங்கை வீயுறு துறுகல் – இரும்புலிக் குருளையிற் றோன்றுங் காட்டிடை" என்னுங் குறுந் தொகையாலும் அறிக. இளகுதல் – தழைத்தல். குரவம்பூ, பெண்குழந்தைவடிவம் போறலின் அதனைப் பாவை என்றார்.

அது, "செறிந்த பொன்னிதழ்ப் பைந்தார்க் கொன்றையஞ் செல்வர்க்குக் குரவம் – அறிந்து பாவையைக் கொடுப்ப" என்பதனாலும் இனிதுவிளங்கும்.

குளவி மதுமலரை யீனும், வேங்கைமரம் குருளையைப் பூத்தளிக்கும், குரவமரம் பாவையை யீனும், என வேறு பொருள்களுந் தோன்ற நிற்றல் காண்க.

அனந்த லைவிடத் தருந்தவம் புரிமுனி வரரவ்
வனந்த லைத்தலை யளிமுரன் றிடப்பனி மலர்சேர்
நனந்த லையொருங் கெய்தினர் நயப்புறு தோற்றம்
சினந்த லையொழித் தனந்தமென் றுதித்தெனத் திகழும். ௨௦

வேறு.

போது கொண்ட பொழில்வளம் யாவையு
மூது ணர்ந்த முனிவரர் நோக்கியே
ஈது நன்மகஞ் செய்தற் கிடமென
ஓது நன்மொழி யோசை பரந்ததால். ௨௧

எண்ணி லாமகிழ் வெய்திய மாதவர்
விண்ணில் வாழும் விசுவகன் மாவினைத்
தண்ணி தாமனந் தன்னி னினைந்தனர்
கண்ணி மைப்பொழு திற்கடி துற்றனன். ௨௨

முனிவர் கண்டு முறுவலித் திவ்வனம்
தனிம கஞ்செய் திடத்தகு சாலைநீ
இனிது செய்யென வேவின ரன்னவன்
கனிவு கொண்டு கருத்தி னினைந்தனன். ௨௩

வேறு.

உலப்பை வந்தடை யாமுன முயர்தவம் புரிய
நலப்பை வாளராத் தாங்குமம் புவிதனி னாடித்
தலப்பை யின்னதென் றறிவரு மகிமைமா தவர்க்குக்
கலப்பை சூழ்ந்தொளிர் சுபதலங் களிப்புறக் கண்டான். ௨௪

எண்ணு றும்பதி னாயிர யோசனை யிலகி
நண்ணு நீளநா லாயிரம் யோசனை நலஞ்சேர்
திண்ணி தாயுயர் செழுமதி னாற்றிசை சூழ
வண்மை யானகை வளம்விளங் கிடவகுத் தமைத்தான். ௨௫

௨௦. நனந்தலை - நடுவிடம். ௪. உலப்பு - மரணம்; ஐ அசை நிலை. தலைப்பு எதுகைநோக்கித் தலப்பு என்றாயது; தலைப்பு - தொடக்கம். கலப்பை உபகரணம்.

ஏயு மூவிரண் டாயிரம் யோசனை யெழுச்சி
யாயுங் கோபுரத் தமைந்தணி பெறுமுரு விளங்க
வாயி லொன்கினு நின்றிடு மரகதக் கதவிற்
பாயும் வச்சிரத் தாளலர்ந் பகாரி தாமால். உசு

பகடு பூண்டிழா தொளிர்மணித் தூண்பல நிறுத்தித்
தகடு றும்பசும் பொன்னொளி தளும்புமண் டப்மு
முகடு வேய்ந்திடும் விமானமு முழுநிலாத் தவழ்ந்து
துகடு லக்கிவீழ்த் திலகுமே டையுமகத் துளதால். உஎ

வேறு.

சிற்ப நூல்விதி யிற்சிறி தாயினும்
முற்ப கர்ந்த முறைபிற ழாமனற்
பொற்பு யர்ந்து புனையுஞ் சினகரம்
பற்ப லப்பண் பமைந்து பரந்ததால். உஅ

குண்ட மேகலை தண்டில மன்றியே
அண்டர் வந்தவி யுண்ணு மிடமரும்
பண்டம் வைக்கும் பயிலிடம் பற்பல
கண்ட மைத்தகண் காட்சி மலியுமால். உகூ

விருக்க வுத்தமங் கண்டு விதித்திடும்
சுருக்குந் தாயி சுருவமுஞ் செந்தழல்
அருக்க னன்றிக் கடையு மரணியும்
இருக்குந் தூய்மை யிடமு மமைத்தனன். ௩0

கோப மாளக் குணமிகு மந்தணர்
தாப வான்கனல் வேள்விசெய் சாலையில்
ஊப தாரு வுயர்நல் விடத்துடன்
ஆப சுப்பந்த னத்தல மாக்கினன். ௩௧

---

உகூ. மேகலை – ஓமகுண்டவேதிகை, தண்டிலம்–ஓமாக்கினி தாபிக்கும்பொருட்டு சதுரமான மணல்பரப்பிய இடம். ௩0. உத்தமவிருக்கம் – சுருக்குஞ்சுருவமும் செய்தற்கு உத்தமவிருட்சமாகிய அத்திமரம். ௩௧. கோபமாழ என்னும் பாடத்திற்குக் கோபந்தணிய எனப்பொருள் கொள்க.

மணங்க மழ்ந்த மலர்புனை மாலையும்
குணங்கொ ளும்பனி நீர்குளிர் சாந்தமும்
இணங்கு பைங்கருப் பூரமு மெய்திடங்
கணங்கண் கண்டு களிப்ப வமைந்ததால். ௩உ

அன்ன சாலையு மந்தணர் சூழ்ந்திடும்
பன்ன சாலையும் பாகிலைச் சாலையுஞ்
சொன்ன சால்யுந் தூய்மணிச் சாலையும்
இன்ன சாலையென் றெண்ணரி தாகுமே. ௩௩

வேறு.

வழிமதுத் துளிக்குந் தூய மடலவிழ் மலர்மி டைந்த
பொழிலகத் தமைந்த சாலை பொற்புற முதிரை யேனல்
எழின்மிகும் யவைநீர் வார மெட்கனிக் குவியன் மற்றும்
மொழிவது முழுதும் வைக்கு முறைதெரிந் தமைத்தான் மாதோ

மருப்பயில் பதும மேவு மறையவன் வகுத்த வேத
விருப்புறு பல்வக ணல்கும் வேள்விசெய் சாலைச் சூழற்
றருப்பையும் பொரியுந் தேமாந் தழையொடு சமித்து நெய்யும்
இருப்பதற் கியனூல் சொல்லு மிடம்பிற ழாத மைத்தான். ௩௫

உந்தியங் கமலப் போதி னுதித்தநான் முகன்பூ மேவுஞ்
செந்திரு மார்பன் மேலாஞ் செம்பொன்வா னுலக ளிக்கும்
இந்திரன் முதலா யுள்ள விமையவர் யாக சாலை
வந்தினி திருக்கும் பீடம் வைப்பதும் வகுத்தல் செய்தான். ௩௬

இனையன பலவுஞ் சூழ வியல்புளி வழாது மேன்மை
தனையறி வரிய யாக சாலைநன் கமைத்துத் தாழா
தனையமா தவர்ம லர்ப்பொன் னடியிணை யிறைஞ்சி ஞன்கற்
பனையதோ படைப்பெ ழுச்சிப் பான்மையோ வெனம கிழ்ந்தார்.

---

௩உ. எய்து இடம் கணம் கண் கண்டு எனப் பிரிக்க. கணங்கள் என்றும் பாடம். ௩௫. இயனூல் — இயைந்தவிதிகூறுநூல், இலக்கணங் கூறுநூல். என்றது சிவாகமம் சிற்ப மிவற்றை.

விண்டுதே னொழுக வோங்கி விண்முக டளந்து லாவும்
வண்டுளர் மலர்ப்பூங் கானின் வளங்கெழும் யாக சாலை
கண்டுள மகிழ்ந்த தூய கடவுண்மா தவர்கள் சூழ்ந்து
பண்டுசெய் விரதம் வந்து பலித்தெனுஞ் சாலை சார்ந்தார். ௩அ

சகத்திருண் மயக்கந் தீர்ந்த சவுனகன் சனகன் சுற்கன்
அகத்தியன் வியாக்ர பாத னத்திரி விசுவா மித்திரன்
உகத்தினை யனேகங் கண்ட வுரோமமா முனிவன் குச்சன்
சுகத்திரு முனிதூர் வாசன் துணிபரத் துவாச னென்போன்.

காசிபன் வசிட்டன் சாந்தன் கார்த்தியா யனன்ம ரீசி
யாசிகர்த் தாபு லத்திய னணிமாண் டவியன் ருற்பியன்
நாசிகே தாத்தி ரேய னாதன் பருவ தாக்னி
தேசில கியத தீசி சிலாதரன் வாம தேவன். ௪௦

கிருதிவி கிதன்ம தங்கன் கிளர்சுனச் சேபன் மேன்மை
தருசனந் தனன்சி றந்த சனற்குமா ரன்பு லத்தியன்
பிருகிரை வதன்பி றங்கு மாதேசன் பிணுகி சீர்த்தி
வருமிரு கண்டாங் கீரன் வைச்சிர வணன்சம் வர்த்தன். ௪௧

பகைத்தெழு புலத்தை வென்ற பார்க்கவ முனிவன் பாரின்
மிகப்பெரு மயக்க முற்றும் வெறுத்திடுங் கபிலன் வேத
வகைத்திற னங்கம் யாவும் வகுத்தறி நாத சன்மா
திகைப்பணு காது வாய்மை திகழ்சம தக்னி மேலோன். ௪௨

புராதன மறைக்கு மெட்டாப் புனிதன்பொற் புறும ணிச்சூட்
டராவணி ப்ரம்ம லர்த்தா ளகத்தனு தினமு நீங்காப்
பராசரன் றகுமார்க் கண்டப் பண்ணவன் கண்ணு வன்சீர்த்
தராதலந் தனின்மே லாமுத் தாலக முனிவன் சாத்தியன். ௪௩

கேழ்கிளர் குசிக கோத்திரன் கெழுமுபல் கலைநற் கேள்வி
சூழ்சுனப் புச்சன் ஞான சூரிய னெனத்து தித்தே
ஏழ்புவி யிறைஞ்சும் வேதா ரணியன்மற் றேனை யோரும்
வாழ்பெருந் தவப்பே றென மகம்புரி வதற்கெ ழுந்தார். ௪௪

௩அ. பலித்தது என்பது பலித்து எனக் குறைந்து நின்றது.
௩௯. குணிபரத்துவாசன் என்றும் பாடம்.

## வேறு.

ஆய்ந்த நான்மறை யந்தண ரரியநல் வேள்விக்
கேய்ந்த யாவையு முபகர ணமுமினி தமைத்தே
வாய்ந்த நெய்சொரிந் தாகுதி விதிமுறை வழாது
காய்ந்த னற்சொலித் தெழுந்திடக் கனிந்துசெய் தனரால். சரு

போதி ஞான்முகன் பூவைமே னியன்மதிப் புனிதன்
ஆதி யாகிய கடவுளர்க் கருமறை பகர்ந்த
நீதி யாய்ந்தவி யருத்தினர் நெறிபிற ழாதே
ஓதி வாய்ந்துநல் லொழுக்கமுற் றியவுயர் தவத்தோர். சசு

நிரம்பி நற்குண நெறிவழி யொழுகிநன் னிலைமை
வரம்பி கந்திடா மாதவர் மகம்புரி சூழல்
நரம்பி சைந்திடும் யாழொலி நான்மறை யொலியேழ்
சரம்பி றங்கிசைப் பாடலி னொலிதொனித் திடுமே. சஎ

மேக மண்டலம் பொழிந்துமே லெழுந்துமே வரிய
மாக மீதுலா வியசெழு மலர்திகழ் வனஞ்சூழ்
யாக சாலையி லிரவுநன் பகலுமெண் ணரிய
காக ளம்மணிச் சின்னநல் லிசைகலித் திடுமே. சஅ

கொழுந்து விட்டனல் சொலித்தது விண்மிசைக் குமுறி
எழுந்து துந்துபி முழங்கின விடிக்குரன் முழவம்
அழுந்து மோசைவிட் டார்த்தன வதிர்ந்தன வெங்கும்
பொழிந்து பூமழை நிறைந்திடும் யாகபூ மியினில். சகூ

பாகு தித்திடு மின்னிசைப் பாட்டளி முரலுங்
காகு ளிர்ச்சிகொ டளிர்மலர் கமலமே லெழுந்த
ஆகு திப்புகை நறுமண மகலிரு விசும்பின்
ஏகு மைப்புயல் சொரிமழை யினுங்கமழ்ந் திடுமே. ருo

கோடிசி றந்திடுங் கிழங்குகாய் கனிகுளிர் தருநீர்
வடிசி றந்தநெய் தோய்ந்தசிற் றுண்டிவாய்ந் திடுபால்
அடிசி லின்சுவைக் கருணைவெண் சாலிநல் லன்னம்
முடிசி ருங்கநீள் கடவுளான் முறைதெரிந் தளிக்கும். ருக

ருக. முடி சிருங்கம்நீள் கடவுள் ஆன் — தலையிற் கொம்பு நீண்ட காமதேனு.

பொய்வ திந்திடு புறச்சம யந்தனை யொழித்துச்
சைவ சாத்திரந் தத்துவ நெறிபகுத் துணர்ந்த
தெய்வ நீறணி யந்தணர் தேன்மழை கமழ்ந்து
பெய்வ னந்தனிற் பிறவும்வேண் டுவபல வுளவால். ருஉ

ஒருப லத்தையும் விரும்பிடா வும்பர்கோ னருளால்
வருப லப்பய னிதுவென மகம்புரி முனிவர்
இருப திற்றினு ருயிருஞ் சீடர்பாங் கிருப்பத்
தருப ணைத்தெழு வனந்தனிற் றகும்படி செய்தார். ருங

அனைய வற்புத யாகமீ ராறெனும் வருடந்
தனில ருந்தவர் நிறைவுறச் செய்துதண் டளிர்மெல்
நனையு ரும்பிடு கற்பக நாட்டுறை வேந்தன்
எனைய தேவரு மவிநுகர்ந் திடவினி தளித்தார். ருச

நலன்செ ழித்திடு நைமிசா ரணியமென் றுரைக்கும்
நிலன்செய் புண்ணியப் பேறென நெடிதுபற் பலநாள்
வலன்சு ழன்றெழு பாவகற் கெழின்மறை மனுவாற்
புலன்செ யித்தவர் பூரணா குதிபுரிந் தனரால். ருரு

எழுது தற்கரி தாமறை யியம்பிடும் விதிகள்
முழுது ணர்ந்தவர் முறைசெய்து வேள்விமுற் றியபின்
பழுது றுதுநீ ராடியுவ் வேள்விசூழ் பரப்பிற்
றொழுது சந்தியிற் கடன்கழித் தினிதுசூழ்ந் தனரால். ருசு

திவவி னின்றிடு நரம்பிசை யெனத்திகழ்ந் தொளிரும்
அவண யந்தெழு நாதமஞ் சுழுமுனை யடுத்து
மவுன யோகநன் மாதவம் புரிதரு மகிமைச்
சவுன காதிமா முனிவரர் மகிழ்ச்சிசாற் றிரிதால். ருஎ

பன்னு நூன்முறை பகர்ந்திடு பலதவ மியற்றி
மன்னும் வேதியர் மரபினுக் கோதிய யாகம்
உன்னும் வாய்மையா யுஞற்றின மொளிர்மதி யணிந்த
மின்னும் வேணியன் வீடுறை வழிவிளை வறியேம். ருஅ

---

ருரு, நலஞ், நிலஞ், வலஞ், புலஞ் என்றும் பாடம்.

ஏது வாமிவை செய்தயா மினியது கிடைக்க
ஓது முண்மையா முபாயமு முணர்கில மெனவே
கோது நீங்கிய குணத்தினர் குறித்திருந் தனரப்
போது சூதமா முனிவரன் போந்தனன் மாதோ. ௩௯

வேறு.

பண்டிசைவு கொண்டபுரி நூலொளி பரம்பப்
புண்டர மிருந்தநுதல் பொற்புற வனேகங்
கண்டிகை புனைந்துசடை கட்டவிழ விண்ணின்
றெண்டிசை விளங்குகதி ரோனென வெழுந்தே. ௪௦

வண்டொடு மிடைந்துமலர் விண்டுமணம் வீசும்
விண்டொடு வனந்தனில் விரைந்துகர மீது
தண்டொடு கமண்டலம் விளங்குமுனி சாரக்
கண்டொடு முகிழ்ச்சிகரை கண்டிலர்க ளம்மா. ௪௧

வேறு.

புனித மாதவர் சூதமா முனிவரன் போத
இனித லர்ந்தசெந் தாமரைக் கரங்குவித் தெழுந்தே
கனித ரும்பல முகமனன் றுரைத்தகங் கரைந்து
பனித யங்குசெம் பொன்னொளிப் பதுமபீ டிகைமேல். ௪௨

வைத்த ருக்கியங் கொடுத்துநின் வரவுநன் மலரோன்
உய்த்த னுக்கிர கம்புரி யொளிமிகு வனத்தின்
மெய்த்த ருந்தவம் வேள்விசெய் பேறென வியந்து
பொய்த்த விவ்வுடல் புனிதமா கியதெனப் புகன்றார். ௪௩

தூய்ய மாதவர் சூதமா முனிவனைத் தொழுதே
ஐய கேள்பதி னெண்புரா ணமுமரு மறையும்
வைய மீதுள கலைகளும் வகுத்துணர்ந் தனையாம்
உய்ய நின்றிரு வருளலாற் பிறிதுவே றுளதோ. ௪௪

---

௪௨. முகமனின் றுரைத்து என்றும் பாடம். பதுமபீடிகை — தாமரைப்பூ வரையப்பட்ட பீடம். ௪௩. விவ்வுடற் புனித என்றும் பாடம்.

என்றெ டுத்தெடுத் துரைத்திரு கண்கணீ ரிறைப்ப
நின்றெ மக்கும்ற் றேனைய வுயிர்க்குநீங் கரிதாய்
அன்றெ னைத்தையு மறைக்குமும் மலவிருள் ளகலத்
துன்றெ யின்னகைத் தவனருள் வீடுசேர் சூழ்ச்சி. சுகு

யாது செய்திடிற் பெறுகுவ மெனவுரைத் திரைய
ஓது மாதவர் வாய்மைகண் டுருகியோர் முகுர்த்தம்
மூது ணர்ந்தவ னனந்தக் கடலின்மூழ் கினன்பின்
சாது நீவிர்கேட் பனசொலத் தகுமென வியந்தான். சுசு

உலகு போற்றிடு நைமிசா ரணியமென் றுரைக்கும்
இலகு முத்தம சருக்கமீண் டுரைத்தன னிப்பால்
அலகு கண்டெடுத் துரைப்பரு மனேகமா மகிமைப்
பலன்வி ளங்கிடுந் தலச்சருக் கம்பக ருவனே. சுஎ

நைமிசாரணியச்சருக்கமுற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் கசஅ.

---

## உ, தலமகிமைச்சருக்கம்.

கஞ்சநாண் மலர்மே லுறையயன் முதலோர் கற்பகா லம்பல தேடி, நெஞ்சினேத் தின்னங் காணரும் பொருளை விழைந்தனிர் திகழ்த்துவ னென்றே, எஞ்சலில் வளஞ்சூழ் நைமிசா ரணியத் தினிலுறை யருந்தவ ரிலகும், அஞ்செவிக் கமுத மாமெனச் சூத முனிவர னன்புகூர்ந் துரைத்தான். க

வேறு.

விடைப்ப ரம்பொருள் மெய்யருள் விளங்கிவெவ் வினையைத்
துடைப்ப மும்மல வலிதொலைந் தவர்தொகு மிடமாம்
கிடைப்ப தற்கரு முத்தியைப் பெறும்வழி கேள்வி
நடைப்ப யின்றநன் முனிவிர்கா ணயம்பெறக் கேண்மின். உ

---

சுசு. முகுர்த்தம் — முகூர்த்தம்; அது இரண்டரை நாழிகை. இனைய — ஓதுமாதவர் என்றும் பாடம்,

உவமை சொல்லரு மியோகநன் கியற்றினு முண்மைத்
தவமு திர்ச்சிகொள் சாந்திரா யணமுதல் விரதம்
பவமொ ழிந்திடப் புரியினும் பலித்திடும் பரம
சிவன ருந்தல வாசஞ்செய் யினுமுத்தி சேர்வர். ரு

என்று சூதமா முனிவர னுரைத்தன னிலங்கு
துன்று ரோமநற் புளகித முற்றிடத் துதித்தே
நன்று கூறினை யையநீ நால்வகைத் தோற்றஞ்
சென்று தித்திடுஞ் சராசர மியோகுசெய் திடுமோ. கா

உண்மை சூழ்தவம் விரதநன் றுளுற்றுவ தெளிதோ
எண்மை காணரு முயிர்த்தொகு திகட்கெலா மியலும்
வுண்மை யேதல வாசமற் றதன்பெரு மகிமை
அண்மை செய்மையிவ் வனைத்துநீ யருள்செயென் றுரைத்தார். ரு

வேறு.

எடுத்த ருந்தவ ரருள்செயென் றுரைத்தலு மிணையிரு விழியென்னும், மடுத்த தும்பிவீ ழானந்தப் பெருக்கொடு மயிர்ப்புளகிதஞ்செய்யத், தொடுத்த கங்குழைந் துருகிடப் பற்பல தொகுத்துரைத் தனனம்மா, கடுத்த தும்பிய கண்டன்மெய் யருள்பெறு கருணைமா தவர்கேட்பு. சு

வேறு.

அன்ன தன்றியொன் றுரைத்தன ரையகேண் மகிமை
இன்ன தென்றறி வதற்கரும் வியாசன்ற னிடத்திற்
பன்ன ருஞ்பதி னெண்புரா ணமும்பகுத் தறிந்து
முன்னர் மற்றுள கலைகள்யா வதுமுழு துணர்ந்தாய். எ

---

ரு. "இருமை வகைதெரிந்து" என்றவிடத்துப்போல எண்மை ஈண்டு எண்ணின்மேல் நின்றது. தலத்தின் மகிமை, சமீபம், தூரம் இவ்வெல்லாவற்றையும் சொல்லியருளல் வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தார்கள்.

திருந்தி டுஞ்சிவ தலவிசே டங்களுந் தீர்த்தம்
பொருந்தி டுமான் மியமுமேற் புகழ்சிவ தீக்கை
வரும்ப டிக்கிடைத் திடுஞ்சைவா சாரமு மற்று
மருந்தி றற்பெற விரித்துணர்ந் தனைபெரி தாமால். ௮

நேர்மை யானநன் னெறிதனி னேர்மையாய் நிலவுஞ்
சீர்மை யாகிய சைவமான் மியநயந் தெரிந்து
கூர்மை யாமறி வுடையையிக் கலிதனிற் குலவி
யார்மை சேர்மிடற் றண்ணல்கீர்த் தனஞ்செய லரிது. ௯

ஆழி சூழ்புவி யினிற்சிவ பத்திதா னரிது
வீழி வாயுமை பாகன்மெய்த் தலம்பெற லரிதுள்
ளூழி யற்கையாய்க் கிடைப்பினு முண்மையாய் முத்தி
வாழி மானுடர்க் குதவுபுண் ணியத்தல மரிது. ௧௦

ஏனவு மையநீ யோதினை யிளம்பிறை கங்கை
மனவு சேர்தரும் வள்ளல்பா தாம்புய மலரை
நனவு வாய்ந்திடு பொழுதினு மன்றிநண் ணிடுநீள்
கனவு காண்பினு மருதுநற் கருத்தமைந் தனையே. ௧௧

முந்த ருந்தவ மெம்மனோர்க் குதவிசெய் முறைபோற்
பந்த நீத்திடும் பரம்புண் ணியவுரு வெடுத்து
வந்த செல்வநல் வயித்திய நாதமென் றெழில்சேர்
இந்த மாநிலத் தொருதல முளதென விசைத்து. ௧௨

கயிலை யாதியா மகிமைசேர் கண்ணுதற் பெருமான்
பயிலும் புண்ணியத் தலம்புவி யினிற்பல வுளவால்
வெயில்வி ரித்தெழு மாடமா ளிகைமிக விளங்கிச்
சயில நேர்பெறு மனையநற் றலத்திலுத் தமமாம். ௧௩

எண்ணி டுங்கணப் பொழுததிற் பாதியா யினுமப்
புண்ணி யத்தலம் புகுவதற் கிச்சைசெய் தனர்கள்
நண்ணி வாழ்வர்நற் கதியலா துருத்திர னவார்
உண்ணி னைந்தன பெறுகுவ ரெனவுரைத் தனையால். ௧௪

அனைய வற்புதத் தலப்பெரு மகிமையை யடியேம்
நினைய வென்னபுண் ணியப்பல னறிகிலே நினது
புனைய ருட்கிட ஞனயாம் பெறும்வகை புகழ்ந்த
தனைய ருந்தவ வுரைத்தரு ளெனப்புகன் றனரால். கரு

தூய மாதவ ருரைத்தலுஞ் சூதமா முனிவன்
நேய மாகநீர் சிவவழி பாட்டினி னீங்காக்
காய நன்மனம் வாக்கினுற் பணிதலுங் கனிவு
மேய மாமகி மைத்துதி செய்தலு மியல்பால். கசா

சம்பு வின்கதைக் கேட்பவன் சங்கர னுவான்
வெம்பு கோபநீத் தருந்தவம் விழைந்திடுங் குணத்தீர்
நம்பும் வாய்மையா யிடைவிடா தையனற் கதையை
அம்பு விக்கணே கேட்பதா லதிகபண் பினரால். கஎ

இன்ன தன்மையர்க் குரைப்பதை யன்றியே றுகந்த
முன்ன வன்கதை பத்தியின் மூர்க்கர்க ளிடத்திற்
சொன்ன வன்னர கந்தனிற் றேய்வனென் றுரைத்துப்
பின்னர் புண்ணியஞ் செய்தனர் பெறுவதா மென்றான். கஅ

வேறு.

வளங்கெழு வெதிரி வனந்தனில் வியாசன் வாய்மலர்ந் தருள்செய வன்னோன், விளங்கெழி லருளா லுணர்ந்தநற் சரித மிகுசிவ பூசையின் பலனுற், களங்கெறி முனிவீர் கேட்பது வேண்டு மென்றனன் கணிப்பினு லுணர்ந்து, துளங்கெவற் றினையுந் துரிசறக் கடிந்த சூதமா முனிவரன் மன்னோ. கக

நூற்கடற் கரைகண் டில்குமம் முனிவ னுடங்குநான் மார்பினீர் கேண்மின், பாற்கடற் பிறந்த கடுநுக ரமல பராபர பர்லநேத் திரநற், சேற்கருங் கண்ணள் பாகவே றுகந்த சிவசிவ சங்கர குளிர்கல், லாற்கவி னீழ லமர்ந்ததற் பரசூ ழாரண வெனுமது நாவாம்.

---

கஅ. பின்னர்ப் புண்ணியம் என்றும் பாடம். ககூ. சரிதம் சிவபூசைப்பலன்றரும், ஆகலாற் கேட்டல்வேண்டும் என்க. களங்கம் அம்முக்கெட்டுக் களங்கென நின்றது; நாகமணை அம்முக் கெட்டு "நாகணை" எனநின்றாற்போல.

கறைமிடற் றண்ண லாலய நோக்கி நடப்பது. கால்களா மெழுதா, மறைவகுத் தறியாப் பரன்றரி சனஞ்செய் திடுமது கண்ணதா மழுமா; னுறைபரன் சரிதங் கேட்பது செவிதா மூறுமதே யுடலதா மினிய, நறைகமழ் மலர்க ளருச்சனை செய்து நறுமண மறிந்தநா சியதாம். ௨௧

எடுத்தினி துரைத்த வவயவம் படைத்தே யிருந்திடு மருந் தவத் தினிர்சேர்த்; தடுத்திணை பகர்தற் கரிதுபூ மியினி லனைய நற் றலத்தினைக் காணேன், கொடுத்திடு முத்திக் கங்குர மென்று கூறுவர் குணகடன் மேல்பாற், றெடுத்தயோ சனைதூ ரந்தனிற் சுவேத வனமிடை சூழ்ந்திட மாதோ. ௨௨

திகழ்தரு சாயா வனத்தினுக் கனிலன் றிசையினிற் சிரபுர மென்று, புகழ்பெறு நகர்க்கு நிருதிதன் றிசையிற் பொருந்திடு குரோசமாத் திரத்தி, னகழ்துயர் நீக்கும் வாளொளி புத்தூர்க் காகுநற் றிசையதின் கீழ்பா, ணிகழ்தருந் தெற்கும் வடக்கினு முபய காவிரி நிறைந்திட டின்னும். ௨௩

வேகமாம் பொன்னி மாநதி யிருபால் விளங்கிடு மெல்லையி னளவை, யேகயோ சனைமாத் திரமித னுப்ப ணிலகிடு மிந்திர தலத்திற், காகுமோர் குரோசம் வாயுவின் றிசையா மந்நகர் மன்னுசுற் றெல்லைச், சேகரங் கூறிற் கிருதமா யுகத்திற் றிகழ்ந் திடு நான்குயோ சனையே. ௨௪

உரைபெறுந் திரேதா யுகந்தனி லொருமூன் றியோசனை துவாபர யுகத்தின், வரையும்யோ சனையோ ரிரண்டினிக் கலி தான் வந்திடு முகந்தனி லம்மா, புரைதவிர்ந் திலகு மியோசனை தூரம் பொருந்தநற் பொற்புறு மினிய, தரைபுகழ் வயித்திய நாதமா நகரந் தன்பெரு மகிமைகூ றரிதே. ௨௫

---

௨௧. அறிந்தது என்பது அறிந்த என ஈறு தொக்கது

௨௪. இந்திரதலம் – திருக்கண்ணார் கோயில். அதனை இக் காலத்துக் குறுமாணிக்குடி யென்பர். சேகரம் – தொகை.

இனையவற் புதநற் றலந்தனிற் கணப்போ தெண்ணிடுங் கணத்தினிற் பாதி, வினைதரும் வாசஞ் செய்தனர் பெருகி வளர்ந் திடு சகலபாக் கியமும், நினைவரு நிமலன் பதவியும் பெறுவ ரென்றிடி னித்தியந் தலம்வாழ், அனைவரும் பெறும்பே றனேககற் பங்க ளளவிட லரிதரி தாமால். உசு

பண்ணிய தவத்தின் பலன்பலித் தென்னப் பகர்ந்தி னெண் புரா ணத்தின், புண்ணிய கதையி லுத்தம மாகும் புராதனன் வயித்திய நாதன்; நண்ணிய வினைய தலப்பெரு மகிமை யாவது நவிலுதற் கினியான், எண்ணிடிற் கோடி வருடத்து முடியா தென்றனன் சூதமா முனிவன். உஎ

முந்திய கிருத யுகந்தனிற் கதம்ப வனமிரண் டாமுக முறை யாய், வந்திடும் வில்வ வனந்துவா பரத்தின் வளர்ந்திடும் வகுள நீள் வனஞ்சூழ், தந்திரக் கலியிற் றழைந்திடு நிம்ப வனமதிற் சதுர்முகன் முகுந்தன், இந்திரன் பணிய வயித்திய நாத னின்பமுற் றினிதுறை குவனால். உஅ

சிறந்திடு மகிமை யுறுந்தரு வொன்றே சேர்ந்திடும் யுகந் தொறும் வேறாய்ப், பிறந்திடும் பெயர்பெற் றிருந்திடு மதனிற் பெரியவீ ரேமூல கமர்வோர்க், கறம்பொரு ளின்பம் வீடுதந் தருள வமர்ந்திடு மையனைப் புவியில், உறங்குத றவிர்ந்தே யொருதரம் பார்த்தோ ருறைவர்பே ரின்பவீ டெளிதாய். உகூ

கண்ணகன் புவியிற் பொடிந்ததூள் பகுத்துக் கணக்கிட் லாங்குவி மணலை, எண்ணலா மெழுந்து சொரிமழைத் திவலை யினைக்கணித் தறியலா முயர்ந்த, விண்ணகத் திலகு தாரகைத் தொகையை விதிக்கலாம் வயித்திய நாத, அண்ணல்சூழ் தலத் தைக் கண்டபேர் பெறும்பே றளவிட லரிதரி தாமால். ௩0

மண்ணினின் விளங்கும் வயித்திய நாத மகாதலஞ் செனன மத்தியிற் றங், கண்ணினா லொருக்காற் பார்த்தவ ரிட்ட காமியம் பெறுவர்வெண் கயிலை, நண்ணியே யுபய குலமிரு கோடி சூழ்ந் திட நடுவினி லிருப்பார், எண்ணியோர் கற்ப காலமே லைய னினிதருண் முத்திபெற் றிடுவார். ௩க

வரமகத் துவஞ்சேர் வயித்திய நாத மாநகர்ப் பெயர்சொலக் கேட்போர், பிரமகத் தியுந்தாம் பிறந்தநாண் முதலாய்ப் பிழை படச் செய்தபா தகமும், உரமற வுதறி யெறிந்துதம் முடலி னுற் றநோய் முழுவதுந் தீர்ந்து, பரமபுண் ணியஞ்செய் யுத்தமர் பெ றும்பே றனைத்துமே பலித்திடப் பெறுவார். ௧௨

௧௨. வரமகத்துவம் வரமும் மகத்துவமும் என வும்மைத் தொகை. வரம் கடவுட் கொடை. மகத்துவம் வரங்கொடுத்தலா லுளதாமேம்பாடு. சிவபெருமான் திருக்கைலைக்கணின்றெழுந்த ருளி வருதலாலுண்டாகிய மகத்துவமென்றலுமாம். இப்பொரு ட்கு மகத்துவம் மழைபெய்ய நெல்விளைந்தது என்றாற்போலக் காரணகாரியமாய் நின்றது.

சிதம்பர சொரூபியாகிய ஸ்ரீநடேசமூர்த்தியெழுந்தருளியிரு க்குந் தானம் சிதம்பரமெனப்பட்டாற்போல வைத்தியநாதர் எழு ந்தருளியிருக்குந்தானம் வைத்தியநாதமெனப்பட்டது.

பரமபுண்ணியம் மிகமேலாகிய புண்ணியம். என்றது சரியை, கிரியை, யோகங்களுக்கு மேம்பட்ட ஞானத்தை. இப்பொருட்கு உத்தமரென்றது சரியையாளர், கிரியையாளர், யோகிகளின் முத ன்மையாக வைத்தெண்ணப்படும் ஞானிகளை. அவர் பெறும் பேறு கள் நாலாஞ் சத்திநிபாதம், பாசநீக்கம், சிவத்துவப்பேறென்றற் றொடக்கத்தன பலவாகலின், பெறும்பேறனைத்துமெனப்பன்மை வாசகத்தாற் கூறினார்.

இனி பரமபுண்ணியம் என்பதற்கு பரம்பொருளுக்குரிய புண் ணியமெனப்பொதுவாகக்கொண்டு சரியை, கிரியை, யோகம், ஞானங்களென்றலுமாம், இப்பொருட்கு உத்தமரென்றது சரியை யாளர், கிரியையாளர், யோகிகள், ஞானிகள் என்னும் நால்வரை யுமென்க. அவர்பெறும் பேறனைத்துமென்றது; முறையே சாலோக சாமீப சாரூப சாயுச்சியங்களாம். ஞானிகளை நோக்கும் வழி ஏனை முத்திறத்தாரும் உத்தமரெனப்படாராயினும் ஏனைப்பிரா கிருதரை நோக்கவுத்தமரெனப்படுதலானும், சரியை முதலிய மூன்றும் படிமுறையின் வைத்து ஞானத்தைப்பயப்பித்துப் பர முத்தியளித்தல் ஒருதலையாகலானும், அவரும் உத்தமரெனப்படு தற்கு இழுக்கின்மையுணர்க.

பெருந்திரைக் கடல்சூ ழிரும்பல புவியிற் பிறந்தவர் தீவுக டம்மில், இருந்திடு மவர்வந் திறைஞ்சுதற் கெளிதன் றுதலா லிருக்குமூ ரதனிற், பொருந்தியே வயித்திய நாதனற் றலத்தின் பொற்புறு திசைதனைப் பார்த்தே, திருந்திடப் பணிவோர் தீவினை யொழித்தே திகழ்தரு கயிலைவீற் றிருப்பார். ௩௩

நூறுயோ சனைதூ ரந்தனி லிருந்து நுவலருந் தலப்பெயர் நினைந்து, கூறிடு மவரும் வல்வினை நீங்கிக் குலவுபே ரின்பவீ டுறைவார், ஈறிலாப் பெருமை வயித்திய நாத வெழிற்றல வாசஞ்செய் வேனென், றூறிடு மன்பா னிதஞ்சொல்வோர் தலத்தி லுறைபவர் பெறும்பலன் பெறுவார். ௩௪

மடுப்பொலி கமல மலர்மணங் கமழும் வயித்திய நாதனற் றலம்பார்த், தெடுத்தடி வைத்துப் போகுவ மென்றே யெழுந்தவ ரடிக்கடி யம்மா, அடுத்திடு மசுவ மேதயா கஞ்செய் யரும்பலன் பெறுகுவ ரன்றிக், கடுத்தனை நுகர்ந்த கண்ணுதற் பெருமான் கயிலையுங் கிரியுமே பெறுவார். ௩௫

நனைத்தரு நந்த வனமிகும் வயித்திய நாதனற் றலந்தனை மனத்தில், நினைத்தவக் கணத்தி னீடும்வெங் கலிதோ டந்தனை நீக்கியே முத்தி, தனைத்தரு முலகி லதிகமா மகிமை தான்றரு மன்பருக் குதவி, யினைத்தரும் பாரம் வதிந்திடு மிட்ட காமிய மியாவதுந் தருமே. ௩௬

---

௩௩. இரும்புவி – பாரதகண்டம், கிம்புருடகண்டம், அரிகண்டம், இளாவிருதகண்டம், இரமியகண்டம், இரண்மயகண்டம், குருகண்டம், பத்திராசுவகண்டம், கேதுமாலகண்டம் என்பன.

தீவுகள்–பாரதகண்டம் முதலிய ஒன்பது கண்டங்களும் அடங்கப்பெற்ற சம்புத்தீவை யொழித்தொழிந்த பிலட்சத்தீவு, சான்மலித்தீவு, குசத்தீவு, கிரௌஞ்சத்தீவு, சாகத்தீவு, புட்காரத்தீவு, என்பன.

இனி இரும்புவி என்பதற்குத் தூர தேசங்கள் என்றும், தீவு என்பதற்குக் கடல் சூழ்ந்த பூமிகள் என்றும் பொருள் கூறலுமொன்று. ௩௬. நனைதரு எதுகைநோக்கி மிக்கது. பாரம் - பூமி.

வருதின மைந்து மூன்றுதான் வாசஞ் செய்திட வேண்டுமோ மகிமை, தருமுயர் வயித்திய நாதனற் றலத்திற் றம்முளங் கனிவுகூர்ந் திளகி, ஒருதினம் வாசஞ் செய்தவர் பதினு யிரமுய ரசுவமே தஞ்செய், பெருமகப் பேறு பெறுகுவ ரன்றிப் பேரின்ப வீடுமே பெறுவார். ௩௭

தருமசிந் தனைசெய் தவர்க்கதில் விருத்தி தான்செயுந் தனம் விழைந் தோர்க்கு, வருதன விருத்தி கொடுத்திடும் போக வாஞ்சைசெய் பவர்க்குமப் படியாம், ஒருபலன் விழையார் முத்தியை விழைந்தோர்க் குளமகிழ் தரவினி தளிக்கும், இருநில மதனில் வயித்திய நாத வெழிற்றல மகிமைகூ றரிதே. ௩௮

புதல்வனை விரும்பு மவர்க்குநற் புதல்வன் றனைத்தரும் புவிவிரும் பினர்கட், கிதமிகு மகில புவனமுந் தருமே யெழில் பெறு கன்னியை விழைந்தோர்க், குதவுமங் கவகன் னியையது வன்றி யுற்றவர் பிணிவினை தீர்த்துப், பதவிநல் கிடுமெவ் வயித் திய நாத மகாதலம் பார்தனி லம்மா. ௩௯

சாற்றுபொய்ம் மாயக் கடலினி லழுந்திக் கிடந்திடு முயிர் தனைக் கரைதான், ஏற்றுநற் புணைதா னாகிடும் பிறந்த தினிப் பிறக் கின்றன பிறவி, தோற்றுமெவ் வுயிர்க்குஞ் சொலற்கரும் பரமா னந்தநல் கிடுந்தொகுத் தெழுத்திட், டேற்றுமந் திரங் கட் கிடமதாம் வயித்திய நாதமா மெழிற்றல மாதோ. ௪0

எழுந்துகு ழவிச்சை யிருட்டினுற் குருடா யிருந்திடு மனுக்க ளுக்கெழுந்து, கொழுந்துவிட் டிலகு தீபமாம் வயித்திய நாதனற் றலங்குவ லயத்தின், அழுந்துவல் வினைக்கு மண்ணினை மருந்தா யளித்திடும் பிறவிவே ரறுக்கும், ஒழிந்துமேற் கதியுந் தருமிதற் கிணைவே றெப்பிட லரிதரி தாமால். ௪௧

திருக்ககன் றிலகும் வசுக்களோ ரெண்மர் திகழுருத் திரர்பதி னொருவர், அருக்கர்பன் னிருவர் புரந்தர னயன்மா லாதியாங் கடவுளர்க் கன்றி, இருக்குரைப் பரிய முத்திபெற் றிடவே யெண்ணிலர்க் கருளுநல் லெழிற்செம், புருக்கனற் கோபக் கட்பசா சனைத்து மோட்டிடும் வயித்திய நாதம். ௪௨

வருசன நடந்த போதெழு செந்தாள் படினும்வாழ் சுரபிகா லடியிற், பெருகுதாள் படினுஞ் சுழன்றிடு காற்றிற் பிறந்ததூள் வீழினும் பெருங்காற், றிருநில மதிர வடித்ததூள் படினு மிலகும்வே ளூர்நெடு வீதித், தெருவிலங் கப்பிர தக்கிணஞ் செய்வோர் சிறுதுகள் படினுநற் கதியாம். ௨௩

மட்டிலா மகிமை வயித்திய நாத மகாதல வீதியி லெழுந் தூள், பட்டபே ரரச ராயுல காள்வார் பகர்தரு முருத்திர ராவார், இட்டமாம் வர்ங்கேட் பவர்க்கிரு மடங்கா மிலகுபுண் ணியஞ்செய் வோர்க் கிரட்டி, நட்டம்வா ராம லளித்திடும் வளர்மெய்ஞ் ஞானமும் வீடுநல் கிடுமே. ௨௪

உலகெலாந் துதிக்கும் வயித்திய நாத னுறைதல வர்சமுற் றிருக்கும், அலகுகா ணரிய கலையுணர் மறையோர்க் கமைந்திடு சந்திவந் தனஞ்செய், இலகுசோ பான மியல்பெறுங் கிருகங் கருங்கன்மா ளிகையிவை கொடுப்போர், பலகுண மணிசூழ் முடிபுனை வேந்த ராகிமேற் பரகதி பெறுவார். ௨௫

ஒத்திடு மகிமை வயித்திய நாத னுறைதலந் தனில்வள ரன்ன, சத்திர மடம்வீ டிடமிகு மாட மாளிகை தழைந்தெழில் கொழிக்குஞ், சித்திர கூடங் கட்டிவைத் திலகு சிவனடி யார்க் களித் திடுவோர், புத்திர ருடனே சகலபோ கங்கள் புசிப்பர்மேன் மூத்தியும் பெறுவார். ௨௬

அல்லணி களத்தெம் மையனல் வயித்திய நாதன்வாழ் தலந்தனி லன்பர்க், கில்லிடங் கட்டி வைத்தவர் குலமு வேழுட னின்பமுற் றிருப்பார், செல்லுமுத் திரந்தூண் போதிகை மரங்கல் சிவனடி யார்தமக் களிப்போர், சொல்லரு மணிபொன் னுடையா பரணஞ் சூழ்வர்பே ரின்பமும் பெறுவார். ௨௭

வளம்பெறும் வயித்திய நாதன்வாழ் தலத்தின் வழிநடைச் சாலையின் மீது, தளர்ந்தவ ரிளைப்பா றுதற்கமை தண்ணீர்ப் பந்தல்சத் திரங்கண்மண் டபந்தன், உளங்கனிந் துறுதி பெறச் செயு நல்லோ னுயர்குல மிருபதிற் றென்றும், விளங்கிடும் விமான மேறியே சிவலோ கந்தனின் மேவியே யிருக்கும். ௨அ

௨௫. சோபானம் — இங்கே வேதிகை.

மாடமா ளிகைசூழ் வயித்திய நாத மகாதலந் தனில்வள மிலகு, பாடக சாலை செய்துபோற் றினர்கள் பாருல காள்வர்கோ சாலை, ஆடக மதில்சூ ழ்ந்நக ரதனிற் செய்துவைத் தவர்கள்கோ வுலகந், தேடரும் பசும்பொன் னுலகினில் வாழ்வர் சேர்குவர் மேற்சிவ லோகம். ௪௯

அற்புத வயித்திய நாதனற் றலத்தி லணிமண மமைந்தசெங் கழுநீர், பொற்புறு நளின வாவியைப் புரிந்து வைத்தவ ரரசராய்ப் பிறந்து, கற்புறு மனையா ளுடன்கலந் திருந்து கல்விசேர் புதல்வரைப் பெற்று, நற்புவி செங்கோல் செலுத்தியே யாள்வர் நண்ணுவர் மேற்சிவ லோகம். ௫௦

திகழ்தரும் வயித்திய நாதனற் றலநாற் றிசைதொறும் பரிதியங் கடவுள், நிகழ்வெயிற் கினிய குளிர்நிழ லளித்து நின்றிடுந் தருமிக வைப்போர், புகழ்பெறும் வேந்த ராயுல காள்வார் பொன்னுல கமும்புரந் திடுவார், இகழ்விலா விமான மேறியே மகிழ்கூர்ந் தெய்துவர் மேற்சிவ லோகம். ௫௧

படம்விரித் தாடு மரவணி வயித்திய நாதனற் றலந்தனிற் பரிந்து, தடம்புனற் றீரந் தனிற்றரு வைப்போர் சகலபாக் கியம்பெறு குவர்நல், மடந்தைதன் னுடனே இல்லறம் புரிந்து வானுல காள்வர்மேற் பதவி, அடங்கலும் பெறுவ ரவைவெறுத் திடிற்சொல் லரியபே ரின்பவீ டுறைவார். ௫௨

மழுவணி வயித்திய நாதனற் றலத்தின் மன்னுபூந் தோட் டம்வைத் திடுவோர், செழுமல ரொன்றிற் கிலகுமைம் பதினா யிரம்வரு டஞ்சிவ லோகந், தொழுதிடுங் கணங்கள் சூழ்ந்திட விருப்பார் தூயபத் திரங்களொன் றினுக்குப், பழுதுறுப் பதினா யிரம்வரு டம்பொற் பமைசிவ லோகம்வீற் றிருப்பார். ௫௩

---

௫௨. அரவணிதல் வைத்தியநாதனை விசேடித்தது; தலத்தையன்று. "குருதிக் கோட்டுக் குஞ்சரநகரம்" என்புழிக் குருதிக் கோடு அத்திபுரியை விசேடியாது குஞ்சரத்தை விசேடித்தது போல. படங்குனித் தாடும் என்றும் பாடம்.

புண்ணிய வயித்திய நாதனற் றலத்திற் புகழ்பெறு வாகன மதனைப், பண்ணிவைத் தவரவ் வாகனம் பார்த்து மகிழ்ந்தவர் பரிந்துப காரம், நண்ணிடும் படிசெய் தவர்கள்வாக் குதவி நல்லனு கூலசா தகஞ்செய், திண்ணிய வுறுதி யுள்ளவர் வாழ்ந்து சேர்குவர் மேற்சிவ லோகம். ருச

புவனியிற் புகழ்சேர் வயித்திய நாத புண்ணியத் தலந்தனி லம்மா, சிவகயிங் கரிய விசாரணை செய்தோர் சித்தியும் போகமும் பெறுவார், துவரித ழரம்பை கவரிகா லசைப்பச் சொல்லரும் விமானமே லேறித், தவமிகு தேவ கணம்புடை சூழச் சார்குவர் மேற்சிவ லோகம். ருரு

திருத்தகும் வயித்திய நாதனற் றலத்திற் றிருப்பணி செய்திடி னம்மா, பருத்தமண் ணதனிற் றசகுணந் தாரு பகர்ந்திடுஞ் சதகுணஞ் செங்கல், பொருத்தமாங் கருங்கல் லாயிர மடங்காம் புண்ணியம் புவிமுழு தாள்வர், உருத்தகு தேவ விமானமே லேறி யுறைகுவர் மேற்சிவ லோகம். ருசா

சங்கரன் வயித்திய நாதனற் றலத்திற் றன்மனங் கனிவுகூர்ந் தமைந்த, செங்கலோ ரெட்டாற் றிருப்பணி செய்வே னெனத் திசை யெட்டினும் வைத்தே, அங்கதற் குபயோ கந்தனை நினையு மவர்சுமை யெடுப்பவ ரெனினுந், துங்கவெண் குடைசூ ழரசராய்ப் பிறந்து சூழ்திருப் பணிசெய்து மகிழ்வார். ருஎ

---

ருச. வாழ்தல் — செல்வத்தோடு பூரணவாயுள்வரை ஜீவித்தல். கூ. வாழ்ந்தென்பதற்கும் இதுவே பொருள். ருசா. மண்ணதனில் தாரு சதகுணபுண்ணியம் பகர்ந்திடும். தாருவின் செங்கல் சதகுணம் புண்ணியம் பகர்ந்திடும். செங்கலின்கருங்கல் ஆயிரம் மடங்கு புண்ணியம் பகர்ந்திடும் என்க. பகர்தற்கு வினைமுதல் ஆகமம். குணம் — இங்கு மடங்கு என்னும்பொருண்மேனின்றது. ருஎ. உபயோகம்—கருவிகள், பயன்.

நிதியம்வைத் திருப்போர் நிலைபெறு சிவபுண் ணியமிமித் தம்மன மகிழ்ந்தே, மதியணி பெருமான் பணிசெய வேண்டும் வயித்திய நாதனற் றலத்தில், அதிகபுண் ணியமாஞ் சிவாலயப் பணிசெய் யாதவ ரருங்கொடு நரகம், பதியவோர் பதினா யிரம்வரு டம்வீழ்ந் தனுபவிப் பார்பல துன்பம். ருஅ

படிபுகழ் வயித்திய நாதனற் றலத்திற் பகர்திருப் பணிசெயா திருக்கும், கடினசிந் தையர்போய்ப் பசாசதாய்ப் பிறந்து கணக்கில்பன் னாளலைந் திடுவார், மிடியராய்ப் போகா திருந்திட வேண்டு மெனத்திர வியம்புதைத் திடுமக், கொடியர்கள் பிரம கற்பகா லங்கள் கோரமா நரகில்வீழ்ந் திடுவார். ருகூ

விஞ்சைய ரேத்தும் வயித்திய நாத வியன்றல மகிமையை விழைந்து, நெஞ்சொடு சிவகா ரியத்தினுக் களிப்ப நினைந்திடு திரவிய மதனை, வஞ்சனை செய்வோர் மகாநர கத்தி லழுந்துவர் வள்ளலுக் கென்று, செஞ்சொலா லளித்த திரவியம் பாது காத்தவர் சேர்வர்நற் பதவி. சுO

ஏழிலொன் றுரு மீசனுக் கென்றே யிரந்துசெய் தவர்தமக் கம்மா, ஆழிசூ ழுலகி லளித்தவர்க் காறு மடங்குபுண் ணியமது சேரும், வீழிவா யுமைபங் காளர்கா ரியத்தின் மேன்மைய ரேவலா லெழுந்து, தாழ்விலாச் சிவகா ரியந்தனைச் செய்வோர் தரணியாண் டின்பமேற் பெறுவார். சுக

தோன்றிய புகழ்சேர் பொருள்படைத் தோர்க டொகைபெறு திரவியம் பகுத்து, மூன்றிலொன் றளிப்ப துத்தம மாறி லொன்றதை மொழிவர்மத் திமமா,என்றிடு மெட்டி லொன்றினை யதம மென்பர்பத் ததமமே லதமம், போன்றிடும் பாதி யதிகவுத் தமமாம் புண்ணியம் பெறுகுவர் மாதோ. சுஉ

---

சுக. வீழி — வீழிப்பழம். ஆகுபெயர். வீழி, ஒருசெடி அதன் பழம் சிவப்பாதலால் வாய்க்கு உவமையாயிற்று.

வடித்தசெந் தமிழ்சூழ் வயித்திய நாதமகாதலந் தனினிறை தீர்த்தப், படித்துறை மைய மண்டபங் கொடுங்கை பதிந்திடு சுற்றுமண் டபநீள், அடிப்படை பலமா மதில்சிவா லயஞ்செய் தவர்புவி யாள்வரிந் திரன்மால், முடித்தல மிருகை குவித்திட விமான மேறிமேன் முத்திவீ டுறைவார். ௬௩

மன்னிய மகிமை வைத்திய நாத மகாதலந் தனிற்சிவ பெருமான், சந்நிதி யினிற்கோ புரங்கொடி மரஞ்சூழ் மேடைசார் நிருத்தமண் டபநல், இன்னிசை பயிலு மண்டபம் யாக சாலைகற் றூண்மடைப் பளிக்காம், பொன்னினை யளித்தல் செய்தவ ரகிலம் புரந்துபே ரின்பவீ டுறைவார். ௬௪

பாவலர் சங்கத் தமிழ்நிறை வயித்திய நாதனற் றலத்திருப் பணிசெய், ஏவலாள் வண்டிற் பகடிவை மருப்பே றிவைசெலுத் திடுமவர் வார்தோல், ஆவலிற் பதஞ்செய் தவைகொடுத் திடுநல் வேலைசெய் தார்புவி யாள்வார், பூவல யத்தின் புறுவர்பொன் னுலகம் புரந்துமேற் சிவகண மாவார். ௬௫

அற்புத வயித்திய நாதனற் றலத்தி லையனுக் கமைதிருப் பணிசெய், சிற்பநூல் வல்லோர் சிவகண மாவார் திரண்மரத் தச்சர்கா ரிரும்பு, நற்பதஞ் செய்யுங் கம்மியர் விளங்கு நலமிகு முருத்திர ராவார், பற்பல பணிசெய் கொத்தர்நெற் றியிற்கண் படைத்திடு முருத்திர ராவார். ௬௬

அளிந்துரு கிடுமெய் யன்பர்சூழ் வயித்திய நாதநற் றலத் திருப் பணிக்காம், கிளிஞ்சில்கள் சுக்கா னிவையெலா முன்னங் கிடைத்திடு தவத்திலிவ் வுருவாய்த்,தெளிந்தநூல் வல்லோ ரமைந்தவென் றுரைப்பர் திகழ்கரும் பினியதீஞ் சாறு, பொளிந்தகல் செங்கல் பணிக்கமை தலினற் புண்ணிய வுருவெனப் புகல்வார். ௬௭

பவவினை தீர்க்கும் வயித்திய நாதன் பரிந்துறை தலந்தனி லிருந்து, சிவகயிங் கரியஞ் செயுமத யானை சிறந்திடு சுழிகொள் வாம் புரவி,குவவுகூ னமையொட் டகஞ்சிவ கணமாங் கொடிறினுக் கமைகரும் பொன்கலம், இவருளி க்ருங்கல் லடித்திடுங் கொட்டி லீபவ ருஞ்சிவ கணமாம். ௬௮

வரந்தரும் வயித்திய நாதனற் றலத்தில் வளங்கெழு திருப் பணியதனை, இரந்துமே பிச்சை யேற்றுமே செய்வோ ரேழ்கடல் சூழுல கின்ிதாய்ப், புரந்திடும் வேந்த ராகவே பிறப்பர் பூவுல கினிலிருந் திடினும், உரம்பெறு தேவ ராகுவ ரதன்மே லுருத்திர கணங்களா குவரே. சுகூ

பரவிமெய் யடியார் வழிபடும் வயித்திய நாதனற் றலந்த னைப் பணிந்து, திரவியஞ் சிவகா ரியத்தினுக் கென்று செலுத்தி னர் சூரிய கிரணம், விரவிடு மருத்தோ தயமகோ தயமாம் வியன்றினங் கோடிகோ தானந், தரவினி தாம்புண் ணியந்தனக் கதிகங் கோடியாங் கயிலைமேற் சார்வார். எ0

பொருப்பணி வில்லாய் வளைத்திடும் வயித்திய நாதனற் றலந்தனிற் போந்து, திருப்பணி செய்வோர் தமையெலா மனித ரென்பவர் சேர்குவர் நரகம், மருப்பணி பெறும்வெள் ளானைமே லேறி வருபுரந் தரன்முதல் வானோர், உருப்பணிந் திடஞ்சூழ் விமானமே லேறி யுறைகுவர் மேற்சிவ லோகம். எக

இன்னமொன் றுரைப்பன் வயித்திய நாதனெண்ணில்புண் ணியத்தலம் விழைந்து, முன்னரே முதனூல் வருணம்வந் துதித் தோர் முன்செய்புண் ணியத்தினாற் படைத்த, பன்னரும் பசும் பொன் சிவபிரா னிமித்தந் தரவதைப் பணிசெயா தழிப்போர், உன்னரு மனேக கற்பகா லந்தீ யுறுபெரு நரகில்வீழ்ந் திடுவார்.

சித்திரங் கிடுமிவ் வயித்திய நாத சிவதல மகிமையை விழை ந்து, பத்தியாய்த் தனதா னியந்தனை யுதவி பண்ணினர் பூமிதா னத்தின், நித்திய மான புண்ணியம் பெறுவர் நிறைந்திடு தானியந் தனத்தைப், புத்திபூ ருவமா யழித்தவர் நரகம் புகுதுவ ரெண்ணில்பல் காலம். எங

---

எ0. அருத்தோதயமாவது:- தைமாதத்திலே ஞாயிற்றுக் கிழமையும், திருவோண நக்ஷத்திரமும், வியதிபாதயோகமும் கூடிய காலம். மகோதயமாவது:- தைமாதத்திலே திங்கட் கிழமையும், அமாவாசையும், திருவோண நக்ஷத்திரமும், வியதி பாதயோகமுங் கூடிய காலம்.

தெய்வவே தியர்சூழ் வயித்திய நாத சிவதலந் தனிற்சிறி தேனும், எய்துகா ரியத்தைத் தவிர்ந்திட விகாத மெண்ணினர் செய்தவர் கொடிதாம், உய்விலா நரக மழுந்துவர் தலத்திற் குறுமுப காரமெள் ளளவு, துய்யபூ மியினிற் பண்ணினர் பிறவித் துன்பநீத் தின்பமே பெறுவார். எச

தமிழ்மணங் கமழும் வயித்திய நாதன் றலந்தனிற் றடங்கடற் சிப்பி, உமிழ்குளிர் முத்து மாலைநன் மணிவைத் தொளிசெயா பரணநல் லாடை, அமிழ்தென வினிமை செய்யபி டேக திரவிய வருக்கமா சையினீர்க், குமிழ்பெறு காலம் பெருவுடற் பொருட் டாற் றிருடினர் கொழுநர குறுவார். எரு

சேர்திரு நிருத்தஞ் செய்திடும் வயித்திய நாதன்ற் சிவதல மகிமை, புந்திகூர் மகிழ்ச்சி பெறவறிந் துதவி புரிந்திடு திரவிய வருக்கம், வந்திருந் ததனைச் சிவபணி செய்யார் வாரிவீண் செலவுசெய் தவர்கள், உந்திநீர்க் கடல்சூ ழுலகினிற் பசாசாய்ப் பிறந்துபல் லூழிநா ளலைவார். எசா

மகிமைசேர் வயித்திய நாதனற் றலவா சஞ்செய வருபிறப் பரிதாம், எகினமே முதலாம் பறவைநாய் நரிக ளீசிறு விட்டிலூ ரெறும்பு, சிகிநுக ரிந்திர கோபநூற் சிலம்பி சீயமே முதற்பல மிருகம், அகிவிருச் சிகமுந் துருதரு வனைத்து மருமையாஞ் சிவ கண மாகும். எஎ

நறைகமழ் நளின் வாவிசூழ் வயித்திய நாதனற் றலத்தினி லம்மா, உறையுமப் பெரியோர் மற்றும்வே றுள்ள வுயிர்க்கிடை யூறுசெய் பவர்கள், குறைவிலா நரகின் மூழ்குவர் பசாசின் கொடியவல் லுருவெடுத் தலைவார், பிறையெயி றதுக்கி யியமதூ துவர்கள் பிடித்திடும் வேதனைப் படுவார். எஅ

---

எஎ. உந்துரு — பெருச்சாளி.

ஆரணப் பொருளாம் வயித்திய நாத வண்ணறன் றலத் திருப் பணிதான், சீரண மான துறுதிபெற் றிடவே செய்தவர் பிறந்துல களித்து, வர்ரண வுரிபோர்த் திருக்குமவ் வள்ளல் வாழ்சிவ லோகமேற் பெறுவார், காரணன் சிவகா ரியங்களி னிமித்த மிறந்தவர் கயிலைவீற் றிருப்பார். எக

நீதிநூல் வல்லோ ருறைந்திடும் வயித்திய நாதனற் றலந்தனி னிறைந்த, வேதியர்க் குபகா ரஞ்செயு மவர்கள் வியன்முடி தரித்துல காள்வார், கோதின்மூ வேழு குலத்துடன் மகிழ்ச்சி கூர்ந்தொளிர் விமானமே லேறிச், சோதிவெண் கயிலை மால்வரை சேர்ந்து தூயபே ரின்பமுற் றிருப்பார். அ0

நித்திய ஞான வயித்திய நாத நிமலன்வாழ் தலத்தில்வே தியர்க்குப், பத்தியாய்ப் பூசை செய்திடின் முக்கட் பரன்றனைப் பூசைசெய் பலமாம், புத்திரன் றன்னைப் பெறுவர்பூ வுலகம் புரந்திடும் வேந்தராய்ப் புரந்து, சத்திய வானென் றுரைத்திடச் செங்கோல் செலுத்தியே சிவபதஞ் சார்வார். அக

ஆடக மதில்சூழ் வயித்திய நாத னற்புதத் தலத்திலந் தணரைத், தூடணஞ் செய்வோர் சிவார்ச்சனை செயினுந் தூயபூ சாபல னில்லை, தேடரு மறையோர் தமைப்பணி வோர்கள் சிவபதம் பணிபலன் பெறுவார், வேடர்போற் கோபித் திடினிருப் பூசி விழியிலேற் றிடத்துய ருறுவார். அஉ

நேய்தவழ் சூல மணிந்திடும் வயித்திய நாதனற் றலந்தனி னிறைந்த, துய்யவே தியரை யிகழ்ந்தவர் பொருள்சீர் குறைந்திடுந் துன்பமுற் றிடுவார், வைதவர் நாவை யமன்விடு தூதர் வளைத் தரிந் தெறிவரெள் ளளவா, வெய்யதீ நரகி லழுத்திடப் படுவார் மேவுநல் லூழிநாண் மாதோ. அங

வேலைசூ முலகின் மேன்மையாம் வயித்திய நாதனற் றலந் தனில் விளங்கும்; ஆலய மருங்கி னந்தன வனத்தி லசுசியாய் மலசலம் விடுவோர், சூலைநோ யுறுவர் குதந்தனிற் கோசத் துளைதனிற் சலாகையேற் றிடவே, காலகண் டெண்ணற் கரியபல் லூழி காலநீ ணரகில்வீழ்ந் திடுவார். அச

பச்சிலை யிடினும் பலன்றரும் வயித்திய நாதனு லயம்பயி தீர்த்தத், தெச்சிலை யுமிழ்வோர் மூக்கினைச் சிந்தி யெறிபவர் கோழைகான் றிடுவோர், துச்சிலை மகிழு மன்னவர் நாசித் துளையினும் வாயினும் வலிந்து, கைச்சிலை யம்பு கோத்தரக் கெண்ணெய் காய்ச்சியே யூற்றிடப் படுவார். அ௫

தெய்வநா யகனும் வயித்திய நாத சிவனுறை தலத்துள தீர்த்த, மொய்புன லதனின் மலசலம் விடுவோர் முடிவிலா நரகினில் வீழ்வார், ஐயனு லயத்திற் புகும்பொழு திருகா லலைபுன லாற்கழீஇச் செல்வோர், உய்வுறிந் திரபோ கந்தனைப் புசிப்ப ருறைகுவர் மேற்சிவ லோகம். அ௬

காசியி லிலக்கம் வேதியர்க் கன்னங் கனிந்தளித் திடும்பல னெண்ணிப், பேசரும் புகழ்சேர் திருச்சயி லத்தி லொருவருக் குதவினர் பெறுவார், ஆசைதீர்ந் திடவீ ரிலக்கமத் தலத்தி லரியகே தாரமாந் தலத்திற், பூசுரர்க் களித்த பலன்பெறு வார் புள் ளூரிலோர் கவளநல் கினரும். அ௭

உறுபல் ஞமிவ் வயித்திய நாத வுத்தம மகிமைசேர் தலத்தில், வறுமைதீர் தரவங் காரக வார மகேசுர பூசைபண் ணினர்தாம், பெறுவர்பூ மியினி லிட்டகா மியமும் பிரமன்மா லுலகமும் பெறுவார், சிறுபிறை யணிந்த செல்வன்வாழ் வெள்ளி மால்வரை சேர்வர்மே லம்மா. அ அ

பிறந்துல கதனில் வாழ்பவர் வயித்திய நாதனற் றலந்தனிற் பெருமை, சிறந்திடுஞ் செவ்வாய்க் கிழமையி னிறைந்த சிவனடி யார்க்குநல் லன்ன, மறந்திடா தளிப்போ ரன்னமொன் றினுக்கு மன்னுமா யிரயுக மளவு, திறந்தரும் விமான மேறியே சிவலோ கந்தனி னிலைபெற விருப்பார். அ௯

---

அ௫. துச்சில் — சலக்கிரீடை; ஆகுபெயர்.

சுசித்தல மாமிவ் வயித்திய நாத தூயபுண் ணியத்தலந் தன்னிற், பசித்தவர்க் கில்லை யென்றுரை யாது பரிந்தொரு கவளமே யெனினும், புசித்திடக் கொடுப்போ ரிந்திர போகம் புசிப்பர்பொன் னுலகில்வீற் றிருப்பர், நசித்திடும் வினைநோய் பிறப்பொழிந் திடுமே னவில்சிவ் லோகமும் பெறுவார். கூ0

புள்ளிமான் றரித்த வயித்திய நாதன் புண்ணியத் தலந் தனில் வறியோர்க், கள்ளியே யிடிசோ றளிப்பவர் பெறும்பே றளவிட வரிதரி தாகும், வள்ளிதா கியதண் டுலமொரு பிடியத் தலந்தனின் மறையவர்க் களித்தோர், வெள்ளிமால் வரையி லாயிரங் கற்ப காலநா ளினிதுவீற் றிருப்பார். கூக

எத்தலந் தன்னினு மன்னதா னஞ்செய் திடுபவர் பேறுபெற் றிடுவார், அத்தலந் தனிலோர் கோடியந் தணருக் கன்னதா னங்கொடுத் திடும்பே, றுத்தம மான வயித்திய நாத னுறைதலந் தனிலொரு கவளங், கைத்தல நிறைய வளித்தவர் பெறுவர் கயிலைமால் வரையுமேற் பெறுவார். கூஉ

குன்றுழை யேந்தும் வயித்திய நாதன் கனிந்துறை தலந் தனிற் றருமம், ஒன்றுசெய் திடினுங் கோடியா யுறலாற் புண்ணிய கோடியென் றுரைப்பார், பொன்றுமிப் பிறவி யெனநினைந் தினைய தலந்தனிற் புண்ணிய தருமம், நன்றிவாய்ந் திடச்செய் தவர்கள்வாழ்ந் ததன்மே னண்ணிடு வார்சிவ லோகம். கூ௩

நறைகமழ் குமுத வாவிசூழ் வயித்திய நாதனற் றலத்தில்வீற் றிருக்கும், மறையவர் வேதம் வராதவ ரெனினும் வளர்மகா தானயோக் கியராம், அறையுநால் வேதம் வந்தவ ரெனவன் னியர்தமக் களித்தவப் பொலன்வீண், விறையமா மதனு லத்தல வாச வேதியர் மகிமைகூ றரிதே. கூ௪

---

கூ௩. இனியதலம் என்றும் பாடம். கூ௪, விரயம் எதுகை நோக்கி விறையம் என்றெழுதது; விரயம் – மிக்கசெலவு.

இதமிகு வயித்திய நாதனற் றலத்தி லிருந்திடு சராசர மைந்து, வதனமு நெற்றிக் கண்ணுமான் மழுவும் வளங்கெழு நீலகண் டமுஞ்சேர், பதவிபெற் றிருக்கும் வடிவுள ததஞ்ற் படிமிசை யத்தல வாசம், நிதமுள பெயரை மனிதரென் றெண்ணி நினைப்பரோ வறிவுதா நிறைந்தோர். ௬௫

வேறு.

எழுதரிய பசும்பொனுல குறையுந் தேவ ரிடுக்கண்டீர்ந் திடவிமையோர் வேந்தன் வாழக், கொழுதியளி முரல்கடப்பந் தார்சேர் முத்துக் குமாரநா யகன்சூரன் மார்பு கீறும், ஒழுகொளிவேல் வாங்குநெடும் புகழ்சே ரூர்பூ வுறைகூந்த லம்மையருச் சனைசெ யூர்சூழ்ந், தழைமினெனக் காலனுரை யாத மூதா ரதனுமம் புள்ளிருக்கு வேளூ ராமால். ௬௬

வட்டமதி போலுமுக மாதரஞ்ச வந்துபிடித் தினைவிட்டுப் போகே னென்னும், நெட்டுடற்பைங் கட்பகுவா யலகை யம்மை நேர்முகம்பார்த் திருந்துதலை சுற்றி யாடி, விட்டுவந்த வழி பார்த்தே யோர்டு மேன்மை விளங்குமூர் மேவுபெரும் போக நல்கி, அட்டசித்தி முத்தியுந்தந் தருளு மூதா ரதனுமம் புள் ளிருக்கு வேளூ ராமால். ௬௭

எண்ணிடுநா லாயிரநா னூற்று நாற்பத் தெட்டுவியா தியி னுறுநோய் தீர்க்க வெண்ணித், தண்ணிலவு சொரிகயிலை மலையி னின்று தயிலபாத் திரமுஞ்சஞ் சீவி வில்வ, மண்மருந்து மெடுத் தம்மைத் தையல் கூடி வாத்தழைந்த வெள்ளெருக்கின் வனத் தின் மன்னி, அண்ணல்வயித் தியனுகி யருள்செய் மூதா ரத னுமம் புள்ளிருக்கு வேளூ ராமால். ௬௮

வளமிகுநல் லறுசுவைய வடிசி லன்னம் வகையறிந்து சமைத்தபருப் பொழுகு நெய்தோய்ந், திளகிடா திருந்தகட்டித் தயிர்பு சித்தற் கிதமான கனிவடைபிட் டப்ப மற்றும், உளங்கிழச் சிவனடியார் தமக்கு வாய்ந்த வூரிலுள்ள மடங்கடொறு மொழியா தென்றும், அளவின்மகே சுரபூசை செய்யு மூதா ரதனுமம் புள்ளிருக்கு வேளூ ராமால். ௬௯

உரியதநு கரணபுவனம்பு சிப்பென் றுற்பவிக்கு நாட்சிரசி னெழுத்திற் கீடாக், கரியநெடுங் கடல்புடைசூ ழுலகின் மீதிற் கற்பகா லங்களினுந் தீரா தான, பெரியவினை தீர்த்திடுமந் நகரில் வந்து பிறந்தாலு மிறந்தாலும் பிரமன் மாலுக், கரியசிவ போக முத்தி யளிக்குமூதா ரதனுமம் புள்ளிருக்கு வேளூ ராமால். ௧௦௦

வே று.

வளமிகு சடாயு புரிவளர் கந்த புரிவரம் வேண்டினர் தங்கள், உளமகிழ் தரவே யளித்திடும் வேத புரியுயர் மகிமைகூ றரிதாய்க், கிளர்தரு பரிதி புரியிவை யன்றிக் கெழுமியே யருச்சனை புரிந் தோர், அளவில ரன்னோர் பெயரினுற் பெறும்பே ரளவிட லரிதரி தாமால். ௧௦௧

இந்திர திசையில் வயிரவன் வீர பத்திர னிலகுமேற் றிசையில், வந்தகா ரிருள்போல் வடிவுள காளி வடதிசை துர்க் கைதென் றிசையிற், சுந்தர நிறைந்த வையனை யென்றுஞ் சூழ்ந்துகாத் திருப்பர்சொல் லரிய, கந்தநாண் மலர்ப்பூங் காமிகும் வேளூர்க் கிணைகரை கண்டுகூ றரிதே. ௧௦௨

என்றுவண் புகழ்சேர் சூதமா முனிவ னிலகிய தலப்பெரு மகிமை, நன்றினி துரைப்ப வுணர்ந்திடு முனிவர் நவிலரு மகிழ்ச்சிபூத் தருகி, வென்றிசேர் தீர்த்த மகிமையை யுணர விரித்தருள் புரியெனப் பகர்ந்தார், துன்றிய வுரோம புளகித மல்கத் தூயவன் சொல்லன்மே யினனுல். ௧௦௩

வே று.

சொலற்கரு மகிமை பெற்ற சூதமா முனிவன் சொன்ன
தலப்பெரு மகிமை தன்னை யுரைத்தனன் றரணி மீதில்
விலக்கரும் வினைக டீர்த்து வேண்டிய வரத்தை நல்கிப்
பலத்தினை யளிக்குந் தீர்த்தச் சருக்கமேற் பகர்வன் மாதோ. ௧௦௪

தலவிசேடச்சருக்கமுற்றிற்று.

ஆகூ திருவிருத்தம் ௨௫௨.

---

௧௦௨. இந்திரன்றிசையில் வீரபத்திரன், மேற்றிசையில் வைரவனெனக் கூட்டுக. செய்யுளாதலின் முறைபிறழ வைத்தார்.

# ௩. சித்தாமிர்ததீர்த்தச்சருக்கம்.

செய்தபுண் ணியத்தி னுருவமே யாகித் தெளிந்தசித் தாமுத மகிமை, எய்தரும் புகழ்சேர் நைமிசா ரணியத் தினிலுறை யருந்தவர்க் கினிதாய்ப், பெய்ததெள் ளமுதப் பெருக்கெனச் சூத முனிவரன் பெட்புமீ தூரக், கைதரு நெல்லிக் கனியென விளங்கக் காட்டுதல் செய்தன்மே யினனால். க

விண்ணவர் துதிசெய் திறைஞ்சிடுஞ் சித்தா முதத்தினை விரும்பிடா தவருங்,கண்ணினு னுடி லவர்நெடும் பாவங் கலங்கியே நீங்கிடு மெனின்மேல், உண்மையாய் நாடிப் படிந்திடு மவர்க ளுளைந்திடு பாவமன் னவரை, நண்ணிடா தோடு மென்னவே கூற னயப்புறு புகழதோ வன்றே. உ

இன்னமு தாகி விளங்கிய சித்தா முதத்தினை யிலகிய காதன், மன்னிமீ தூர வலஞ்செய்து வந்து மகிழ்ந்துநீ ராடல் செய் திடுவோர், ந்ன்னிய மஞ்சேர் முறைமையா சமன நலம் பெற விரண்டுசெய் தன்பின், அன்னநல் லிருடி யொடுமெனு வோதி யமர்ந்துநீ ராடுதல் விதியாம். ௩

சூலவிய கிருதயுகந்தனின் மகிமை கொண்டகோட் சீரதீர்த் தப்பேர், மலர்தலை யுலகில் விளங்கிடுந் திரேதா யுகம்வள ரிட்சுசா ரமதாம், அலகில்பல் புகழ்சேர் துவாபர யுகத்தி லதன்பெயர் சடாயுதீர்த் தமதாம், இலகிடுங் கலியில் யாவருஞ் சித்தா முத மென வெடுத்துரை செய்வார். ௪

தேன்றுளித் திலகுந் தருநிழ லுறையுந் தேனுமா நிலந்தனிற் போந்து, மூன்றுகண் படைத்த வயித்திய நாதன் முளரிநாண் மலர்ப்பதம் பணிந்து, தோன்றுதன் மூலையிற் சுரந்திடும் பாலாற் றூயமஞ் சனவபி டேகம், போன்றுதான் பொழியும் பொழுததுபெருகிப் பொற்புறு தீர்த்தமே வியதால். ௫

தேண்டிரைக் கடல்சூழ் தாணியி னிறைகோட் சீரதீர்த் தப்பெயர் திகழுந், தொண்டுசெய் பத்தி யுளனொரு வனுக்குத் தூயசெங் கரும்பினின் சுவையாய்க், கண்டுள மகிழ விருத்தலா லப்பேர் கவின்பெற விளங்கிடும் பல்கால், மண்டுதீம் புனலின் முழுகியே சடாயு வசித்தலா லப்பெயர் வழங்கும். ௬

வந்துதாம் பணியுஞ் சித்தர்வா னுலகின் மன்னிய வமுதினை யெடுத்தே, அந்திவான் மதியுங் கொன்றையு முடித்த வண்ண னீண் முடிமிசைச் சொரிந்தார், சுந்தர வமுதம் பெருகிமே லெழுந்து தூயதீர்த் தம்புகுந் ததனால், இந்தமா நிலத்தி லனைவ ருஞ் சித்தா முதமென விசைத்தன ரம்மா. எ

பொன்னிமா நதிசூழ் தீரமீ துறையும் பூசுரன் சுந்தர னென் போன், மன்னும்வெண் குட்ட வியாதியால் வருந்தி மகிமைசேர் தலந்தொறுந் திரா,தென்னசெய் வேனென் றிரங்கிமேற் சித்தா முதந்தனைக் கண்டெழிற் றீர்த்தந், தன்னின்மூழ் கின்னற் றிவ் விய தேக மானது கண்டுதான் மகிழ்ந்தான். அ

சங்கரன் வெயர்வை தனிற்பிறந் திடுமங் காரகன் றனதுசெங் குட்டம், பங்குனிச் செவ்வாய்க்கிழமையிற் சித்தா முதப்புனல் படிந்துதீர்ந் தனன்பின், செங்கழு நீர்நல் லோடையொன் றமைத் துத் திகழுமம் மலரினை யெடுத்தே,அங்கணற் கென்று மருச்சனை செய்தே யளப்பரு நல்வரம் பெற்றான். கூ

குருமனை யாளைத் தொடுங்கொடும் பாவங் கொலைகள வாதியா ய்த் தொடர்ந்து; பெருகிடும் பாவ மனைத்தையுந் தீர்க்கும் பிடித் தவே தாளநோய் போக்குந், தருசிவத் துரோகி சற்குருத் துரோகி தன்பிதிர்த் துரோகியே யன்றி, வருவிசு வாச பாதகன் சித்தா மூதப்புன ரேயின்மாற் றிடுமே. க0

கன்றினை யிழந்த பசுவினைத் தளைந்து கறந்துணும் பாவம் வீண் செலவாய், நின்றிடு தருவைக் களைந்திடும் பாவ நெருக் கியே குளக்கரை யழிக்க, ஒன்றிடும் பாவந் தயிலம்விற் றிடவந் துறும்பெரும் பாவமேற் செய்த, நன்றியைக் கொன்ற பாவமுஞ் சித்தா முதப்புனல் படியகைந் திடுமே. கக

முளைத்திடும் பாவக் காட்டினுக் கதனின் மூண்டெழு காட் டுறு தீப்போல், வளைத்துநீ றுகச் செய்திடும் வறுமை தீர்த்திடும் வருங்கய ரோகந், திளைத்திடும் பிரம கத்தியுந் தீர்க்குங் கீழ்மையர் கியசுரா பானம், விளைத்திடுந் தோட மனைத்தையும் போக்கும் விளங்குசித் தாமுத தீர்த்தம், கஉ

பேசிடும் பலபீ சத்தினுக் குரித்தாய்ப் பிறந்தவன் கேடுதா னினைப்போன், கூசிடப் பஃறே டந்தனைக் கூறுங் கொடியவன் பந்திபே தகஞ்செய், தூசினைப் பெறுவோன் மித்திரத் துரோகி தொக்கபொய்ச் சாட்சிசொல் வோனும், ஏசுற வருதோ டந்தனைச் சித்தா முதப்புன லெளிதொழித் திடுமே. கடு

விதிமனை வியரை வேறுசெய் பாவம் வேதநூ லோதுவித் தடங்கா, அதிகவா சையினுற் பொருளினை வாங்கு மப்பவம் வேள்விசெய் மறையோன், துதிபெறு மனையா டனைத்தொடும் பாவந் தூயபொன் றிருடிய பாவங், கதிதரு சித்தா முதப்புனன் மூழ்கி யேறுமக் கணத்தின்மாய்ந் திடுமே. கச

காரிரும் பதனைக் கவர்ந்திடும் பாவங் கண்டசை யோகபா தகமிப், பாரினிற் கொடிய பாவிதன் னுடனே பரிந்துணும் பாவநிந் திப்போன், ஊரினைக் கெடுப்போன் மலர்ப்பொழி லழிப்போ னுடன்கலந் துறவுசெய் பாவஞ், சீர்மிகு சித்தா முதப்புன லாடிற் றீர்ந்திடு மக்கணந் தன்னில். கரு

திருடிய மனையிற் றீயிடும் பவமுந் தீர்ந்திடச் செய்துநன் னெறிசேர், தெருளினை யறவே யளித்திடுஞ் சித்தா முதப்பெருந் தீர்த்தமான் மியத்தின்,பொருடெரிந் தனயான் புகன்றன னிதனுட் பொருந்திய சரித்திர மான, இருடியர் முறைமை கூறிய சருக்க மினியெடுத் துரைசெய்வே னம்மா. கசு

சித்தாமிர்ததீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் உகூஅ.

---

கடு. சாட்சிசொல்வோனும் என்பதில் உம்மை அசைநிலை; பிறந்தவன், நினைப்போன், கொடியவன், பெறுவோன், துரோகி, சொல்வோன்,தோடம், ஏசுறவருந்தோடம் என்க. எண்ணும்மை யாக்கின் பொருட்பேறின்றும்.

## ச. இருடியர்முறைமைகூறியசருக்கம்.

அளந்தறி வரிய புராணமூ வாறு மருங்கலை யாவையு முணர்ந்து
விளங்கிய சூத முனிவரன் கமல விரைமலர் வாண்முகநோக்கி
வளம்பெறு சித்தா முதப்பெருந் தீர்த்த மற்றுள தீர்த்தநீராடக்
கிளந்திடு காலங் காவலர் முதலோர் கிளர்விருக் கமும்பகரென்றார்.

வேறு.

ஒவ்வார்புர நகைசெய்திடு மொருவன் விதிதவறு
அவ்வாய்மைநன் முனிவோர்பக ரெனவன்புறு மொழிகண்
டிவ்வாறென வுணரக்கரை கண்டெண்ணி யெடுத்தே
வெவ்வேறத னியல்யாவும் விரித்தோத நயந்தான். உ

இத்தரணி தனிலேழ்நதி யினிலுத்தம மாகிச்
சுத்தோதக மீருமெழு கடலிற்சுசி தரலால்
எத்தாபத ருஞ்சூழ்ந்திட வெண்ணும்முதன் மையதாஞ்
சித்தாமுத மெனவேதிகை தோறும்புகழ் பெறுமே. ங

வேறு.

திகழ்தரு மங்கா ரகன்றனக் கடுத்த தென்றிசை யதுதனின் மிகுநற், புகழ்வளர் வாலாம் பிகையருள் கொழிக்கும் பொற்புறு சந்நிதி முன்னர், நிகழ்குளி ரமுத மெனநலந் தழைந்து நிறைந்த சித் தாமுதம் விளங்கும், அகழ்கருங் கடல்சூ ழுலகினுக் கினிய வதிகபாக் கியந்தர மாதோ. ச

வலஞ்சூ ழயன்புள் ளரசுதிரு மான்மெய்ப் புகழ்சேர் சதாநந்தன்
நலஞ்சேர் கிருத முதனன்கிற் கிருடிநவிலும் விருக்கமெழில்
இலங்கி யிடும்வெள் ளெருக்குமுன மியம்பு மவரை விருக்கமதை
வலஞ்செய் துவந்து நீராடின் மகிழ்ச்சி தருநல்லுத்தமமாம். ரு

சுருதி தேடி யோலமிடுந் தூயன் றனக்குப் பாங்கணித்தா
நிருதி திசையி லணையபெருந் தீர்த்த நிறைந்தேயிலகியிடுங்
கருதியுலகம் புகழ்வயித்திய நாதன் றெய்வங் காசினியிற்
பொருதி வருதீங் கொழித்திரட்சை புரிவோன் பூமி சுதனம்மா. சு

---

க. காவலர் முதலோர் இவர் என்பது முன்னர்க் கூறப் படும்; ஆண்டுக்காண்க. ரு. புள்ளரசு — கருடன். சு. பூமிசுதன் — செவ்வாய்.

சித்தா முதநற் றீர்த்தமுதற் சேரு மிருப துடனான்காய், வித்தா ரமுமேன் மையும்படைத்து விளங்கு தீர்த்தங் கோடி குலம், உத்தா ரணம்பண் ணிடுந்தெரிசித் தோர்க்கும் பரிசித் தோர்தமக்கும், எத்தா கமுந்தீர்ந் திடச்சித்தர்க் கமுத மழை பெய் தெய்தியதால். எ

படிமேற் சித்தா முததீர்த்தம் பணிந்து முழுகு மவர்பாவம், அடிவே ரற்ற மரம்போல்வீழ்ந் திடுமோர் துளிநீ ரருந்தினர்தாம், மிடிவே தனைதீர்ந் தளகைநகர் வேந்தன், மிகுபாக் கியம்பெறுவார், வடிவார் கூந்தன் மனைவியுடன் மகப்பேற் றினையும் பெறுவாரே. அ

திகழும் சித்தா முததீர்த்தந் தனையோர் வலஞ்செய் திடுமவர்தாம், புகழு மேருப் புடைசூழும் புவிமூ வலஞ்செய் பலன் பெறுவார், நிகழ்பூம் புனலிற் படிந்தெழுந்து நிதிபொன் னளித்து நின்றுள்ளம், மகிழு மவரெண் ணரிதான மகஞ்செய் பேறு மிகப்பெறுவார். கூ

வேறு.

நித்தஞ் சித்தா முததீர்த்த நியமம் புரிந்தே யாடினர்தாம்
பத்து நூறு யிரம்பிரம கத்தி முதற்பா தகந்தீர்வர்
சித்த மகிழ்கூர் செல்வமிகப் பெறுவர் சிவலோ கமும்பெறுவார்
முத்தி வீடும் பெறுவர்தமை யெண்ணிமொழிவ தரிதாமால். கo

வேறு.

மாற்றரிய பிறவிவே ரகழ்ந்து மேன்மை மன்னிவளர் பேரின்ப வீடு நல்கத், தோற்றியிடு மிருடியர்தம் முறைமை கூறுந் தூயசருக் கந்தனையீண் டுரைத்தேன் றொல்சீர், ஏற்றமுள நதிதீர்த்த மனைத்துஞ் சூழ விருந்தெண்ணி யெழுந்துகந்த புரியில் வந்து, சாற்றரிய கங்கைமிகு பாவந் தீர்ந்த சருக்கமினிப் பகர்ந் திடுவன் றமியன் மாதோ. கக

இருடியர்முறைமைகூறியசருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் உஎகூ

---

எ. விஸ்தாரம் = வித்தாரமென்றாயது உத்தாரணம் - உயர்வித்தல்.

## ரு. * கங்கைபாவந்தீர்ந்தசருக்கம்.

கோங்கவிழ் காவின் மலர்கிறை குமுத வதியிரை வதியெழிற் குமரி
கங்கைமன் னுவதி கவுதமை கபிலை காவிரி காத்தியா யனிவெண்
சங்குரு லுளைந்து திரிந்திடும் யமுனை சரஸ்வதி தாம்பிர பர்ணி
துங்கபத் திரிகோ தாவரி யேம வதியொரு தூயபொன் முகலி. க

சந்திர பாகை மலகரி ப்ரமதி தருபிர யாகையே முதலாம்
இந்தமா நதிகள் பராசர தீர்த்த மிந்திரதீர்த்தமீ தன்றி
நந்திதன் றீர்த்தஞ் சண்டிகா தீர்த்த நலமிகு சூரிய தீர்த்தங்
கந்ததீர்த் தங்கண் ணுதற்சிவதீர்த்தங் கவின்பெறு சக்கர தீர்த்தம்.

வேறு.

எழில்பெருகு பாதாள கங்கா தீர்த்த மிலகுமுனி தீர்த்த
மிவை யன்றி யின்னம், மொழிதருபுண் ணியதீர்த்தஞ் சேர்ந்
தோர் கால முளரிமல ரயன்சரணம் வணங்கி நின்று, பழிபடபா
வங்களெங்க ளிடத்தின் மூழ்கிப் பற்பலபேர் நீங்கினரப் பாவம்
வந்து, குழியினமற் றவைதீர்க்கு முபாயங் காணேங் குளம்பாசி
மூடியிடுங் கொள்கை போன்று. ந

நின்றனமென் றவைவகுத்துக் கூற வேதா நிருமலனை
யொரு முகுர்த்த நினைந்து பின்னர், நன்றுரைசெய்தனவென்றே
யாசி கூறி நலம்பெருகு முபயகா விரியி னுப்பண், வென்றிதரு
மொருதல முண் டதன்பேர் கூறின் வேதபுரியாமதனிற் றையல
லம்மை, என்றுமினி தமர்ந்திடுஞ்சந் நிதிமுன் னுக வெழின்
மிகுஞ்சித் தாமுதஞ் சூழ்ந் திருக்கு மாதோ. ச

---

* முக்கிய தீர்த்தத்தைக் கூறவே இனம்பற்றி ஏனைய தீர்த்தங்களும் அமையும். இது பின்று நின்றனம் என ௪-ம், பாட்டுடன் சேர்ந்து முடிதலால், குளகம், அதனை "குளகம் பலபாட் டொருவினை கொள்ளும்" என்னுஞ் சூத்திரத்தாலறிக.

போங்கியிடு மகிமைகூ றரிதாய் மேலாம் புகழ்பெறுசித் தாமுதநற் றீர்த்தந் தன்னிற், பங்குனிமா தப்பருவ தினத்தி னீவிர் பரிந்துநீ ராடியெழும் பொழுதிற் பாங்கர், எங்குநிறை திமிரமிரி வியைக்கண் டோடி யிடுமெதுபோ னீங்கியிடு மிதன்மேல் வந்தே, உங்களிடத் தினின்மூழ்கி ஞேர்தம் பாவ மொழித்திடு சத் தியுமுங்கட் குண்டா மென்றான். ரு

## வேறு.

அண்ணலங் கமலப் பொகுட்டுறை விரிஞ்ச னவ்வுரை பகர்த லு நதியுந், தண்ணறும் புனல்சூழ் தீர்த்தமு மெழுந்து தற்பர வயித்திய நாத, புண்ணிய னமருந் தலந்தனில் வந்து பொருந்து சித் தாமுத தீர்த்தம், உண்ணிறை காதல் பெருகிட மூழ்கி யொழித்தன பாவம்யா வையுமே. சு

சீதவான் புனல்சூழ் நதிகளுந் தீர்த்தம் யாவையுஞ் சேர்ந்து மேல் வயித்திய, நாதனை வணங்கி யநுமதி பெற்று நற்றல நயம்பெ றச் சார்ந்த, ஆதலாற் சகல தீர்த்தநற் பலன்சித் தாமுத மாடினர் பெறுவர், மேதகு மீன மாதவுத் தரநாள் விளங்கிமே லதிகமா மாதோ. எ

தவப்பெரும் பலப்பே றெனத்தழைந் தருமை சார்ந்தசித் தாமுத தீர்த்த, நவக்கிர கங்கள் படிந்தெழுந் தனேக நல்வரம் பெற்றன நீங்காப், பவச்சுழ லழுந்தித் தியங்குமா னுடர்க்குப் பலித்திடு திசாபலன் மிகுந்தே, உவப்பினைப் பெறவங் காரக னனேக முயர்வரம் பெற்றனன் மாதோ.

## வேறு.

மடலவிழ் கமலப் புத்தே ளுரைப்பதை மனத்துட் கொண்டு
கடல்புடை சூழும் பார்மேற் கங்கைவந் திதனின் மூழ்கித்
திடமுறப் பாவந் தீர்ந்த சருக்கமீண் டுரைத்தே னிப்பாற்
படர்புகழ் மாத மேன்மைப் பலன்பெறு சருக்கஞ் சொல்வேன். கூ

கங்கைபாவந்தீர்ந்தசருக்கமுற்றிற்று.

ஆகதிருவிருத்தம் உஅஅ.

---

அ. திசாபலன் – கிரகநிலையாலுண்டாகும் பிரயோசனம்.

# ௬. மாதபலன்கூறியசருக்கம்,

மன்னும் வாய்மைசூழ் முனிவரர் சூதமாமுனிவன்
பன்னு கேள்விசேர் செவிக்கமு தாமெனப் பகுத்தே
இன்ன தன்றியித் தீர்த்தமான் மியமுழு வதுமிந்
நன்னெ றிக்கதி யாம்பெற நவின்றரு ளென்றூர். ௧

## வேறு.

பொருந்துநன் முனிவர் கூறப் புராணமா முனிவன்மேன்மை
திருந்திய கன்னி மாதஞ் சேரமா வாசை தன்னில்
அரும்புகழ் நிறைந்த சித்தா முதப்புன லாடி னோர்கள்
பெரும்பிணி தீர்வ ரன்னோர் பிதிர்மகிழ் கூர்வ ரன்றே. ௨

துய்யநற் றுலாத்தில் வாய்ந்த சுக்கில பக்கந் தன்னில்
எய்திய நவமி சித்தா முதநிறை யெழினீ ராடின்
வையக முழுதுஞ் செங்கோன் மனுநெறி செலுத்தி வாழ்ந்து
பையர வணிந்த நாதன் பதநிழ லினிது வாழ்வார். ௩

விருச்சிக மாதந் தன்னின் மேவிய சோம வாரந்
திருத்தமா கியநற் சித்தா முதற்செழும் புனலின் மூழ்கிற்
கருத்தினி னினையு மிட்ட காமியம் பெறுவர் வெள்ளிப்
பொருப்புறை குவர்பே ரின்பம் பொற்புறப் பெறுவர் மாதோ.

ஓதிய தனுமா மத்ததி லுதித்திடு பருவந் தன்னில்
ஆதிரை சேரு நாட்சித் தாமுத மாடி னோர்கள்
கோதிகந் திலகு தேவர் கடன்கழித் தரசர் கோவாய்
வார்திரைக் கடல்சூழ் வையம் புரந்துநீ டூழி வாழ்வார். ௫

எவ்வகைப் பட்ட பாவி யாயினு மகர மாதஞ்
செவ்விசேர்ந் திலகுஞ் சித்தா முதப்புனல் செவ்வாய் வாரம்
ஒவ்விய மனத்த ராகி யொருதின மூழ்கி னோர்கள்
அவ்வரும் பாவ நீங்கி யளவில்பே ரின்பஞ் சேர்வார். ௬

---

௨. பெரும்பிணி — அங்கமெலாங் குறைந்தழுகுநோய் முதலியன, ஆணவபந்தமுமாம். ௩. துலாமாதம் — ஐப்பசிமாதம். ௪. விருச்சிகமாதம் — கார்த்திகை மாதம்.

வேறு.

மகர மாதந் தனிலாதி வாரஞ் சித்தா முததீர்த்தந்
திகழ முழுகு மவரறிவு சேரும் புதல்வன் றனைப்பெறுவார்
புகழ்சேர் திதிநற் பதினொன்கிற் புனித முறுமப் புனல்படிந்தோர்
சகல தனமு நவமணியுந் தமது மனையிற் சேர்ந்திடுவார். எ

வேறு.

தகரவார் கூந்தற் றைய லம்மைசந் நிதிமுன் றாய
புகழ்நிறைந் திலகு சித்தா முதப்புனல் பொற்பு வாய்ந்த
மகரநன் மாத மெந்த வாரமே யெனினும் வந்து
திகழ்தர முழுகு வோர்வாழ் செல்வநற் கதியுஞ் சேர்வார். அ

வேறு.

எழுந்து மகர மாதமுழு தினுநற் சித்தா முததீர்த்தம்
அழுந்தி முழுகி யேறுமவர் பெறும்பே றம்மா வெண்ணரிதாஞ்
செழுந்தண் புனலம் மாதமதிற் செவ்வாய்க் கிழமை யுத்தமமாங்
கொழுந்தா ருரோம சங்கைசிவ லோக மகிழ்ச்சி கூர்ந்துறைவார்.

மன்னுஞ் சித்தா முததீர்த்த மாசிச் செவ்வா யினின்மூழ்கிப்
பொன்னிற் செய்த கோதானம் புகழ்மா மறையோர்க் கினிதளித்
சென்ம வந்தி மிருத வந்தி செப்புங் கதலி வந்தியிவர் [தாற்
நன்மை மிகுபுத் திரன்றனைநா னிலமு மகிழப் பெற்றிடுவார். ௧௦

வேறு.

எங்கணு யகிமுன் னெழில்பெற விளங்கி யிருந்தசித் தாமுத தீர்த்தம், பங்குனி மாதப் பருவமூழ் கினர்கள் பாவமோர் கோடி செய் திடினுஞ், செங்கதி ரவனைக் கண்டகா ரிருள்போற் றீர்ந் திடுந் திருநிலம் புரந்து, பொங்கொளி சூழும் விமானமே லேறிப் புகழ்சிவ லோகமேற் புகுவார். ௧௧

---

௧௦. சென்மவந்தி – பிறவிமலடி. மிருதவந்தி – ஐந்துவயதளவிருந்து பிறந்தபிள்ளைகளை இழப்பவள். கதலிவந்தி – இரண்டாவது குழந்தை பிறந்தபின் முதற்பிறந்த குழந்தையை இழக்கப்பெறுபவள்.

உகந்தோறும் பெயர்வே றுள்ளதாய் மகிமையோங்குசித் தாமுத தீர்த்தம், மகந்தனின் மகிழ்ச்சி நல்குநன் மீனத் தமர்ந்த வுத் தரத்திலா டினர்தாம், இகபர மிரண்டி னெய்துநற்பலப்பே றெய்துவ ரிந்தமா நிலத்திற், பகர்ந்திடு மிராச சூயமோர் பதினு யிரஞ்செயும் பலன்பெறு குவரே. கஉ

வேறு.

மீன மாதந் தனில்வருநல் வெள்ளி வார முத்தரஞ்சேர்ந்
தான பருவந் தனிற்சித்தா முதந்தோய்ந் திடுவா ரரியசிவ
ஞானம் பெறுவர் இருச்சரமோர் பதினு யிரநற் பலன்பெறுவர்
ஈன மான பிறவியைநீத் தினிய சிவலோ கமும்பெறுவார். கங

மீன மாதப் பௌமதினம் விளங்குஞ் சித்தா முதப்புனலிற்
றூனஞ் செய்வோர் நூறுகுலந் தம்மைக் கரையேற் றுவர்களபி
மான முடனே யமாவாசை பருவ மதிசூ ரியகிரண
மான தினமப் புனன் மூழ்கு மவர்தாம் பெறுவர் சிவலோகம். கச

மாக மாதம் பங்குனிநன் மாத மேட மாதமதில்
ஏகமாதம் பூமிசுத னெழில்சேர் சித்தா முதநீரில்
தேகம் புனிதம் பெறமூழ்கி யேறு மவர்சேர் குவர்மிகுந்த
போக மன்றிக் இருச்சரமோ ரையா யிரஞ்செய் புண்ணியமே. கரு

இடப மாதம் பருவதினத் திணையும் விசாகந் தனிலெழுந்தே
அடரு மினிய படித்துறைசூழ்ந் தழகார் சித்தா முததீர்த்தம்
உடனற் புனிதம் பெறத்தோய்ந்தோ ருலகிற் சகல பாக்கியமுந்
திடவிற் பனபுத் திரன்றனையும் பெறுவர் சிவலோ கமும்பெறுவார்

---

கங. மீனமாதம் - பங்குனிமாதம். கச. பௌமதினம் - செவ்வாய்க்கிழமை. கிரகணம் - கிரணமெனத் தொக்கது.
கரு. மாகமாதம் - மாசிமாதம். மேடமாதம் - சித்திரைமாதம். ஏகமாதம் - ஒருமாதம். கசு. இடபமாதம் - வைகாசிமாதம். விற் பனபுத்திரன் - வித்தைவிரும்பும் புதல்வன்.

வேறு.

விளங்கிடுந் துதிசேர் சித்தா முதப்புனன் மிதுன மாதங்
கிளர்ந்திடு நலன்சூழ் செவ்வாய்க் கிழமையின் முழுகு வோர்நல்
வளம்பெறு கல்வி வாய்ந்த புதல்வனைப் பெற்று வாழ்வார்
அளந்தறி வரும்பே ரின்பப் பேறுமேற் பெறுவ ரம்மா, கஎ

புவிநிறை தீர்த்தந் தம்மிற் புனிதமாம் புகழ்ந்து கேட்போர்
செவியினுக் கமுதாஞ் சித்தா முதப்புனல் செழித்து மேன்மை
கவினுறுங் கடக மாதங் கதிரவ னுதய காலந்
தவிருறா திலகமூழ்கிற் சகலபாக் கியமுஞ் சேர்வார். கஅ

அற்புத மிலகி மேலா மாவணி மூலஞ் சேரும்
நற்புகழ் படைத்த செவ்வாய்க் கிழமையி னலஞ்சேர்ந் தென்றும்
பொற்புவாய்ந் திருந்த சித்தா முதச்செழும் புனலின் மூழ்கிற்
பற்பல போக வின்பம் புசித்துமேற் பதவி சேர்வார். கக

துகளற வுணர்ந்த மேன்மைத் தூயமா முனிவர் கேட்ப
அகமகிழ்ந் திலகு சூத மாதவ னருள்செய் மாதப்
பகர்பலச் சருக்க வாய்மை பகுத்துரை செய்தே னிப்பால்
தகவுறு தருப்ப ணஞ்செய் பலன்பெறு சருக்கஞ் சொல்வேன். உ०

மாதபலன்கூறியசருக்கமுற்றிற்று.

ஆகதிருவிருத்தம் ௱௨०அ.

---

## எ. தருப்பணபலன்கூறியசருக்கம்.

பேருமை பெறுஞ்சித் தாமுதநீர் தோய்ந்து பிதிர்க்கள் கடன் கரைமேல், தரும விதியாற் செய்திடுவோர் தங்கண் மரபிற் கோடிகுலம், வருபற் பலரும் சிவலோகம் வாழ்வார் தீர்த்தக் கரைமீதில் பருகத் தண்ணீர்ப் பந்தல்வைத்தோர் தாமு மனைய பலன்பெறுவார். க

---

கஎ. மிதுனமாதம் — ஆனிமாதம். கஅ. கடகமாதம் — ஆடி மாதம்.

பொங்குஞ் சித்தா முததீர்த்தப் புனித நீரிற் படிந்தெழுந்து திங்கட் கலைசே ரமாவாசைத் தினத்திற் பிதிர்தர்ப் பணஞ்செய் வோர், தங்கள் பிதிர்க டமைக்குறித்தே தானஞ் செய்வோர் பிதிர் களுடன், துங்க விமானந் தனிலேறிச் சூழ்வர் தூய சிவலோகம்.

திலத்தாற் சித்தா முததீர்த்தத் தீரந் தனிற்றர்ப் பணஞ்செய் வோர், கலத்தாற் கோடி தினங்கயாசி ராத்தஞ் செய்த நற் பலமாங், குலத்தாற் பிதிர்க டமைமனத்திற் குறித்தே யாம மிரணியஞ்செய், பலத்தாற் கோடி குலத்தொடும்போய்ப் பதிய வுறைவர் சிவலோகம். ௩

பதினன் காநாட் ப்வுமதினஞ் சேரிற் பகர்புண் ணியதினமாந் துதிசேர் சித்தா முததீர்த்தந் தோய்வோர் கடல்சூ ழுலகாள் வார், அதிமா மோக நவமணியா பரண மளிப்போர் குலங்கோடி கதிசேர்ந் திடுநற் சிவலோகங் காணி கொள்வ தெளிதாமால். ௪

பயனைத் தருஞ்சித் தாமுதநீர் பவும வாரம் விதிபாதம்
அயன மருத்தோ தயஞ்சோம வார மாதி சேடனுடற்
சயனத் திருமாற் றுவாதசியே தந்திச் சாயை கபிலைசட்டி
நயமுற் றிடத்தோய்ந் திடிற்கோடி யாகஞ் செய்த நற்பலமாம். ரு

சிவமாங் கிரகந் தனக்கினிதாய் நயக்கும் பொருளுங் கண்மணி யுஞ், சிவநா பமுஞ்சங் கமும்பெருகு சித்தா முதநீர் படிந்தெழு ந்தே, அவமே பொழுது தனைப்போக்கா தருமா மறையோர்க் களித்தவர்தாந், தவமே செயினுங் கிடைப்பவரி தாகும் பேறு தனைப்பெறுவார். சு

---

௩. ஆமம் — ஆமசிராார்த்தம். அது பச்சையரிசி முதலியன சிரத்தையோடு தானஞ்செய்தல்.

௪. மங்களவாரத்தோடு சேர்ந்த சதுர்த்தசி திதியேயன்றிப் பிரதோஷமுங்கொள்க. பிர — முன், தோஷம் — இருள். முன் னிருளையுடையது. ரு. தந்தி — பாம்பு, இராகுகேதுக்கள். இங்கே சொல்லப்பட்டவைகளன்றி அமாவாசை, பௌர்ணிமை, விஷு—, என்னும் புண்ணிய காலங்களும் கொள்ளப்படும். இது முதநூ லிற்கண்டது. சு. சிவநாபம் — சாளக்கிராமத்தின் சிவமூர்த்தம்

சேரு மிருபத் தேழ்நாளிற் சென்ம நாட்சித் தாமுதநல் நீருண் முழுகி யேறினர்நீ ணிதியம் பெறுவ ரேழ்குலமுஞ், சாரு மரிய சிவலோகந் தயங்கு மந்நீர் நிதந்தோய்வோர், மேரு வரை போற் புகழ்நிறைந்தே மேலாம் பதம்பெற் றினிதிருப்பார். எ

புகழ்சேர்ந் திடுபுண் ணியகாலம் புனித மிகுசித் தாமுதநீர் திகழமுழுகி யேறுமவர் சேர்வர் நூறு கிருச்சரஞ்செய், நிகழ்நற் பதவி யஃதன்றி நிமலன் சிவலோ கமும்பெறுவார், இகழ்வர் பிறவி யெனும்பெரிதா யிருக்கும் வினைவே ரினைக்களைந்தே. அ

வே று.

மிக்கசீர் மகிமை பெற்ற தருப்பண பலத்தின் மேன்மை புக்கெழிற் சருக்கந் தன்னை யறிந்தவா புகன்றே னிப்பால், திக் கெலாம் புகழ்ப டைத்துத் திறன்மிகுத் திடவி ருந்த, தக்கனல் லருள்பெற் றேங்கு சருக்கமேற் பகர்வன் மாதோ. கூ

தருப்பணபலன்கூறியசருக்கமுற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ௩௧௭.

---

## அ. தக்கனருள்பெறுசருக்கம்.

பூரு வந்தனி ஞான்முக னளித்திடும் புதல்வன்
பாரு வந்தருந் துதிசெய்வான் படைத்தன னன்பின்
மேரு வந்தணி பெறவளைத் தெடுத்தவில் லியன்றாள்
யாரும் வந்தனை செய்குவ துணர்ந்தில னிகழ்ந்தான். க

இனைய வாறிகழ்ந் திருந்திடு தக்கன்விண் ணளிக்கும்
வினைக ருங்கழ லிந்திரன் முதலிய வானோர்
அனைவ ருந்நிறைந் திடுமரும் பிரமயா கத்தின்
வினைவி ளைந்திட லறிந்திலன் வெகுண்டுரை செய்தான். உ

வேறு

தாம தக்குணத் தினன்றலை யோடுகை யேந்தி
வாமமேகலை மங்கையர் மனைதொறும் பலியேற்
றேமமெய்திடா தேக்கமுற் றிருப்பவன் றனக்கிவ்
வோம வேள்விய லவிநல்கல் விடுமினென் றுரைத்தான். ௩

அன்ன தன்றியாங் கிருந்திடு மமரரை நோக்கிப்
பின்னு மொன்றுரை செய்தனன் பித்தனை வணங்கின்
என்ன தாக்கினை பெறுவிரென் றிதுநிகழ் வேலை
நன்ம கந்தனின் வந்தன னந்தியங் கடவுள். ௪

வருதல் காண்டலும் வணங்கின னயன்மனத் தடங்காப்
பெருகு சீற்றமோ டெழுந்தனன் றக்கனைப் பெற்றி
கருதி நந்திநா யகன்சபித் தனன்கணத் தழிய
வெருவி யென்னதாய் முடிந்ததென் றேங்கினர் விண்ணோர். ௫

துள்ளி யார்த்திடு கணம்புடை சூழ்ந்திட வெழுந்து
வெள்ளி மால்வரை மேவின னந்திநா யகன்மேல்
எள்ளி யேயவ மதித்துயிர்த் திருந்திடுந் தக்கன்
தள்ளி நாட்பல சென்றபின் வேள்விதான் புரிந்தான். ௬

அன்ன வேள்வியி லவன்றனக் கஞ்சியே யமரர்
துன்னி னாரயன் முகுந்தன்மற் றியாவருஞ் சூழ்ந்தார்
இன்ன காலையி லிமயமீன் றெடுத்திடுஞ் செல்வி
முன்ன வன்றனை வணங்கியே வாடிமுன் னின்றாள். ௭

ஈன்ற தாதைசெய் வேள்வியான் கண்டிவ ணெய்தத்
தோன்ற லேவிடை யளித்தரு ளென்றனள் டயோன்
ஆன்ற கேள்வியில் லாதவ னவமதித் திடுவன்
போன்ற வொப்பினை யிலாதநீ தவிரெனப் புகன்றான். ௮

மலர்ந்த தாமரை வாண்முகம் வாட்டமீ தூரப்
புலர்ந்து பின்னரும் வேண்டினள் பொழிகரு ணையினால்
கலந்து யிர்க்குயி ராகிய கண்ணுதற் பெருமான்
நலந்த ருந்திரு வாய்மலர்ந் தனனயந் தெழுந்தாள். ௯

௩. தாமதகுணம் எனற்பாலது சந்தவின்பம் நோக்கித் தாம தக்குணம் எனக் ககரம் மிக்கது.

எண்ண ரும்பரி சனங்களுஞ் சூழ்ந்திட வெய்திப்
பண்ணி டும்பெரு வேள்விமுன் னின்றனள் பார்த்துக்
கண்ணி ணைசிவந் துரைத்தனன் றக்கன்வெங் கடுஞ்சொல்
பெண்ண ணங்குதன் செவிப்புகப் பெரிதுவெய் துயிர்த்தாள். கo

கற்றை வார்சடைக் கண்ணுதற் கடவுளே பரமென்
றுற்று ணர்ந்துநான் மறையுரைத் ததுபகுத் துணராய்
பெற்ற பெண்ணெனச் சிறுமையாய்ப் பெரிதெனை யிகழ்ச்சி
சொற்ற நின்செருக் கழிந்திட வென்றன டித்தே. கக

வலஞ்சு ழன்றிடு மங்கியில் வீழ்ந்தனள் வானோர்
புலன்க லங்கிட நடுங்கினர் பொன்னிதழ்க் கொன்றை
அலங்கல் சூடிய வையனஃ தறிந்துவே ணியினால்
நிலம்பி ளந்திட வடித்தன னெடிதுவெய் துயிர்த்தே. கஉ

அன்ன காலையி லண்டகோ ளகைநடு நடுங்க
என்னை யாளுடை வீரபத் திரனெனும் பெரியோன்
சென்னி யாயிரங் கரமிரண் டாயிரஞ் சேர்ந்து
வுன்னி யோருரு வெடுத்தென வந்துநின் றனனே. கந

அலகி லாற்றலா னேழ்கடற் சுவறிநீ றாகிக்
குலகி ரீவெடித் தெண்டிசை நிலங்களுங் குலைந்து
மலரா யன்பத மாலவன் பதமழிந் தொழிய
இலகி நுங்கணப் பொழுதினிற் செய்கவோ வென்றான். கச

என்ற மற்புய வீரருள் வீரனெம் பிரான்முன்
நின்ற போதுநன் னெறியிலாத் தக்கனீள் வேள்வி
ஒன்று செய்தலுற் றனனிது பொழுதவி யுள்ள
தின்று நல்கெனக் கேளிது மறுத்தன னெனின்மேல். கரு

உரிய ராகியே மருங்குறு மொழிந்தவிண் ணவரும்
புரியும் வேள்வியும் புல்லறி வினன்புய வலியும்
இரியல் போகநீ செய்யென விறைவனீ துரைத்தான்
திரியும் பாரிடந் துள்ளியார்த் திடச்செயிர்த் தெழுந்தே. கசு

வக்கி ரத்தெயி றிலங்கிடப் பத்திமை மருங்கு
மிக்க வெந்திறற் காளியின் குழுஉமிடை தரச்சூழ்
செக்கர் வானெனச் செந்துகள் பரந்திடச் சென்று
தக்கன் வேள்விசெய் சாலையிற் புகுந்தன னம்மா. ௧௭

வீர னுற்றிடு வெஞ்சின நெருப்புமேற் சூழ்ந்து
கோர வாலெயிற் றிடையிடை குருதிகொப் புளிக்குஞ்
சார தப்படைத் தலைவர்க ணின்றதுந் தங்கண்
ஆரக் கண்டன ரழிந்தது வேள்வியென் றனரால். ௧௮

பாக சாதன னடுங்கின னயன்பதைத் தனன்சூழ்
நாக மேற்றுயி னாரணன் வெள்கின னப்பண்
யாக மீட்டுநல் லறிவிலாத் தக்கனின் னுயிர்தான்
போக வந்தநா ளிதுகொலோ வெனமுகம் புலர்ந்தான். ௧௯

பாரி டங்கொளப் பாரிட நாற்றிசைப் பரப்புஞ்
சாரி டும்படி யேவினன் றழலெழ விழித்தான்
யாரி னும்வலி யாரிவ ரென்றுநா யகராய்ப்
பூரி யாரையெண் ணியசிறு விதியின்முன் போந்தான். ௨௦

தன்ம னந்தனைத் தேற்றிய தக்கன்முன் னின்ற
வன்மை கூறரும் வீரனை யாரைநீ வந்த
தென்ன வென்றன னீச்சுரன் புதல்வன்யான் யாகத்
தன்ன வன்பெறும் பாகநல் குதியது வாங்க; ௨௧

வந்த னன்னவ னருளினு லென்றனன் மறுத்தான்
எந்தை யன்றிமற் றியாரிறை யாயுளோ ரென்றே
பைந்து ழாயணி முகுந்தனை யயன்றனைப் பார்த்து
நுந்த மக்கிவ ணிசைவுகொ னுவன்றதென் றுரைத்தான். ௨௨

ஆம தன்றென வுரைத்திலர் வாய்திற வாமல்
ஊமரின்னிருந் தனர்களஃ துன்னியே வீரன்
ஏம மாமிவர் வல்லமை யறிகுவ னென்றே
காம வெங்கதை யாலுள நடுங்கிட வடித்தான். ௨௩

அட்ட காசம்வந் தடித்தலு மூர்ச்சைமா லடைந்தான்
மட்டி லாவிறல் வீரன்மேன் மடித்திதழ் கடித்துக்
குட்டி னையன் சிரம்வெடித் திடமலர்க் குழலார்
ஒட்டி நின்றொழி யாதுதண் டனைசெய்வ தூற்றார். உச

அண்டர் கோன்முத லாகிய கடவுள ரவன்கைத்
தண்ட னைத்தனை யுற்றனர் தக்கனைப் பற்றித்
துண்ட மாயுடல் பதைத்திடத் தலையினைத் துணித்துக்
கொண்ட வேள்விவெங் கனற்கிரை கொடுத்தன னன்றே. உரு

ஏடி லங்குதார் வீரன்மான் மூர்ச்சைதீர்ந் தெழுந்து
தேடி யேவிடும் படையெலாஞ் செயித்தன னுடன்சூழ்
கோடி கோடிபா ரிடமெலாங் கோதில்வெண் டும்பை
சூடி வேள்வியை யழித்துமேற் றுணங்கையிட் டனவே. உசு

வேறு.

ஈங்கிது நிகழ்ந்த தீரே ழுலகமு மளந்த மாயன்
பாங்கரி னின்ற வீரன் பகாருஞ் சீற்றந் தன்னை
நீங்கிடு முபாயந் தேடி நின்றனக் கிணைவே றுண்டோ
தாங்குமென் றடக்கை யாழி தானினக் கஞ்சிற் றாமால் உஎ

என்றுபற் பலவுங் கூறி யேத்தினன் சினந்த ணிந்து
துன்றுபா ரிடமிடைந்து சூழ்தர வெழுந்து போந்து
வென்றிகொள் வீரன் வெள்ளை விடையுகந் தருளு மையன்
தன்றிரு வடியை வாழ்த்தித் தலையினால் வணங்கி னானால். உஅ

போந்திடும் வானோர் யாக்கைப் புணர்ச்சிவிட் டொழிய மூர்ச்சை
தீர்ந்தயன் முதலா யுள்ள தேவர்சிற் சிலவ ரீண்டிக்
காந்தெரி கனலு மிழ்ந்து நெற்றிக் கண்ணுடைக் கடவு டன்பால்
தாழ்ந்துநின் னருளல் லாது தக்கனுக் குய்தி யுண்டோ. உகூ

உறுதியைத் தெளிந்தா னேனு முணர்ச்சிகூ ரறிவி லாத
சிறுவிதி யென்ப தையன் றிருவுள மறியா துண்டோ
பெறுமப ராதந் தன்னாற் பெரியதண் டனையும் பெற்றான்
இறுமவ னெழுமவ் வண்ண மிறைவநல் கெனவி ரந்தார். ௩0

உச. அட்டகாசம்—மிகுசிரிப்பு. இது கோபச்சிரிப்பு.
உசு. துணங்கை—இருகை முடக்கிவிலாப்புற மடித்தாடுங்கூத்து.

மாறிலாக் கருணை யானல் வயித்திய நாத மென்னும்
பேறுயர் தலத்திற் சித்தா முதப்புனற் பெருந்தீர்த் தத்தில்
ஊறுபட் டிருந்த பாதி யுடன்மறித் தலையி ரண்டும்
வேறுநீ ரெடுத்து வைமி னெனவரங் கொடுத்தான் மேலோன். ௩க

பொருந்திய மாசிச் செவ்வாய்ப் புண்ணிய தினத்தில் வைத்தார்
அரும்புனற் றோய வேற தாமுடல் சிரமுஞ் சேர்ந்து
வரும்படி யாவிபெற்றம் மறித்தலை விளங்கத் தக்கன்
பெரும்பிழை செய்த பாவம் பெயர்ந்திட நிற்றல் கண்டார். (௩௨)

நஞ்சமுண் டிமையோர் தம்மை நயந்துகாத் தளித்த வையன்
செஞ்சரண் பணிந்தான் றக்கன் றேவதுந் துபிக லிப்ப
விஞ்சையர் பொழிபூ மாரி மேதினி நிறைந்த தம்மா
எஞ்சினர் யாரு மண்ண லருளினு லெழுந்தா ரன்றே. ௩௩

ஈசனை யிகழ்ந்த பாவ மிதுவிட வெண்ணில் கோடி
பேசவந் திடுபா வத்திற் பெரியதோர் பாவங் காணேன்
ஆசற வெடிய பாவ மதனையுந் தீர்க்கு மாற்றால்
தேசணிந் திலகுஞ் சித்தா முதநிகர் தீர்த்த முண்டோ. ௩௪

இறந்தவன் பிழைத்து நன்மை யெய்திடச் செய்யு மேன்மை
சிறந்துமங் களமாஞ் சித்தா முதந்தரி சனஞ்செய் தோரும்
பிறந்திடுந் திவலை சேரப் பெற்றபேர் தாமுஞ் சற்றும்
மறந்துமிப் பிறவி சேரார் மகிழ்சிவ லோகஞ் சேர்வார். ௩௫

இருவரா லறிய வொண்ணு வொருவனை யிகழ்ந்து தக்கன்
வருவதை யுணரா னுகி மகம்புரிந் ததனுல் வீரன்
பெருகுதண் டனையை யுற்றுப் பேறுமேற் பெறுதல் சொன்னேன்
தருமவ்வா றிரண்ய வன்மச் சருக்க மேற் றமியன் சொல்வேன்.

தக்கனருள் பெறுசருக்கம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௩௫௩.

---

# கூ. இரணியவன்மச்சருக்கம்.

தேன்விழ் கடுக்கை சூடுஞ் செல்வனைப் பணிந்து வாய்மை
ஆனநற் கணித ரெண்ணி யளவிடும் யுகத்து ளொன்றாம்
மேனல னளிக்குந் திரேதா யுகத்தின்மே தினிது திக்கும்
ஞானநல் லன்பன் சித்தா முதநற்றும் புனலிற் றோய்ந்தான். க

அன்னவன் றனக்குச் சித்தா முதப்புன லழகு வாய்ந்த
கன்னலின் சாற தாகி யிருந்தது கண்டு பின்னர்
மன்னவ னுடன டந்த மகிமையைப் புகன்றான் றூய
பொன்னின்வண் பெயர்ப டைத்த புரவலன் றோரா னென்ன. உ

சோர தனை செய்வா னெண்ணி யெழுந்தனன் பதாதித்தூளி
காதல்கூர் திசைக் களிற்றின் கவுட்குழி தூர்த்த தம்மா
போதவிழ் வாகை சூடிப் புகழ்படைத் திருந்த வேலான்
மாதவர் குழாங்கொண் டேத்தும் வயித்திய நாதஞ் சேர்ந்தான். ந

வேறு.

வள்ளவாய்க் கமல நறுமணங் கமழும் வாவியின் றுளிநறு வருந்திப், பிள்ளைவண் டினங்கள் விண்ணின்மே லெழுந்து பெட்புற முரன்றுபாண் மிழற்றப், புள்ளின மாற்றுங் காமர்பூந் துறையும் புதுமலர்ச் சோலையு நோக்கி,அள்ளிலை நெடுவே லாசர்கோ னுளத்தி னளப்பரு மகிழ்ச்சிபூத் தனனே. ச

மறையவ ருணு னுதிக்குமுன் னெழுந்து மகிமைசேர் திலகுநீ ராடித், துறைதொறு நின்று தருப்பணஞ் செய்து தூயகா யத்திரி செபித்தே, நிறையுமன் னவர்த நிலைபெறு முறுதி நின்றுபார்த் ததிசயித் தனன்பின், நறைகமழ் சித்தா முதப்படித் துறையி னல்லெழில் கண்டுபூ ரித்தான். ரு

வேறு.

தெளிந்தசித் தாமுத தீர்த்த மூழ்கியே
அளிந்திடு மனத்தினோர் துனிய ருந்தினன்
குளிர்ந்திடு கன்னலின் கோதில் சாறதாய்
மிளிர்ந்தி னிரட்டியாய் மிகுந்தி ருந்ததே. சு

உ. பொன் பெயர் படைத்த புரவலன் — இரணியவன்மச்சக்கிரவர்த்தி.

மின்னொளிர் வேலினன் மேனி மீதினில்
துன்னியே யுறுபெரு வுரோக நோய்த்தொடர்
புன்னிடின் முழுதும்விட் டோடக் கண்டனன்
நன்மகிழ் கூர்ந்தன னயந்து போற்றினன். ௭

வேறு.

ஆதலி னிட்சு சாரமென் றதன்பே ரகலிடந் துதிசெய விளங்கு
காதல்கூ ரரசன் கதிர்மணிக் குவையுங் கனகமுந் தாளமுந் துகிலும்
வேதமு துணர்ந்த பூசுர ருளத்தின் விழைவுதீர்ந் திடமகா தானஞ்
சீதள மிலகு தீர்த்ததீ ரத்திற் செய்துநன் மகிழ்ச்சிபூத் தனனே. ௮

கிணங்கமழ் வேலான் காலைசெய் கடன்க ணெறிமுறை யாற்றி மே னறிய, மணங்கமழ் பசுந்தே னொழுகுசெங் கழுநீர் மலரணி வயித் திய நாதன், அணங்குடன் விளங்கு மாலயம் வலஞ்செய் தையனைப் பூசைசெய் தருள்பெற், றிணங்கிடு மிகுந்த திருப்பணி செய்தே யிருந்தனன் புற்பக லங்கண். ௯

நிகர்பகர் வரிய நவமணி குயிற்றி நேர்மையா யொப்பமிட் டிழைத்த, பகாரும் பசும்பொன் விமானமொன் றையன் பரிவுகூர்ந் தளித்தனன் பாவிச், சகரர்தொட் டிடுதெண் டிரையெறி கடல்சூழ் தரணியிற் பகைதனைக் கடிந்து, புகர்தவிர்ந் திலகு புகழ்மிகும் வேலான் பொற்புறு தன்னகர் போந்தான். ௧0

வேறு.

அன்னதன் பின்ன ரனேகநாட் செங்கோல் செலுத்தியே யவனி காத் தளித்து, மின்னொளிர் விமான மேறிவெண் கவரி யிரட்டவிண் ணவர்கள்பூ மாரி, நன்மழை பொழிய வரம்பையர் நடனஞ் செய்திட நறுமணங் கமழும், பொன்னிதழ்க் கடுக்கை யணிந்தவெம் பெருமான் புகழ்மிகு கயிலைசேர்ந் தனனே. ௧௧

---

அ. இட்சுசாரம்-கருப்புஞ்சாறு.

வேறு.

அன்பனுக் கிட்சு சார மாம்பெரு மையைக்கேட் டுள்ளம்
இன்பமுற் றிடவெ ழுந்த விரணிய வன்மன் செய்கை
நன்புகழ்ச் சருக்க வாய்மை யறிந்தன நவின்றே மினிப்பால்
தன்பெரு மகிமை யோங்கு சதானந்தச் சருக்கஞ் சொல்வேன். கஉ

இரணியவன்மச்சருக்கம் முற்றிற்று.

ஆஉ திருவிருத்தம் நஈரு.

---

## ௰. சதானந்தச் சருக்கம்.

சிறந்திடு சித்தா முதப்பெரு மகிமை கேட்பவர் செவிதனக் கினிமை, பிறந்திட வுரைப்போர் கங்கைநீ ராடும் பெரும்பலன் பெறுகுவ ரன்றி, நிறைந்திடு தீர்த்த நீர்தனின் முழுகி யெழுந்திடு நெடும்பலன் பெறுவார், மறங்கிள ரியம வாதையை யொழித்து வள்ளல் பா தாம்புயஞ் சேர்வார். க

வேறு.

சித்த முருகு மன்பினுடன் சித்தா முதநீர் தோய்ந்தெழுந்து
முத்தம் பசும்பொற் றகட்டினின்மான் முதலாங் கடவு ளுருவெழுதி
மத்த மலர்தும் பையினறிய மலர்சேர்த் தளிப்போர் பூதானம்
நித்த மிகுந்த கோதான நிறைவேள் வியுஞ்செய் பலன்பெறுவார். உ

இப்பூ மியினிற் புதல்வர்ப்பே றில்லா தவர்சித் தாமுதநீர்
தப்பா துதைய காலமது தன்னிற் படிந்து நவநீதம்
அப்போ துருக்கு நறுநெய்பெய் தருமை பெறுமா விளக்கேற்றின்
ஒப்போ துதற்கு மிகவரிதா யுளநற் புதல்வன் றனைப்பெறுவார். ங

வேறு.

வளமலிந் திலகுஞ் சித்தா முதப்புனன் மாதந் தோறும்
உளமகிழ் தரச்செய் செவ்வாய்க் கிழமைநல் லுதய காலந்
தளர்வுறு தமர்ந்து மூழ்கி னோர்தருஞ் சென்ம மூன்றின்
அளவிடாப் பாவந் தீர்ந்தே யைய்ன்வாழ் கயிலை சேர்வார். ச

---

உ. முத்தம்—விருப்பம். முத்து அம் எனப்பிரித்து, மேலாகிய அழகு பொருந்திய எனப்பொருள் கோடலுமொன்று.

வேறு.

மூக்க ணாயக னருள்பெறு முனிவரின் முதன்மை
தக்க பக்குவ நன்னடை யொழுக்கமா சாரம்
மிக்க சீல்நல் விரதமே தினிதுதி செய்யும்
இக்கு ணத்தினான் சதானந்த முனிவர னென்போன். ௫

அன்ன பண்பின னரியசித் த்ராமுத மதனில்
நன்ன லம்பெற முழுகிநீ றணிந்துநான் மறைகள்
இன்ன மோலமிட் டறிவரு மிறைவனை மனத்தின்
உன்னி யேசெபம் புரிந்துமேற் றியானமுற் றுறைந்தான். ௬

பரந்த தீர்த்தமேற் பயிறரும் பசியமண் டேகம்
உரந்து மேலெழுந் துறைந்திடு முனிவனுத் தமமாஞ்
சிரந்த னில்விழுந் த்துதியா னந்தனை நீங்கிப்
புரந்த னையெரித் திடுங்கன லெனப்புழுங் கினனால். ௭

தீப மாமெனச் சுடரெழுந் திணைவிழி சிவந்து
கோப வெங்கெருப் பெழுந்திடக் கொதித்திடு முனிவன்
சாப மொன்றுரைத் தனன்றகுந் தீர்த்தமீ தென்றும்
எய்ப சுஞ்செழுந் தவளைக ளொழிந்திட வென்றே. ௮

அன்று தொட்டருந் தீர்த்தமீ தனையமண் டேகம்
இன்று காறுமாங் கில்லைமற் றெறும்படைத் திலகு
வென்றி மாதவன் விளங்கிடுந் தலந்தனைப் பிரியா
தென்றும் வாசஞ்செய் திடவரம் படைத்திருந் தனனே. ௯

இனைய் தாகிய மகிமைக ளெண்ணருங் கோடி
அனைய தீர்த்தமெவ் வுகத்தினும் படைத்திருந் ததனால்
நினைகு வோரதின் முழுகுவோர்க் கென்றுநீங் கரிய
வினையி னால்வருந் துன்பம்யா வையும்விலக் கிடுமே. ௧௦

எ. உரத்து என்பது உரந்து என எதுகை நோக்கி மெலிந்தது. உரத்தல் — வலிமை கொள்ளல்.

வேறு.

ஈதிரிலா திலங்குஞ் சித்தா முதப்புன லென்றுந் தோய்வோர்
அதிகமாங் கொடிய பாவம் யாவையுந் தீர்வ ரன்றிப்
பதிதனைக் கொன்ற பாவந் தீர்ந்திடும் பலிக்கு நல்ல
கதியினைப் பெறுவர் வெள்ளி மால்வரை காணி கொள்வார். கக

உலகெலாம் புகழு மேன்மை யுளசதா னந்த னென்னும்
இலகிய முனிவன் வாய்மைச் சருக்கமீண் டுரைத்தே னிப்பாற்
குலவெழிற் புருடன் றன்னைக் கொல்லுமப் பாவந் தீர்ந்த
நலமிகு சருக்க வுண்மை நயம்வகுத் துரைப்பன் மாதோ. கஉ

சதானந்தச் சருக்கம் முற்றிற்று.

ஆகூ திருவிருத்தம்—௩௭௭.

## ௧௧. புருடனைக்கொன்றபாவந் தீர்ந்தசருக்கம்.

திலகமாய் நிறைந்தகான் மீர தேசமீ
திலகுமே மாவதி யென்னு மோர்நகர்
பலவள மிகுந்துபல் காவல் பூண்டுறு
நலமல்கே மாசுர னகர்க்கு நாயகன். க

அந்நகர் தனிலரு மறையு ணர்ந்தவன்
நன்னெறி யொழுகிடு நயமி குந்தவன்
தொன்மறை யவர்குலத் துதித்த தூயவன்
உன்னரு மவன்பெய ருஞ்ச விர்த்தியே. உ

தோகுமறை யவர்குழாஞ் சூழ்ந்து பார்மிசை
மிகுபுகழ் வேதியன் றனக்கு வேதநூற்
பகுதியின் மணம்புரி பாரி யாயினள்
தகுதியில் சண்டியென் றொருத்தி தானுள்ளாள். ௩

சிறியவா யினுங்குல நடத்தை சேருநல்
அறிவுமா சாரமு மின்றி யிற்பகல்
பிரியமாய் வலிந்துசை யோகம் பீடுசேர்
நெறியுள பதியுடன் செயநி னைந்துளாள். ௪

உந்திநீர்க் கருங்கட லுடுத்த பார்மிசை
எந்தவூ ரினுமிது நடக்கு மோவெனுந்
தந்தைதாய் சொல்வழி தள்ளி யெள்ளியே
நிந்தனை பற்பல நினைந்து பேசுவாள். ரு

விரவிய பிதிர்க்கடன் கெடுக்கு மிண்டினள்
பரபுரு டரைப்புரி சிக்கும் பத்தியாள்
குரவரை நிந்தைசெய் கொடுமையுள்ளவள்
வரனுடன் பொருந்தியே வலிமை செய்குவாள். சு

பதிதனை யிகழ்பவர் பரிவி லாருடன்
அதிகமா நல்லுற வாடுங் கொள்கையாள்
நிதிதரு பரபுரு டருக்கு நேசமாந்
துதிசெய்து சூழ்ந்துபச் சாரஞ் சொல்லுவாள். எ

பஞ்சமா பாதகி பதியைக் கொல்லும்வன்
னெஞ்சினடைத் தானவ ளாகி நித்திரை
மிஞ்சிய வேளைபார்த் தெழுந்து வேதியன்
தஞ்சிர மீதுகற் றூக்கித் தள்ளினள். அ

வீழ்தலு மவனுயிர் விட்டு நீங்கியே
ஊழ்வினைப் புசிப்பினை யுற்ற தாயிடைத்
தாழ்வுறு தவனுட லெடுத்துத் தள்ளினள்
பாழ்படு கிணற்றிருட் படாத்தை மூடியே, க

உரமிவர் பற்பல சாதி யாயுள
பரபுரு டரைப்பகற் பொழுதுங் கூடுவாள்
விரகியர் தமக்குமேம் பட்ட கொள்கையாள்
தரணியிற் கற்பினர் தமைந கைப்பளே. க0

ஈங்கிவட் கிளமைதா னிருக்கு மாயினுந்
தாங்கரும் புருடர்ஞ்சை யோகஞ் செய்தலால்
நீங்கின தெழினிகழ் தளர்ச்சி வந்தது
வீங்கிடக் கொடியநோய் மிகவி ளைந்ததே. கக

---

க0 விரவியர் என்பது பாடமாயின் சேர்ந்தோர் எனப்பொருள் கொள்க.

தோட்டணைத் திடுமவர் தூர நின்றனர்
விட்டன ரவனுடன் கூடும் வேட்கையை
ஒட்டியே விடாதுநோ யுடற மீஇயது
முட்டிமேற் பெருஞ்சன்னி மூடிக் கொண்டதே.

இறந்தன ளடைந்தன ளியம லோகமேற்
றிறந்திடா நரகெலாந் திறந்த முத்தினர்
பறந்தழு தனள்பல கற்பம் பாவிபின்
பிறந்தன ளூறுபாழ் பிறப்பு நாயதாய். கங

இழுக்குடைச் செனனம்வந் தெடுத்த தன்றியே
புழுச்சொரிந் திட்டுத்துயர் பூண்ட லந்தனள்
அழுக்குளாள் பூருவ சென்மத் தந்தணன்
ஒழுக்கமா சாரமு முள்ள தந்தையே. கச

அன்னவன் றன்னுட னடுத்த நண்பினன்
மன்னுகங் காதரன் மனைத னிற்செயும்
பின்னும்வே ணியன்பிர தோட பூசையைத்
தன்னிரு கண்ணினாற் றமியள் கண்டனள். கரு

இளமையிற் பிதாவுட னெய்தி யன்னவன்
வளமனை தனிற்செயும் வள்ளல் பூசையைத்
தளரிடை கண்டபுண் ணியத்தின் றன்மையால்
அளவுதொண் ணூற்றினோன் பஃத கன்றபின். கசு

மன்னுசீர் வயித்திய நாத மாநகர்
தன்னினா ரும்பிறப் பதுச னித்தனள்
முன்னர்போ னுயுட லெடுத்து மூத்துடல்
இன்னல்கூர்ந் திடப்புழுச் சொரிய வேங்கினள். கஎ

பரந்தன ளந்நகர்ப் பழைய வேதியன்
வரம்பெறு பெயர்சுசன் மாவென் போன்மனைத்
திரம்பெறு வாசலிற் றிரியு நாயுடல்
உரந்தவிர்ந் தேயிளைத் தொடுங்கி நின்றதால். கஅ

இதின்முன்னம் வேதிய னெழுந்து போந்துநற்
பதனல்கப் பரந்தசித் தாமு தம்படிந்
ததனரும் புனலெடுத் தகத்தின் வந்துசஞ்
சிதமொழிந் திடச்செபஞ் செயுந்த லந்தனை. கக

தெளித்தன னொருதுளி தெறித்து மற்றதின்
வெளிப்புற மேடைமேல் விழுந்த தண்புனல்
ஒளிக்குநாய் புழுச்சொரி யுடலிற் பட்டது
களித்தன னுயுட னீங்கக் கண்டதால். உ0

அக்கணம் பாவம்விட் டகலத் தேவரின்
மிக்கநன் மாதர்சூழ்ந் திடவி மானமேல்
திக்கெலாம் புகழ்பெற வேறிச் சென்றனள்
சொர்க்கலோ கந்தனைத் தூய மேனியாள். உக

இந்திரன் முதலிய தேவர் யாவரும்
வந்தருந் துதிசெய மகிழ்ந்தி ருந்தனள்
முந்துசித் தாமுத முழுகுந் தூயவர்
சிந்தைகூர் பலன்றெரிந் துரைப்பர் யாவரே. உஉ

வேறு.

நீதிநூ லோதும் வாய்மை நெறியுள புருடன் றன்னைப்
பாதகி கொன்ற பாவந் தீர்ந்தது பகர்ந்தே னிப்பால்
கோதில்சீர்ப் பாரி தன்னைக் கொன்றவப் பாவந் தீர்ந்த
மேதகு சருக்க வாய்மை விளங்கிட வுரைப்பன் மாதோ. உரு

புருடனைக் கொன்றபாவந் தீர்ந்த சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ச00.

---

உ0 இக்கருத்துப்பற்றியே குமரகுருபரசுவாமிகளும்: "வெண்சாந்து மற்றைத் திருச்சாந்து நிற்க வற்றுச் சித்தாமிர்தத்தடத் தீர்த்தத்துறைக் குறுந் திவலை யொன்றேயமையும்" என்றருளிச்செய்ததூஉமென்க.

## கஅ. பார்ப்பனியைக்கொன்றபாவந்தீர்ந்தசருக்கம்.

ஓதநீர்க் கடனல் லாடைசூ ழுலகி லுதித்திடு சராசர மனைத்தும்
ஏதநீங் கிடுபே ரின்பமுற் றிலக விதந்தரு புராணமூ துணர்ந்த
சூதமா முனிவ னைமிசா ரணியச் சூழன்மா முனிவரர் மகிழ
ஈதலா ததிக மகிமைசேர் கதையொன் றெடுத்தரு ளுதற்கிசைந்
[தனனால். க

வேறு.

ஊர்ந்துசூ ழளைந்துசங் குயிர்த்த நித்திலஞ்
சேர்ந்தகோ தாவிரித் தீர மொன்றதில்
சார்ந்தெழி றழைந்தநந் தவட மென்னுமூர்
கூர்ந்தபோ தாயனக் குலச்சி றப்புளான். உ

வேதவே தாங்கமுந் தெரிந்த மேன்மையான்
பூதலம் புகழ்பல புதல்வர்ப் பெற்றவன்
நாதனைப் பூசைசெய் யாதி சைவனற்
கீதமென் சுவைபெறப் பாடுங் கேள்வியான். ங

ஈங்கிவை யுணர்ந்தவ னிவைவி டுத்துமேல்
தீங்குசெய் கொள்கைய னாகிச் செந்நெறி
நீங்கின னிந்தைசெய் தானம் யாவையும்
வாங்கினன் சந்திவந் தனமு றந்தனன். ச

தின்றதாம் பூலவா யுடன்றி கழ்ந்தெழில்
துன்றுமுப் புரமெரி செய்த தூயனை
என்றுமா சாரம தின்றிப் பூசைசெய்
தன்றியுஞ் சிவத்திர வியம ழித்தனன். ரு

விலக்கிடும் பிரேதவூண் விரும்பி யுண்டனன்
கலக்கநெஞ் சினிலணுத் துணையுங் கண்டிலன்
குலத்துணை வியின்மனங் கொதிப்ப வேசிதன்
னலத்தினை நுகர்ந்திட நயந்து கூடினன். சா

அனையதீங் கின்னடி வணங்கிப் பத்திசெய்
எனையிகழ்ந் தேபொரு ளிச்சை வேசிபால்
நினைவுசெய் தவண்மனை நீங்கி டாதுவந்
தனைமறந் தனையிகழ் தானம் வாங்கினே. எ

ஊனமாம் பாவநீ டுக்கி ராந்திகோ
தானம்வாங் கினைபிறர் தனங்க வர்ந்தனே
ஞானமில் லாருட னட்பு வைத்தனை
ஆனதொன் றிலைநகைப் பாமனைத்துமே. அ

என்னுயிர் நாதனே யிளைத்து வாடினர்
நின்னரும் புதல்வர்கள் கால நீடினர்
உன்னியே யவர்க்குப நயனஞ் செய்கிலை
தன்மமோ விதுவெனத் தளர்ந்து கூறினள். கூ

இங்கிது வன்றியே யினிய கற்பினள்
பொங்குகோ தாவிரிப் புனலின் மூழ்கியே
சங்கரன் றிருவடி தன்னிற் பூசைசெய்
தங்கவ னஞ்செழுத் துரைத்தல் விட்டனே. கo

போதுசேர் குழற்பொது மகளி ராசையை
ஈதுதீங் கெனவிடுத் திரங்கு மென்றனைப்
பாதுகாத் தருளெனப் பகர்ந்து கண்ணினீர்
ஓதருந் துயருட னுகுத்து நின்றனள். கக

அடித்தலம் பணிந்தருந் ததியன் னாள்சொல
மடித்திதழ் கடித்துவன் னெஞ்சி னானெடுத்
தடித்தன னுலக்கையா லவனி மீதினில்
துடித்துவீழ்ந் தனள்பொறி கலங்கிச் சோர்ந்தனள். கஉ

இரணமுற் றனளுயி ரிருக்கு தென்றுதீக்
கிரணமுற் றியசினக் கேள்வன் கண்சிவந்
திரணிய மேனியாள் சிரத்தி டித்தனன்
மரணமா யினள்சிவ கணங்கள் வந்தனர். கந

நாறுபூங் கோதையா ணலங்கொள் கற்பினள்
ஏறினள் விமானமே லெழுந்து விண்ணவர்
மாறிலாப் பூமழை மாரி பெய்தனர்
ஆறணி யண்ணல்சே வடிய டைந்தனள். கச

அத்தகு கொடியனு தாவி லாமையால்
சித்திரத் தெழுதிய பாவை செய்கையை
ஒத்தசை வின்றியே யொடுங்கிச் சோர்ந்தவள்
புத்திர ரனைவரு மிறந்து போயினர். கரு

நன்மைசேர் பாரியைக் கொன்ற தானலின்
தின்னல்கூர்ந் தெண்ணருந் துன்ப மெய்தினன்
குன்மநோய் வந்தது கொடிய பாவியென்
றன்னமா நகருளா ரகல விட்டனர். கசு

இனியவன் பூசைசெய் திடற காதெனத்
தனிநகர் வேதியர் தள்ளி விட்டபின்
மனிதர்சஞ் சரித்திடா வனத்திற் போயினன்
புனிதமில் பாவியைப் புலிபி டித்ததே. கஎ

உடறனை யுழுவைவாய்க் கொடுத்து டன்பிடித்
தடர்சமன் றூதுவ ரவனைக் கட்டியே
படர்கொழுங் கனற்சுடு நரகு பாழ்நர
கிடையிட வருந்தியெட் டுகம ழுந்தினன். கஅ

பறவையாய்ப் பாவிபின் வந்து பாரினில்
பிறவிநூ றெடுத்தனன் பிறக்கு முன்னர்நல்
துறைவழி கார்த்திகைச் சோம வாரநாள்
இறைவனை யருச்சனை செய்தி ருந்ததால். கசு

நிறைதரு நூறதாம் பிறவி நீள்பொழில்
நறைகமழ் வயித்திய நாத மாநகர்ச்
சிறைசெய்சித் தாமுத தீர்த்தத் தோங்கிய
துறையகத் திருந்ததொன் மரத்தின் மேலதாய். உ0

புராதனம் பிறந்திடு பறவை போற்பிறந்
திராவுநண் பகலினு மிருக்கு நாளினில்
கிராதன்கண் டம்பினு லெய்யக் கேதமுற்
றுராயொளிர் தண்புன லுள்வி ழுந்ததே. உக

வேறு.

கதிதரு மாசி மாதங் கவினுறு மூன்ருஞ் செவ்வாய்
முதிர்சுவை நிறைந்த சித்தா முதப்புனல் பட்ட போதின்
அதிகமாங் கொடிய பாவ மீனத்தையு நீங்கித் தீய
விதிதரு பறவைத் தேகம் விட்டுநன் மகிழ்ச்சி கூர்ந்தே. உஉ

ஒளிமிகும் விமான மேறி யுயர்சிவ லோகஞ் சேர்ந்தான்
தெளிபுன னிறைந்த சித்தா முதச்செழுந் தீர்த்தந் தோய்வோர்
நளிர்கட லாடை சூழு நல்லுல காள்வர் யாவும்
எளிதினிற் பெறுவ ரென்றே யிசைத்தனன் முழுது ணர்ந்தோன்.

பத்திசெய் பாரி தன்னைக் கொன்றிடு பாவந் தீர்ந்த
சுத்தமாஞ் சருக்கந் தன்னைத் தொகுத்தெடுத் துரைத்தேன் மே
உத்தமர் தமையி கழ்ச்சி யுரைத்திடு கொடிய ஞன [லாம்
சத்திய சன்மன் செய்கைச் சருக்கமேற் சொல்வன் மன்னே. உச

பாரியைக் கொன்றபாவந் தீர்ந்தசருக்கமுற்றிற்று.

ஆகதிருவிருத்தம் சஉச.

---

## கரு. சத்தியசன்மச் சருக்கம்.

இலகிய சூதமா முனிவ னெண்ணிலா
நலமிகு நைமிசா ரணிய மேவிய
அலகின்மா தவர்செவிக் கமுத மாமெனப்
பலனுயர் காதையைப் பகர லுற்றனன். க

முத்திமா நகர்தனின் முதன்மை யாகிய
உத்தம மதுரையி லுயர்ம றைக்குல
நித்திய கன்மவே தியரை நிந்தை செய்
சத்திய சன்மனீள் கொடியன் றன்பெயர். உ

சைவநிந் தனைசதுர் மறையி னிந்தனை
தெய்வநிந் தனையநு தினமுஞ் செய்குவன்
ஐயன்மான் மியஞ்சொலும் புராணத் தன்பிலன்
வைதுதா டணஞ்செய்வன் சொல்லு வார்தமை. ௩

அன்னபா னுதிக ளனைத்தும் விற்பன்மேல்
மன்னிய சிவத்திர வியம றைப்பன்மற்
றின்னவா றன்றியே யிழிவு செய்குவன்
தன்மமன் றெனபது சற்று மோர்கிலன். ௪

அரசர்பே ரவைதனி லரிய கல்விசேர்
இரவலர் மறையவர் யாவ ராயினும்
வரினவர்க் கொருபொருள் வழங்கி டாதுமேற்
பரவிய கெடுதிதான் செய்யும் பாதகன். ௫

மிகுந்திடு புசிப்பினர்க் காணின் வெஞ்சினம்
புகுந்திடு கண்ணினன் புவன மீதினில்
தகும்படி யன்றிநீ யுண்ணுந் தன்மையால்
பகுந்தெவ ரிடுகுவ ரெனப்ப ழிப்பனே. ௬

உருத்திடு கோபம்விட் டொழுகி லன்றினங்
கிருத்திரு வஞ்செயுங் கொடியன் கீழ்மையாங்
கருத்தின ருடன்கலந் துறவு செய்குவன்
இருப்பிட மாகுவ னெண்ணில் பாவமும். ௭

கங்கைநீ ராடிய பலனைக் கைப்பிடித்
திங்கிது தந்தன னென்று விற்பன்மேல்
அங்கவன் செய்திடு மநீதம் யாவையும்
பங்கயா சனன்பகுத் தெண்ணற் பாலவோ. ௮

புன்மதி யினன்றனக் கெழுவர் புத்திரர்
கன்னிய ரெனவெழில் கொழிக்குங் காஞ்சினி
என்னுமோர் பெண்ணிவ டனைக்கொ டுத்தவன்
பின்னரா ருயிரம் பொன்னைப் பெற்றனன். ௯

௫. பரவுதல் — சொல்லுதல்.

சேர்ந்திடு திரவியஞ் செலவிற் போகுதென்
றோர்ந்துதன் வயிற்றினை யொடுக்கிப் புத்திரர்
சோர்ந்திட நெருப்பெனக் கடுஞ்சொற் சொல்லுவன்
நேர்ந்தவன் கெடக்கய நோய்நி றைந்ததே. ௰

அனையநோய் நிறைந்திட வவன்ம ரித்தனன்
றுனைவினிற் சமன்விடுந் தூதர் கொண்டுபோய்
நினைவரி தாம்பெரு நரகி னீந்திடா
தினையவே யவன்றனை யழுத்தி யிட்டனர். கக

கொடிற்றினைக் காய்ச்சியே கொண்டு வந்துடல்
துடித்திடப் பிடுங்கினர் துள்ளி யார்த்தெடுத்
தடித்தன ரிருப்புமுட் கதையி னாலனுப்
பொடிப்பட வரிந்துவாய் புகுத்தி யிட்டனர். கஉ

ஈங்கிவன் மனுவொரு மூன்றின் காலமித்
தீங்குறு நரகினிற் கிடந்து தேம்பினன்
தாங்கிடா துடைசிவ நாபந் தன்கையால்
ஓங்கிவிற் றனனிரந் தொருவன் கேட்டனன். கங

தரித்திர னனவே தியன்ற னக்கவன்
மரித்திடு முனமனத் தொடுகொ டாமலே
உருத்தன னெடுத்துநீ நடவென் றேதினன்
பிரித்ததப் புண்ணிய நரகம் பின்னிட. கச

உற்றபுண் ணியமடுத் துதவி செய்தலால்
மற்றவன் வயித்திய நாத மாநகர்ச்
சுற்றுயர் சோலையிற் றூய பாதிரி
முற்றிய விருக்கமேன் முனிய தாகியே. கரு

திருந்துசித் தாமுத தீர மீதினில்
இருந்தன னெடிதுநா ளிருக்கு மேல்வையின்
அரும்பொரு ளாமிரு கண்ட ருந்தவன்
வருங்குகன் றிருவிழா மகர மாதநாள். கசு

வேறு.

கிளர்ந்திடு நான்காஞ் செவ்வாய்க் கிழமையி லுதய காலம்
விளங்கிய தீர்த்த மூழ்கி விதித்தவெண் ணீற ணிந்து
வளம்பெறு மண்ணல் கோயில் வலஞ்செய்து வந்து விண்ணை
அளந்தபா திரிநி ழற்கீ ழருஞ்செபஞ் செயநி னைந்தே. கஎ

குண்டிகை யிருந்த சித்தா முதநறுங் குளிர்நீ ரள்ளி
வண்டிசை மிழற்று நீழற் சுசிபெறத் தெளித்தான் மன்னும்
ஒண்டுளி யதனி லொன்று தெறித்துயர் மரத்தின் மீது
பண்டுறைந் திருந்த தீய முனியுடற் பட்ட தன்றே. கஅ

வேறு.

ஏறும்மிகும் பிரம யட்சதா முடல்விட் டிலங்குதிவ் வியவுருவாகி, உறுபெரும் பாவ மனைத்தையுங் காணு தொழிந்துநல் லாடையா பரணம், நறுமணங் கமழ்செஞ் சாந்தணிந் திலகு நவமணி மகுடமுந் தரித்தே, மறுவின்மா தவனைத் தொழுதவன் முன்னம் வந்ததுந் தீர்ந்ததும் புகன்றான். கக

தேறியே தெளிந்த முனிவர தேவ ருலகம்யான் செல்குவனென்றே, ஏறினன் விமானத் திலகுபூ மாரி யிமையவர் மிகப்பொழிந் தனர்வெண், ணீறினை யணிந்த சிவகண மனேகர் நெருங்கிய கவரிகா லசைத்தார், நாறிருங் கூந்தற் கன்னியா மரம்பை நன்னடம் புரிந்தனண் மாதோ. உ௦

இந்திர னெதிர்கொண் டெழுந்தன னிவ்வா றிலகும்விண் ணவருல கதனைச், சுந்தர விமானத் திருந்துசெங் கமலத் துணைவிழிக் கடையினு னோக்கி, உந்தியங் கமலத் துதித்திடும் விரிஞ்சனுலகமா லுலகமு நீங்கி, வந்துமேற் சிவலோ கந்தனைச் சேர்ந்து மகிழ்ச்சிபூத் திருந்தனன் மன்னோ. உக

வேறு,

உயர்ந்தவர்க் கிடையூ றென்று முரைத்திடு தீமை தீர்ந்தே
இயங்கிய சத்ய சன்மச் சருக்கமீண் டுரைத்தே னிப்பால்
நயந்தருங் குணத்த ராகி நானிலம் புகழு மேன்மை
துயங்குநன் முனிவர் தீர்த்தச் சருக்கமே லுரைப்ப னம்மா. உஉ

சத்தியசன்மச்சருக்கமுற்றிற்று. ஆ திருவிருத்தம். சசசு.

## கச. முனிவர்தீர்த்தச்சருக்கம்.

மன்னிய மகிமைசேர் சூத மாதவன்
பன்னரு முனிவர்கள் பரிவு கூர்ந்திட
முன்னரோ தியகதை யதனின் முற்றுறப்
பின்னரு மொருகதை பேசன் மேயினன். க

நற்புகழ் வயித்திய நாத மாநக
ரிற்றகு முனிவர்தந் தீர்த்த மெய்துநற்
பொற்புறும் பூருவ மதனிற் போற்றிடும்
விற்கிடை மூன்றினில் விளங்கி யென்றுமே. உ

இந்தநற் றடவிரட் சகன்புள் வேந்தன்மேல்
வந்திடு முயர்மிரு கண்டு மாதவன்
சுந்தர விருடிதொன் மரம்வி ருக்கமாஞ்
சந்திர சேகரன் றகுமெய்த் தெய்வமே. ங

வடவிருக் கந்தனை வலஞ்செய் தன்னவர்க்
கடன்முறை கைதொழு தியற்றி யாவணித்
தொடர்புறு மூலநாண் மூழ்குந் தூயவர்
அடர்வினை தவிர்சிவ கணங்க ளாகுவார். ச

விரவுநன் மகரமா தத்தின் மீதினில்
பரவிய சுக்கில பக்க பஞ்சமி
வரமிகு சுக்கிர வாரங் கூடுநாள்
நரர்படிந் திடிற்சிவ னுருவ நண்ணுவார். ரு

அன்றியு முனிவர்தந் தீர்த்த மாடுவோர்
வென்றிசேர் மிகுபரி மேதஞ் செய்திடும்
வன்றிறற் பலன்றனைப் பெறுவர் மற்றும்வந்
தொன்றுபா தகமெலா மொழித்துத் தள்ளுவார். சு

புகுங்கொடு நரகுசேர் புருண கத்தியு
மிகும்பிதிர் கத்தியும் வீர கத்தியுந்
தகும்பதி கத்தியுந் தாச கத்தியும்
பகுந்துபாற் றிடுமுனி தீர்த்த நீர்படின். எ

---

எ. புருணகத்தி—கருச்சிதைத்தல். பகுத்து என்பது பகுந்து, என எதுகைபற்றி மெலிந்து நின்றது. பகுத்து—பிரித்து. பாற்றிடும்—ஓட்டும்.

வேறு.

அகழ்கட லுடுத்த பார்மே லளப்பரு நன்மை நல்கி
இகல்கடிந் திலகு மேலா மெழிறழைந் திருந்த நல்ல
புகழ்பெறு முனிவர் தீர்த்தம் புகன்றன னிப்பா லென்றுந்
திகழ்தர வீர கத்தி தீர்ந்திடு சருக்கஞ் சொல்வேன். அ

முனிவர்தீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆஉ திருவிருத்தம் சஞச.

---

## கரு. வீரகத்திதீர்ந்தசருக்கம்.

இத்தகு தீர்த்த மேன்மை யின்னமொன் றுரைப்பன் வீர
பத்திரன் யாக முற்றும் பாழ்படச் செய்து செங்கைச்
சத்திர மெடுத்துத் தக்கன் றலையினைத் தடிந்து வீர
கத்தியை யடைந்து பூமி யந்தரஞ் சுவர்க்கங் காணும். க

திரிந்தனன் றீரக் காணுன் றிகழ்தரு மேனி யெல்லாங்
கரிந்தெழின் மாறி வாடிக் கயிலைமால் வரையை நண்ணி
விரிந்தசெஞ் சடில நாதன் விரைகமழ் மலர்த்தாள் போற்றிப்
பரிந்தியா னென்செய் வேனிப் பாதக மகல வென்றான். உ

உரைசெய்த வீரன் பின்னு முன்னியித் தனைய தென்று
கரைதனைக் காணுத் துன்பக் கடலினுட் படிந்து யானித்
திரைதனை யொழிந்தே யுண்டி தீர்ந்தன் னென்றான் கொன்றை
விரைகமழ் தாரான் வீரன் றனக்கிவை விளம்ப லுற்றான். ந

வாரிசூ ழுலக மேத்தும் வயித்திய நாத மென்னும்
பேரினைப் பெற்று மேலாம் பெருமைசேர் தலத்தின் மீது
நேரினை யரிதாய் மன்னி நிறைமுனி தீர்த்தந் தன்னைச்
சேரின்வந் தடைந்த பாவந் தீர்ந்திடு மெளிதி னென்றே. ச

உரைத்திடு மையன் வாக்கி னுறுதியை நயந்து மேரு
வரைத்தடந் தோளான் வெள்ளி மால்வரை நீங்கித் தீர்த்தக்
கரைக்கணற் றவஞ்செய் காற்கியன் காசிபன் வீதி கோத்திரன்
தரைக்குண்மே லாம யிந்தன் பராசர னகத்தியன் றக்கன். ரு

நலமிகு முனிவர் மூழ்கி நற்றவம் புரிந்து மேலாம்
பலனினைப் பெற்ற வாற்றாற் பகர்முனி தீர்த்த மென்றே
உலகினிற் பெயர்பெற் றோங்கு முண்மையு முணர்ந்து வீரன்
இலகிய தீரத் துள்ள வெழில்வளம் யாவுங் கண்டான். சு

தூயதா மகர மாதச் சுக்கில பக்கந் தன்னில்
மேயபஞ் சமியின் வெள்ளி வாரமெண் ணரிய வீர
நாயக னனைய தீர்த்த முழுகின னடுங்கி விட்டுப்
போயது வீர கத்தி பொற்புறு மகிழ்ச்சி பூத்தான். எ

சூழ்ந்துமூ வலஞ்செய் தையன் றுவாரபா லகனுய் நின்றான்
வாழ்ந்திடு கலியி னன்றோன் வளரருள் பெற்றுப் பின்னர்
ஆழ்ந்து மூழ்கினர்க ளெண்ணி லாவரும் பாவ மெல்லாஞ்
வீழ்ந்திட வெளிதி னின்ப வீடுமேற் பெறுவ ரம்மா. அ

விறல்படைத் திருந்த வீர பத்திரன் வெகுண்டு நீங்கா
மறம்வளர் தக்கன் றன்னை வதைசெய்ய வந்து சூழ்ந்த
திறன்மிகும் வீர கத்தி தீர்ந்தவா றுரைத்தே னிப்பால்
பெறலரும் பிரம தீர்த்த மான்மியப் பேறு சொல்வேன். கூ

வீரகத்திதீர்ந்தசருக்கமுற்றிற்று.
ஆக திருவிருத்தம்—௪சுரு.

---

## கசு. பிரமதீர்த்தச்சருக்கம்,

மங்கள நிறைந்தே மல்கு மகிமைசூழ் பிரம தீர்த்தந்
திங்கள்வே ணியன்றன் பாங்கிற் சேர்தருந் திசையோ ரெட்டில்
அங்கியுங் கடவுண் மன்னி யமர்ந்திடு திசையி னென்று
பொங்குமா தவர்கள் கேட்பப் புராதன முனிபு கன்றான். க

இலங்கிடு மிருடி வேதன் கதிரவ னினிய தெய்வம்
மலர்ந்தபா டலம்வி ருக்க மிரட்சகன் வருசண் டீசன்
நலம்பெறு மிவர்கள் செய்யு நாண்மலர்த் தாள்வ ணங்கி
வலஞ்செய்து விருக்கந் தன்னை வான்புனற் படிவர் நல்லோர். உ

மருமலர்ப் பொகுட்டின் மேவு மறையவன் வந்து நின்று
நிருமிதஞ் செய்து தீர்த்த நீரினால் வயித்திய நாதன்
திருமுடிக் கபிடே கந்தான் செய்தருச் சனையுஞ் செய்தே
அருமக மொன்றி ரண்டை யாயிர வருடஞ் செய்தான். ரு

செப்பிணைந் திருந்த தென்னத் திகழ்ந்திடு தனத்தாண் மின்னல்
ஒப்பிடு மிடையா ளன்ன நடையினா ளுலக மீதில்
எப்பெரி யோருங் கல்விக் கிறைஞ்சிடும் வாணி தன்னோ
டப்பெருந் தீர்த்தம் பார்த்தே யனேகநல் வரங்கொ டுத்தான். சு

சிறந்திடு தீர்த்தஞ் சூழுந் தீரமேற் செய்த மேன்மை
அறந்தரும் வேள்வி முற்றி யையன் றருள்பெற் றப்பால்
உறைந்திடும் பசிய பொற்சூட் டோதிம மூர்ந்து பாரில்
புறந்தரு மவர்கள் போற்ற வெழுந்துதன் னுலகம் போந்தான்.

அனையகா ரணத்தான் வந்த வரும்பெருந் தீர்த்த மூழ்கின்
வினையொழித் திடுவர் வேத விக்கிர யஞ்செய் வோனும்
நினையுமவ் வேதந் தன்னை மறந்திடு மவனு நீங்கா
தெனையமா பாத கஞ்செய் திடுமவர் தாமுந் தீர்வார். சு

மன்னுமா வணியின் மேவி வருமமா வாசை தன்னில்
நன்மைசேர் பிரம தீர்த்த மூழ்கிநற் றானஞ் செய்வோர்
பன்னிரண் டாண்டு மேலாம் பரன்சிவ நிசியிற் பூசை
தன்னையன்புடனேசெய்வோர்பெறும்பலன் றனைப்பெற்றுய்வார். எ

மட்டவிழ்ந் திலகும் பொற்றா மரையுறை விரிஞ்சன் றீர்த்தம்
அட்டமி சேர்ந்த செவ்வாய்க் கிழமையி லமூந்தி மூழ்கில்
சிட்டரா குவ ரனேகம் வேள்விசெய் பலனைச் சேர்வார்
எட்டரும் வேத பாரா யணவெழிற் பலனுஞ் சேர்வார். அ

கண்ணிரு நான்கு பெற்ற கடவுளின் றீர்த்தந் தன்னை
வண்மையாய் வலஞ்செய் வோர்கள் புவிவலஞ் செய்த பேறு
நண்ணுவர் மூன்று கோடி குலநலம் பெறச்செய் தென்றும்
அண்ணறன் கயிலை நீங்கா திருந்திடச் செய்வ ரன்றே. கூ

குருமனை யாளைத் தொட்டுக் கொடியபா தகமுங் கூட
வருசகோ தரன்றன் பாரி மலர்க்கரம் பிடித்த ணைந்த
பெருகுபா தகமு நண்புன் செய்வளை யிதழி னூறல்
பருகுபா தகமுந் தீர்க்கும் பகர்ந்திடும் பிரம தீர்த்தம். கo

மங்கள காமா யார்க்கும் வரந்தரும் வயித்திய நாதற்
கங்கிதன் றிசையின் மேவி யருடரும் பிரம தீர்த்தம்
இங்கிதன் பெருமை யென்னு லறிந்தவா றிசைத்தே னிப்பால்
பொங்குசூ ரியன்றன் றீர்த்தச் சருக்கமேற் புகல்வன் மன்னே. கக

பிரமதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ. திருவிருத்தம்—சஎச.

## கஎ. சூரியதீர்த்தச்சருக்கம்.

ஓங்குசீ ரிராம தீர்த்தத் துறைபெறுந் தென்பால் மன்னும்
பாங்கர்விற் கிடையி ரண்டிற் பரிதியங் கடவு டீர்த்தம்.
நீங்கரு மகிமை பெற்று நிறைந்திடுங் கிரக தோடம்
ஆங்கதின் மூழ்கி னோரை யணுகிடா தகன்று நீங்கும். க

சூரிய சாணை வாயிற் கொடுத்திடப் பட்டு வெய்யோன்
சீரிய வுடன்மெ லிந்து சிறப்பொழிந் ததன்மேல் வந்து
வாரிசூ ழுலக மேத்தும் வயித்திய நாதஞ் சார்ந்தே
ஆரிணை மலர ணிந்த வண்ணலைப் பூசை செய்தான். உ

இறைவன தருளான் முன்ன மியலொழிந் திருந்த மேனி
நிறையெழில் கொழிப்ப வாய்ந்து நிரம்பின ததன்மே லன்னோன்
உறைதரு மிடத்திற் றீர்த்த மியற்றிமே லொளிர்வ ரங்கள்
முறைபெறக் கொடுத்த வாற்றன் முதன்மைதான் மிகுந்த தம்மா.

கண்ணுவ னிருடி தெய்வங் கதிரவ னந்தி கேசன்
நண்ணியங் கதனை நாளு மிரட்சைசெய் நலனை யுள்ளோன்
விண்ணுய ராசு வாய்ந்த விருக்கமே லிவர்தாள் போற்றி
வண்மைசேர் விருக்கந் தன்னை வலஞ்செய்து மூழ்கின் வாழ்வார்.

முந்திய வருக்கன் வார மூழ்கிநீ றணிந்தே யன்னோன்
மந்திரஞ் செபித்துப் பம்பி வளர்ந்திடு மாசி னீழல்
அந்தணர்க் கினிய தான கோதுமை கிருத மாதி
தந்தமக் கியன்ற தானஞ் செயிற்பலன் சதம் டங்காம். ரு

கதிரவன் றீர்த்த மீது கனிந்துநால் வருணத் துள்ளோர்
துதிபெறுங் கடக மாதச் சுக்கில பக்க மூழ்கில்
அதிகநற் பலன ளிக்கு மாதிவா ரத்தின் மூழ்கில்
நிதிமிகப் பெறுவர் கங்கை தோய்நெடும் பலனுஞ் சேர்வார். சு

மங்கள கரமா மிந்தி ராதிபர் வாழ்வு நல்கும்
இங்கிது வன்றி யிச்சை யுற்றன வினித ளிக்குந்
தங்குகோ கத்தி யாதி பாதகந் தனைவி லக்குஞ்
செங்கதி ரவன்றன் றூய தீர்த்தநீ ராடி னம்மா. எ

திகழ்தரு மிராம தீர்த்தத் தென்றிசை தன்னின் மன்னி
மிகுதிறல் வரங்க ணல்க விளங்கிமே தினியின் மீது
புகழ்பெறு சூரிய தீர்த்த மான்மியம் புகன்றே னிப்பால்
மகிழ்பெறத் தக்க தீர்த்த வண்மையை வகுத்து ரைப்பேன். அ

சூரியதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆஉ திருவிருத்தம் சஅஉ

---

## கஅ. தக்கதீர்த்தச்சருக்கம்.

மலர்தலை யுலகம் போற்று மகிமைசேர் வயித்திய நாதன்
இலகுபூங் கோயி னின்று மெழின்மிகு மீசா னத்தின்
அலகிடற் குரோசப் பாதி யெல்லையி னமுதம் போன்று
நலமிகுந் தக்கன் முன்ன நயந்துசெய் தீர்த்த மாதோ. க

வேறு.

இருடிகாத் தியாயன னிலகு தெய்வநல்
அருண்மிகும் விநாயக னதனி ரட்சகன்
கருதருங் கந்தன்வாழ் விருக்கங் கூவிளம்
வருமவ ரிவர்தமை வணக்கஞ் செய்துமேல். உ

வளர்ந்திடு தருவலஞ் செய்து வார்புனல்
விளங்கிய கன்னிமா சத்துண் மேவிய
இளம்பிறைப் பக்கநா ண்வமி யெய்தியே
கிளர்ந்திடுங் குருதின் முழுகல் கேண்மையாம். ௩

தாமகங் கனிவுற முழுகிச் சார்ந்திடும்
மாமறை யவர்மன் மகிழப் பாறயிர்
ஓமநெய் தண்டுல முதவிற் செய்பவம்
போமருஞ் சிவத்துரோ கமும்பின் போகுமே. ௪

வீடணை சைவசாத் திரம்வி பூதியைத்
தூடணஞ் செய்திடுந் துரோகி யாகிய
கேடனே யப்புனல் படியிற் கேதமாய்
வாடனேந் திடச்செய்து வறுமை தீர்க்குமே. ௫

அன்பொடு தக்கன்றீர்த்த மாடினன்
பின்பிதிர் தருப்பணஞ் செய்யிற் பெட்புறுந்
தன்குலத் தினரொரு கோடி பேர்தமை
இன்புறு சிவபத மெய்தச் செய்யுமே. ௬

வேறு.

உலகெலாம் போற்றும் வயித்திய நாதவும்பர்கோன் விளங்கு பூங் கோயில், இல்குமீ சான திக்கினில் விளங்கி யெழில்வர மெளி தினி லளிக்க, வலன்மிகப் பெற்ற தக்கன்றீர்த்த மான்மியம் பகர்ந் தன னிப்பால், நலன்மிகும் வித்தியா தார்பெருந் தீர்த்த நலந்தனை நவிலுவன் மாதோ. ௭

தக்கதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ௨ திருவிருத்தம்—௪அகூ.

---

௫. வீடு அணை சைவசாத்திரம் — முத்தியை அடைதற்குக் காரணமாகிய சாத்திரம்.

## ௧௧௯. வித்தியாதரதீர்த்தச்சருக்கம்.

கறைவி ளங்கிய கந்தரக் கடவுடன் றீர்த்தம்
முறைதெ ரிந்துணர் சூதமா முனிவரன் முதிர்ந்த
நறைம லர்ச்செழுந் தருமிகு நைமிசா ரணியத்
துறையு மாதவ ருளமகிழ் கூர்ந்திட வுரைத்தான். ௧

வந்து வானவர் நிதந்தொழும் வயித்திய நாத
இந்து சேகரன் கோயிலின் விளங்குமீ சானத்
தைந்து விற்கிடை யளவையின் வித்தியா தரர்நல்
சுந்த ரத்திருத் தீர்த்தம்வி ணமுதெனச் சூழும். ௨

என்றெ டுத்தெடுத் துரைத்தன னிதுமுனந் தக்கன்
வென்றி சூழ்பெருந் தீர்த்தநேர் கீழ்த்திசை விளங்கும்
நன்றி சேர்ந்திடு மிருடிநற் குணமிகு கபிலன்
வன்றி றற்பெறு தெய்வம்வாழ் கந்தவேண் மாதோ. ௩

வருகொ ழுங்கன லிரட்சகன் வளர்ந்திடும் வில்வம்
பெருவி ருக்கமாம் பேருல கந்தனில் வாழ்வோர்
அருகி ருந்திடு மிவர்தமை வணங்கியப் புனறோய்ந்
துருகு சிந்தையோ டியர்மறை யவர்தமக் கம்மா. ௪

கலந்த சாந்தநற் புதுமல ரணிந்து காற் பாசந்
திலஞ்ச ருக்கரை தண்டுலந் தக்கிணை சேர்த்தே
இலங்கும் வில்வமூ லந்தனிற் கொடுத்தவ ரெழில்சேர்
நலங்கொண் மங்கல நிறைந்திடு செல்வநண் ணுவரே. ௫

ஆடி யென்றுநற் பெயர்பெறு மயனமீ தனைய
நீடி ருஞ்செழுந் தீர்த்தநீ ராடினர் நீங்காக்
கோடி பாதகந் தொலைந்துநூற் றொருகுலந் தன்னைத்
தேடி யேகரை யேற்றுவர் சிறப்புடன் வாழ்வார். ௬

இடப மாதமீ தெய்திய விசாகநா ளிலகு
தடநி றைந்திடு தண்புன லாடினர் தம்மைத்
தொடரும் வல்வினை தொலைந்திடுந் தொல்லுல காளுந்
திடமி குந்திடு புதல்வனைப் பெறுவரஞ் சேர்வார். ௭

---

௫. காற்பாசம்-பருத்திப்பஞ்சு. வில்வமூலம்-வில்வமரத்தின்அடி.

அகழ்பெ ருங்கட லாடைசூழ் காசினி யதனில்
நிகழு நல்லெழி னிறைந்திடு கன்னியர் நிரம்பித்
திகழ்த ருஞ்செழுந் தீர்த்தநீர் தோய்ந்திடிற் றிருந்தும்
புகழ்கொள் சுந்தரக் கணவனைப் புணர்குவர் மாதோ. அ

வேறு.

அக்கணிந் திலகு மையனை தருள்பெற் றவனிமீ தினிற்றிகழ் தருமெண், திக்கெலாம் புகழும் வித்தியா தரர்தந் தீர்த்தமீண் டுரைத்தன னிப்பால் தொக்கவெஞ் சாபம் பெறுஞ்சுத ரிசனன் சொலற்கரு மதனைவிட் டொழிந்து, தக்கசீர் விமான மேறி வெண் கயிலை தனின்மகிழ்ந் திருந்தவா றுரைப்பேன். கூ

வித்தியாதரதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆகதிருவிருத்தம் சகூஅ.

---

## உ௰. சுதரிசனன்சாபநீங்குசருக்கம்.

விளங்கிய சுதரி சனனெனு மெழில்சேர் வித்தியா தரன்மிகுந் திடுநல், வளம்பெறு மமுத குணத்தினள் குமுத வதியெனுந் துணைவிதன் னுடனே, கிளர்ந்திடுங் கங்கை மாநதி யதனிற் கெழுமிமூழ் கிடுஞ்சலக் கிரீடை, துளங்கிடு மினிய துகிறனை நீத்துத் துணைவிழி சிவந்திடச் செய்தான். க

அன்னகா லையினிற் றேவல னென்னு மரியமா தவன்வரு கங்கை, நன்னதி யாடப் போந்தன னன்னோர் நற்றுகி லின்றிநீ ராடும், முன்னிய விளையா டலையரு வருத்துக் கண்டனன் வளர்வெகு ளியினல், தன்னைநே ரரியா னுழுவையாய்ப் போகத் தக்கதென் றுரைத்தனன் சாபம். உ

ஆங்கது செவியிற் புகுதமுன் னடியே மையநின் சாபம்விட் டொழிந்து, நீங்குநா ளெந்நா ளருள்செயென் றிரந்து நின்றன னெடியமா தவன்பின், பாங்கரி னின்ற வித்தியா தரனைப் பார்த்துநீ பரிதன் னுடனே, ஈங்கிது வுரைத்தா யென்பெருந் துயரங் கெடுத் துரைப்பனென் றிசைத்தான். ௩

ஆர்த்திடுந் தரங்கக் கருங்கட லுடுத்த வவனியிற் றம்பதி புணர்ச்சி, பார்த்தவன் செய்த புண்ணிய நசிக்கும் பாய்புலி காடி யாய்ப் பிறப்பன், போர்த்துடுத் திடுநல் லாடையில் லாமற் பொற் கொடி நீயுநிற் றலையான், தீர்த்தநீ ராட வந்திடு மிடத்திற் றிட் டியாற் கண்டபா தகத்தால். ௪

செய்திடு தவங்கள் யாவையு மின்று சிரண மாயின வன்றி னையுநன் மனத்தா லண்ணலான் வயிற்றின் வருமவர் நந்திசங் கரன்மேல், உய்தர வுபதே சஞ்செயுங் குரவ னுண்மைசேர் சீட னின்னோர்கள், எய்துநல் விடத்தி னிடைசெலு மவர்க ளியற்று புண் ணியமும்வீ ணுமால். ௫

மூற்றிழை கணவ னுடன்றனி யிடத்தின் முறுவல்செய் வது தனைக் காண்போன், மற்றவர்க் கிடையூ றியற்றுவோ னீரின் வளர்ந்திடு செளுகமா குவனேய், உற்றிருந் துழல்வ னெனவிவை யெடுத்தே யுரைத்துநீ வயித்திய நாத, நற்றலந் தன்னிற் றாம்பிர பரணி நன்னெடுந் தீரநண் ணிடுநாள். ௬

அவணுறை கங்கா தான்றனைப் பசிநோ யகலநீ பிடித்திடப் போவாய், சிவனுரு வான மறையவ னனைய தீர்த்தநீர்ப் புரோட் சணஞ் செய்வான், இவளுட னீயும் புலியுரு வொழித்தே யெய் துவை நின்னுல கென்றே, தவமிகும் வயித்திய நாதநற் றலத் தைச் சார்ந்தனன் றன்பவந் தீர்க்க. ௭

தெண்டிரை சுருட்டிச் சுழித்தெழுந் தோடித் திகழ்ந்திடு கங் கைமா நதியின், ஒண்டுறை யதனி னொடு பெண்ணி னுருவமை யுழுவைய தாகித், தண்டகா ரணியந் தனிற்பல ஞான்று சஞ் சரித் ததன்பினஞ் சிறைநல், வண்டுறை பொழில்சூழ் வயித்திய நாத மாநகர் சேர்ந்தனன் மாதோ. ௮

உறைந்திடும் வயித்திய நாதனுக் கீச திசைதனி லொருகு ரோசத்தில், நிறைந்திடு மனைய தீர்த்தநீ ரத்தி னியதிசெய் மறை யவன் றன்னை, அறைந்திழுத் தருந்தப் போந்தனன் பார்த்தே யருமறை யவன்புரோட் சணஞ்செய், நிறைந்திடு துளிபட் டது புலி யுருவ மிரண்டும்விட் டொழிந்திடக் கண்டான். ௯

தாங்கரும் புகழ்சேர் தாம்பிர பாணித் தண்புனல் பட்டவக் கணத்தின், வேங்கையா யுறுமப் பாவமு நீங்கி வேதியன் விரை கமழ் நறிய, பூங்கழல் பணிந்து விமானமே லேறிப் பொற்புறுந் தன்னுல கணைந்தான், ஈங்கிது நிகழ்ந்தே யிருத்தலால் வித்தியா தர னெழிற் றீர்த்தமென் றனர்முன். ௧௦

வேறு.

பத்தி பூருவ மாகவே பாரினிற் பிறந்தோர்
வித்தி யாதர தீர்த்தநீர் முழுகிடின் விளங்கும்
புத்தி ரன்றனைப் பெறுவதும் புகழ்பெறு வதுமோர்
முத்தி வீடுமே முழுவதும் பெறுகுவர் மாதோ. ௧௧

வேறு.

கலந்துநண் பிலகு பாரிதன் னுடனே கரைபொரு கடல்புடை சூழ்ந்த, நிலந்தனிற் சுதரி சனனெடுஞ் சாப நீங்கிய சருக்கமீண் டுரைத்தேன், வலம்படைத் திருந்த விசுவதே வர்க்கணன் மகிழ்ச்சி பூத் தெழில்வர நல்கப், பலந்தனை யளிக்கும் வில்வதீர்த் தத்தின் மான்மியம் பகர்குவன் மன்னே. ௧௨

சுதரிசனன்சாபநீங்குசருக்கமுற்றிற்று.

ஆகூ திருவிருத்தம் ருக௦.

---

## உக. வில்வதீர்த்தச்சருக்கம்.

சொல்லரும் புகழ்சேர் சூதமா முனிவன் ரெருடுகேட லுடுத்த தொல் லுலகில், நல்வள மிருந்த நைமிசா ரணிய நலந்தா மகம்புரிந் திருந்த, செல்வமா தவர்கள் செவிக்கினி தான தெள்ளமு தம்பொ ழிந் தெனச்சூழ், வில்வதீர்த் தத்தின் மகிமையை யெடுத்து விரித் துரை செய்தன்மே யினனுல். ௧

வேறு.

அற்புத வயித்திய நாத வண்ணருன்
உற்றபூங் கோயில்சூ ழுத்த ரந்தனில்
பொற்புறும் புண்ணிய திரட்சி யாமென
விற்கிடை மூன்றினில் வில்வ தீர்த்தமே. ௨

வியன்புக ழிருடியாம் விசுவ தேவர்நல்
நயம்பெறுந் தெய்வமிந் திரனற் பாலகன்
பயங்கர வுருவுள தண்ட பாணியே
உயர்ந்திடும் விருக்கமேல் வில்வ மூண்மையே. ௩

சொல்லிய விவர்தமை வணங்கித் தூயதாம்
வில்வமூ லந்தனி லன்னம் மேதகு
நல்லகோ தானமே நயந்து செய்திடிற்
பல்கிடு மொன்றினுக் கனந்த மாம்பலன். ௪

இசைதரும் விசுவ தேவர்க ளிலங்குமெண்
திசைதொறும் வில்வம்வைத் திடையிற் செவ்விதாய்
நசையுறுந் தீர்த்தமொன் றியற்றி நாதனை
அசைவறப் பூசைசெய் தனர னந்தநாள். ௫

ஆதலா லதன்பெயர் வில்வ தீர்த்தமாம்
ஓதநீர் சூழ்ந்திடு முலகில் வாழ்பவர்
காதலால் வலஞ்செயிற் கயிலை மால்வரை
மேதகு விமானமே லேறி மேவுவார். ௬

தெளிந்தசித் தாமுத தீர்த்த மூழ்கியே
பளிங்கெனத் திருந்திய மனத்திற் பண்புடன்
அளிந்திடு மனையவ ரையன் பூசையை
விளிந்திடா திலகுநல் வில்வ மேந்தியே. ௭

நித்தியஞ் செய்துநன் னியம மாகவே
சித்தியாம் வில்வநற் றீர்த்த தீரமேல்
மத்தியா னந்தனில் வந்த ருந்தவம்
முத்திசேர்ந் திடமுயன் றியற்றி நின்றனர். ௮

சிலபகல் கழிந்தபின் றேவ நாயகன்
பலனுறும் வரந்தனைப் பரிந்த ளித்தனன்
இலகிய தீர்த்தநீர்க் கெழில்வ ரங்கொடுத்
துலகின்மே லாம்பத முற்றி ருந்தனர். ௯

அழகிய வில்வம்வாய்ந் தருகி னின்றிடும்
நிழறனின் மூழ்கினர் நெடிய கங்கைநீர்
சுழன்மிக வருபிர யாகை தோய்பலன்
உழல்வினை யொழிந்திடப் பெறுவ ருண்மையே. ௧௦

இத்தகு தீர்த்தநீ ராட்டி யீசனை
மொய்த்திடும் வில்வமுக் கிளையி னுனிதம்
புத்திபூ ருவமதாய்ப் பூசை செய்தவர்
சுத்தரா குவர்வினைத் தொடர்ச்சி நீங்கியே. ௧௧

வளர்ந்திடு மாநிலந் தன்னில் வண்புகழ்
விளங்கிடு வில்வதீர்த் தத்து மான்மியங்
கிளந்தனன் கௌதம தீர்த்த மேன்மைமேல்
உளந்தனின் மகிழ்பெற வுரைத்தல் செய்குவேன். ௧௨

வில்வதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆகூ திருவிருத்தம் ருஉ௨.

## ௨௨. கௌதமதீர்த்தச்சருக்கம்.

போங்கிடு மிராம தீர்த்தப் புறந்தனிற் புகழ்சி றந்த
அங்கியங் கடவு டிக்கி லந்துவிற் கிடையின் மீது
கங்கைமா நதியிற் றூய கௌதம தீர்த்த மன்னுந்
தங்கிய பவமாங் காடு தனக்கதின் றீப்போன் மன்னே. ௧

சேருநல் விருடி மேலாங் கௌதமன் றிகழுந் தெய்வம்
மாருதஞ் சோமன் மன்னும் பாலகன் வளர்வி ருக்கம்
சாருமா மிரமம் மூலந் தனிற்றில தானஞ் செய்வோர்
பாருறும் போகந் துய்த்துப் பரகதி பெறுவ ரம்மா. ௨

கைதரும் பலனு யுள்ள கவுதம தீர்த்தச் சூழல்
கொய்யுளைத் துரகங் கைம்மாக் குளிர்பசும் பொன்னின் குப்பை
வைதிக மறையோ ருள்ள மகிழ்ந்திடத் தானஞ் செய்வோர்
எய்தரும் போகம் யாவு மெளிதினிற் பெறுவர் மாதோ. ௩

௨. ஆமிரம்—மாமரம்.

எண்ணிடு மிடப மாத மெய்துபூ ருவநற் பக்கம்
நண்ணுபஞ் சமியில் விண்ணோர் நயந்திடு மமுதம் போன்று
கண்ணினுக் கினிய தான கவுதம தீர்த்தந் தோய்வோர்
மண்ணுல காள்வர் நீங்கா மதுநுகர் பாவம் போமால். கச

வேறு.

கல்விசேர் கவுதமன் றீர்த்த மான்மிய
நல்வள முரைத்தன னயமி கும்பெருஞ்
செல்வம்வாழ்ந் திடத்தருங் கபில தீர்த்தமேல்
சொல்லுவன் றூயசொற் பொருள்வி ளங்கவே. ரு

கௌதமதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆகு திருவிருத்தம், ருஉள.

---

## உகூ. கபிலதீர்த்தச்சருக்கம்.

கயல்விழி யுமைக்கோர் பாகங் கனிந்தருள் வைத்திய நாதன்
பயன்மிக வுறைபூங் கோயிற் பாங்கரி னிருதி பாகத்
தியல்பெறு குரோசப் பாதி யெல்லையிற் கபில தீர்த்தம்
வியனுறு மமுதம் போன்று விழைந்திட விளங்கு மன்றே. க

வேறு.

தகுதிசே ரிருடி கபிலனற் றெய்வஞ் சங்கா னிரட்சகனென்
போன், மிகுபுகழ் நிறைந்து விளங்குசண் டீசன் விருக்கமா மலக
நீ ழலிற்கீழ்ப், பகுதிபெற் றவர்தாள் வணங்கியம் முனிவன் பண்
புறு மந்திரஞ் செபித்தோர், புகுபெரும் பாவ நீங்கிமே லான புண்
ணிய போகமும் பெறுவார். உ

அலகிடின் மீன மாதமீ தபர பக்கவட் டமிதனி லனைய, நல
மிகு தீர்த்தந் தோய்ந்துகோ தான நறுமணங் கமழத்தி யயனக்
குலமறை யவர்கட் களித்திடி லொன்றுக் கனந்தமாம் பலன்
கொடுப் பேனென், றுலகினிற் கொடாதோன் சுவானமாய்ப்
பிறப்ப னெழிகுவன் முழுகினப் பாவம். ந

---

உ. ஆமலகம்-நெல்லி, முனிவன் மந்திரம்,கபிலாயநம.

பெருமைசேர் கபில முனிவரன் வளர்வெண் பிறையணி யண்ணலைத் துதிசெய், திருநிலத் தெவர்க்கும் விழைந்தன நல்கு மெழில் வரம் வாங்கின னதனால், அருமகப் பேறில் லாதவ ரனைய தீர்த்தமாங் குரைசெயுந் தினத்திற், கருதிடு முதய காலமூழ் கிடினற் கல்விசேர் புதல்வனைப் பெறுவார். ச

வேறு.

எந்தைதாண் மறவா தேத்தி யெண்ணருந் தவம்பு ரிந்து
சிந்தைகூர் கபிலன் றீர்த்தச் சிறப்புரை செய்தே னிப்பால்
வந்துமூழ் கினர்தம் பாவந் தீர்த்துநன் மகிழ்ச்சி நல்குஞ்
சுந்தரச் சோம தீர்த்த மகிமையைச் சொல்வே னம்மா. ரு

கபிலதீர்த்தச்சருக்கமுற்றிற்று.
ஆஉ திருவிருத்தம். ருகூஉ.

---

## உச. சோமதீர்த்தச்சருக்கம்.

இந்துவாழ் வேணி வயித்திய நாதற் கெழின்மிகு மருத்துவன் றிசையில், ஐந்துவிற் கிடையிற் சோமநற் றீர்த்த மமுதமா மென த்திகழ்ந் தொளிரும், வந்ததின் முழுகு வோர்தமை யொழிந்து மன்னுபா தகமகன் றேடும், முந்தைநாட் சித்தா முதப்புனை றேய்ந்து முழுமதி தவம்புரிந் திருந்தான். க

மன்னிய குருவின் மனைவியைப் புணர்ந்து வரும்பவந் தீர்ந் திட வன்றோன், நன்னெடுந் தீர்த்தக் கரைதனின் மூன்று வருட நற் றவம்புரிந் திருந்த, பின்னெழுந் தருளி வயித்திய நாதன் பே றளித் தருளினன் பிரிந்து, துன்னுபா தகங்க டீர்ந்தனன் மேலாக் தூயநன் மகிழ்ச்சிபூத் தனனே. உ

தோல்லுல கதனின் மூழ்குந ரிட்ட காமியம் பெற்றிடச் சூழும், நல்வரங் கொடுத்துத் தன்னுல கதனை நண்ணின னற்றை நாண் முதலா, எல்லைகண் டதன்பேர் சோமநற் றீர்த்த மென் றுரைத் தனரிதற் கம்மா, அல்லறீ ரிருடி வருபரத் துவாச னவிர் மதி தெய்வமா குவனே. ங

பாலக னிரிட னெனுமுனி வரன்சூழ் பலன்றரும் விருக்கமந் தாரம், மேலதா மிட்ப மாதமுற் பக்கம் விசாகநாண் முழுகிடிற் பிதாவை, ஏலவார் குழனல் லன்னையைக் கொன்ற பாவமற் றெனையபா தகமும், ஒலமிட் டோடு மிந்திர னயன்மா லுலகம்வீற் றிருந்துவீ டுறைவார்.

வேறு.

மறையுளர்க் கன்ன தாண மன்னுகோ தானந் தீர்த்தத்
துறையகத் திருந்து தீரத் தோங்கிமேல் வளர்ந்து நின்ற
நறைகமழ் விருக்க நீழ னயந்துசெய் தனர்கள் பார்மேல்
நிறைபெருஞ் செல்வம் பெற்று நீடூழி காலம் வாழ்வார். ௫

நன்மைசேர் பலனளித்து நவிலரு மகிமை பெற்று
மன்னிய சோம தீர்த்த மான்மிய முரைத்தே னிப்பால்
பன்னரும் புகழ்ப டைத்த பராசர தீர்த்த மேன்மை
தன்னையிவ் வுலகிற் கேட்போர் தமக்கருள் பெருகச் சொல்வேன்.

சோமதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ௳ திருவிருத்தம் ௫௩௮.

---

## உ௫. பராசரதீர்த்தச்சருக்கம்.

அங்கசந் தான தீர்த்த மடுத்திடுந் தென்பான் மாது
பங்கினன் றன்னை யேத்தும் பராசரன் றீர்த்த மன்னும்
மங்கள ஞான தீர்த்த மாகமுன் மற்றம் மேலோன்
பொங்கவே செய்த வாற்றுற் பொற்புறு மப்பேர் பூணும். ௧

வேறு.

பகர்ந்திடு மிருடி பராசரன் றெய்வம் பண்புசேர் சண்டிநாயகன்சீர், புகழ்ந்திட வரிய விரட்சகன் வருணன் பொலிவுறும் விருக்கமா மிரமாம், அகந்தனி லன்பு கூர்ந்திவர் மலர்ச்சே வடிபணிந் தாமிர நீழன், மகம்புரி பலனும் வெண்ணிறக் கோவை மறையவர்க் களித்திடின் மாதோ. ௨

புண்ணிய தீர்த்தம் படிந்துநீ றணிந்து பொற்புறு கந்தவேண் மனுவை, உண்ணிறை யன்பாற் செபித்திடி லொன்றுக் கனந்த மாம் பலன்களுண் டாகும், மண்மிசை மன்னர் திரவியங் குரவர் மனைத்திர வியமப கரிப்போன், நண்ணிடும் வேதம் விற்பவன் முதலோர் மூழ்கினு நலன்பெறு குவரால். ௩

நினைத்தவக் கணத்திற் பாவகோ டிகளை நீங்குவர் நவநிதி முதலாம், அனைத்தையும் பெறுவ ரட்டசித் திகளு மவர்தமக் கேவல்கேட் டிருக்குந், தனைத்தகுந் தெய்வந் தேடினுங் காணுச் சங்கர னுருவ ரெண்ணி, இனைத்தென வளவாப் பராசர தீர்த்த மதினொரு பொழுதுமூழ் கினர்தாம். ௪

ஐப்பசி மாதச் சுக்கில பக்கத் தமர்ந்திடு தசமியி லனைய பொற்புறு தீர்த்த மூழ்கினர் பதினு யிரமரும் புரவியா கஞ்செய் நற்பலன் பெறுவ ரன்னது மன்றி நவிலருங் கயிலைமால் வரையைக் கற்பகா லத்து நீங்கிடா திருந்து காதல்கூ ரின்பமுற் றிடுவார். ௫

வேறு.

வார்கட லுலகினின் மகிமை பெற்றெழிற்
பேருறு பராசரப் பெருஞ்சி றப்பெடுத்
தேர்பெற வுரைத்தன னிராம தீர்த்தநற்
சீர்பெறு சருக்கமேற் றிகழக் கூறுவேன். ௬

பராசரதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—௩௪௪.

---

## உ௬, இராமதீர்த்தச்சருக்கம்.

அலகில்சீர் வைத்ய நாத வண்ணல்வீற் றிருக்குந் தானத்
திலகிடு நிருதி பாகத் தெய்தும்விற் கிடையோர் மூன்றில்
நலமிகு மிராம தீர்த்த நவிலும்வா னமுதம் வந்து
நிலமிசை யிருந்த தென்ன நிறைந்துதான் விளங்கு மாதோ. ௧

மத்தநாண் மலர்சேர் வேணி வயித்திய நாதன் மன்னும்
முத்திமா நகரின் மேன்மை முறைமையை மறையோர் கூறச்
சித்தர்தா முணர்ந்து வாசஞ் செய்தகா ரணத்தான் முன்னர்
அத்திருத் தீர்த்தஞ் சித்த தீர்த்தம தாயிற் றம்மா. உ

வேறு.

இனையவற் புதமாஞ் சித்ததீர்த் தத்திற் கிராமதீர்த் தப்பெயர் வரவு, தனையுரைக் குவன்முன் றசரத னரிமாத் தாங்குபொற் றவி சின்வீற் றிருந்து, புனைமணி மௌலி யரசர்வந் திறைஞ்சப் புகழ் படைத் தயோத்திமா நகரின், அனையென வருள்கூர்ந் துலகளித் தனனே ரறுபதி னாயிரம் வருடம். ௩

வேறு.

திங்கண்மும் மாரி பெய்யத் திருநிலம் புரந்து செங்கோல்
பொங்கிய மகிழ்ச்சி வாய்ந்து புரவலன் செலுத்து நாளின்
அங்கண்மா நிலம ளிக்கு மரசிளங் குமா னின்றித்
துங்கநல் வேள்வி வேதஞ் சொல்லுமந் திரத்தாற் செய்தான். ௪

புத்திரன் றன்னை வேண்டிப் புரவலன் செயும்யா கத்தில்
உத்தம மான தூய வோதனம் வந்த வாற்றால்
சித்தநன் மகிழ்ச்சி கூர்ந்து தெரிவைமூ வருக்கு மீந்தான்
பத்தினி மார்க ணான்கு புதல்வரைப் பயந்தா ரன்றே. ௫

அரசுசெய் யுரிமை வாய்ந்த வனையரின் மூத்தோன் சேடன்
பாவுபாற் கடற்று யின்ற பைந்துழாய் முகுந்தன் வந்து
தாணியிற் பிறந்தான் றேவர் தந்துய ரகற்ற வன்னோற்
குரமிகு மிராம னென்றே யுலகெலா முரைப்பச் செய்தான். ௬

ஆக்கவங் னிளையர் தம்மோ டாயுதப் பயிற்சி யானை
ஒங்கிய குதிரை யேற்ற முரமிகு மிரத மூரும்
பாங்குறும் வித்தை வெல்ல வல்லமல் லுயுத்தம் பார்மேல்
ஈங்கிவற் கிணைவே றில்லை யென்றிடக் கற்று னம்மா. ௭

விறன்மிகும் விசுவா மித்திரன் செய்திடும் வேள்வி தன்னை
நிறைவுறச் செய்து நீண்ட கல்லுருச் சாப நீக்கி
நறைகமழ் குழல்சேர் மாது தன்மனை நண்ணல் காட்டி
முறைமையான் முனிவன் பின்போய் மிதிலைமூ தூரைச் சேர்ந் [தான்.

வளமிகு மிதிலை யென்னு மாநகர்ப் புரக்கு மன்னன்
அளவில்சீர் மகிமை பெற்ற வில்லினை யரசர் மைந்தர்
தளர்வுறு தெடுத்து நாணேற் றுநர்தமக் குரிய ளின்ன
இளநலம் பெற்ற மாதென் றிசைபெற வுரைத்தி ருந்தான். கூ

இணமுறுஞ் சிலைகு னித்தோர்க் குரியளென் றிசைத்த வாற்றால்
கனமிகு தனுவைக் கையி லெடுத்துநா ணேற்றக் காணும்
முனமது முறிந்த வாற்றான் முழுதுல காளும் வாய்மைச்
சனகன்வண் புதல்வி தன்னைத் தரும்புக ழிராமற் கீந்தான். க0

எழினலம் படைத்த சீதை தன்னுட னிராமன் போதும்
வழிதனிற் பரசு ராமன் வந்துவின் முறித்த வெற்றி
பழுதெனப் பகர்ந்தென் வில்லைப் படிமிசை வளைத்தி யேனீ
முழுதுவில் லாளி யென்றே மொழியவக் கணங்கு னித்தான். கக

மன்னவன் றனது மைந்தர் நால்வரின் வேத வாய்மை
முன்னவன் றனக்குச் செம்பொன் முடிதரித் துலக ளிப்பத்
தன்னுளத் தெண்ணும் போது தயங்குகை கேசி வந்தே
என்னிளைந் தனையென் மைந்தற் கெழின்முடி சூட்டு கென்றாள்.

வாமுனங் கொடுத்த வாற்றான் மன்னவன் மறுத்தல் செய்யான்
விரவுபே ரின்னல் கூர்ந்தான் விளைந்தவா றறிந்து முன்னம்
அரவணைத் துயின்றோ னன்பு மிகுமிலக் குமணன் சீதை
தரைவரப் புன்றாட் போந்தான் றண்டகா ரணியத் தம்மா. கரு

ஆயிடை யுபய காவே ரியினடு விருந்தே யம்மா
ஏயும்வல் வினைதீர்த் தாளு மிறைவன்பூங் கோயிற் பாங்கர்க்
காயும்வெங் கோபச் செங்க ணிருதிதன் றிசையிற் கங்கை
தோயுமப் பலன ளிக்குந் தீர்த்தஞ்சூழ்ந் திருத்தல் கண்டான். கசு

வேறு.

மன்பதை புரக்கு மிராமனுத் தமநல் வன்மிகு தீர்த்தநீ ராடி மின்புனே வேணி வயித்திய நாதன் விரைமலர்த் தாளினை வணங்கித், தன்குலப் பிதிர்க டருப்பணஞ் செய்து தன்னுள மகிழ்ச்சி கூர்ந் தனன்சூழ், துன்பநீங் குவர்பே ரின்பமும் பெறுவார் தூயநீ ராடினர் மாதோ. கடு

இலங்கிடு மிருடி சுதீட்சணன் றெய்வ மிராமன்மற் றிரட்சக னென்போன், வலங்கொள்சீ ரிலக்கு மணன்வளர் விருக்கம் வன்னியம் மூலமீ தினினல், நலம்பெறு காரான் வருடைகுங் குமங்கோ ரோசனே ததிநவ நீதந், இலங்கனி மறையோர் செங்கையிற் றானஞ் செயிற்பல னென்றுகோ டியதாம். கசு

வேறு.

அன்னதா லுலகினி லிராம தீர்த்தமாம்
பன்னரும் புகழ்ப்பெயர் படைத்த தேர்பெற
இன்னுமித் தலந்தனி லிராமன் செய்திடும்
நன்னெறி சடாயுமான் மியந விற்றுமேல். கஎ

இலகுசீ ரிராமதீர்த் தத்தின் மேன்மைநல்
நலநவின் றனனினி நன்னெ றிக்குணம்
விலகிய கொடியனுந் துசீல வேதியன்
பலமுறு சருக்கநற் பண்பு கூறுவேன். கஅ

இராமதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ருசுஉ.

---

## உஎ. துசீலச்சருக்கம்.

பண்டரு மரம்பையர் நடம்பயில் பசும்பொன்
அண்டருல கத்தினு மனந்தநல் வளஞ்சூழ்
தண்டலை யுடுத்திசை தழைந்தெழில் கொழிக்குங்
குண்டின புரப்பெருமை கூறவரி தாமால். க

கசு. கன்னி கனிஎனத் தொக்கது காரான் கருநிறப்பசு.

வேறு.

ஒண்டுறைச் சுதைசெய்வாய் மதகி னூடுபோய்
மண்டுநீம் புனறவழ்ந் தேறி வால்வளை
தண்டர ளமுமுயிர்த் திலகுந் தண்பணைக்
குண்டின புரத்தில்வாழ் மறைக்கு லத்தினன். ௨

பழிபடு சிந்தனை யொழிந்த பண்பினன்
வழிபடு பன்னெறி யொழுகும் வாய்மையான்
எழின்மிகு மெச்சிய சீல னென்றுதார்
மொழிதுவ ரனையவன் முறைமை யாம்பெயர். ௩

எண்ணரும் புகழ்நிறைந் திலகு மன்னவன்
பண்ணிய தவப்பலன் பலித்த தாமென
நண்ணினண் மனைவியந் நலத்தி னாள்பெயர்
புண்ணிய வதியெனப் புகல்வர் யாவரும். ௪

உத்தம குணத்தினு ளுமையி டத்துநற்
பத்தியு ளவள்பதி விரதை கேளிர்கள்
மித்திர ராகமே தகுந லத்தினள்
புத்திரன் றனைச்சிறு பொழுதி னீன்றன ர். ௫

தோட்டனைத் தன்னவன் றனக்குச் சூழ்பெயர்
இட்டனர் துசிலனென் றிளமை யெய்தினன்
விட்டுயிர் நீங்கிமே லுலக மெய்தினர்
திட்டமா முத்தரக் கிரியை செய்திலன். ௬

ஓவிய மெழுதரு முருவி னொளிர்
காவியங் கண்ணினள் வயிற்றிற் காய்கொடும்
பாவிவந் துதித்தன னென்று பாருளோர்
ஆவிசோர்ந் திடத்துடித் தழுதி ரங்கினர். ௭

காளையாம் பருவம்வந் தெய்தக் காமனல்
வேளைபார்த் தாசுகம் விடமெ லிந்தனன்
வாளைநேர் விழிப்பொது மகளிர் வேய்நிகர்
தோளையே விழைந்தனன் றுசிலன் சாலநாள். ௮

---

௫. பொழுது—பருவம் ௬. திட்டம்—உறுதி.

பொருடனக் கின்மையாற் புகுந்தி ராவினில்
திருடர்போ னீள்கடைத் தெருவி னிற்றனந்
தருகிறே னென்றுதாம் பூல மாதியாய்ப்
பெருகிடும் யாவையும் பேசி வாங்கியே. ௯

ஏவண விழியினுட் கீந்து மற்றைநாள்
ஆவணத் தோன்பொரு ளடுத் துக் கேட்டபின்
தாவணக் குரங்கெனத் தாண்டித் தந்ததுண்
டோவணக் கஞ்செயா துரைத்தி யென்றனன். ௧0

இல்லையான் வாங்கின துண்டெ னிற்கணக்
கொல்லைநீ காட்டுதி யுறுதி யாகவே
எல்லைகண் டென்கைநல் லெழுத்துங் காட்டிட
வல்லையேற் சொல்லென வழக்கு ரைத்தனன். ௧௧

கொடுத்தன னென்றுபொய் சொல்லுங் கொள்கைதான்
அடுக்குமோ வாணிகஞ் செயும வற்கிது
கெடுத்திடு நினைவென வறியிக் கேடினி
விடுத்திடு வெனக்கொடு மொழிவி ளம்பினன். ௧௨

இல்லறம் புரிந்திடு மியல்பி னுருறை
வல்லரண் புகும்வழி பார்த்து மற்றைநாள்
அல்லிடைக் களவுசெய் தளித்து வேசியைப்
புல்லியே பற்பல பொழுது போக்கினன். ௧௩

மன்னுபுண் ணியதினம் வந்த காலையில்
இன்னதி படிந்தொரு நாளு தாயினுஞ்
சென்மமத் தியிற்செபஞ் செய்தி ருந்திலன்
புன்மதி யினரைநண் புற்று நின்றனன். ௧௪

அடுத்தவர் வறுமைகண் டிரங்கி யன்புடன்
கொடுத்திடு மவர்தமை யிகழ்ச்சி கூறினன்
கெடுத்தனன் பலரையா சார கீனன்வா
தெடுத்துரைத் தந்தணர்க் கிடுக்கண் செய்தனன். ௧௫

வேறு.

கன்மனக் கொடியன் காலங் கழித்திடு நாளிற் றீராம்
வன்மைசேர் குமா கண்ட வலிப்பெனும் வியாதி வந்து
துன்னிய ததனற் றேசந் தொறும்புகுந் துயிர்த்து மாழ்கி
இன்னதென் றெண்ணிக் காணு விடந்தொறும் விழுந்து நொந்
[தான். கசு

உபத்திர வசத்தாற் றேக மொடுங்கியே மெலிந்து வாடிக்
கபத்தொடு கூடித் துன்பக் கடலிடை முழுகிப் பன்னாள்
இபப்பரு வனத்தி னெல்லை நடந்துபோய் வயித்திய நாத
சுபத்தலத் திராம தீர்த்தத் தூயதீ ர்த்தைச் சார்ந்தான். கஎ

உற்றது மீன மாத வுத்தர பருவஞ் சேர்ந்த
நற்றின மதின் டுங்கி விழுந்தன் னனைய தீர்த்தப்
பொற்புறு முன்னர்ப் போழ்ந்த கரையுதை பட்டி டுந்த
தற்புதப் புனலிற் பின்ன ரவனுட னனைய வீழ்ந்தான். கஅ

வல்வினைப் பயனால் வந்த வலிப்பெனும் வியாதி நீங்கி
ஒல்லையி னமுத முண்டோ ரொளிமிகு முடலின் வாய்ந்த
நல்லெழில் கொழிப்பக் கண்டா னன்மறை யவர்கள் வாக்கால்
எல்லைகா ணரிய தீர்த்த மகிமைகேட் டின்ப முற்றான். கக

அளிந்திடு மனத்த னன துசீலனுக் கற்றை ஞான்று
தெளிந்திடு ஞான சித்தங் கிடைத்தலாற் றிருந்தி வாய்ந்த
பளிங்கு வெண் டிரைகொ ழித்த பாவைகு மூலக மீதில்
குளிர்ந்திடு சித்த தீர்த்த மெனப்பெயர் கூறு கின்றார். உ0

வேறு.

பகர்பதி னுயிரம் வேள்வி செய்பலன்
இகமதி னிலங்கிடு மிராம தீர்த்தநீர்
அகமகிழ்ந் தாடினர் பெறுவ ரன்றியும்
புகழ்சிவ லோகமேற் பொருந்தி மன்னுவார். உக

குலவிய மறைக்குலத் துதித்துக் கூறருங்
கலதிசூழ் துசீலவே தியன்செய் காதையின்
அலர்புகழுரைத்தன னாதி காவிரிப்
புலமிகு சருக்கமேற் பகுத்துக் கூறுவேன். ௨௨

துசீலச்சருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௫௮௪.

---

## ௨௮. ஆதிகாவேரிதீர்த்தச்சருக்கம்.

போற்புறு வைத்ய நாத புனிதனுக் கிலகு மேல்பால்
விற்கிடை யிரண்டின் மன்னும் விளங்குகந் தருவ தீர்த்தம்
முற்பக ரிருடி வாய்மை மொழிசொல்பார்க் கவன்சூழ் தெய்வம்
பற்பலர் புகழ்கோ பால னிரட்சக னிருதி பார்மேல். ௧

தழைந்திடும் விருக்கம் வாய்ந்த சண்பகந் தருநல் வாசம்
இழைந்தசந் தனநா ரந்த மிலகுகுங் குமம டுத்து
விழைந்திடு மனத்தி னோடு விருக்கமூ லத்திற் றனங்
குழைந்துதான் செய்யி னென்று கோடிய தாகப் பல்கும். ௨

துதிபெறு மேட மாத சுக்கில பக்கந் தன்னில்
வதிதிரு தினயிற் சுக்ர வாரமுஞ் சேரு ஞான்றின்
விதியுட னினைய தீர்த்த முழுகினர் வேண்டும் போகஞ்
சதுர்பெறப் பெறுவ ரையன் சரணமும் பெறுவர் சாற்றின். ௩

அடுத்திடுந் துலாமா தாந்த மாந்தின மூன்றி னுஞ்சீர்
மடுத்திடுந் தீர்த்த மூழ்கின் மன்னிய வயுத வாண்டு
தொடுத்திடுங் கங்கை தோய்ந்த தொகும்பலன் பெறுவ ரன்றிக்
கடுத்தனை யுண்ட நாதன் கைலைமால் வரைமேல் வாழ்வார். ௪

ஆரணம் புகழ்ந்து போற்று மினையநற் றீர்த்தந் தன்னைத்
தாரணி தன்னி லாதி காவிரி யென்பர் தக்கோர்
காரணங் கூறிற் கும்ப முனிவரன் கையி லேந்தும்
ஏரணிகொண்டு வாய்ந்த குண்டிகை யினைமுன் வைத்தான். ௫

நண்ணிடு மவணிற் றீர்த்த நாயகி யாங்கா வேரி
உண்ணிறை காதல் கூர்ந்தே யொருதின மகிழ்ந்து வாசம்
பண்ணினண் மற்றை ஞான்று பதிந்தகுண் டிகையெ டுத்துப்
புண்ணிய முனிவன் சைய மால்வரைச் சாரல் போந்தான். ௬

வேறு.

கோதி லாப்புகழ்க் கும்பமா முனிவனால் விளங்கும்
ஆதி காவிரிச் சருக்கமீண் டுரைத்தன னன்னோன்
ஓது சாபம்வந் துற்றகந் தருவர்கள் சாபத்
தீது நீங்கிடு சருக்கமேற் செப்புவன் மாதோ. ௭

ஆதிகாவேரிதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௫௬௧.

---

## உ௯. கந்தருவர்சாபநீங்குசருக்கம்.

அன்னமா முனிவன் பின்ன ரநேகநல் வளந்த ழைந்து
மன்னுமவ் வரையி லையன் மலரடி வணங்கிப் பூசை
தன்னையன் புருகச் செய்தான் றழனிய வுலகி னின்று
மின்னிடை மடவார் சூழ விளங்குகந் தருவர் வந்தார். ௧

கருத்தமை காத லோடு கடமுனி வரனை யந்து
மிருத்திகை யிலிங்க பூசை செய்வது கண்டார் வீணாய்
இருப்பதே யன்றி மண்ணி னிலிங்கமேற் றெய்வ முண்டோ
வருக்குறைந் ததுநி தஞ்செய் தூனக்கென நகைத்தா ரம்மா. ௨

அவஞ்செய்து பொழுது போக்கு கின்றனை யென்றன் னோர்கள்
சிவன்றனை யிகழக் கண்கள் சிவந்தன கோப வெந்தீ
நிவந்தெழு பொறிகள் சிந்த நின்றிடு மவரை நோக்கித்
தவம்பெறு முனிவன் வாக்காற் றனித்தனி சபித்தான் மாதோ.

உத்தம வெழில்கொ ழிக்கு முருக்கொள்சுந் தரன்சி றந்த
சித்திர வருணன் மேன்மை திகழ்மனோ காரி யன்றிச்
சுத்தமாம் வனப்பு வாய்ந்த சுவற்சகன் றூய வர்க்குப்
புத்தமு தனைய சித்தி ராதனென் புகழ்ப டைத்தோன். ௪

ஏங்கிவ ரைவர் தம்மை யேகநேத் திரம்வி கர்ண
மோங்கைகான் முடஞ்ச ரீர முழுவதுங் கராள மாகித்
தாங்கருந் துயரின் மூழ்கக் கடவதென் றுரைத்தான் சாபம்
ஏங்கியம் முனிவன் பாத மிறைஞ்சியே கேட்க லுற்றார். ரு

அழகினைப் பெற்ற தன்றி யறிவினைப் பெறாத யாங்கள்
உழலுமித் துயர நீங்க வுனதரு ளலது காணேங்
தழல்விழி யையன் செய்ய தாமரைத் தாளின் வாய்ந்த
நிழலினைப் பிரியா நெஞ்ச நிறைந்திடு முனிவ வென்றார். சு

என்றவ ருரைத்த லோடு மிரங்கிய வுளத்த னாகிக்
கன்றுழை யேந்து நாதன் கருணைசெய் தளித்த லால்பான்
தென்றிசைப் போதும் போது திகழ்ந்திடும் வயித்திய நாத
வென்றிசூழ் தலத்தின் முன்னம் விருப்பமுற் றிருந்தோ னோர்நாள்

அப்பெருந் தலத்தின் மேல்பா லற்புத மாகி யொன்றிற்
கொப்பிட லரிதா யாதி காவிரி யொளிரு நீவிர்
இப்பொழு தெய்தி மூழ்கி லெப்துமிச் சாப நீங்குஞ்
செப்பருந் திவ்ய தேகந் திருந்திடப் பெறுவி ரென்றான். அ

வரமுனி வரனை யேத்தி வயித்திய நாதஞ் சார்ந்து
சுரநதி யதின்விளங்கித் தூயதாந் தீர்த்த மூழ்கி
உரமிகு பாவ நீங்கி யொளிசெய்நல் லுருவம் பெற்றார்
பரவுகந் தருவ தீர்த்த மென்றது முதற்ப கர்ந்தார். கூ

வேறு.

தேய்வ நாயகன் வயித்திய நாதன் செந்தளி ரடிபணிந் தேத்தி யைவ ருந்துணை வியருட னலங்கு பொன்னுல கின்னமு தென்னத், தூய்ய நல்லிசை பயின்றநந் தருவர்கள் சூழ்ந்த தம்முல கின்கண், எய்தி யின்பமுற் றெய்தரி தான பேரின்ப மேற்பெறப் பெற்றார். கO

இ. விகர்ணம்—காதின்மை, செவிடு. கராளம்—கறுப்பு.

கந்தருவ தீர்த்தமொரு பொழுது மூழ்கிற் கண்ணிழந்தோர் செவிடர்கைகான் முடம தானோர், சுந்தரமாந் தநுப்பெறுவர் செங்கோல் வேந்தர் துணைபிரியா நண்புசெய்யப் பெறுவ ரன்றிச் செந்திருமங் களம்பெறுவர் கல்வி வாய்ந்து திகழ்ந்திடுபுத் திரன் றன்னைப் பெறுவர் சீர்சால், அந்திமதி யணிந்தபிரான் கயிலை யென்னு மரியமால் வரையின்பம் பெறுவ ரன்றே. கக

வேறு.

பிறங்குதன் னுலகந் தன்னிற் பெருகெழின் மேன்மை பெற்றுச்
சிறந்தகந் தருவர் சாபந் தீர்ந்தது சொன்னே னிப்பால்
கறங்குதெண் டிரைகொ ழிக்குங் கடலுடுத் திலகும் பார்மேல்
அறந்தழை மிருத சஞ்சீ வனநல மூரைப்ப னம்மா. கஉ

கந்தருவர்சாபநீங்குசருக்கமுற்றிற்று.

ஆகூ திருவிருத்தம். சூOரு.

---

## ருO. மிருதசஞ்சீவனதீர்த்தச்சருக்கம்.

நிருமல வைத்திய நாத னீள்புகழ்
பெருகுபூங் கோயிலின் பிறங்கு மூத்தாத்
தொருகுரோ சந்தனி லுலகம் போற்றிடு
மிருதஞ் சீவனத் தீர்த்த மேவுமே. க

இருடிகா சிபனதற் கிலகுந் தெய்வநேர்
பொருவருந் துர்க்கைமேற் பொருந்தி ரட்சகன்
வருபுகழ் வீரபத் திரன்வ ளர்ந்திடு
தருவருச் சுனமெனச் சாற்றுந் தொல்லைநூல். உ

ஈங்கிவர் தமைவலஞ் செய்தி றைஞ்சியே
ஓங்கிய தருவினைப் பணிந்து யர்ந்திடுந்
தேங்கமழ் நறும்புனற் றீர்த்த மூழ்கியே
ஆங்கமர் தருவணி நிழல கந்தனில். ௩

---

க—குரோசம்—கூப்பிடுதூரம். உ. அருச்சுனம்—மருதமரம்.

சீரணி தாம்பிரத் திலகி வாய்ந்திடு
பூரண கும்பம்வித் துருமம் பொற்புறும்
வாரணி வன்முலை மடந்தை யாதியாய்த்
தாரணி தனிற்செயுந் தான முத்தமம். ச

பரவுசீர் விருச்சிக மாதம் பாங்குற
விரவிய பருவநீ ராடின் மேன்மைசூழ்
தரணியிற் சந்ததி விருத்தி யாந்தனந்
திரமுறப் பெற்றிடுஞ் செல்வ ராகுவார். ரு

ஆதிமத் தியார்ச்சுன நாத னென்றதிற்
சோதிசூ ழிலிங்கமொன் றிலகுஞ் சூழ்மனம்
பேதியா தன்புமேற் பெருகப் போற்றுவோர்
மேதினி புரந்துபே ரின்ப மேவுவார். சு

வேறு.

விடம்படு வேதை தீர்த்திடுங் கலுழன் விளங்குமித் தீர்த்தமீ தமுத, கடந்தனை வைத்து வயித்திய நாதன் கமலநாண் மலர்ப்பதம் பணிந்து, நடந்தனை யெடுத்து வேகமாய் வினதை நண்ணிய பயந் தனை நீக்கத், தடந்தனி லமுத மிருத்தலா லமுத தீர்த்தமென் றுரைத்தனர் தக்கோர். எ

மலக்குரம் பையைநித் தியமென நினைந்து மாநிலந் தனிற்பழி பாவங், கலக்குநீள் கொடிய பாதகஞ் செய்யுங் காதகன் முதற்பல தீயோர், இலக்குமி முன்ன மியற்றுமித் தீர்த்த முழுகிடி னீங்கு மெண் ணருஞ்சீர்க், குலக்குண மனைவி தன்னுடன் வாழ்வார் குறைவில்பே ரின்பமேற் பெறுவார். அ

வேறு.

இருநிலந் தனிலுயி ரிறந்த யாக்கையை
அருமறை யவனெடுத் தழுந்தத் தோய்த்திட
ஒருகணந் தாழ்ந்திடா துயிர்பெற் றுய்தலால்
மிருதசஞ் சீவன மெனவி ளம்பினர். கூ

---

சு. சுவாமி — ஆதிமத்தியார்ச்சுனநாதர். அம்மை—அபின்ன பத்மநாயகி. இத்தலத்தை—மருவத்தூர் என்பர்.

தக்கசீர் பெறுதது மாதஞ் சீர்ந்தமுற்
பக்கநற் சதுர்த்தியிற் படிந்து மூழ்கினோர்
மிக்கநோ யொழிப்பசா வணியின் மேன்மையிற்
புக்கிடுஞ் சதுர்த்தியின் மூழ்கிற் போம்விடம். ௧0

வேறு.

வளங்கொண்மா நிலத்துளோர் மகிழ மான்மியம்
விளங்கிய மிருதசஞ் சீவ னந்தனைக்
கிளந்தனன் சனுர்த்தனச் சருக்கங் கேண்மையின்
உளங்கனிந் திடவகுத் துரைத்தல் செய்குவேன். ௧௧

மிருதசஞ்சீவனதீர்த்தச்சருக்கமுற்றிற்று,

ஆ௨ திருவிருத்தம்—௬௧௪.

## ௩௧ சனுர்த்தனச்சருக்கம்.

தேசுயர் காசிப கோத்தி ரத்தின்வாழ்
பூசுர னுன்மறை யுணர்ந்த புங்கவன்
வீசும்வண் புகழ்மிகும் வில்வ நல்வனம்
பேசுமூர் சனுர்த்தன னென்று பேருளான். ௧

மருக்கமழ் வில்வநல் வனத்தில் வாழ்ந்துதான்
இருக்குநாள் வயதொரெண் பதினெ ழிற்புகழ்
பெருக்கிடும் புத்திரன் பிறந்த னன்பரி
வுருக்கமு மிரக்கமு முரைக்கற் பாலவோ. ௨

இந்தமா நிலந்தனி லிருக்கும் யாவருஞ்
சிந்தைகூர்ந் தழைத்திடச் செவ்வி வாய்ந்திடு
சுந்தர னெனப்பெய ரிட்டுத் தொல்புகழ்
அந்தண னருமறை யோதி வைத்தனன். ௩

வளர்ந்தனன் வருடமீ ரெட்டின் வண்புகழ்
விளங்கிடு மங்கரு ளறையும் வேதியர்
இளங்கும ரர்கள்புடை சூழ வெய்தினன்
கிளர்ந்தெழு வனந்தனிற் கிருக நீங்கியே. ௪

தொல்லைநான் மறையுணர் தூய வேதியன்
இல்லறந் தனினித மியற்று மாகுதி
பல்கநற் சமித்தொடு பசுந்த ருப்பையும்
எல்லைகண் டொடித்தெறிந் தெடுக்கப் போந்தனன். ரு

நலம்பெறு கானகத் திருந்த நற்பலா
சுலர்ந்திடு சமித்தினை யொடிக்க வேறினன்
புலன்கலங் கிட்மரப் பொந்தி னின்றெழுந்
திலங்குமுள் ளெயிற்றராத் தீண்டிற் றென்செய்வான். சு

விடந்தலைக் கொண்டது புவியில் வீழ்ந்தனன்
தொடர்ந்துவந் தவரெலாஞ் சூழ்ந்து நோக்கியே
அடைந்தன னெனப்பதைத் தவன்பி தாவுடன்
நடந்தது பகர்ந்துதம் மனையை நண்ணினார். எ

வாய்புலர்ந் திரங்கியே மனைவி தன்னுடன்
சேய்கிடந் திடும்வனத் திற்சென் றெண்ணரி
தாய்மிகுந் திடுமருந் துயர மாழ்ந்துகண்
பாய்பெரும் புனல்பரந் தோடப் பார்த்தனன். அ

அந்திவான் பிறையணி யண்ண றன்பதஞ்
சிந்தைசெய் திருந்துபின் றேறி னனிவன்
முந்தைநா ளானிரு விழியை முள்ளினால்
நொந்திடக் குத்தலால் விளைந்த நோவென. கூ

சேருமிப் பிறப்பின்முன் செய்த கோவதை
பாருளோர் துயருறப் பாம்பின் வாயின்முட்
சாரும்வன் கொடுவிட மாகத் தாக்கலால்
ஆருயி ரிறந்தன னெனவ றிந்தனன். கO

பண்ணிய பாவமீ தொழியும் பார்மிசை
வண்மைசேர் வயித்திய நாதன் வாசமாம்
புண்ணியத் தலந்தனி லென்று பூசுரன்
உண்மையாய் விளங்கிட வுற்று ணர்ந்தனன். கக

வேறு.

நிறைபுகழ் வில்வ வனத்தினுக் கடுத்த நிருதிதன் றிசையினி னிலேகண், டறைதரு குபேராச மூன்றினில் விளங்கு மற்புத வயித் யநாதன், உறைதருந் தானத் திலகுமுத் தரத்தி னெருகுரோ சத் தின்முன் னுரைத்த, நறைகமழ்ந் தொளிரு மிருதசஞ் சீவ னந் தனை நண்ணிட நயந்தான். கஉ.

இல்லற மியற்றும் பாரியின் வரமுன் னிறந்திடும் புதல்வனை யெடுத்தே, ஒல்லையிற் போந்த மறையவ னனைய வொளிர்நறும் புனறனை நோக்கித், தொல்லைவல் வினையால் வந்திடு காயஞ் சுசி பெறத் தோய்ந்துசெல் குவனென், றல்லல்கூர் துயரத் துடன் முழு கினனுங் கடைந்தசே யுடலையுந் தோய்த்தான். கங

பயில்செழுந் தீர்த்த நறும்புன லுடலிற் பட்டவக் கணந்தனிற் புதல்வன், துயிலொழிந் தெழுந்தோ னெனவெழில் கொழிப்பத் தோற்றினன் றூயமா மறையோன், வெயில்விரித் தெழுந்த பரிதி யைக் கண்ட விரைகமழ் தாமரை யெனநன், மயிலியன் மனைவி முகமலர்ந் திடத்தன் வாண்முக மலர்ந்துபூ ரித்தான். கச

வேறு.

ஆதிமத் தியார்ச்சுன வண்ணல் சேவடிப்
போதினைப் பணிந்துளம் பொருந்து மன்பினல்
கோதில்வண் டுறுதசெங் குவளை நாண்மலர்
வேதியன் சாத்திவே ளூரின் மேயினன். கரு

கல்விசேர் புத்திரன் கற்பு வாய்ந்தெழில்
மல்குகா தலியுடன் வரங்க ணல்கிடும்
நல்லசித் தாமுத தீர்த்த நான்மறைச்
செல்வவே தியன்வலஞ் செய்துமூழ்கினன். கசா

வேறு.

மின்னுமூ வலஞ்செய் தருள்பழுத் திருந்த வயித்திய நாதனை வணங்கி, அன்னையா யுலக மளித்திடுந் தைய லம்மைசெந் தளிரடி பணிந்தே, பின்னுமப் பாங்க ருறைகட வுளர்தம் பிறங்குபொற் றுளிணையேத்தி, நன்மைசேர் திலகு கூவிள வனத்தி னுன்மறை வேதியன் போந்தான். கஎ

வேறு.

அருந்திற லுலகினி லதிக வண்புகழ்
திருந்திய சனூர்த்தனச் சருக்க நற்சிறப்
பிருந்தவா றென்றுரைத் தனனி னிச்சொல்வேன்
வரும்பெருஞ் சூலதீர்த் தத்தின் மான்மியம். ௧௮

சனூர்த்தனச்சருக்கமுற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ௬௩௨.

---

## ௩௨. சூலதீர்த்தச்சருக்கம்.

கல்வியறி வினருள்ள மகிழ்ச்சி கூரக் கணிதநூல் பகுத்து ணர்த்துங் கற்பந் தோறும், நல்வளஞ்சேர் மகிமைநிறை வயித்திய நாத னலந்தருபூங் கோயிலினுக் கனிலன் பாக, எல்லையினிற் சுவே தார்க்க வனத்தின் மன்னி யிலகிடுமீ ரேழுலகி னினிய தாகிச் சொல்லரிய புகழ்நிறைந்த சூல தீர்த்தந் தூயவமு தெனவிளங்கிச் சூழு மாதோ. ௧

வேறு.

இத்தகு தீர்த்த மேவு மிருடிசுக் கிரனற் றெய்வ
நித்திய வயித்திய நாத னீடிராட் சகனே ரம்பன்
கொத்தில கியவி ருக்கங் கூறிடின் வகுள மென்பர்
சத்தமி விதிபா தஞ்சூழ் தநுமாதம் விசேட மாகும். ௨

கவின்கொள்வா னவர்க டார காசுரன் பொருதும் போரிற்
குவிந்துமோ கிதராய் மூர்ச்சை யுடைந்தனர் குலவுஞ் சீவன்
தவிர்ந்தனர் சிலர்க ளன்னோர் தமக்கருள் செய்வா னெண்ணி
நவின்றிட வரிய சூலப் படையினை லமைத்தா னாதன். ௩

அனையகா ரணத்தாற் சூல தீர்த்தமு தாயிற் றென்றுங்
தனையொழிந் தோடாச் சூலை நோய்தவிர்ந் திடுஞ்சா வாத
வினைகளும் விட்டு நீங்கும் வேண்டிய தனைத்து மேவுஞ்
நினைவரு முத்தி நல்கு நிறைந்தநீ ராடின் மாதோ. ௪

வேறு.

சூலதீர்த் தப்பெருஞ் சிறப்புச் சொல்லிய
கோலமான் மியந்தனைக் கூறி னேனினிச்
சீலநல் கிடும்பெருஞ் சேட தீர்த்தமெக்
காலமு நிறைபுகழ் கருதிக் கூறுவேன். ரு

சூலதீர்த்தச்சருக்கமுற்றிற்று.
ஆ. திருவிருத்தம்—கூகூஎ.

---

## கூகூ. சேடதீர்த்தச்சருக்கம்.

பொருத்தமாஞ் சூலதீர்த்தப் புறத்தின்விற் கிடைதா னென்றின்
மருத்துவின் றிசையிற் சேட தீர்த்தவான் கங்கை மானும்
உருக்கிளர்ந் திலகுந் தூய வொளிமிகு மிருடி யென்போன்
கருத்தமை தவஞ்செய் நன்மார்க் கண்டேய முனிவ னாகும். க

சிறந்திடுஞ் சேடன் மேவுந் தெய்வமா மிதனைக் காப்போன்
கறங்குதெண் டிரைசு ருட்டுங் கடறனை யுடுத்த பார்மேல்
அறந்தழை கல்வி நல்க வமைந்திடு புதனே யாகும்
பிறங்கிய விருக்க மென்றும் பெருங்கடம் பென்பர் மேலோர் உ

தோய்தயிர் நறுநெய் நென்மாச் சூழ்சருக் கரைதாம் பூலம்
ஏய்நுணு கிழைநல் லாடை யிலங்குகம் பலநால் வேத
வாய்மையந் தணர்க்குத் தான மன்னுநீ ராடிச் செய்வோர்
காய்பசி யதனல் வாடார் காசினி புரந்து வாழ்வார். ௩

வேறு.

பரவிய சேட தீர்த்தநீர் முழுகிப் பரிந்துவெண் ணீற்றினை யணிந்தே, அரவா சுகந்த மனுவினை யீரை யாயிர முருச்செபித் திடின்மேல், விரவிடு மநேக விதவிடந் தீரு மேவுகுன் மாதிநோய் நீங்குந், தரணிகண் முழுதுங் கோன்முறை செலுத்தித் தகுதிசேர் புகழ்படைத் திடுவார். ச

---

ச. அரவு அரசு உகந்த மனு—ஆதிசேடனுடைய உயர்ந்த மந்திரம்; அது சேஷாயநம என்பதாம்.

வேறு.

துதிபெறுஞ் சேட தீர்த்தந் தொடுகட லுலகின் மீதின்
வதிதருந் தநுநன் மாத வளர்பிறைச் சதுர்த்தி மூழ்கின்
அதிகபாக் கியங்க ளுண்டா மடுத்தபஞ் சமிநீ ராடின்
நிதிமிகுஞ் செங்கோ லோச்சி நீடூழி காலம் வாழ்வார். ரு

நேத்திர மொருமூன் றுள்ள நின்மல னருளிச் செய்த
சாத்திரம் புராணம் வேதந் தருதிபெற் றுணர்ந்த தூயோர்
சூத்திரன் சாலை யன்னந் துய்த்திட லாகா தோங்குந்
தீர்த்தநீர் முழுகிற் றீருஞ் செய்யுமப் பாவந் தேய்ந்தே. சு

மனைவிதன் சேட முண்டு வைத்திடு மகவின் சேடம்
வினைசெய்சூத் திரன்றன் சேடம் விதித்திடு சிராத்தச் சேடந்
தனைநுகர் பாவஞ் சேட தீர்த்தநீர் தன்னின் மூழ்கின்
நினைவினிற் காணு தோடி நீங்குமக் கணத்திற் றானே. எ

கூறிடுஞ் சேட தீர்த்தங் கொடியபா தகங்கண் மூழ்கி
னூறுவோர்க் கொழிக்குஞ் சாந்தி ராயண விரத மெண்ணி
நூறுசெய் திடினுஞ் சேட நுகர்பவந் தீரா தோங்கி
வீறுமப் பவமுந் தீர்க்கு மெனிலதற் கிணைவே றுண்டோ. அ

துன்பமே வருதல் காட்டுஞ் சொப்பனந் தொடர்ந்து வந்து
வன்புலி பாயக் கிணறு மனப்பய மதங்கொள் யானை
தன்புழைக் காத்தாற் பற்றித் தரையினி லடிப்பக் கண்டு
பின்பயந் தெழுதல் சேடன் பெயர்பெறுந் தீர்த்தந் தீர்க்கும். கூ

வேறு.

திருந்துவண் புகழ்சேர் சேட தீர்த்தமான் மியந்தெ ரிந்த
பொருந்திடப் புகன்றே னிப்பாற் பொருவருஞ் சிறப்பு வாய்ந்தே
இருந்தவெண் டிசையின் மேன்மை யிலகிய சருக்கந் தன்னை
அருந்தவ னுரைத்த வண்மை யறிந்தன பகர்வ னம்மா. கய

சேடதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆகூ திருவிருத்தம், கூசஎ.

## கஅ. எண்டிசைத்தீர்த்தமகிமைச்சருக்கம்.

சிந்தைகூர் பலன்சேர் சித்தா முதச்செழுந் தீர்த்தந் தன்னில்
இந்திரன் றிசையி லிந்திர தீர்த்தநீ ரிலகுந் தென்பால்
சந்ததி தனைய ளித்துத் தழைந்திடுஞ் சருவ தீர்த்தஞ்
சுந்தர மிலகு மேல்பாற் சூழ்தரும் பிஞக தீர்த்தம். க

வேறு.

அத்திக் கொழிந்த வடதிசையி லமரு ஞான தீர்த்தம்வளர்
பத்திப் பிரத மெனுந்தீர்த்தம் பாவி யிடும்பா வகன்றிசையில்
முத்தி தீர்த்த நிருதியினின் முறைமை பெறுமா ருததிசையில்
சித்தி தருமங் களதீர்த்தந் திருந்து மமுத மெனத்திகழும். உ

ஈச திசையிற் றுருவாச தீர்த்த மிலகி யிடுமிருநான்
காசை யினுமித் தகுதீர்த்த மமையுஞ் சித்தா முதமகிமை
பேச வெளிதோ விவைக்கிருடி பெருமை பெறுநற் சதக்கிருது
வாச மலர்வா ழயன்கபிலன் வளருங் கந்த வேண்மாதோ. ௩

வேறு.

வயிரவக் கடவு ணந்தி வானவன் மாணி பத்திரன்
செயிரொழித் திலகும் வாய்மை திகழ்பரா சரனுந் தெய்வம்
உயிரினை யடிமை கொள்ள வுரியவன் வயித்திய நாதன்
தயிரிய வனந்தன் காவற் பாலக னென்ப தக்கோர். ௪

மலர்சுவே தார்க்க மன்னி வளர்ந்திடு விருக்க மாமிந்
நலமிகு தீர்த்த மூழ்கி நான்மறை யவர்க்குத் தானந்
திலதருப் பணம்பி திர்க்க டிருத்திபெற் றிடவே செய்வோர்
பலன்றனை யெண்ணி யாவர் பகுத்தறிந் துரைப்பர் பார்மேல். ௫

வேறு.

ஆரும் பிதிர்க்க ளமாவாசை யடுத்த பருவம் வளர்பக்கஞ்
சேரு மிருமூன் றலதுபெறு திதிமேன் மாதச் சிவநிசிசேர்
சாரு மகர சங்க்ராந்தி தகுமா வணிமா தப்பிறப்புப்
பாரு ளோர்கள் புகழயன மிரண்டும் பலன்சேர் தினமாகும். ௬

எழில்சேர் தீர்த்த முழுகினரெண் சித்தி பெறுவர் வசுக்களெண்மர்
ஒழியா வாஞ்சை யினராகி யுறுக்கிக் காம தேனுவினை
விழிநீர் ததும்பப்பிடித்திழுத்தமிகுதோட்டத்தின்றொடக்கொழியும்.
வழிவா னவர்தங் குரவனருள் வர்க்கா லுணர்ந்து போந்தனரால்.

போந்த வசுக்க ளெண்மருமப் புனித தீர்த்த மெட்டினும் போய்
ஆழ்ந்து முழுகு மக்கண்முன் னடுத்த பாவம் விடக்கண்டார்
சாந்தங் கமழு நறுங்கூந்தற் றையல் பாகன் றளின்மலர்
ஏந்தி யிறைஞ்சிக் காதலுட னினிய துதிபற் பலசெய்தார். அ

பேச வரிய மகிமையினைப் பெறுமா முனிவ ரெழுவருநன்
நேச முடனே வலன்பெருகி நிறைந்த தீர்த்த மிதின்முன்னம்
வாசம் புரிகா ரணமதனல் வழங்கு மவர்பே ரிஃதன்றித்
தேசமுழுதும்வசுக்கள்பெருந்தீர்த்தமெனப்பேர்திகழ்ந்தொளிரும்.

வேறு.

வண்மைசே ரெண்டிசை மகிமை கூறிய
வுண்மையாஞ் சருக்கமீண் டெடுத்து ரைத்தனன்
விண்ணுல காளுமிந் திரனை மேலைநாள்
நண்ணுசா பந்தவிர்ந் திடுந லன்சொல்வேன். க0

எண்டிசைத்தீர்த்தமகிமைச்சருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம்—சூருள.

---

## கூரு. இந்திரன்சாபநீங்குசருக்கம்.

இந்தி ரன்றரு வாசமா முனியிடுஞ் சாபம்
வந்து வானுல கதுதனை நீங்கிமண் ணுலகில்
சந்த நாண்மலர்ப் பொழில்புடை சூழ்தல மெங்குஞ்
சிந்தை வெந்துயர் கூர்ந்திடத் திரிந்தனன் மாதோ. க

ஒருத லத்தினுந் தீர்ந்திடக் கண்டில னுரிய
குருவ னுக்கிர கஞ்செய வுளங்குளிர்ந் தெழுந்து
மருவ லர்ப்பொழில் சூழ்ந்திடும் வயித்திய நாதன்
அருமை யாம்பெருந் தலந்தனை யடுத்தன னம்மா. உ

அடுத்த வாயிரங் கண்ணினுக் கரியபே ரின்பங்
கொடுத்தி லங்குசித் தாமுத குணதிசை யதனில்
எடுத்து ரைத்திடு மியன்முறை மூழ்கினன் சாபம்
விடுத்தொ ழிந்தது விளைந்தது மயிர்ப்புள கிதமே. ங

மன்னு நற்புகழ் பெற்றிடு மாகமா மாதந்
தன்னின் மூழ்கியே சாபநீங் கிச்சத மகவான்
பின்னர் மண்டல மொன்றெழுத் தைந்தையும் பிரியா
துன்னியேயருஞ் செபம்புரிந் துறைந்தனன் மாதோ, ௪

வேறு.

அத்திமுகத் தண்ணன்முதற் கடவுளரை வணங்கியன்னோ னிணையடி தீரத், துத்தரதிக் கினைநோக்கி யுறைந்துசெபம் புரியுமிடத் துமையோர் பாகன், எத்திசையும் புகழ்வயித்திய நாதனெழுந் தருளிமனத் தெண்ணு நின்ற, உத்தமநல் வரமனைத்து மளிப்பனெனக் கருணைபுரிந் துரைத்தல் செய்தான். ௫

ஐயனுரைத் திடுமமுத வாக்கதனை யுணர்ந்துமல ரடிமேற் றாழ்ந்து, பையரவப் பணிபூண்ட மார்பாயான் பகைவருடன் பொருதும் போரில், வெய்யவசு ரரைவெல்லும் விறல்வரமும் யான் விரும்பி முழுகுந் தானம், வையகமிந் திரதீர்த்த மெனவழங்கும் வரமுமகிழ்ந் தருள்செய் யென்றான். ௬

அடியேன்மற் றருச்சனைசெய் யைங்கரன்றன் கமலமல ரடியை வாழ்த்திப், படிமேவுந் துவாரபா லகர்தம்மைப் பணிந்துபுகுந் துனது பாதம், முடியால்வந் தனைசெய்வோர் மொழியரும்பூ ரண பலமு முதன்மை யாக, மிடிதீரப் பெறல்வேண்டும் விரும்பார்கிட் பலம் பெறவே வேண்டு மென்றான். ௭

புண்டரிகச் செழுங்காடு பூத்ததென வாயிரங்கண் பொலிந்து தோன்றத், தண்டளிர்க்கற் பகநறுந்தா ரணிந்திலகு மகபதிதான் சாற்று மாற்றங், கண்டிறைவன் கருணையினு லவையனைத்து மளித்தனன்பின் காதல் கூர்ந்தே, அண்டருல கத்தணைந்து பகைவரைவென் றரசாட்சி புரிந்தானம்மா. ௮

வேறு.

உந்திநீர்க் கருங்கட லுடுத்த பார்மிசை
இந்திரன் சாபநீங் கியச ருக்கமென்
சிந்தையி லமைந்தன தெரிந்து கூறினேன்.
வந்தனூர் வாசன்மான் மியம்வ குப்பன்மேல்

இந்திரன்சாபநீங்குசருக்கமுற்றிற்று.

ஆ. திருவிருத்தம்—௬௬௬.

---

## ௩௬. துருவாசர்பிராந்திதீர்ந்தசருக்கம்.

ஆதலினிந் திரதீர்த்த மெனவகில முரைத்திடுமற் றவனைச் சீதி, யேதமிகக் கொடுஞ்சாப மிட்டதுரு வாசமுனி யிலகு மஞ் சொற், பேதமுற வேசித்துப் பிராந்தியா யின்னதனுற் பிறைசேர் வேணி, நாதனுறை தலந்தோறும் போந்துபுகழ் சேர்வயித்திய நாதஞ் சார்ந்தான். ௧

இசைநிறையு மகிமைபடைத் திலகுசித்தா முததீர்த்தந் தனி லீசான, திசையதனின் மூழ்கியே றினன்பிடித்த பிராந்திதான் றீர்ந்த தற்றால், அசைவிலருந் தவம்புரியுந் துருவாச தீர்த்தமென வகில மெங்கும், நசைபெருகு மகிழ்ச்சிமிக வுரைத்தனர்மற் றகீ தனைத்து நல்கு மாதோ, ௨

கருத்தமைந்து காதல்கூர்ந் திலகுசித்தா முததீர்த்தக் கரை மேலாறு, கிருத்திகைப்பெண் ணிருந்தனர்மற் றவர்களறு வருங்கி ளர்பூம் புனலின் மூழ்கித், திருத்தமிகு மனையசித்தா முததீர்த்தந் தனிலாறு தீர்த்தந் தங்கள், பொருத்தமுறும் பெயரதனுற் புகழ் பெறவே யமைத்துவளர் மகிழ்ச்சி பூத்தார். ௩

கன்னனறுங் குதலைமொழிக் கார்த்திகைமா தர்களமைத்துக் கவினுந் தீர்த்தந், தன்னின்முழு கினரிட்ட காமியம்பெற் றிருப்ப ரது தனைக்கண் டோருஞ், செந்நெல்வயல் வளந்தருபார் முழுது மொரு குடைநிழற்றிச் செங்கோ லோச்சி, மன்னுபுக ழரசாட்சி செலுத்திநீ டூழிநாள் வாழ்வர் மாதோ. ௪

வேறு,

வண்மைசேர் திடேந்துரு வாச மாதவன்
நண்ணிய பிராந்திதீர்ந் ததுந வின்றனன்
அண்ணலா ரங்கசந் தான தீர்த்தநல்
உண்மையை யினியெடுத் துரைத்தல் செய்குவேன். ௫

துருவாசர்பிராந்திதீர்ந்தசருக்கமுற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ௬௭௧.

---

## ௩௭. அங்கசந்தானதீர்த்தமகிமைச்சருக்கம்.

போங்கெழில் கொழிக்குஞ் செம்பொற் பொருப்பினுக் காசி யான
மங்கைதான் மகிழ்ச்சி கூரும் வயித்திய நாத மென்னும்
எங்கணு யகற்கீ சான திசையினி லிலகி யோங்கி
அங்கசந் தான தீர்த்த மாரமு தெனவி ளங்கும். ௧

வேறு.

இலகிய விருடி வசிட்டன்மேற் றெய்வ மெழில்பெறு சங்கி னிதனை, நலமிகக் காப்போன் மூவிலைச் சூல நாயக னத்திர தேவன், பலனருள் விருக்கம் வெள்ளின்மற் றிதன்கீழ் பானிறை கஞ் சபாத் திரம்பொன்,குலமணி கரும்பொன் வெண்பரி தானங் கொ டுத்திடி னென்றுகோ டியதாம். ௨

அல்லணி களத்த வண்ணல்வா னவர்கட் கடைந்திடு சோக மோ கத்தை, ஒல்லையிற் றீர்ப்பான் றிருவுளத் தெண்ணி யோங் கொளி வெள்ளியங் கிரியில், வில்வமூ லத்தின் மிருத்திகை யெடுத்து விரிசா காண்டமா வனத்தின், எல்லையி லன்னோர்க் களித்ததின் மிருந்தே யிருந்திடு மிருத்திகை யதனை. ௩

சீரண மாகி யவர்புவி விழுந்து சிதைந்திடு மங்கமியா வையுஞ் சம், பூரண மாகச் செய்வதற் கிலகிப் பொற்புறு மூவிலைச் சூலத் தோரணி முனையா லகழ்ந்தொரு தீர்த்த மியற்றியம் மிருத்திகை யினைவைத், தாரணி யண்ணல் சேர்த்தலா லதன்பே ரங்கசந் தானமென் றுரைத்தார். ௪

இனையநற் றீர்த்த மிருத்திகை யெடுத்தே யெழில்பெறத் திரட்டிவைத் ததனை, வினைகடீர்ந் திடவே விரும்பின ரருந்தின் மிகும்பெரு வியாதியே முதலாம், அனையநோய் நீங்கு மன்றலாற் றீரா வினையெலா மக்கணந் தீருஞ், சினவிடைப் பெருமான் றிருவடி சேர்ந்து திருந்துபே ரின்பமுற் றிருப்பார். ரு

சித்திபெற் றிடவே திரட்டிவைத் திருந்த திகழ்திருச் சாந்திலொன் றதனைப், பத்தியில் லாத படிறருக் களித்தோர் பாழ்நரகதனிடை வீழ்வார், குத்திரம் பேசி யிகழ்பவர் கொடிய நரகினிலழுந்துவர் குளிகை, முத்தியைப் பின்ன ரளித்திடும் போக முழுவது முன்னளித் திடுமே. சு

புதல்வரைப் பெறாத பூங்குழன் மாதர் பொற்புறு தீர்த்தநீர் முழுகி, உதவிசெய் திருச்சாந் துண்டையைக் கரைத்தே யுண்மையா யருந்திடி னல்ல, பதமுத வனேக பாக்கியம் பெருகும் பரிவுறு புதல்வரைப் பெறுவார், கதமிகு பகையை வெல்லுவர் குளிகை கையினி லிருந்திடி னம்மா. எ

உறுபய ஞன குளிகையைக் கடல்சூ ழுலகினில் வாழ்பவ ரருந்தின், வறுமைதீர்ந் திடுந்துன் னிமித்தமாங் கனவு வாய்ந்திடும் வலியுவே தாளங், குறுகியே நடுங்கி யோடிடுங் கொடிய சூனியங் குடியிருந் திடாது, பெறுமிடம் பார்க்கு மரியபே ரின்பப் பேறுமேற் பெறுகுவர் மாதோ. அ

கோங்குலா வியபூங் குழன்மடந் தையர்கள் குளிகையையருந்திடிற் றீர்க்க, மங்கலி யத்தைப் பெறுவர்பன் னிரண்டு வாரமதருந்திடிற் பெருநோய், இங்கினி யிருக்கு மிடமில வென்றே யெழுந்துதா னடக்குமப் பினைநீத், தங்கையி லதனை யைந்தினமெடுத்தே யருந்திடி னனைத்தையும் பெறுவார். கூ

இன்பமே யளிக்கு மிடபநன் மாதத் தெழின்மிகு பருவநீராடி, மின்புனை வேணி வயித்திய நாதன் விரைமலர்த் தாளினை வணங்கி, அன்பொடு ததியோ தனநிவே தனஞ்செய் தவரரு வினையெலாந் தீர்ந்தே, நன்புகழ் மிகுமங் கலம்பெறு குவர்மே ணண்ணுவர் கயிலைமால் வரையை. க0

வேதமோர் நான்கும் பிரளயஞ் சூழ மேதகு தினம்பல மூழ்கி, ஏதமுற் றிருந்து சிதைந்திடு மங்கத் துடனெழுந் தெண்ணரும் புகழ்சேர், சீதநீ ராடி வயித்திய நாதன் றிருவடி வணங்கியொன் பதுநாள், காதல்கூர்ந் தருச்சித் தங்கம்வாய்ந் திலகிக் கவினுறக் களித்தன மன்னோ. கக

சீதவான் புனல்சூ ழங்கசந் தான தீர்த்ததீ ரந்தனி லுள்ளங், காதல்கூர் தண்ணீர்ப் பந்தல்வைத் தவர்பூங் காமிக வைத்தவர் மறையோர்க், காதர வாகு மன்னசத் திரம்வா ழகரமன் புடனமைத் தளித்தோர், ஏதநீங் கிடவே யெண்ணில்பல் கோடி குலங்கரை யேற்றுவ ரெளிதின். கஉ

வேறு.

செங்கதி ரவனைக் கண்டகா ரிருள்போற் செறிந்திடு பாவநீக் கிடுமால், அங்கசந் தான தீர்த்தநன் மகிமை யறிந்தன புகன்றனனிப்பால், பொங்கிய வெழில்சேர்ந் திடுசிவ தன்மன் பொருந்திய பிரமராட் சசுதான், இங்கொழிந் தோடு மான்மிய மதனை யெடுத்துரை செய்குவன் மாதோ. கங

அங்கசந்தானதீர்த்தமகிமைச்சருக்கமுற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் ௬௮௪.

---

## ௬அ. சிவதன்மன்பிரமராட்சசு நீங்குசருக்கம்.

அங்கசந் தான தீர்த்தமுன் னினரு மளவிலா வின்பமே பெறுவர், இங்கிதன் மகிமை தனிலொரு கதையா னிசைந்திட வியம்புவன் கேண்மின், தங்குபூ ருவத்தின் வயித்திய நாத தலந்தனிற் பிறந்தவன் றரைமேல், பொங்குமா மறையோ தியபரத் துவாசன் புகழ்பெறு கோத்திரத் துதித்தோன், க

அகலிடந் தனிற்சூழ்ந் திலகுமா சார மனைத்தையு மறிந்தவனன்றிச், சகலசாத் திரமுந் தெரிந்தவ னெழுதாச் சதுர்மறை முழுதுணர் பெரியோன், புகலுவ ரவன்பேர் சுமதியென் றன்னோன் பொருந்தும்வை சாகமா தஞ்சேர், பகலினி னிரவி னிருள்கழிந் திலகு பருவநாட் புரிவுகூர்ந் தெழுந்தான், உ

திலகவே தியன்மே லங்கசந் தான தீர்த்தநீ ராடியே வெள்ளில், இலகுமூ லத்தி லேந்தெழுத் தினையு மியல்பெறச் செபம்புரிந் திருந்தான், அலகைபோற் பிரம விரட்சசு நுகர வடுத்தவீனச்சமுற் றன்னோன், நலமிகு மனைய நறும்புன விறைத்தானனந்ததம் முனியுட லம்மா. ௩

அக்கணம் பிரம முனியுட னீங்கி யணிமணிக் குண்டலங் கிரீடம், மிக்கநன் மணஞ்சூழ் கற்பகத் தெரியல் விரைகமழ் சாந்தநல்லாடை, திக்கெலாம் விளங்குந் திவ்விய தேக மிசைதிகழ்ந் தொளிசெயச் சேணில், புக்கிளம் பரிதி யெனவிமா னத்திற் பொற்புறத் தோன்றினன் மாதோ. ௪

அருமறை யுணர்ந்த சுமதிமா மறையோ னதிசய மிதுதவிர்ந்துளதோ, வருநெறி யறிவ னெனவவன் கமல மலர்முக நோக்கினி யார்நின், பொருவரு குலம்யா தெவ்வுழை யிருந்து போந்தனை போக்கரும் பாவம், பெருகிடப் பிரம ரட்சசா மாறும் பிரிந்தொழிந் ததும்பக ரென்றான். ௫

வேறு

திகழ்சவு ராட்டக தேச மீதினில்
புகழ்பெறு பூசுரர் குலத்திற் போந்துளேன்
நிகழ்பெயர் வளர்சிவ தன்ம னென்றுதான்
இகழ்செயா துலகுளோ ரெடுத்துக் கூறுவார். ௬

சிந்தைவே றுகியே திரிந்து நான்மறை
அந்தணர் செய்கட னனைத்தும் விட்டியான்
நிந்தனை பேசிநன் னெறியொ ழித்தனன்
வந்தனை செய்சிவ பூசை மாறினேன். ௭

வினைவச மென்கொலோ விரும்பி யான்பெறுந்
தனையர்க ளாயுள்சீ ரணம தாகியே
அனைவரு மிறந்தன ரரிய கற்புள
மனைவியு மிறந்தனண் மண்ணி ழந்தனன். ௮

௩. வெள்ளில் — விளா. ௭. மாற்றினேன் — என்றும் பாடம்.

திருந்துசெங் கோன்முறை செலுத்து மன்னவன்
அருந்தன மனைத்தையு மபகரித்தனன்
இருந்ததி லொழிந்தன யாவுஞ் சோரர்தாம்
பொருந்துநள் ளிரவினிற் கொண்டு போயினார். ௯

எள்ளின ருறவுகொண் டிருந்த யாவருந்
தள்ளின ரூரினிற் றலைமை பூண்டவர்
வெள்ளிடி விழுந்தியா னிறந்து வெந்நர
குள்ளன வொழிந்திடா தழுந்தி யூறினேன். ௧0

வேறு.

எண்ணருங் கால நரகினிற் கிடந்தே யேறினன் கரையின்மே லதன்பின், மண்ணினிற் பிரம விராட்சசா யினன்முன் வாழுநாட் சிவநிசி யதனில், அண்ணல்கண் மணிமா லிகையினை மறையோர்க் கபுத்திபூ ருவமதா யளித்த, புண்ணியப் பலனு லினையதீ ரத்திற் போந்துனைப் பிடித்திட நின்றேன். ௧௧

தீர்த்தநீ ரள்ளித் தெளித்தலா லிலகு திவ்விய தேகம்யான் பெற்றேன், ஆர்த்திநீங் கினனின் னருட்கிட னேனை யனைநற் சிவகணங் குழுமிப், பார்த்துநின் றனைமேன் வரவினை வெள்ளிப் பருப்பதஞ் செல்குவ னென்றான், வேர்த்திடா தம்பொற் கவரிகா லசைத்தார் விண்ணவர் பூமழை பொழிந்தார். ௧௨

தேண்ணிலாத் தவழுந் திருமலை யன்னோன் சேர்ந்தபின் றிருந்தும்வான் புகழ்சூழ், மண்ணுல கதனிற்சுமதிமா மறையோன் வளங்கெழு தீர்த்தமா மகிமை, உண்ணிறை காதல் பெருகிட வுரைந்தா னுயர்செழுந் தீர்த்தநீர் கண்டோர், எண்ணில்பல் யாகப் பலன்பெறு குவர்மே லெழுந்துமூழ் கினர்பல னெளிதோ. ௧௩

௧0. வெள்ளிடி – கருக்கொள்ளாதவெண்முகில், ஒன்றோடொன்றுதாக்குதலாலுண்டாகும் இடி. ௧௨. ஆர்த்தி – ஆசை.

வேறு.

அரிய மாநிலப் பரப்பெலா மலேந்தலைந் தோடித்
திரித ரச்செயும் பிரமரட் சசுசிவ தன்மன்
பிரியு மான்மியச் சருக்கமீண் டுரைத்தனன் பெருமை
உரிய நற்றிருச் சாந்துண்டை யுண்மைமே லுரைப்பேன்.

சிவசன்மன்பிரமரட்சசுநீங்குசருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம்—௩௯௮.

---

## ௩௯. திருச்சாந்துண்டைசெய் முறைமைகூறியசருக்கம்.

இலகுநற் றினத்தில் வலஞ்செய்து முழுகி யெழில்கொள் வெண் ணீறணிந் தெழுதா, நலமிகும்வேத முழக்கொலி திகழ நலங்கொள்வாத் தியமெழுந் தியம்ப, அலகிலா மகிமை யங்கசந் தானத் தடத்தமை மிருத்திகை யெடுத்தே, திலகபாத் திரத்தில் வைத்துமே லயன் றிருத்தமாஞ் சந்நிதி யதனில். ௧

எழில்பெற வனைய பாத்திரந் தனைவைத் திலகுமைந் தெழுத் தையுச் சரித்தே, ஒழிவிலோர் பதினா யிரமுருச் செபஞ்செய் தொளிமிகு விபூதிகுண் டத்தில், பொழிதரும் விபூதி யெடுத்த திற்சேர்த்துப் புண்ணிய தீர்த்தநீர் வார்த்து, விழிமகிழ் திருச்சாந் துண்டைசெய் துமைதாண் மீதுசாற் றுவதுநல் விதியாம். ௨

உத்தம வுருக்கொண் டிருந்திடு முமைதன் னொளிமல ரடிதனிற் சாத்தி, வைத்திடு திருச்சாந் துண்டையை யெடுத்து மரத்தி னாற் செய்தபெட் டியினைச், சுத்திசெய் ததனில் வைப்பது விதி மேற் சுபதினந் தனிலதை யெடுத்துப், பத்திமீ தூரு மன்பர்கட் களித்தாற் பலித்திடும் போகமுத் தியுந்தான். ௩

---

௧. திலகபாத்திரம் — புதுப்பாத்திரம். திலகம் - சிவப்பு. ௨. புண்ணிய தீர்த்தநீர் — சித்தாமுத தீர்த்தநீர்.

உரமிகுங் குன்மங் காசநோய் பெருநோ யோங்கிமே லிடுஞ் சனி வாதம், பரவும்வெண் குட்டஞ் சுரந்தலை வலிநீ ரிழிவுபா ரிசத் தெழும் பிளவை, விரவிடுந் தீரா வினையெலாந் தீரு மிக்கபே ரின்பமு மளிக்குங், காமதிற் றிருச்சாந் துண்டையை யெடுத்துக் கனிவுட னருந்தினர்க் கன்றே. ௫

எண்ணிடு நியம மின்றியே குளிகை யெடுத்தருந் தினர்க்கெலாம் பலிதம், உண்மையா யிராது கொடியவெம் பாவ மொழித்திடு முடல்புள கிதமா, நண்ணும்வே தாளம் வந்தணு காது நலமிகு சித்தியுண் டாகும், அண்ணலார் திருச்சாந் துண்டையை நியம மாகவே யருந்தினர் தமக்கே. ௬

தேசுறு குளிகை மகிமையை முழுதுஞ் செப்புதற் கரிதரி தெவர்க்கும், வீசும்வண் புகழ்சே ரங்கசந் தான வைபவம் வியாசர் தன் னிடத்தில், ஆசுதீர்ந் திடயா னுணர்ந்தன னதன்பே ரவனியிற் புகன்றவர் கேட்போர், ஈசா னெனவே மான்மழுக் காளகண்டமுக் கண்ணுமெய் துவரே. ௭

வேறு.

கோழித்திடு மகிமை வாய்ந்து குலவிய திருச்சாந் துண்டை
வழிச்சிறப் பெடுத்துச் சொல்லுஞ் சருக்கமீண் டுரைத்தேன்மாறுச்
செழிப்புறு சாகாண் டத்திற் றிருவவ தாரஞ் செய்யும்
எழிற்றிருச் சருக்கந் தன்னை யினியுரை செய்கு வேனே. ௭

திருச்சாந்துண்டைசெய்முறைமைகூறியசருக்கமுற்றிற்று.

ஆகூ திருவிருத்தம்—எ௫௫.

---

## ௬0, செவ்வேள்திருவவதாரச்சருக்கம்.

தழைத்துவிண் படருங் கோடுசூழ் தருக்கள் குலவிய நைமிசாரணியத், திழைத்திட வரிய தவம்புரி முனிவ ரிருந்திடு நாப்பணினிலகித், தழைத்தகண் டிகைவெண் ணீற்றொளி நிறைந்த சவுனக முனிவர னெழில்சேர், உழைக்கரத் தண்ண லுரைத்திடு புராண முணர்முனி வனைத்தொழு துரைத்தான். க

அய்யகே ளெமக்குச் சிவபெரு மான்றன் னருள்புரி சரிதமாத் தொகுத்தே, உய்யுமா றுரைத்த காதையில் வயித்திய நாதனென் றுமையொரு பாகற், கெய்துகா ரணமு முலகமீன் றளித்தாட் கிலகும்வா லாம்பிகை யெனும்பேர், வையகந் தன்னில் வந்தகா ரணமும் வகுத்துரை செய்யெனப் புகன்றார். ௨

அவ்வுரை செவிக்கின் னமுதமாய் நிறைபே ரானந்த மாகியே நீங்காச், செவ்விவாய்ந் திருந்து தெளிந்துநூ லுணர்ந்து திகழ்ந் திடு சூதமா முனிவன், கவ்வைவெண் டிரைசூ ழுலகினுக் கிதமாய்க் கைதனி லதிரக சியமாம், இவ்வகை யெடுத்து வினவமுன் னியற்று புண்ணிய மென்கொலோ வென்றே. ௩

முனிவரை வியந்து வயித்திய நாத முதல்வன்மான் மியமுழு வதும்யான், இனிதறிந் திலகு தலப்பெரு மகிமை யிதுவொளிர் தீர்த்தமற் றிதுமேல், புனிதமா மூர்த்தி மான்மிய மிதுவென் றறிந்துபூ தலத்துள வனத்தில், தனியிருந் தனேகந் தவம்புரிந் திடினுஞ் சாற்றுத லரிதரி தாமால். ௪

தன்பெரு மகிமை தானறி யாத தற்பர மறிவனோ வறியேன், ஏன்றனக் கமைந்தே யிருந்திடு மறிவுக் கெட்டின துரைசெய்வே னிதுதான், முன்பெருந் தவஞ்செய் வியாசன தருளான் மொழிகுவ னென்பதே யன்றி, இன்பவா ரிதியா மையன்மான் மியமா லயனுமின் னமுமறிந் திலரே. ௫

வேறு.

பூரு வந்தனிற் றாரகன் புரிந்ததண் டனையால்
மேரு நேர்புய மெலிந்தனன் மகபதி விண்ணோர்
யாரு மோலமிட் டெழுந்தன ரிரசிதக் கிரியைச்
சாரு முன்னரிற் படுந்துயர் சாற்றரி தாமால். ௬

---

௫. "தம்பெருமை தானறியாத் தன்மையன்காண் சாழலே "தானுங் காண்கில னின்னமுந் தன்பெருந் தலைமை," என் னும் திருவாசகமும், கந்தபுராணமும் இங்கே நோக்கற்பாலன.

அனைய ருற்றிடு மெலிவுகண் டபயமீந் தன்னன்மின்
புனையும் பொன்னிதழ்க் கொன்றைவே ணியன்புகல் பிறிதொன்
றினையி லாதவ ரிருந்தன ரிதற்குமுன் னசுரன்
நினைவ ருந்தவம் புரிந்துநீள் வரநிறை நாளின். ௭

அண்ண றன்வடி வண்ந்தமென் றறிந்திலன் மனத்தின்
எண்ணி யேசிறு பிரமசா ரியைநிக ரிருந்த
வண்ண மற்றவன் வாங்கின வரங்களில் வடிவார்
கண்ணு தற்பிரான் புதல்வனைத் தவிர்வது கருதான். ௮

இறந்தி டாவரம் வாங்கின னெழுந்துபோர் புரிந்தான்
மறங்கொள் கண்ணினன் செம்பனு தியரன்றி வலிய
திறந்தி கழ்ந்திடு படைத்தலை வர்களுடன் றேவர்
புறங்கொ டுப்பது கண்டுபுன் னகைபுரிந் தனனே. ௯

ஈது நிற்கமற் றையன்வா னவரிட ரொழிப்பான்
தாது சூழ்மலர்க் குழலுமை தனைமணம் புரிந்தே
ஓது தற்கரும் பற்பல நாட்புணர்ந் துறைந்தான்
யாது செய்வமென் றிருந்தொரு சூழ்ச்சியெண் ணினரால். ௧௦

எண்ணும் வானவ ரங்கியங் கடவுளை யேத்தி
நண்ணு மெம்மனோர் துயரமொ தொழிப்பது நாடி
உண்ணி றைந்திடு காதலா னினையுணர்ந் தனம்போய்க்
கண்ணு தற்பிரான் புணர்ச்சிசெய் யுறையுள்கா ணுதியால். ௧௧

அன்ன வேலையில் வெள்கியே யம்பிகை பிரிவாள்
இன்ன வாறுசெய் யென்றன ரென்செய்வா னெழுந்து
நின்ம லன்வரும் வீரியம் விடுமுன நின்றுன்
பொன்ன வாஞ்சுணங் கிளமுலை புறம்பகன் றனளே. ௧௨

இதமு யிர்க்கெலா மளித்திடு மிறையவ னினையில்
கதமி குந்திடக் கண்சிவந் தெரிகவின் வாடும்
வதன நோக்கியே வியோகநீ வரச்செயு மதனாற்
சிதகி றங்கொளும் வீரியந் தாங்கெனச் சீறி. ௧௩

அ. வண்ணம் — வடிவு. ௧௩. வியோகம் — பிரிவு.

அய்யன் கொண்டிடுங் கோபவெங் நெருப்பினுக் கஞ்சி
வெய்ய செந்தழ லவனெடுத் தனனுடல் வெதும்பி
உய்யு மாறில னாகிவா னவர்க்குரை செய்தே
தூய்ய கங்கையில் விடுத்தனன் சூர்கிளை தடிய. கச

திங்கண் மூன்றின்மேற் சரவணத் தொதுக்கின டிகழு
மங்கண் மாநில மதுதனிற் காவிரி வடபான்
மங்கு றேய்பொழில் சூழ்சர காண்டத்தின் மன்னும்
பொங்கு நூபுர நதிபுகழ் படைத்ததென் றிசையில். கரு

ஆரும் வண்புகழ்க் கங்கைதா னொதுக்குமஞ் ஞான்றிற்
சாரும் வெண்டிரை யாற்றனித் தனிபிரிந் தம்மா
சீரு றுந்திரு வுருவமோ ராறதாய்த் திகழ்ந்தே
யாரு மின்னதென் றறிவரு மெம்பிரா னிருந்தான். கசு

ஆறு சீர்பெறுஞ் சிற்றுரு வாகியே யிருந்த
வாறு மோர்வடி வாகக் கார்த்திகை மாதர்
ஊறு காதலிற் காத்தன ருமையுட னமலன்
கூறு தற்கருங் கூடன்மா நகர்குறித் தெழுந்தான். கஎ

புரந்த ரன்முதற் கடவுளர் புடைநெருங் கிடமேற்
பரந்து பாரிடஞ் சூழ்ந்திடப் புல்லிய மொலிப்ப
வரந்த ருஞ்சர காண்டத்தின் வரும்பொழு தம்மா
சுரந்து தன்முலை பெருகுபால் கண்டுமை சொன்னாள். கஅ

ஆர ணம்முணர்ந் தறிவரும் புராதன வடுத்த
கார ணந்தனை யறிகிலேன் சிலீமுகங் கறுத்துப்
பூர ணக்குட நிறைந்துமேற் பொழிந்தெனத் தீம்பால்
வார ணம்பயி லிவ்வுழை வருவதென் னென்றே. கசு

வேறு.

பனிவரை யீன்ற மாது பகர்மொழி யுணர்ந்து நாதன்
குனிசிலை நுதலாய் கேணின் குமரன்மூ விரண்டு பெண்கள்
இனிதுகாத் திடவெ மூஞ்சீர்ச் சரவணப் பொய்கை யின்கட்
புனிதநற் குழந்தை யாகிப் பொற்புறத் தவழ்தல் செய்தான். உ০

கரு. நூபுரநதி – கொள்ளிடம். கசு. சிலீமுகம் – முலைக்கண்.

சாற்றருங் கொடிய ஞான தாரகா சுரனை வென்று
கூற்றினுக் கிரைகொ டுப்ப வளர்தலாற் கொங்கை விம்மி
ஏற்றமாய்ச் சுரந்து தீம்பா லெழுந்தது குமர னுண்ண
வேற்றடங் கண்ணாய் நல்கென் றொருமொழி விளம்பல் செய்தான்.

குளிர்புனற் றனித்த வழ்ந்த குழந்தையைக் கண்டு செய்ய
தளிர்புரை கரத்தாற் றூங்கித் தனஞ்சுரந் தொழுகு தீம்பால்
ஒளிர்நுத லளித்தா ளுச்சி மோந்தன ளாயுத்தந் தன்னிற்
பிளிறிவெங் பகைவர் காட்டப் பிறங்கெழிற் புயந்தை வந்தாள்.

இந்திரன் முதலா யுள்ள விமையவர் தம்மை நோக்கிச்
சுந்தர வாக்கா லம்மை யொருமொழி துயரந் தீர
மந்தர கிரியை மானுந் தாரகன் வலிமை மாற்றுந்
தந்திரக் குழந்தை வேலான் றன்னருள் பெறுமி னென்றாள். உங

வேறு.

பொன்னுலகந் தனி புரக்கும் புரந்தரன்விஞ் சையருரகர் பொற்பு வாய்ந்த, கின்னரர்கந் தருவர்முனி வார்மிடைந்து புடை சூழ்ந்து கிளர்ந்தி யார்க்கு, முன்னவனுக் குபதேசஞ் செயுமுருகன் முளரிமலர்ப் பாதம் போற்றி, மன்னினரன் னையுமையன் வாவும் விடை தனிலேறி மகிழ்ச்சி பூத்தாள். உச

வேறு.

தன்னிக ரரிய மேன்மை தருசர காண்டந் தன்னிற்
சென்னியா றுள்ள நாதன் றிருவவ தாரஞ் செய்யும்
நன்மைசேர் சருக்கந் தன்னை நவின்றன னிப்பா லென்றும்
மன்னிய சிறப்பு வாய்ந்த வரம்பெறு சருக்கஞ் சொல்வேன். உரு

செவ்வேள்திருவவதாரச்சருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் எகூ0.

---

உஉ. தைவரல் — தடவல். உங. தந்திரக்குழந்தை — தன்னைத்தானே அலங்கரித்தலையுடைய குழந்தை, உபாயத்தையுடைய குழந்தை, ஆறுருவமொன்றாகக்கூடப்பெற்ற குழந்தை.

## ௪௧. செவ்வேள்வரம்பெறுசருக்கம்.

தொல்லை நான்மறை துதித்திடு மண்ணலுந் தூய
அல்லி யங்குழ லுமையுமீ ராறுதிண் புயமுஞ்
செல்வ நாண்மலர் திகழ்தரு முகங்களோ ராறும்
வல்ல னாகிய குமரனைச் சிந்தைவைத் தெழுந்தார். ௧

அண்ணல் சிந்தனை செய்திட வளர்ந்தன னனையன்
எண்ணில் பல்லுயி ரளித்திடு மிறைவிதன் னுடனே
நண்ணு மாயிடை யிருந்திடு நற்புகழ் படைத்த
புண்ணி யத்தலங் கண்டுமேற் றென்றிசை போந்தான். ௨

பொன்னி மாநதித் தென்கரை பொற்புற விருந்த
தன்னை நேருந் தலப்பெரு மகிமைசாற் றரிதால்
முன்ன நீயெனை மயூரமாய்ப் பூசைசெய் முறையால்
மன்னி யோங்குமா யூரமா நகரென மாதோ. ௩

ஒருக ணப்பொழு திலகுமித் தலத்தினி லுறைவோர்
வருபி றப்பில ருருத்திர ராவர்மா றுது
பெருகு காவிரி யிடபதீர்த் தம்படி பெரியோர்
அருமை சாற்றரி திடபவா கனர்களா குவரே. ௪

என்று நாதன்வாய் மலர்ந்துரை செய்தன னிரண்டு
குன்றெ னத்திக ழிளமுலைக் கோமள வல்லி
மன்றல் சேர்மல ரெடுத்துமா யூரநா யகனை
அன்று பூசைநன் னலம்பெறச் செய்தன ளம்மா. ௫

புனித மாந்துலா மாதநாண் முப்பதும் பொன்னி
இனிய தீர்த்தநீ ராடியெம் பிரான்றனை யிறைஞ்சிப்
பனிம லர்க்குழ லாள்பரம் பரனுட னெழுந்து
கனிவு கூரவாஞ் சியநகர் கண்டுள மகிழ்ந்தாள். ௬

அங்கண் மாநிலந் துதித்திடு மங்களாம் பிகையோர்
பங்கி னன்பதங் கார்த்திகைப் பரிதிநாட் பணிந்து
கொங்கு சேர்மல ராலருச் சனைசெய்து குளிர்நீர்
எங்க ணும்பொழிந் திலகுமம் மாதமாங் கிருந்தாள். ௭

---

௪. இடபவாகனர்கள் – உருத்திரர்கள்.

கற்ப நூறது கண்டசா யாவன மிறைஞ்சி
வெற்ப ளித்திடு மன்னைவெண் காடனை வணங்கிப்
பொற்பு வாய்ந்திடு பூர்தரா யண்ணலைப் போற்றி
அற்க ளத்திறை யுடனருச் சுனகக ரணைந்தாள். அ

மலர்ந்தி டுங்கழு நீர்நறு மலரினு லம்மை
இலங்க ருச்சுன நாதனைப் பூசைசெய் தெழுந்து
நலன்கொ ளிந்திரன் வழிபடு நாதனுண் மலர்த்தாள்
அலங்கல் கொண்டருச் சனைசெய்து மகிழ்ந்தன ளம்மா. கூ

கொண்டல் சூழுமண் ணிப்படிக் கரையொடு குறுக்கை
அண்டர் நாயகன் பதாம்புயம் வணங்கியன் புடனே
வண்டு வார்குழ லாள்சுவே தார்க்கநல் வனத்திற்
கெண்டை நீள்விழி மகிழ்ந்திடக் கிளர்ந்துசூழ்ந் தனளே. க0

போது சூழ்குழற் கார்த்திகைப் பூங்கொடி மாதர்
பாது காத்திட வளர்முரு கேசனைப் பரவி
ஓது மெய்ப்புகழ் வானவ ருடன்பொரு தொழியா
வாது செய்திடு தாரகன் றன்வலி மாற்றி. கக

புரந்த ரன்புகழ் பெறப்புரந் தருள்புரி யென்றே
வரங்கள் பற்பல வளித்துநீ வளர்ந்திடு தலத்திற்
புரந்து வைகினர் நினைத்தவர் பாவநீங் கிடுவர்
கரங்கு வித்துனைக் காண்பவர் கண்ணுத லாவார். கஉ

அட்ட சித்தியு மாலயன் பதங்களு மன்றி
இட்ட காமியம் யாவையும் பெறுகுவ ரென்றே
கட்டு வார்குழல் கனிவுகூர்ந் துரைசெய்தென் முலைப்பாள்
மட்டி லாதுமேற் பெருகியே வாவிநண் ணுதலால். கங

திலக நல்குசித் தாமுதத் துதித்திடு கிருமி
இலகு மேனைய யாவையு மிமையவ ராகி
அலகி லாதபே ரின்பமேற் பெறுமென வளித்தாள்
நலனு யிர்க்கரு ளண்ணலு நல்வரங் கொடுத்தே. கச

---

க0. சுவேதார்க்கநல்வனம் — வெள்ளெருக்கங்காடு.

அயிலி லங்கிடும் வேற்படை யளித்தனன் மேன்மை
பயிலுஞ் சண்முகப் பிரான்பரம் பரன்பதம் பணிந்தே
மயிலை வென்கிடச் செயுமெழி லன்னையை வணங்கிக்
கயிலை நேர்சர காண்டத்திற் கவின்பெற விருந்தான். ௩௫

வேறு.

விண்ணவர் துயரந் தீர்ந்துபொன் னுலகில் வீற்றிருந் தெழில்பெற விளங்கும், வண்மைசேர் திலகு வரம்பெறு சருக்க வளமைத் தியம்பின னிப்பாற், கண்ணகன் புவியிற் றலப்பெரு மகிமை காட்டிய சருக்கவாய் மையினை, உண்ணெகிழ் மகிழ்ச்சி கூர்ந்திட வறிந்த வாறெடுத் துரைத்தல்செய் குவனால். ௩௬

செவ்வேள் வரம்பெறுசருக்கமுற்றிற்று,

ஆ திருவிருத்தம் ௭௪௬.

---

## ௪௨. சங்கரன்தலமகிமைகாட்டியசருக்கம்.

ஏடக மதுக்கமழ்ந் திலகு கூந்தலாள்
பாடகச் சேவடி படியிற் றோய்ந்திட
ஆடக நகர்தனிற் போந்த ரும்பெறல்
வீடகங் கனிந்தருள் பிரானை வேண்டினன். ௧

அருவரை யளித்தபெண் ணரசி யாய்மலர்
முருகவிழ்த் தளிகண்மொய்த் தெழுந்த சோலைசூழ்
தருமமா நகருறை தரும நாயகன்
திருவடி யருச்சனை செய்து போற்றினள். ௨

கந்துக புரந்தனைக் கண்ணுற் றன்புடன்
சுந்தரப் பசுபதி யீச னைத்தொழு
தெந்தையோங் காரமா நகரை யெய்தியே
சந்திர சேகரன் சரணம் போற்றினள். ௩

---

௩௬. காட்டுதல் — தெரித்தல்.

விருப்பமீ தூரவெற் பாசி பொற்புறு
திருப்பணந் தாளுறை சிவனை யேத்தியே
இருட்பொலி கண்டனோ டெழுந்து சார்ந்தனன்
மருக்கமழ் பொழிற்றிரு மங்க லக்குடி. ௪

பொற்புறு பூதவ னேசன் பொன்னடி
நற்புது மலர்சொரிந் தேத்தி நல்லெழில்
விற்புரை நுதலினாள் விளங்கு கோடிகா
அற்புத வமலனை யடிப ணிந்தனள். ௫

மாவடு வெனநலம் வாய்ந்த கண்ணினாள்
ஆவடு துறையுறை யண்ண லைத்தொழு
தேவடுத் திடுமிடை மருதி னெம்பிரான்
பூவடு பொன்னடி பணிந்து போற்றினாள். ௬

குடந்தைமா நகருறை குளிர்வெண் டிங்கள்சேர்
மடந்தைபா கனைவலஞ் செய்தி றைஞ்சிவண்
டடர்ந்தபூம் பொழின்மிகு திருவை யாறனைப்
படர்ந்தபே ரன்பினாற் பணிந்து போற்றினாள். ௭

பாங்கர்சூழ் தலங்களும் பணிந்து பைந்தரு
ஓங்கெழிற் றிரிசிர புரத்து றைந்திடுந்
தேங்கமழ் கொன்றைவே ணியன்றன் சேவடி
மாங்குயின் மொழியினாள் வணங்கி நின்றனள். ௮

திலகவா ணுதலதன் மேற்சி றந்திடு
மலர்சொரி வணங்கொள்வாட் போக்கி மாமலை
இலகுமீங் கோய்நல்வெண் ணாவ லெம்பிரான்
நலமிகு பொன்னடி நயந்து போற்றினாள். ௯

பொன்னிமா நதியிரு புறத்துஞ் சூழ்ந்திடுந்
தன்னைநே ரருஞ்சிவ தலங்கள் யாவையும்
அன்னபோற் றேத்திமற் றனேக மாந்தலம்
மன்னுதற் பரனையும் வணங்கிப் போற்றினாள். ௰

இருவர்தே டரியவெம் பிரானி தந்தருந்
திருவிளை யாடல்செய் கூடல் சேர்ந்துளம்
உருகிட மலர்விழி மகிழ வொண்ணுதல்
பெருகுகா தலிற்றலப் பெருமை யுன்னினுள். கக

வேறு.

வழிமதுக் கமழும் பொன்னிதழ்க் கொன்றை மலரணி வள்ள லொன் றுரைத்தான், கொழிதமிழ்க் கூட லுறைந்துசுக் தரனுங் கோலம்யான் கொண்டினி திருப்பன், எழில்கொழித் திலகு மங் கயகண்ணி யிடத்தமர்ந் திந்நகர்ப் புரந்தே, செழியர்கோ னரசு செலுத்தென வம்மை திருவுளம் பெருமகிழ் கூர்ந்தாள். கஉ

கவின்மிக வளர்கல் யாணசுற் கோலக் காட்சிகண் டிமையவர் முதலாப், புவிதனி லுறைவோர் பொருந்துபே ரின்பப் புணரி யின் முழுகியே மகிழ்வார், செவிதனக் கமுதாய்த் துதிதரு துலாத் திற் சேர்ந்திடு பிருகுவா ரத்திற், குவிமுலை மாதர் மைந்தர்கள் வணங்கிற் குலவுகா மியமிகப் பெறுவார். கங

ஈதலா துன்னு நல் விருச்சிக மாத மிலகிடு தநுவினிற் பூமி
காதலன் வார மிரவிவா ரத்திற் கண்டுபோற் றினர்பல னெடுத்தே
ஓதரி தட்ட சித்தியும் பெறுவ ருத்தம மாமெனக் கைந்து
பூதலந் தன்னிற் றலம்புக ழோங்கிப் பொற்புறுங் கூடல்கேதாரம்.

திகழ்திரு வானைக் காவிறை மகிமை சேர்திரு வாஞ்சியந் திருந் தும், புகழ்மிகும் வயித்திய நாதமிவ் வைந்துட் புண்ணிய நகரமாங் கூடல், அகமகிழ் தருமக் கூடன்மா நகரி னதிகமாம் வயித்திய நாதம், இகபர மிரண்டுந் தருமெனப் புகன்று னெழுந்தது துந்துபி விண்மேல். கரு

மலர்மழை வானோர் பொழிந்தன ரம்மை யையனு மகிழ்ந்து றைந் ததன்பின், அலகில்பல் புகழ்சேர் கணம்புடை நெருங்க வரு மறை முழக்கொலி யன்றி, இலகிய முழவ மதிர்ந்திட வானோ ரேத்தொலி கடலென முழங்க, நலமிகு கயிலை சார்ந்தரி சுமக்கு நவமணி யாசனத் திருந்தார். கசு

வேறு.

கவின்பெறு முயர்தலப் பெருமை காட்டியே
நவின்றிடு சருக்கமீ தினித டங்கிடக்
குவிந்துவந் தெழுந்துளங் கொதிப்ப வெஞ்சினந்
தவிர்ந்திடாப் போர்புரி சருக்கங் கூறுவேன். கஎ

சங்காரன்தலமகிமைகாட்டியசருக்கமுற்றிற்று.

ஆ. திருவிருத்தம் எசுரு.

---

## சுரு. தாரகன்போர்புரிசருக்கம்.

இனைய வேலையிற் றாரகா சுரனெனுங் கொடியோன்
நனைம லர்ப்பொழிற் கற்பக நாட்டுறை மகவான்
தனைவெ ருக்கொளத் தநுவளைத் தடுசர மாரி
அனைவில்வான்பொழிந்தெதிர்ந்தெணச்சொரிந்தெதிர்த்தனனே.

அளவி றந்திடு மசுரவெம் படையெழுந் தனேக
வளம லிந்திடும் பொன்னுல கழித்தா மகளிர்
களப குங்கும மணிந்திடு கொங்கையிற் கண்ணீர்
இளகி வீழ்ந்திடச் செய்தலா லிரங்கிவாய் புலர்ந்தார். உ

சுந்த ரத்தநு வளைத்தழற் கணைபல தொடுத்தான்
இந்தி ரன்வரு மசுரன்மார் பினில்விடு கவசஞ்
சிந்தி வீழ்ந்தது செக்கர்வான் பிறைமுகப் பகழி
பொந்து பட்டிடத் துளைத்துரப் புறத்துரு வியதே. ௩

வேறு.

தத்துந்திரை யெறியுங்கட றனையொத்திடு தீயோர்
அத்தந்தனில் வடிவேல்சுடர் வாளம்பு பிடித்தே
சித்தந்தடு மாறித்திசை தோறுஞ்சுரர் மடியக்
குத்தென்றனர் வெட்டென்றனர் கொல்லென்றன ரம்மா. ௪

வாமுற்றிய வசுரத்தலை வர்கள்பொற்புறு வானோர்
புரமுற்றெறி கனுவத்தனி பொருதுப்புனை மௌலிச்
சிரமற்றன ருரமற்றனர் திகழ்மற்புய வலியக்
கரமற்றன ரலைமொய்த்திடு கடலிற்கிரை யானார். ௫

குடலைக்கழு கொடுபற்பல கொடிபற்றி யிழுத்தே
கடலுக்கிடும் வலையொப்பிட வுடருற்ற கறித்த
படருற்றிடு மசுரர்ப்படு குருதிப்புனல் பரவித்
திடர்சுற்றிய தெனவுற்றிடு சிரமொய்த்தது முடுகி. ௬

இத்தன்மைய ரன்றிப்பொரு திடுதேவரு மசுரர்
தத்தந்தலை வருமுற்றனர் சரமாரி பொழிந்தார்
மொத்துந்திரை யெறியுங்கட லெனமூண்டெழு தீயோர்
சித்தந்தடு மாறச்சுரர் தெய்வப்படை தொட்டார். ௭

வாசங்கமழ் தருநீழலில் வாசஞ்செயு மிமையோர்
பாசங்கணை பிறைவாய்திகழ் பாணங்கள் விடுத்தார்
ஆசங்கையி லாவாயுத முசலங்க ளெடுத்தே
மோசஞ்செயு மசுரத்தலை வருமொய்ம்பொ டெறிந்தார். ௮

சுரர் நொந்த வுயுத்தஞ்செய்து தொடர்தீயவர் தம்பால்
அரமங்கைய ரிருகொங்கையும் வழிகண்புன லகலப்
பரசும்பல படையும்படு களமெங்கு முதிர்ந்த
முரசுங்கவிழ் தாவற்றது முன்வைத்திடு துவசம். ௯

இரதத்துட னிரதத்தலை வர்கண்முட்டின ரிலைவேல்
கரபத்திர மதனுலிடு கவசத்தை யறுத்தே
உரமுற்றுறு கணைதைத்தொரு விடவிட்டனர் புவிமேற்
சிரமிற்றுட லுருளப்பொரு சிலைபற்றி விழுந்தார். ௧௦

புரவிப்படை யொடுபற்பல புரவிப்படை பொருதி
இரவிற்றிரி தீயோருயி ரியமற்கிரை யிடுமேற்
பரவிக்கிரி தனையொத்தெறும் படுமாமத கரிசக்
கரவிற்கர வனையோர்தலை காலாலிட றியநால். ௧௧

அ. அசுரன் றலைவரும் என்றும் பாடம்.

தோலாவர மகிழ்வுற்றுறு துயர்செய்திடு கொடியோன்
காலாள்பரி கரிதேரிவை களுமற்றன கண்டே
மேலாகிய துயரத்தொடு விண்ணோர்கண டுங்க
ஆலாலமெ ழுந்தோடிடு மதுபோலந டந்தான். கஉ

வேறு.

மலர்தலை யுலகிற் றவம்பல புரிந்து மந்திர வேள்விக ளியற்றி, யிலகுபுண் ணியத்தாற் பொன்னுல கதனி லெய்திய வானவ ருடனே, குலகிரி போலுந் தாரகன் படைமேற் கொண்டுபோர்க் களந்தனிற் சேனை, பலவிறந் ததனுற் சுக்கிரன் பாதம் பணிந்துபற் பலதுதி செய்தான். கங

சிலைவளைத் தனந்தங் கணைகளைத் தொடுத்துத் திகழும்விண் ணுரிஞ்சியே வளர்ந்த, மலைகளைப் பிடுங்கி யெறிந்துகோ ழரைமா மரங்களை முறித்தெதி ரெறிந்து, கொலைபுரி யயில்வேல் விடுத்துவா னவர்தங் கொடுஞ்சம ரிற்பல ரிறந்தார், நிலைகலங் கினராய்க் கிளையுட னுளைப்ப நின்றனர் சிலரெனப் புகன்றான். கச

உணவினைத் தேடி விளிந்தனர் சிலர்மற் றுண்ணுநீர் வேண்டினர் சிலர்மேல், இணரெரி தோய்ந்த கண்ணின ராகி யீன்றிடு தந்தையைத் தாயைக், குணமிகு புதல்வர் மித்திரர் தம்மைக் கூவினர் சிலர்சில ரென்றே, நிணமொழு கிடும்வேற் றாரகன் பின்னு நின்றிவை யெடுத்தெடுத் துரைத்தான். கரு

பணைத்திடு பரரைத் தருவிற்குப் பலம்வேர் பதிந்திடல் பறவைகட் கிறகு, துணைத்தெழு கொங்கை மாதர்கட் குலகிற் றொல்லைநூல் கற்பெனச் சொல்லும், அணைத்திடாக் குழந்தைக் கழுகை புற்பசுவிற் கரசர்கட் கடர்ந்திடு படைநேர், இணைத்திட வரியா யிறந்ததாற் படைமே லென்செய லாவதென் றிரந்தான். கசா

பிருகுசஞ் சீவி மந்திரஞ் செபித்துப் பெரும்படைத் தலைவரை யெழுப்பி, ஒருதுளி யிரத்தம் புவிவிழி லசுர ரொன்றுபல் கோடியா யெழுந்து, பொருதிட வளித்தான் வானவர் குழுமிப் புகழ்பெறு சரவணப் பொய்கை, வருமுரு கேசன் மலரடி போற்றி வந்தனை செய்தனர் வகுப்பார். க௭

வேறு.

சீர்நி றைந்திடு தேவ ரசுரரும்
போர்பு ரிந்த சருக்கம் புகன்றனன்
சார்கொ டுந்திறற் றாரகன் றன்சிரம்
பார்வி ளங்க விழுதல் பகர்வன்மேல். கஅ

தாரகன்போர்புரிசருக்கமுற்றிற்று.

ஆ. திருவிருத்தம் எஅக.

## உஉ. தாரகன்வதைச்சருக்கம்.

போற்பமர் பசும்பொன் னுலகில்வா ழிமையோர் புரந்தரன் பொருதிற விழந்தே, அற்பக னீங்காத் துயரமீ தூர வடர்பெருங் காற்றினு லடிபட், டிற்றிடும் பாரரை விருக்கமெண் ணரிதா யெங் கணுங் கிடப்பது போன்று, பற்பலர் வீழ்ந்த பெருங்களம் பார்த்து வந்துதாள் பணிந்துமுன் னிரங்க. க

ஆறுமா முகவெம் பிரானுய ரபயங் கொடுத்தணி மணிமுடி சூடி, ஏறுகந் தருளு மையன தருளா லிலங்குசே னுபதி யாகிக், கூறுபல் கோடி யசுரரைக் கொன்று கொலைபுரி தாரகா சுரனே, வேறுவே றனேகங் கணைதொடுத் திலகும் வேற்கிரை கொடுப்ப னென் றெழுந்தான். உ

வலம்புரி முழங்கப் பேரிகை யதிர மலர்மழை பொழியவா னவர்தங், குலந்தலை யெடுப்பப் புலோமசை பசும்பொன் குலவிய மங்கல நாணல், நலம்பெற வனேகங் கணம்புடை சூழ நவிலு மெண் டிசைகளுக் கிறைவர், அலங்கல்வேற் குமர நாயகன் றிரு நோக் களித்திடும் பணிசெய வன்றே. ந

அனற்பொறி சிந்துங் கண்ணின ராகி யசுரவெம் படைபல சூழத், தனக்குநே ரிலையென் றெண்ணியே யிறுமாந் திருந்திடு தாரகன் மருங்கிற், சினத்துமுப் புரத்தை யெரித்தவெம் பெருமா னளித்திடு தெய்வநா யகன்றன், வனப்புறும் வெற்றிக் கொடி யொடும் வந்து வலன்றரும் பாசறை வதிந்தான். ச

இதத்தினை யளிக்கும் வலம்புரி யோசை யெழுந்தது செவிப் புகும்பொழுதிற், கதத்தொடு சிவந்த கண்ணின னுகிக் காரணம் யாதென வினவ, மதப்பெருங் கொடிய செம்பனு முதன்மை மந்திரி சங்கரன் சுதனற், பதத்தினை வானோர்க் களித்திட வேண்டிப் படையெடுத் தனனெனப் பகர்ந்தான். ரு

கணப்பொழு தேனுந் தாழ்த்திடத் தகாது கருதுதி நின்னுயி ருண்டு, நிணத்தினை யெயிற்றிற் கிரையிடுங் கால னேர்ந்தெதிர் நின்றன னென்றே, வணக்கமோ டினைய மாற்றமு முரைத்தான் வாம்பரி பூட்டிய தேர்மேல், இணக்கமில் கொடிய னேறினன் கவச மிட்டுவில் லெடுத்தன னெதிர்த்தே. ௬

அந்தரத் தமரர் சூழ்ந்திட நின்ற வையன்மேல் வைந்நுனைப் பகழி, சிந்தினன் றெய்வ வான்படை யெடுத்தான் றேவர்தங் கோமக னுன, இந்திர னுடனே செம்பன்வந் ததிர்த்தா னிலகிய தனஞ்சய னுடனே, வந்துபோர் புரிந்தான் றெம்பன்வா லெயிற் றுக் கயிடபன் மறலிமுன் மலைந்தான். எ

நிருதிதன் னுடனே முரனுடற் றினன்முன் னின்றிடும் வருணனோ டெழுந்து, கருமுகில் சூழ்ந்த தென்னமே காட்சன் கணை பல தொடுத்தனன் சரபன், பொருதினன் வருகாற் றிறையுடன் காலன் புகன்றிடு குபேரனே டெதிர்த்தான், சுருதியாய்ந் திடுமீ சானன்முன் வெகுளி சூழ்சுர தெற்பன்விற் குனித்தான். அ

ஓதரும் புகழ்மேன் மண்டலக் கிறைமுன் னுற்றனன் காலக னிலகு, பாதலத் ததிபன் றன்னுடன் கால நேமிபற் பலபடை தொடுத்தான், காதக னுன சம்பரன் சபரன் சுண்டகன் கணக்கி லாக் கொடிய, பாதக மிகுந்த சண்டனீள் சுசண்டன் பாரவிற் றனித்தனி குனித்தார். க

ஆசரன் முதலா மெழுவர்கள் சூலந் தோமர முதற்பல படைகள், வாசவ னீரே ழுலகினுக் கதிபர் தங்கண்மேற் றெடுத்தெதிர் வளைத்தார், ஈசனுர் புதல்வன் புன்னகை புரிந்தே யிவர்களைக் கடற்கிரை கொடுத்தான், பேசருங் கொடிய தாரகன் பேழ்வாய் பிளந்திதழ் கடித்தெதி ரெழுந்தான். கo

எ. தனஞ்சயன் — அக்கினிதேவன்.

வேறு.

அரனுர் மகனு மியவை யன்மலர்க்
காமீ திலெடுத் தனன்விற் கடுநேர்
சரமா ரிபொழிந் தனனன் னவைதைத்
தூமூ டுருவிப் புறமோ டியதே. ௧௧

தாவில் வலிபெற் றிடுதா ரகனுஞ்
சேவின் புறவோ னருள்செம் மல்புயத்
தேவின் சரமைந் துபுதைத் திமையோர்
கோவின் குலிசத் தையொடித் தனனே. ௧௨

சூலப் படைதோ மரமா தியெடுத்
தேலக் குழல்பா கனெழிற் புதல்வன்
கோலத் திருமார் பில்விடுத் திருள்கூர்
ஆலத் தைநிகர்ப் பவடர்ந் தனனல். ௧௩

வேறு.

மங்குன் மீது மறைந்துபின் வந்துநின்
றங்கை விற்குனித் தாயிரம் வெங்கணை
சங்க ரன்புதல் வன்றட மார்பினிற்
பொங்கு சோரி பொழிய விடுத்தனன். ௧௪

மாயஞ் செய்து வலியவில் வாங்கியா
காய நின்று கணைக டொடுத்தனன்
சேயன் பாகிய தேவர் பதைத்துயிர்
சாய வேதனை மீதில் விழுந்தனர். ௧௫

படைத்த லைவர் பலிறந் தார்கள்போர்
இடைக்க ணின்றயி ராவத மெண்ணில்சீர்
உடைப்பெ ரும்வலி மாறியொ டுங்கியே
துடைப்ப ருந்துய ரத்தொடு சோர்ந்ததே. ௧௬

வெய்யன் றேரொடு சாரதி வீழ்ந்திட
ஐயன் வாளி தொடுத்தன னன்னவன்
கையி லேந்து சிலைவெங் கணையுடன்
வைய மீது குதித்தெதிர் வந்தனன். ௧௭

தோல்லை நான்மறை தேடருந் தூயவன்
அல்லை நேரசு ரன்றுணை யங்கையில்
வில்லை நாணுட னிற்றிட வெங்கணை
ஒல்லை விட்டுயர் பார்மிசைத் தள்ளினன். கஅ

இரக்க நீத்த கொடியவ னென்னும்வல்
அரக்கன் வாளெடுத் தண்ணன்முன் வந்தனன்
சிரக்கம் பஞ்செய்து சீற்ற மிகுந்திடக்
கரத்தி ரள்வலி காட்டி யுடற்றினன். கக

தரணி நின்று பொருதிடு தாரகன்
உருமி ரண்டு பிளவுபட் டோதநீர்
பரவி யேறும் பரவை படிந்திட
அரன ளித்த வயிற்படை யேவினன். உ0

வேறு.

எண்ணரிய விமையவர்தந் துயர நீங்க விந்திரன்பொன் னுலகுபுரந் திடச்சு வேத, வண்ணவயி ராவதமும் புகழ்சேர் சங்க மாநிதியும் வளர்பதும நிதியும் வாசத், தண்மலர்க்கற் பகதருவு மகிழ்ச்சி கூரத் தாரகா சுரன்வதையாஞ் சருக்கஞ் சொன்னேன், அண்ணலசரீரிவாக் களித்த தூய வருமைமிகு சருக்கமே லுரைப்பனம்மா. உக

தாரகன்வதைச்சருக்கமுற்றிற்று.

ஆ. திருவிருத்தம் அ0உ.

---

## ௬ரு. அசரீரிவாக்களித்தசருக்கம்.

எண்ணில்வா னவர்தமக் கிரங்கி நோக்கிய
தண்ணளி மலர்விழிச் சண்மு கப்பிரான்
வெண்ணிலாத் தவழ்ந்திடும் வெள்ளி மால்வரை
அண்ணலை யகங்குளிர் தாநி னைந்துபின். க

தொடுத்திடும் பிருகுசெய் சூழ்ச்சி யையவர்
தடுத்ததஞ் ஞானமோ கிதர்க ளாகியே
படுத்தன ரிமையவர் பரவை மீதுயிர்
விடுத்துறழ் தாரகன் விழுந்த தோர்கிலார், ௨

நமரிவ ரிவரென நாடித் தேடுநல்
தமர்துணை யின்றியே தனிகி டந்திடும்
அமரர்தம் மூர்ச்சையைத் தீர்ப்ப தம்மைபங்
கமர்கன லொழுகுகண் ணுதலே யாகுமால், ௩

என்றுநிச் சயஞ்செய்திவ் வுலக மீதினில்
வென்றிசேர் காசிகே தாரம் வேதம்வந்
தன்றருச் சனைசெயும் வளமை யாருடன்
துன்றும்வெண் ணைவல்சீர் சூழும் வாஞ்சியம், ௪

இந்தமா நகரெலா மெழில்கொ ழித்தநல்
அந்திவெண் பிறையணி யண்ண லார்மகிழ்
சுந்தரத் தலமெனத் துணிபு ணர்ந்துதன்
சிந்தையி னினைந்தெதிற் செல்கு வேனென, ௫

ஒருமொழி புகன்றன னுலக மீதினில்
குருபர னாகிய குமர நாயகற்
கருமையொன் றெளிமையொன் றுவ துள்ளதோ
திருவிளை யாடலோ தெளித றேர்கிலேன், ௬

எண்ணுமப் பொழுதச நீரி வாக்கெழுந்
தண்ணனீ திருவவ தாரஞ் செய்திடும்
புண்ணியத் தலந்தனிற் போந்து நாதனை
உண்மைசே ரிருதய கமலத் துன்னியே. ௭

திருத்தமா நலன்கொள்சித் தாமு தத்தடப்
பெருத்ததீ ரந்தனிற் பெருகும் வானவர்
உருத்தமைச் சேர்க்கமே லூரம்ப டைத்தொளிர்
மருத்துவின் மனுச்சொலஞ் ஞான மாய்ந்திட, ௮

கயிலைமால் வரைவளர் கண்ணு தற்பிரான்
அயிலிணை வேல்விழி யணங்கு தன்னுடன்
பயில்பெரு மகிமைபற் பலப டைத்திடுஞ்
சயிலநேர் விடையுகைத் தவணிற் சார்குவன். கூ

என்றவக் கணந்தனி லிமைய மீன்றவள்
தன்றிருப் புதல்வனுஞ் சண்மு கப்பிரான்
நன்றிசேர் வயித்திய நாதஞ் சார்ந்தெறழ்
ஒன்றிய மனுவினை யுளத்தி னுன்னினன். கо

ஆருயிர் நாயகன் குறிப்ப றிந்துசூழ்
மாருதம் வானவர் துன்ப முற்றுவன்
பாருறு மவர்முதற் பலரை யும்மெடுத்
தேருறை தீர்த்ததீ ரத்தி லெய்தியே. கக

வாரமீ தவர்தமைச் சேர்த்து வைத்தபின்
ஆரமு தானசித் தாமு தப்புனல்
சீரணி குமரவே டெளித்து ரைத்தனன்
தாரணி புகழ்சிவ கவசந் தன்னையே. கஉ

அழுந்திய விண்ணவர்க் கிரங்கி யன்புகூர்ந்
தெழுந்துமுன் னிருடியர் கயிலை யெய்தியே
கொழுந்துவெண் பிறைபுனல் குலவும் வேணியன்
செழுந்தளி ரிணையடி சேவித் தையகேள். கந

பொன்னுல கழிந்தது பொருந்தும் வானவர்
மன்னிய பிருகுசெய் மனுவிற் பற்பல
இன்னல்கூர் வியாதியுற் றனரொ ழுந்திட
உன்னரு ளன்றிவே றொன்று காண்கிலேம். கச

என்றுநின் றிரந்தன ரபய மீந்தனன்
கொன்றைநாண் மலரணி யையன் கூறுமீ
தன்றியுங் கயிலைவிட் டகன்றி டாமன்முன்
நின்றன ரருள்பெறுங் கால நேர்பெற. கரு

கயிலைநா யகன்சிவ கணங்கள் சூழ்தரக்
குயின்மொழி வரமிருத் திகையுங் கொண்டுமேல்
தயிலபாத் திரநற்சஞ் சீவி தன்னுடன்
பயில்வுயித் தியனெனப் பரிந்தெ ழுந்தனன், கசு

வேறு.

எய்திவெண் ணீறு முத்திமண் டபக்கூ விளவடி மிருத்திகை யெடுத்துத், துய்யநற் றயிலந் தொட்டுயி ரளிக்குந் தூயசஞ் சீவியைப் பிழிந்து, கையினு லையன் பூசினன் வானோர் கணப்பொழு தினிற்பிரு கியற்றும், வெய்யநோ யொழிந்து திவ்விய தேகம் விளங்கவே யெழுந்தன ரம்மா. கஎ

வேறு.

மிக்கமயக் குறுமோக வஞ்ஞானந் தீர்ந்திமையோர் வேறு ரூது
தக்கசரு வாங்கபூ ரணராகி யெழுந்துதயா பரனே போற்றி
செக்கர்வானந்தனில்வந்துதித்தசிறுபிறையணிந்தசெல்வபோற்றி
புக்கவிடமுண்டளித்தவருட்கடலேபோற்றியெனவேத்திநின்றூர்.

வேறு,

நண்ணும் பசுந்தே னெழுகிதழி நறுமா மணம்வீ சிடும்வேணி
அண்ண லளித்த வசரீரி வாக்கின் மகிமை கூறினனுய்ந்
தெண்ண வரிய மேன்மைவளர்ந் திலகு தேவ ருருச்சனைசெய்
உண்மை யான சருக்கமான் மியமேல் விளங்க வுரைசெய்வேன்,

அசரீரிவாக்களித்தசருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் அஉக.

---

## சகூ. தேவரருச்சனைசெய்சருக்கம்.

அலகிலா மகிமை பெற்ற வமரர்க ளடியேம் வாச
மலரினுற் பூசை செய்து மகிழ்ச்சிகூர் விழாவி யற்ற
நலமிகு கருணை செய்ய நாதனே வேண்டு மென்றூர்
இலகிய குமுத வாக்கா லிறைவனுந் தெனவு ளித்தான், க

உத்தமன் பின்னு மன்னோர்க் கொருமொழி யளித்தல் செய்தான்
இத்தலந் தன்னி னீங்கு மியற்றுமுன் வினையால் வந்து
நித்தியம் விடாது காயுஞ் சுரமுறைச் சுரநி கழ்ந்து
பித்தமே லிடுஞ்சு ரம்வாய் பேசருஞ் சுரமும் பின்னர். உ

துன்னிய சன்னி வாதத் தோடநேத் திரநோய் நீங்காச்
சென்னிநோய் சுவாச காசஞ் செவித்துளைக் குறும்பி மூலங்
குன்மநோய் சுவேத குட்டங் குலைவலி கயநோய் மேகம்
மன்னிய வசூரித் துன்பம் வடிக்குநீ ரிழிவு மன்றி. ௩

நகந்தனி லுறுநோய் தந்த நலிவுநோய் மார்ப டைப்பு
மிகுந்துய ருறுநோய் பில்லி சூனிய வேதை கண்டோர்
அகந்திடுக் கிடவே பேழ்வாய் திறந்திடு மலகை வந்து
புகுந்துசுற் றிடுநோய் புள்ளூர் புகுந்திடிற் பயந்து போமே. சு

என்றெடுத் துரைத்த மாற்றம் யாவையு முணர்ந்து துள்ளுங்
கன்றுழை மழுத்த ரித்த கரமுமுக் கண்ணும் வெண்ணீ
ற்றொன்றிய மேனி வாய்ந்த வொளியுமன் புருகக் கண்டு
நின்றுபூ நீர்சொ ரிந்து நிமலனைப் பூசை செய்தார். ரு

பக்குவ மான வன்னம் பழமிள நீர்பா னீயம்
மிக்கபா யசந்தாம் பூல விதவகை நிவேத னஞ்செய்
தக்கர வணிந்த வண்ண றக் கணிபெறு தீப மேந்தித்
தொக்கவிண் ணவர்க ளாரா தனைசெய்து துதித்தல் செய்தார். சு

வசந்தகா லத்தி லங்குத் திருவிழாச் செய்து வானத்
திசைந்ததுந் துபிமு ழங்கப் பல்லிய மியம்ப மாதர்
அசைந்துநன் னடனஞ் செய்ய வணிகொடென் மலயத் தென்றல்
உசந்திடும் வெப்ப மாற்றி யுறுபதஞ் செயவ மைத்தார். எ

தருப்பணங் கவரி தால விருந்தம்வெண் டாள மாலை
திருத்தமா முறைதொ டுத்துத் திகழ்ந்தவெண் குடைவி ளங்கும்
உருப்பொலிந் திலகு மற்று முளவுப சாரஞ் செய்தே
விருப்புறு சீத ளஞ்சூழ் மிகுபணி பலவுஞ் செய்தார். அ

௩. மேகம் — மேகவியாதி. அ. தாலவிருந்தம் — விசிறி.

வேறு.

அருள்பழுத் திருந்த வைய னநுமதி பெற்று மேலாந்
தெருள்வலி யுளராய்த் தேவர் கோன்முத லிமையோர் செவ்விப்
பொருண்மிகுந் தொளித யங்கும் பொன்னுல கதனைச் சேர்ந்தே
இருணிறத் தசுரர் செய்தீங் கினையொழித் திலகி னரால். கூ

வேறு.

இலகிய விரதந் தவம்பல புரிந்தே யேழுல கழும்புகழ் நிறைய
அலகிலா மகிமை பெற்றிடுந் தேவ ரருச்சனை செய்திடு சருக்கப்
பலவள மதனைப் பகர்ந்தன னுள்ளம் பரிந்துவா லாம்பிகை யம்மை
குலவிய மலரா லருச்சனைசெய்யுஞ்சருக்கமேற்கூறுவன்குறித்தே.

தேவாருச்சனைசெய்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் அ௬க.

---

## சஎ. வாலாம்பிகையருச்சனைசெய்சருக்கம்.

அஞ்சிறைத் தும்பி யின்னிசை தொடுப்ப வணிகொள்பூந் தாதிறைத் தலரும், மஞ்சரி நெருங்குஞ் சோலையின் மருங்கு வள் ளவாய்க் கமலநாண் மதுவார்ந், தெஞ்சலில் சினைகள் பற்பல மல்க விறைவனு மிலகுமம் பிகையும், விஞ்சையர் முனிவர் விண்ணவர் சூழ வெள்ளியங் கிரியில்வீற் றிருந்தார். க

தேண்ணிலாத் தவழுஞ் சிறுபிறை யணிந்த தெய்வநா யகன் சிவ கணங்கள், எண்ணரும் பூத கணம்புடை சூழ விலகுமா ணிக் கம்வைத் திழைத்து, வண்ணநல் லெழில்வாய்ந் திருந்தவா சனத் தின் மன்னிவீற் றிருக்குமப் பொழுதின், உண்ணிறை காத லுமை யுடன் முத்தி மண்டப மொளிசெயப் போந்தான். உ

விளங்கிழை முத்தி மண்டபச் சூழல் வியப்புறு தென்றிசை சார்ந்து, கிளர்ந்தபூ வுலகிற் செலநினை பொழுதிற் கெழுமுதன் னெழிலினை நோக்கி, அளந்திடி னெனைநேர் மகளிரும் புருட ரையநின் றனைநிகர் சொல்ல, வளம்பெறு மவரு மிலையென வியந்து மகிழ்ந்திறு மாந்தனள் வகுத்தாள். ௩

அற்றைஞான் றையன் மறைந்தனன் புகழ்சே ரற்புத வடிவுள ராகி, நெற்றியிற் கண்ணு நான்குதிண் புயமு நீறணி மேனியு நீண்ட, கற்றைவார் சடையு நீலகண் டமுமான் மழுவும்வாய்ந் திடுகளத் திரமும், பெற்றவ ராகி யனேகர்கண் ணுற்றார் பெய்வளை பார்த்ததி சயித்தாள். ச

திலகவா ணுதலாள் கண்ணினுக் கெதிர்பின் றோன்றினன் றிருந்துநல் லெழில்கூர்ந், திலகிடு மிமய மால்வரை யளித்த விளங்கொடி யாரிவ ரென்றாள், நிலமிசை வயித்திய நாதநற் றலத்தி னெகிழ்மது மலரினுற் பூசை, நலமிகச் செய்த பேரென நவின்று னயந்தருச் சனைசெய நினைந்தாள். ரு

அண்ணலே யனைய தலத்துனைப் பூசை செயவரு ளென்றன ளளித்தான், வண்ணவார் கூந்த லிலகுகோ மளவா லாம்பிகை யுருவம்வாய்ந் தொளிசேர், எண்ணில்பன் மணிவைத் திழைத்த பொன் விமானத் தேறின ளுருத்திர கணங்கள், விண்ணவ ரமா மகளிர்க ளனேகர் மிடைந்திரு புறத்தினு நிறைந்தார். சு

முழவொலி யாழி னிசையொலி வேத முழக்கொலி யமுதமூற் றிருக்குங், குழலொலி மணிமே கலையாம் பையர்பூங் குயிற்குரற் பாடலி னொலிமென், மழலைவாய்ப் பசும்பொற் சதங்கையி னொலிதா மரையடிச் சிலம்பொலி யெழுந்து, தொழவரு மன்பர் துதித்திடு மொலியெண் டிசைதொறுஞ் சூழ்ந்தது தொடர்ந்தே. எ

மரகத மயில்பொன் மலையினிற் றங்கி வந்தென விமானத்திற் போந்து, விரவுமா னந்த வொளியுரு வாகி விளங்குகே தாரமாந் தலத்தில், கரமலர் குவித்து நின்றுகண் ணருவி பாய்ந்திடக் கனிந்துள முருக, அரவகங் கணக்கே தாரநா யகனை யருச்சனை புரிந்தன ளம்மை. அ

திங்கள்வா ணுதல்வாய்ந் திலகுமம் பிகைவெண் டிரைநுரை யொடுசுழித் தோடுங், கங்கைசூழ் காசி மாநக ரதனிற் கவுண்மதம் பாய்கடுஞ் சீற்ற, வெங்கரி யுரிவை போர்த்திடுங் கருணை விசுவநா தனையருச் சனைசெய், தங்கண்மா நிலத்தின் மகிமைசேர் நைம்மி சாரணி யந்தனிற் போந்தாள். கூ

கற்பகாலங்கள் பற்பல கண்டுகழித்தருந் தவம்புரிந் தழியாப், பொற்புறும் வேள்வி செய்தகத் திருளைப் போக்கிமெய்ஞ் ஞானசூரியன்போன், றற்புத வடிவம் வாய்ந்திருந் திடுமம் முனிவரனே கருக் கருள்செய், தெற்பணி பூண்டங் கெழில்கொழித் திலகுமிறைவனை யருச்சனை செய்தாள். ௧௦

குலவிய குருக்கேத் திரத்தினி தமர்ந்த கொன்றைவேணியன் றனை வணங்கி, அலகில்வண் புகழ்சேர் திருச்சயி லத்தி லங்கணனிணையடி பணிந்து, பலதுதி வேத வாக்கிய மதனுற் பரவிநீணதி பல கடந்து, நலமிகுந் திடுபொன் முகலிசூழ் மலைவா னண்ணுகாளத்திவந் தனளால். ௧௧

செம்பொன்மால் வரையின் றெடுத்திடுஞ் செல்வி திகழ்தனி மலைதனில் விளங்கும், அம்பிகா பதியை யரியகாளத்தி யையனைப் பூசைசெய் தெழுந்து, கம்பைமா நதிசூழ் காஞ்சிமா நகரைக் கண்டுகண் களித்தருள் பழுத்த, எம்பிரானேகாம் பரனைநாண் மலரா லெழில்பெற வருச்சனை செய்தாள். ௧௨

அருணைமால் வரையை வலஞ்செய்து வணங்கி யருள்கொழித் திருந்திடும் விருத்த, கிரியுறை யிறைவன் பொன்னடி பணிந்து கிளர்மறைச் சிலம்பொலி கலிப்ப, வரிவிழி மாது கண்டுளங் களிப்ப மன்றுளே நடம்புரிந் திலகுங், கருணைநா யகனைத் தாமரை மலர்ச் செங் கைகுவித் தருச்சனை செய்தாள். ௧௩

அள்ளிலை நெடுவேற் கண்ணுமை திருச்சிற் றம்பல மகன்று தென் றிசைசூழ், கொள்ளிடங் கடந்து காழிமா நகரிற் குலவுபொற் றோணிவீற் றிருக்கும், வள்ளலைப் பிரம புரீசனைச் செழுந் தேன் மலரினு லருச்சனை செய்து, வெள்ளெருக் கிலகும் வனந்தனைக் கண்டு மிகுமகிழ் கூர்ந்தனள் வியந்தே. ௧௪

நறுமணங் கமழ்பூஞ் சோலையு ளினை வாவியு நவமணி யிழைத்து, நிறுவுபே ரொளிசூழ் விமானமும் விசும்பி னீணிலை யிலகுகோ புரமும், எறுழ்படைத் தெழுந்தே யுயர்ந்தபொன் மதிலு மெழில்கொழித் திருக்குநால் வீதி, உறுபெருஞ் செல்வ மாடமாளிகையு முமையுள முருகிடப் பார்த்தாள். ௧௫

---

௧௦. எற்பணி – எலும்பாபரணம்,

வேறு.

உளத்தின்மகிழ் கூர்ந்தவள்புள் ளிருக்கு வேளூருயரெல்லை மருங்கினினைத் தெனவென் றுன்னி, அளப்பரிய பரிசனஞ்சூழ்ந் திடவி மான மதினின்று மிறங்கிவளர் வாலை யாகி, வளத்தினுட னிருந்தசித்தா முதநீ ராடி மன்னுமொளி நீறணிந்து மணங்கு லாவி, விளக்கமிகு குங்குமநன் னுதலி னிட்டு மேகலைகண் டிகை தரித்து விரைந்து போந்தாள். க௬

வேறு.

பேற்றிமிகு சந்திரகாந் தத்தகடு பரந்தபிரா காரஞ் சூழ்ந்து, பொற்றொடியா லயம்புகுந்து விளங்குபே ரானந்தப் பொலிவு தோன்ற, நெற்றியிற்கண் படைத்திருந்த நிமலன்வயித் தியநாத னிணைத்தாள் போற்றி, உற்றபெருங் காதலுடன் விதிமுறையாற் பூசைசெய வுன்னி நின்றாள். க௭

நலன்செய்மணங் கமழ்தருமஞ் சனந்தயில மான்பால்வெண் டயிர்நல் வாசங், கலந்திடுகுங் குமங்கோரோ சனையிளநீர் கனி தேன்செங் கரும்பின் சாறே, டிலங்குசருக் கரைநறுநெய் யிள வெந்நீ ரின்னமபி டேகத் துள்ள, துலங்குதிர வியத்தொடுசந் தனக்குழம்பு திருமுடிமேற் சொரிந்து பின்னர். க௮

ஒற்றுடை சாத்திவெண்ணீ றணிந்திழைவாய்ந் திடுமொடை யுடுத்துத் தோண்மேல், பொற்பூண நூல்சாத்திக் கதிர்மகுடந் தரித்துமணிக் கலன்கள் பூட்டி, நற்போதி னொடுவில்வ நறுந்தொ டைய லலங்கரித்து நயந்து தூபம், எற்போன்று சுடருமணித் தீப மெடுத் திலகுகிவே தனங்க ளெல்லாம். க௯

பற்பலபொற் றளிகையினிற் பரிந்தமைத்துப் பெருந்தீப மெடுத்துப் பாங்கர், உற்றிலகு சோடசநல் லுபசாரத் துடன் பூசை யுரிமை யாக, விற்பொருவு நுதலுமையாள் செய்துவளர் வேதவாக் கியத்தா லையன், நற்செவிக்கின் னமுதமெனத் துதி செய்தாண் முழவொலிநான் மருங்கு மல்க. உ0

---

உ0. பொற்றளிகை — பொன்னாற்செய்த போசன பாத்திரம்.

வேறு.

ஐயன்வாய்ந் திடுபே ரன்பினுற் செய்யு மருச்சனை யுவந்தெ ழில் கொழிக்கும், நெய்தவழ் கூந்த லம்பிகைக் கிலகு நித்திய யௌவன மளித்தான், எய்துதற் கரிய விடதுபா கமுமீந் தனனெ ழின் மகிழ்ச்சிகூர்ந் திருந்து, வையகந் தன்னில் வருமவர் விழை யும் வரந்தர விளங்கின னம்மா. உக

வேறு.

அளவில்பல் லுயிர்க்கெலாம் வரம ளித்திட
வளரும்வா லாம்பிகை பூசை மான்மியத்
துளவள முரைத்தன னுலகு ளோர்க்கருள்
தெளிதரு திருவிழாச் சிறப்புச் சொல்வன்மேல். உஉ

வாலாம்பிகையருச்சனைசெய்சருக்கமுற்றிற்று.

ஆ௳ திருவிருத்தம் அருங.

## சஎஅ. திருவிழாச்சருக்கம்.

போற்புறுபூங் கமலமிசை யினிதுறையு நான்முகனிப் புவன மீதின் நற்புகழ்பெற் றிடுவேத முதலெந்நூல் களுநவிலு மகிமை கண்புற், றற்புதமா கியவைத்திய நாதமணேந் தெண்ணரிய வமரர் சூழப், பற்பலபல் லியமுழங்க வையனிணை யடிக்கமலம் பணிந் தான் மாதோ. க

வேறு.

ஆரணந் தேடிக் காணு வையனே போற்றி மூல
காரண போற்றி யுன்னுங் கற்பனை கடந்தாய் போற்றி
தாரணி தன்னிற் றோன்றாத் துணையதா யிருந்தாய் போற்றி
வாரணி செம்பொற் கொங்கை மங்கைதன் பங்கா போற்றி

வேறு.

பரிவுமிகப் பணிந்திணைய துதிசெய்து கண்ணருவி பாய நின்று, புரிகருணை யுனதுமலர்ப் பொன்னடியை யருச்சனைசெய் துலகம் போற்றுந், திருவிழவு செயவென்றான் றெய்வநா யகன் றிருவாய் மலர்ந்து செமபொன், விரிசிறகோ திமமூரும் வேதன் முகந் தனைநோக்கி விளம்ப லுற்றான். ந

உ. தோன்றாத்துணையாயிருந்தனன் றன்னடி யோங்களுக்கே. என்றார் வாகீசகுரவரும்.

மலைவளர்கா தலிவைத்திய நாதமகி மையையுணர்ந்து வணங்கி மேலாம், நிலைமையெனை யினையதோர் தலத்திலருச் சனைநியமம் புரிந்து செய்யத், தலைமைபெறும் வேதவாக் கியமதனாற் றுதி செய்து தகுதி யோங்கும், இலைநெடுவேல் விழிகளிப்ப வரம்வாங்கி யெழுந்துமகிழ்ந் தியற்றும் பண்பால். ச

நின்மனத்தன் புறும்வரம்யா னெவ்வாறு தரத்தகுநீள் வெள்ளி வெற்பும், வன்மைபெறு சூலமுமிப் பொழுதுவிட்டு விடுவென் மகிழ்ந் தன்பர்க் கீந்த, நன்மைபெறும் வரந்தன்னைத் தள்ளியான் விடநினையே னயந்து மாது, தன்மைவியந் தவளருள்பெற் றினிய திரு விழாச்செய்யத் தக்க தென்றான். ரு

வள்ளலளித் திடுமினிய வாக்கதனைச் செவிக்கமுதாய் மன்னி யோங்கும், உள்ளமகிழ்ச் சியினுடனே யம்பிகையைப் பணிந்து துதித் தனனுன் சிந்தை, கொள்ளவிழைந் திடும்வரம்யான் றருகு வன்கே ளென்றனள்பூங் கொன்றை வாய்ந்த, வெள்ளநதி யணி வைத்திய நாதனையான் பூசைசெய்ய விழைந்தே னென்றான். சு

அனையவரந் தரத்தருவ தன்றுநா ளிதம்பூசை செய்த லானீ, நினையும்வரந் தருவனென வுரைத்தமொழி தவறாது நினக்கஃ தீந் தேன், நனையவிழு மலரெடுத்தே நலன்சேருந் திருவிழா ஞான்றி னையன், றனையிலகு மருச்சனையான் செய்வனிடை யூறுதவிர்ந் துய்ய வென்றாள். எ

இடபவா கனக்காட்சி தருமைந்தாந் திருவிழா வினிலி லங்கு, படவரவந் தரித்தபிரான் றனைப்பூசை செயின்யாவும் பலிக்கு மைந்து, தொடர்வுபெறு சிவபூசை நூனதோ டமுந்தீருந் தூயன் றன்னை, உடலின்மயிர்ப் புளகமுறத் தரிசித்தோர் பலனெண்ணி யுரைப்பார் யாரே, அ

---

அ. ஐந்துதொடர்வு பெறுசிவபூசை — பஞ்சசுத்தியின் சம்பந் தம் பொருந்திய சிவபூசை, "ஐந்துசுத்திசெய்தகம்புறமிறைஞ்சி" என்றார் திருவாதவூரடிகள் புராணநூலுடையாரும். பஞ்சாக்கர சம்பந்தமான சிவபூசை யென்றலுமாம். நூனதோடம்—மந்திர லோபாதி குற்றம்.

ஈனமுறு நாணம்வரச் சிவபூசை பண்ணுகிற தில்லை யென்று ஞானநா யகனையுல குறுதிபெற நன்னியமம் புரிந்தேன் முன்னம் ஆனதினுல் வருமைந்தாந் திருவிழா வினிற்பூசை செய்வே னுய்ந்த போனகமற்றுளவுபசாரமுஞ்சைவாகமம்புகலும்விதியாலென்ருள்.

ஆயநறு மலரெடுத்தே யண்ணலிணை யடியிலருச் சனைசெய் போதில், தூயமணங் கமழ்தூபஞ் சுடரெழுந்தீ பமுநிவே தனமுஞ் சூழ்ந்து, காயுநில முறப்பணியு முபசாரங் கடந்தவப சாரம் யாவும், பாயும்விடை யுண்ணலைந்தாந் திருவிழாத் தரிசனஞ்செய் பலனு னீங்கும். க0

தீக்ககுருத் துரோகமுதற் சகலபா வமுந்தீருந் தன்வா யூறு, மிக்ககோ ழையையுமிழ்தல் வைதல்கோ பித்தல்வே ருென்று பேசல், புக்கவா சையிற்பூசா காலமதிற் புதல்வனைப்பா ராட்டுந் தோடந், திக்கினைவிட் டோடுமைந்தாந் திருவிழாத் தரிசனஞ்செய் தவர்கட் கென்ருள். கக

அம்பிகைசெங் குமுதவாய் மலர்ந்துரைத்த மொழிசெவிக் கின் னமுதாய் வாய்ந்த, செம்பதும மலருறையு நான்முகனண் ணலுக்கிவைவிண் ணப்பஞ் செய்தே, உம்பர்தொழு மன்னவன்றன் னருள்பெற்றுத் திருவிழா வுபசா ரங்கள், நம்புபெருங் காதலினுற் செய்தனன்மற் றவைதெரிந்து நவில்வார் யாரே. கஉ

பொன்னுலக மகிழ்ந்துபூ வுலகில்வந்தே யிருந்ததெனும் பொற்பு வாய்ப்ப, நன்மைபெறு சங்கநிதி பதுமநிதி நவிலரிய முகிமை சூழ்ந்து, மன்னிவளர்ந் தோங்குசிந்தா மணிதேனு கற்பக மற்றுளவு மன்றிப், பன்னுபுக ழளகேசன் படைத்தநிதி யுமும் புரந்து நிறைந்த பாங்கால். கங

ஒளிசெய்சுதை தீற்றியெழில் கொழிக்குமணி மாடமுயர்ந் திடமா காய, வெளிமுகடு தொடும்வீதி விளங்குமனைச் சுவர்த்தல மிங் குலிகச் சேறு, தெளிகுழம்பு தோய்த்தெழுது சித்திரம்பொற் புறுந்தெற்றி தோறுந் தென்றல், குளிர்நிலவி னுடன்வீசக் கோதையரா டவர்மகிழ்ச்சி கூர்ந்து நின்றே. கச

க0. உபசாரங்கள் தந்த அபசாரம் எனப்பிரிக்க.

விரவுமொளி வயிரநெடுங் கானிறுத்தி மாணிக்க விட்டஞ் சேர்த்த, மரகதப்பந் தரிற்பவள மணித்தொங்க லூற்றிமா செறிந்து வாய்ந்த, தரளமணி யெழின்மாலை தொடுத்திளநீர் கமுகரம்பைத் தாறு தூக்கிப், பரவுநெடு வீ தி ய ணி பெறவாயி லிருபுறம்பண் புறவே செய்தார். கரு

வெள்ளிபசும் பொன்னமைந்து விளங்குபூ ரணகும்பம் வீதி தோறும், அள்ளிலைவேல் விழிமாதர் மணிமேடை யலங்கரித்து வைத்தா ரள்ளித், தெள்ளுபனி நீர்க்கலவை தெளித்தனர்பொன் னிறங்கொள்சிற குளர்ந்து செங்காற், புள்ளலம்பு வாவிதிகழ் செங்கமலப் போதுபரிந் திறைத்தார் மாதோ. கசு

அண்ணல்வயித் தியநாதன் றிருவிழாப் பெரியகொடி யேற்ற மாலோன், வெண்ணிலவு சொரிந்திடுசுக் கிலபக்கப் பங்குனிமா தத்தின் மேவி, நண்ணியகார்த் திகையாகு மிடபவா கனக்காட்சி யதிதி நாளாம், உண்மைபெறு மாயிலிய மிரதமா முத்தரநற் றீர் த்த மாமால். கஎ

என்றெழுதிப் பத்திரிகை யெடுத்துமருத் துவர்செங்கைத் தலத்தி லீந்து, வென்றிமிகு மிந்திரன்கந் தருவர்முனி வாரியக்கர் விண்ணோர் சித்தர், அன்றியுல கீரேழி னுறையுமவர்க் கினியமங் களமா யாரும், வன்றிறல்சேர் வாகனத்தின் வரத்தக்க தென்று ரைத்து வருமி னென்றான். கஅ

வேறு.

இலகுபத் திரிகை தன்னி லெழுதிய துணர்ந்து செம்பொன்
உலகிலுள் ளவர்க ளண்ட கோளகை யுறைவோர் மற்றும்
பலபல வுலகில் வாழ்வோர் பருப்பதத் தினிலி ருப்போர்
அலகிலா மகிழ்ச்சி பொங்கி யெழுந்திட வெழுந்தா ரன்றே. கக

குணகடல் கிழக்கு வாய்மை குலவும்வா ளொளிபுத் தூர்மேற்
கிணைதரும் வடபாற் றென்பா லில்குபன் மணிகொ ழித்தே
உணவினித் தமுதாய் வாய்ந்த வுபயகா விரியி னுப்பண்
அணையுநான் கெல்லைசூழ்ந்தா ரதன்புற மருங்கு நின்றார். உ0

கஎ. ஆலோன்–சந்திரன், அதிதிநாள் – புனர்பூசநட்சத்திரம்.

எங்கணு மன்ன சாலை யெண்ணிட வரிதாய் வந்தோர்
தங்கிடற் குவகை பொங்கத் தனித்தனி சமைந்த சாலை
அங்கணன் றனக்கி யைந்தே யணிபெறும் யாக சாலை
மங்கள காம்வி ளங்க வளஞ்செழித் திருந்த மன்னே. உக

பஞ்சம சுத்தி மற்று முளவனு கூலம் பார்த்துக்
கஞ்சநாண் மலரோ னுள்ளக் களிவொடுங் கொடிதா னேற்றி
எஞ்சலி லுபசா ரங்க ளெழில்பெற வியற்றி யண்ணல்
செஞ்சா ணம்ப ணிந்து திருவிழா விளங்கச் செய்தான். உஉ

வலம்புரி முழங்க வேத மறையவ ரோத வான்மீ
திலங்குதுந் துமிக லிப்ப வேழிசைப் பாட லோங்க
நலங்கொண்மத் தளந்தொ னிப்ப நடம்பயின் மாத ரம்பொற்
சிலம்பொலி பரம்பத் தாளங் கணீலெனத் திகழ்ந்த தெங்கும். உங

வேறு.

சிங்கமுகக் கொடியாளிக் கொடியிடபக் கொடியன்னக் கொடி செஞ் சூட்டுப், பொங்குசின மிகுங்கோழிக் கொடியலகைக் கொடிமகரக் கொடியிப் பூமி, எங்கும்விளங் கிடுங்கீர்த்திக் கொடி யுடனே யெடுத்திலகப் பிடித்தார் விண்ணோர், பொங்கியிடு பூமாரி பொழிந்தனர்யா வருமகிழ்ச்சி பூத்தார் மாதோ, உச

மயில்விசிறி மயிற்பிச்சங் கண்ணடி சுருட்டிசா மரையீ யோட்டி, வெயிலுமிழ்பூச் சக்காவா ளக்குடைசூழ் வெண்கொற்றக் குடைமா ணிக்கங், குயில்பசும்பொற் குடைவெள்ளிக் குடைமுத் துக் குடைபவளக் குடைசெ ழிப்ப, அயிலிலகி யிடுமீட்டி படை வாண்மு னனந்தந்தீ வர்த்தி யார்ந்த. உரு

வேறு.

அல்லியங் கமல மேவு மயன்பரிந் தியற்று மேலாம்
நல்வா மளிக்கு மைந்தாந் திருவிழா வினின லஞ்சேர்
மெல்லிய லுமைபே ரன்பால் விதிமுறை பூசை செய்தாள்
செல்வவே ளண்ணல் பூசை செய்துவேல் வாங்கினுனல். உசா

அருமையாய் வீதி தன்னி லலங்கரித் திடச்செ ரூர்ந்து
வருவது தரிச னஞ்செய் மகிழ்ச்சியைப் பெற்று வாய்ந்த
பெருமைசேர் பருவந் தன்னிற் பெரும்பய னளிக்கு மையன்
திருவுளப் பாங்காய் வாய்ந்த தீர்த்தநீ ராடல் செய்தான். உஎ

அலகில்பல் புவனத் துள்ளோ ரனைவரும் விருப்பங் கூர
நலமிகு முகமன் கூறி நவமணி சொரிந்து செம்பொன்
இலகிய விமான நல்கி யேனைய பலவுஞ் செய்தே
மலரவ னன்னே ருள்ள மகிழ்ந்திட விடைகொ டுத்தான். உஅ

வந்திடு மனந்த கோடி முனிவர்விஞ் சையர்கள் வானோர்
இந்திர னிலகு மீரே ழுலகினி துறைவோர் யாருஞ்
சுந்தர வைத்திய நாதன் றுணையடிக் கமலம் போற்றிச்
சிந்தையின் மகிழ்ச்சி கூர்ந்து திருந்துதம் முலகஞ் சேர்ந்தார். உகூ

எண்ணிலா வுயிர்கட் கெல்லா மிலகுபே ரின்ப மெய்த
அண்ணலுக் கமைந்த தூய திருவிழாச் செய்தே யண்ணல்
தண்ணளி கூர்ந்து நல்கும் வரம்பல வேற்றுச் சார்ந்த
வெண்ணிறக் கொடிபின் போத மேவினன் பிரம லோகம். ௩0

வேறு.

பிரமன்வா னவர்கள்பே ரின்ப மெய்திட
வருதிரு விழாச்செய்நன் மகிமை கூறினேன்
அருள்பொழி குமரநா யகன ருச்சனை
புரிதரு சருக்கநற் பொற்பு ரைப்பன்மேல். ௩க

திருவிழாச்சருக்கமுற்றிற்று.

ஆ. திருவிருத்தம் அஅச.

---

௩0. வெண்ணிறக்கொடி — சரசுவதி; கொடி முன்போகற்பாலது பின் போகின்றதென மாறுபாடு விளக்கி நிற்றலுங் காண்க; பிரமாவுக்குக்கொடி அன்னமாகலின், அதுவும் வெண்ணிறக்கொடியேயாம்.

## சுகூ. குமரநாயகனருச்சனைசெய்சருக்கம்.

அய்யனளித் திடுமினிய வசரீரி வாக்கதனை யன்பு கூர்ந்து
துய்யசரகாண்டவனந்தனிலிருந்தான் சுருதியிசைமல்கச்சூழ்ந்து
செய்யசய சயவென்னுந் திருந்துபே ரிசைபல்கத் திகழ்பூ மாரி
வையகம்பொற் புறநல்க மன்னியயா ழொலியெழுந்து முழங்க மா
[தோ. க

போற்புமிகு குமரநா யகனிலகு குணதிசையைப் பொருந்து மேலாம், நற்புகழ்மங் களம்பெறுதற் குரியர்விழை குவரென்றே நயந்து நோக்கிப், பற்பலநன் முழவினொலி பரந்திடப்பே ரன்புநெகிழ் பரிவு கூர்ந்தே, அற்புதமெய் திடவிருந்தா னண்ணலும்வெண் கயிலையகன் றவணிற் சார்ந்தான். உ

பங்குனியின் முதற்பக்கம் பயின்றதிதி பதினொன்றிற் பரிதி கீழ்பால், செங்கதிர்பொற் புறவுதயஞ் செயுங்கால மிலகுசெவ் வாய்க் கிழமை சேரும், பொங்குபுகழ் பெறுதினத்திற் பொருந்தி யவா யிலியநாட் புனிதன் மேவ, எங்குமெழில் பெறத்தழைந்தே யிருக்குநிம்ப தருமூல மிலகிற் றன்றே. ங

இலகிடும்பச் சிமதிசைபார்த் தெதிர்முகம்பொற் புறவிறைவ னிருந்தான் மேன்மை, குலவியசித் தாமுதநற் குளிர்தீரப் பாங்க ரருள் கொழிக்கு மம்மை, பலன்விழைவோர்க் கினிநோக்குந் திசைவடபா லெனநினைந்தோ பரிவு கூர்ந்து, நலமிகுதென் றிசைநோக்கி நல்வரந்தந் திடநயந்தே யிருந்தா ளம்மா. ச

வருகுரவர் தமைக்கண்டு மகிழ்ந்துதிரு மஞ்சனமு மலரும் வாசம், பெருகுநிவே தனமும்வகை பெறவமைத்தே நிறைதருபே ரன்பாலையன், திருமுடிமே லபிடேகஞ் செய்துசெழு மலரணிந்து திகழ்நல் லன்னம், உருகுநறு நெய்யொழுகு முபகரண மளித்தொ ளிசெய் தூப மேந்தி. ரு

---

ங.முதற்பக்கம் — பூர்வபக்கம்.

அண்ணலருள் பொழிமுகமண் டலமிலகக் கொடுத்தமைந்த
தீப மேலோர், எண்ணிடுமீ ரெண்வகைநல் லுபசாரம் யாவையுஞ்
செய் திலகும் வாக்கால், பண்ணமைந்த துதிசெய்து பணிந்துபர
வசமாகிப் பண்ணும் பூசை, உண்மைதனை யுவந்தையன் விழைந்
தனநல் கினனுலக மகிழ்ச்சி யோங்க. ௬

அம்பிகையு முச்சிமோந் தன்புகூர்ந் தனள்பசுந்தே னவிழுந்
தூய, செம்பதும மலர்போலுந் திருவடியை வணங்கிமுரு கேசன்
சேவூர், எம்பெருமா னேயெனது நாத்துதிப்பக் கரமலர்கொய்
தெடுத்துச் சாத்த, நம்பிடுமன் பர்க்கருள்செய் தாளிணையென்
முடிவணங்க நாள்க டோறும். ௭

எனதுவிழி யருண்மேனி யினைத்தரிசித் திடநாசி யிலங்குங்
கொன்றை, வனமலரி னறுமணமின் புற்றிருப்பச் செவிநினது
புகழின் வாய்மை, அனவரதங் கேட்பவரு ளளித்திடவேண் டின
னென்று னைய னல்கித், தனதுதளிர்க் கரத்தினுற் றைவந்தான்
மகிழ்ச்சிமிகத் தழைந்தே பல்கால். ௮

எழில்கொழிக்குஞ் சரகாண்ட நிம்பவனத் தமர்ந்திடுநின் றனை
யெஞ் ஞான்றும், வழிபடுமன் பினரிட்ட காமியமும் பெறவரங்
கண் மகிழ்ந்து நல்கிப், பொழிமதுரத் தமிழ்ச்சங்கப் புலமைதெரி
யறிவுடைய புதல்வர்ப் பேறும், ஒழிவரிய பொன்னுலக முதன்
மேலாம் பதவிமுழு வதுநல் கென்றான். ௯

நின்னைமுனம் பணிந்துருகி நின்றுதுதி செய்துநின தருள்
பெற் றப்பால், என்னைவணங் கினர்தமக்கித் தலவாசஞ் செயும்பல
மற் றிலகு மேன்மை, பன்னவளர்ந் திடுபுரா ணங்கேட்கும் பலன்
பலிக்கும் பணியார் தங்கட், கன்னியமப் பலனீங்கி விலகியிடு
மிஃதுண்மை யாகு மென்றே. ௧௦

நீர்தாங்குஞ் செஞ்சடில நிமலனுரைத் தனன்பசுந்தே னிக
ழுங் கொன்றைத், தார்தாங்கு மன்னவன்ற னன்புறுசண் முகப்
பெருமான் றயங்கு செம்பொன், வார்தாங்கு களபமுலை வள்ளிதெ
ய்வ யானையிரு மருங்குஞ் சூழப், பார்தாங்கற் கரியவிமை யவர்
குழாம் பணியவீற் றிருந்தான் பாங்கால். ௧௧

வேறு.

அய்யனைக் குமரநா யகன ருச்சனை
செய்திடுஞ் சருக்கமான் மியச்சி றப்பினை
உய்தர வுரைத்தன னொளிருஞ் செஞ்சுடர்
வெய்யவன் பூசைசெய் சருக்க மேற்சொல்வேன். கஉ

குமரநாயகனருச்சனைசெய்சருக்கமுற்றிற்று.
ஆ௨ திருவிருத்தம் அகூஈ.

---

## நிஃ. ஆதித்தனருச்சனைசெய்சருக்கம்.

அலகில்சீர் மகிமை வாய்ந்த தக்கனுக் கதிதி யென்றே
இலகெழில் படைத்த கன்னி பிறந்தினி திருந்தாள் வாய்மை
குலவுகா சிபனுக் கன்னோன் கொடுத்தன னவள்வ யிற்றில்
பலகிர ணங்கள் சூழும் பரிதிவா னவனு தித்தான். க

அன்னவன் பாரி சாயா தேவிமற் றவட னக்குப்
பின்னொரு காலந் தோட்டாப் பெற்றிடும் பேதை தன்னை
நன்மண மனைய வெய்யோன் செய்தன னவடன் னாமம்
இந்நில மெங்குங் காந்தி மதியென வெடுத்து ரைப்பார். உ

மூருந்து றழ் மூரல் வாய்ந்த விருவரின் முதன்மை பெற்று
வருங்குல மடந்தை சாயா தேவிநன் மகிழ்ச்சி கூர்ந்தே
இருந்திடும் பதும பீடத் தினிலொரு ஞான்று தோட்டாத்
தருங்கருங் குழலி ருந்தாள் கண்டனள் சாயா தேவி. ௩

கோதித்துளம் பதைப்பக் கோபங் குதித்திடுங் கண்ண ளாகி
உதிக்குமா தவன்முன் னின்றே யுரைத்தன ளவளெ னக்கு
மதித்திடு சமான மாக வெண்ணியா னிருக்கும் வாய்ந்த
நிதிப்பது மாச னத்தி லிருந்தன ளென்ன லென்றே. ௪

மான்பொரு விழியாள் பின்னர் வனப்பிழந் தவள்கோ றேரி
கூன்குரு டெனினுந் தக்க குலமடந் தையர்வி சேடந்
தேன்படு மொழிய ளேனுஞ் சிறந்தில ளிழிகு லத்தள்
ஊன்பொதி யவளைத் தீண்டி னுறுகுல நரகில் வீழும். ரு

அன்னவள் புதல்வர் தம்மாற் சுவர்க்கமுங் கிடையா தாகும்
என்னுயிர் நாதா வன்னுட் கிழிந்ததண் டனைசெய் யாயேல்
மன்னுமென் னுயிர்வி டுப்ப னென்றனள் வாராய் மின்னே
பன்னிநீ யவளென் ருசி யாகவே பார்ப்ப னென்ருன். கூ

விதிநெறி விசாரி யாது தண்டனை செய்தால் வேடன்
வதிதரு குலத்தில் வந்து பிறப்பன்வாழ் மனைவிக் கென்றும்
பதிகடிந் திடுதல் வேறு படுத்திருந் திடுத ருசர்க்
கதிகதண் டனைய டித்தன் முண்டனந் தாசிக் காமால். எ

நீசபத் தினிக்குச் செய்யுந் தண்டனை தள்ளி நீக்கல்
வாசவார் குழலா யன்னு டனைமனத் தினினி னைந்து
பேசுவ தில்லை யென்று பெருகுதன் கிரணந் தம்மால்
வீசினன் வெதும்பித் தோட்டா வின்முனம் விழுந்து சொன்னுள்.

கருகிய மேனி கண்டு கதிரவற் கெதிரே நின்று
மருகவென் மகண்மேற் காதல் விடுத்திட வந்த வாறு
தெரிதர வுரையா யென்ருன் சீறிநீ யிழிந்த சாதிக்
குரியவ னின்னே டென்ன வுரைப்பதென் றுயிர்த்து ரைத்தான்.

இயங்கிய கோப நீங்கி யிழிந்தயா னிலகி வாய்ந்த
வுயர்ந்தவர் தம்மைச் சேரி னுழிந்திடுங் களங்க மென்று
சயம்பெறச் சொல்வ தோராய் போலுமென் றனன்ற டங்கண்
வயங்கிழை யுனது மாதை வருந்தியான் கேட்ட துண்டோ. க0

எழுந்திடு முயரம் பெண்ணை மூன்றதின் மேலி ருந்தும்
உழுந்துருள் பொழுதி னின்றன் கைவிர லாழி யூறுஞ்
செம்புன னிழலிற் பார்த்துத் திகழ்தரு கணையா லெய்ய
விழுந்தவவ் வாழி கண்டு கொடுத்தனை வியந்து நின்றே. கக

ஆதலின் விலையாய்க் கொண்ட பொருளென வாயி னுனின்
பேதையென் றிகழ்ச்சி பேசி யிடுமது பொருது கண்ணின்
மீதழற் பொறிகள் சிந்த வெகுண்டுதன் சானை வாயிற்
கோதுறக் கடைந்தான் மேனி யெழிலெலாங் குலைந்த தம்மா. கஉ

---

கூ. தாசி – அடியவள். க0. இயங்குதல் – தங்குதல், உண்டாதல். கக. பெண்ணை–பனை.

என்செய்வான் பரிதி நின்பெண் ணெனக்கதி மோக மாகும்
அன்புவைத் திடுவ னென்று னவ்வுரை செவியிற் கேட்டு
முன்புநான் முகன ளித்த முரண்மிகு சாணைச் சுற்றைத்
தன்கையா னிறுத்தி விட்டான் றரிக்கில னேந்து மீண்டான். கரு

வருந்திய துயரங் காந்தி மதியிரு கண்ணு னோக்கி
அருந்தவ மியற்றும் வானோர் குரவனை யடுத்து நின்று
முருந்துறழ் முத்த மூரற் குமுதவாய் முகமு லர்ந்து
திருந்துபைங் கிளியின் வாய்ந்த திகழ்மொழி யொன்று ரைத்தாள்.

முன்னரென்பிதாவுக்கென்னையிகழ்ந்ததுமுழுதுஞ்சொன்னேன்
அன்னவன் கூர்மை வாய்ந்த சாணையி னகத்தி லுய்த்து
மன்னிய வொளிம ழுங்கக் கடைந்தனன் வருத்தந் தீர
உன்னரு ளன்றி வேறொன் றுளதுகொ லிரவிக் கையா. கரு

என்னுநன் மொழிகேட் டாசா னிலகிய வைத்திய நாதந்
தன்னினீங் கிடுமென் றுன்றன் பூரியோ டெழுந்து தாதார்
பொன்னிதழ்க் கடுக்கை வேய்ந்த வைத்திய நாதன் பொற்றாள்
பன்முறை பணிந்து தீர்த்தம் படிந்தருச் சனைபு ரிந்தான். கசு

பொருந்திய கன்னி மாதம் புகழ்மிகு மாக மாதம்
வருந்திநாண் மூன்று செய்த பூசையின் வாய்மை தன்னைத்
திருந்துபே ரருள்ப டைத்த தேவநா யகன்ம கிழ்ந்தே
அருந்திற லெழிலு நல்கி யுரியநல் வரமு மீந்தான். கஎ

இன்னருத் துளிப்ப வூதி விளரிவண் டெழுந்து பாடும்
நன்மலர்க் குழலாள் காந்தி மதியுட னுள்க டோறு
மன்னுபே ரின்ப நல்கும் வைத்திய நாதன் பாதந்
தன்னையுன் பொடுப ணிந்து தனதுல கதனைச் சார்ந்தான். கஅ

---

கஎ. புரட்டாசி மாதத்தில் மூன்று நாளும், மாசி மாதத்தில் மூன்று நாளும் ஆக ஆறுநாள் செய்த பூசையென்க. கஅ. வண்டு ஊதி எழுந்து விளரி பாடும் என்க; விளரி — ஓர்பண்,

மனமிறு மாந்து தோட்டா மகளொரு ஞான்று வாய்ந்த
தினகரன் பாரி சாயா தேவியா சனத்தி ருப்பத்
தனதுளங் கொதித்தே யன்னு டனித்திருந் ததுவுந் தீர்த்து
வினவிநல் லுரிமை செய்து விளங்கினன் விண்ணின் மீதில். கக

வேறு.

கறைவிளங் கியமணி மிடற்றுக் கண்ணுதல்
இறைவனுக் கிரவிநாண் மலரொ டேத்துநல்
துறைவழா தருச்சனை செய்தல் சொல்லினன்
மறையருச் சனைசெய்த வண்மை சொல்வன்மேல். உ௦

ஆதித்தனருச்சனைசெய்சருக்கமுற்றிற்று.

ஆ. திருவிருத்தம். ௬௧௬.

---

## ருக. வேதமருச்சனைசெய்சருக்கம்.

இலகு சோமக னென்றுரை பெற்றிடும்
அலகி லாற்ற லுடையவ னுய்ந்தபொன்
உலகில் வாழிமை யோர்துய ருற்றிடத்
திலக நான்மறை சேர வெடுத்தனன். க

வஞ்ச னைசெய் தெடுத்தபின் மாகடல்
நஞ்சு போலொளிர் சேற்றி னடுவினில்
அஞ்சி யேக்கமு றப்புதைத் தானயர்ந்
தெஞ்சி வானவர் யாவும் விடுத்தனர். உ

அரவ ணிந்திடு மையனை யன்னவர்
பரவித் தோத்திரஞ் செய்தனர் பைந்துழாய்
விரவு மார்பன் றனைவியன் கங்கைதன்
சிரமு ணிந்தவன் சிந்தனை செய்தனன். ௩

வையமுண்டிடு மாயவன் பாய்விடை
ஐயன் றன்னை நினைந்த துணர்ந்தடல்
செய்யுஞ் செங்கண் மகரம தாகியே
வெய்ய சோமகன் வீழப் பொருதனன். ௪

---

க. சோமகன் சோமுகன் எனவுங் கூறப்படுவான்.

குருதி சோர விழுந்தபின் கூறருஞ்
சுருதி தேடி யெடுத்துச் சுரந்தருள்
பெருகு காதலிற் பேதுற னீக்கியே
திருவி ளுயகன் செவ்விபெ றச்செய்தான். ரு

மறைக ளுன்கும் வயித்திய நாதன்றன்
நறைம லர்ப்பதம் போற்றி நவிலுநன்
முறைமை யாக மூதிர்ந்திடு மன்பினுல்
நிறையும் பூசைசெய் நேசம தென்சொல்வேன். சு

ஏல வாச வெழிற்றிரு மஞ்சனங்
காலந் தோறுங் கனிந்தபி டேகஞ்செய்
தால முண்டிடு மையனுக் கற்புதச்
சாலி யன்ன நிவேதனந் தானல்கி. எ

மற்று முள்ள வகையுப சாரமும்
நற்றி றம்பெறச் செய்தெழி னல்வரம்
பெற்ற மூர்ந்த பிரான்றரப் பெற்றதால்
வெற்றி வேத புரியென்பர் மேன்மையோர். அ

வேறு.

காதனை நறுமல ரான யந்துநால்
வேதம்வந் தருச்சனை புரியு மேன்மைசேர்
ஓதருஞ் சருக்கமீண் டெடுத்து ரைத்தனன்
பூதலம் வருகுசன் புகழ்ச்சிமேற் சொல்வேன். கூ

வேதமருச்சனைசெய்சருக்கமுற்றிற்று.

ஆகூ திருவிருத்தம் கூஉரு.

---

## ருஉ. அங்காரகனருச்சனைசெய்சருக்கம்.

போற்புறுந் தவஞ்சூழ் சூதமா முனிவன் புகழ்மிகு நைமிசா
ரணிய, அற்புத முனிவ ரகமகிழ் கூர வமையுமங் காரகன் மகிமை,
நற்றிறம் பெறவே யுரைத்தன்மே யினன்மே னவிலருங் காதன்மீ
தூரச், சொற்சுவை யினிய பொருட்சுவை யுணர்ந்தோர் துதித்த
னர் குவித்தகை யெடுத்தே. க

தயங்குபூ ருவத்தி னன்னெறி முதிர்ச்சி தருமிரா தந்திர மென்னும், நயம்பெறு கற்பந் தனிற்பனி வரைசூழ் நலன்மிகு தாழ்வரை யதனிற், பயன்றரு வுமைதன் னுடன்மகிழ் கூர்ந்து பரிவுறு திருவிளை யாடல், வியன்பெறச் செய்யும் விழைவினனாகி விமலன்வெய் யோனைநோக் கினனே. உ

அங்கியங் கடவு ணடுவினின் றரிய தவம்புரிந் திடுமவர் போன்று, வெங்கதி ரவன்றன் வெயில்கொதித் திடுமவ் வேலையின் விழித்துமே னோக்கி, எங்கணு யகன்வீற் றிருந்தனன் முகத் தினெழுந்துவேர்த் திடுந்துளி யொன்று, பொங்குமாழ் கடலின் வடவைவரன் கனல்போற் புவிதனில் விழுந்தது மாதோ. ௩

உத்தம மான நிலமகள் வாய்ந்த வுபநிட வாக்கிய மதனால், மத்தநாண் மலர்சேர் வள்ளலைத் துதித்தென் வருத்தம தறியவே றுளரோ, அத்தனே தாங்கற் கரியதாய்த் தாபாக் கினியதி குரூரமா யடர்ந்த, தெத்துணை கொண்டு தீருவே னிரட்சி யிரட்சியென் றிரங்கினின் றனளே. ச

இவ்வகை புவிமா துரைத்தலு மினிநீ யிரங்குத றவிரெனப் புகன்றான், நவ்விசே ரண்ண னவிலுமப் பொழுதி னல்லெழில் சிவந்தவண் ணமதாய்ச், செவ்விதாய்க் கருமை தீர்ந்திடு குன்றி நிறமுடைத் திகழ்கதி ரவன்போற், கவ்வைநீர்க் கடல்சூழ் புவியினின் றெழுந்து கறைமிடற் றண்ணலைப் பணிந்தான். ரு

மாந்தளிர் மேனி யையனன் னவனை மகிழ்ந்துவாய்ந் திருந்திடு குரூரஞ், சாந்தநீ செய்து புவிக்கனு கூலந் தனைப்புரி தயங்குமங் களமுண், டாந்தகு முபய காவிரி யதனுக் கமைந்திடு நாப்பண் வாரர் கடலிற், கேய்ந்தமேற் றிசையின் வயித்திய நாத மெனுந்தல மியல்பெற விளங்கும். சா

பூசுரர் முனையி னித்தியாக் கினிசெய் புகைநறு மணங்கமழ்ந் திலகுந், தேசுநல் கிடுமப் புண்ணிய தலத்தைத் தெரிசனஞ் செய்தவக் கணத்தின், நேசமுற் றுளத்தி னினைந்தன யாவு நிலைமையா யளிக்குமென் றுரைத்தான், பேசரு மகிழ்ச்சி கூர்ந்து தென்றிசையைப் பெட்புமீ தூரநோக் கினனே. எ

எண்ணரி தாகி யிருந்திடுந் தலங்கள் யாவையு மினிதுற வணங்கிப், புண்ணிய கங்கை நதியினீ ராடிப் புதுமல ரால்விசு வேசன், வண்மைசேர் பாதாம் புயந்தனி லிலகு மகிழ்ச்சிகூர்ந் தருச்சனை புரிந்து, தண்ணளி முரல்பூந் தருவளர் வயித்திய நாதமா நகர்தனைச் சார்ந்தான். அ

தீய்ந்தரு வினைநோ யொழிந்திட விளங்கித் திகழ்ந்தசித் தாமு ததீர்த்தந், தோய்ந்துநன் னிறப்பட் டுடைதரித் திருந்து தூயநீ றணிந்திழை யினிதா, வாய்ந்தமுப் புரிநூ லணிந்திடு மார்பின் மன்னுமுத் தரீயநின் றசைய, ஆய்ந்துசே ருருத்தி ராக்கநன் மாலை யற்புத வொளிசெயப் புனைந்தான். கூ

கனிவுட னெழுந்து சிந்தூர முகக்கற் பகவிநா யகன்றனை வணங்கிப், பனிமதி யணிந்த வயித்திய நாதன் பதாம்புயங் கண்டு கண் களித்தே, புனிதமஞ் சனம்பஞ் சாமுதம் பஞ்ச கௌவியம் பூங்கனி யிளநீர், இனியநல் லபிடே கந்தனக் கமைந்த திரவியம் யாவையு மெடுத்தே. க0

அளப்பருங் காத லுடனபி டேகஞ் செய்துநல் லாடையா பரணம், வளத்தொடு சாத்தி நிவேதன மளித்து மந்திர விதிமுறை வழாது, விளக்கிய தூப தீபமுங் கொடுத்து மேதகு சகத்திர நாமம், இளக்கமுற் றிடுகூ விளங்கரத்தேந் தியினிதருச்சனைபுரிந்தனனே.

திவ்விய மான வன்னநெய் யொழுகித் திகழ்ந்திடு மபூபநற் கனிமற், றிவ்வகை யனேக விதநிவே தனமற் றினிமைபெற் றிட நித மளித்து, நவ்விசே ரண்ண றனைப்பணிந் தெழுந்து நலம்பெறு துதிபல செய்தான், கவ்வைசூழ் கடலின் விடநுக ரமலன் கண் ணின்முன் னெழுந்தரு ளினனே. கஉ

பூமக ளினிய புதல்வநின் றனக்குப் பொற்புற வேண்டிய வரங்கள், ஏமமெய் திடயாந் தருகுவங் கேளென் றிசைத்தன னண் ணலே நினது, தாமரை மலர்பொற் றுளிணை நினையுஞ் சிந்தைதந் தருள்புவி தனின்மேல், ஆமணி பெறுநற் கிரகநின் றதிக மாகுமா திக்கநல் கென்றான். கங

---

கஉ. அபூபம் — அப்பவர்க்கம். கங. ஆதிக்கம் — மேன்மை.

அன்னது மன்றி வேண்டின னினைய தலந்தனின் மாதமீ ராறின், மன்னிய செவ்வாய்க் கிழமையி லினிய மகேசுர பூசை பண் ணினர்தாம், நன்மைசேர் சகல பாக்கியம் படைத்து நலம் பெறு புதல்வனைப் பெற்றுப், பின்னர்வெண் கயிலை சேர்ந்துபே ரின்பம் பெறும்வர நல்குநல் கெனவே. கச

வேறு.

அங்கா ரகன்வேண் டியவரங்க ளனைத்து மளித்தே பெருங் கருணை, எங்கோன் விளங்கி யிருந்தனன்மற் றெழில்சேர் சித்தர் முதவடபாற், செங்கோ கனக முகமலர்தென் றிசையை நோக்கி யிடவுறைந்து கொங்கார் மலரா னிதம்பூசை புரிந்து மகிழ்ச்சி கூர்ந்தனனே. கரு

இன்னோன் புகழ்சேர் மான்மியமற் றின்ன மொன்று பகர்வ னெனப், பன்னூன் முறைகண் முழுதுணர்ந்து பதினெண் புரா ணங் கரைகண்ட, தன்னே ரரிய சூதமுனி வரன்சூழ் நைமி சார ணிய, நன்மா முனிவர் செவிக்கினிய வமுத மொழியா னவில் கின்றான். கசு

வேறு.

இலகிய சுவே தவிந் தெழுந்த தெம்பிரான்
மலர்முகந் தனிலொரு கற்பம் வண்மைசேர்
நிலமிசை விழுந்திட நிமலன் செய்தனன்
அலர்குச னுதிரமே னியினு தித்தனன். கஎ

நடுங்கினர் வானவர் நாதன் பார்த்தவன்
கொடுந்தழ லுருவினி லுதிரங் கூருவ
தொடுங்கிடச் செய்குவ னென்று ரைத்துமேல்
அடுந்திறற் குசன்கருத் தமையக் கூறினான். கஅ

மங்கள வாரநின் மகிமை யிவ்வுல
கெங்குளோர் களுந்துதித் தேத்த நல்கினேன்
செங்கைகூப் பினர்க்குநின் குரூரந் தீர்த்துநீ
பொங்கிய புகழொடு பொலிக வென்றனன். ககூ

---

கஎ. சுவேதபிந்து — வேர்வைத்துளி. குசன் — செவ்வாய்.

## வேறு.

எண்ணருந் துயரங் கூர விருந்தசெங் குட்டந் தன்னால்
கண்ணினா லொருவர் பாரார் கடல்விட முண்ட கண்ட
அண்ணலே நின்னையன்றி யடியனேற் கரணு முண்டோ
நண்ணுமிக் குட்டந் தீர நல்வழி யருள்செய் யென்றான். ௨௦

மங்கள வுருவ மான வயித்திய நாதஞ் சேர்ந்து
பங்குனிச் செவ்வாய் தன்னிற் பரந்திடு மமுத மென்னும்
பொங்குபூம் புனலின் மூழ்கிப் புராதன வயித்திய நாதன்
பங்கயச் சரணங் கண்டு பணிந்திடிற் றீரு மென்றான். ௨௧

ஆறணி யண்ண லோது மனைத்தையு முணர்ந்து மேலாம்
பேறரு டலத்தைச் சார்ந்து பிறங்கிடு மகிமை கண்டு
கூறரும் வீர பத்திரக் குரிசிலை வணங்கி மற்றும்
வேறுவே றிறைஞ்சிச் சித்தா முதப்புனல் விதியாற் றோய்ந்தான்.

வண்மைசேர் மாசி மாதப் பிறப்பினிற் றீர்த்த மூழ்கித்
திண்ணிய படிமே லேறும் பொழுதினிற் குட்டந் தீர்ந்தே
எண்ணரும் பசும்பொன் மேனி யெய்தினான் குசன்பின் வாய்ந்த
புண்ணியக் கவச மொன்று புகன்றுய ரீசா னத்தின். ௨௩

ஓடையொன் றியற்றித் தூய வொளிசெய்செங் கழுநீர் வைத்துக்
கோடைஞான் றினுநீங் காது குளிர்மணங் கமழும் பூவால்
ஆடைவெம் புலித்தோல் பூண்ட வண்ணலுக் கேற்கும் வண்ணம்
நாடியே சாத்தி நின்று நலம்பெறத் துதிக்க லுற்றான். ௨௪

கமலநான் முகனுங் காணாக் கண்ணுதற் பிரானே போற்றி
அமலனே போற்றி யெங்க ளையனே போற்றி நீங்காத்
தமலம தொழிப்போர்க் கென்றுந் தயைபுரி பரனே போற்றி
துமலதீர்த் துயிர்க்குத் தோன்றாத் துணையதா யிருந்தாய் போற்றி

— மலமது அது பகுதிப்பொருள் விகுதி. ௨௫. துமலல் — தும் அல்லல்; தும் — துகள்; அதுகுற்றம்; அதனைச் "சொல்லால் வரும் குற்றம்" என்னும் பட்டினத்தடிகள் பாவாலறிக.

சுருதிதே டரிய நாதர் தூயனே போற்றி யென்றே
வருதுதி பலவுஞ் செய்து வள்ளல்பூங் கோயில் வாய்ந்த
நிருதிதென் றிசையிற் சித்தா முதநிறை வடபா லீங்கர்
தருகுதென் முகமதாக வமர்ந்தினி திருந்தான் மன்னே. உசு

வேறு.

திறஞ்சே ரினிய செபந்தவஞ்செய் திலதர்ப் பணநெய் யாகுதி செந், நிறஞ்சே ரங்கா ரகன்றன்னை நினைந்தே யளியா தவர்க் கம்மா, இறந்தே யிடுமைப் பலனதனு லினைய தலத்தி னியல்பெறு நல், அறஞ்சேர்ந் திருந்தோர் மற்றெவர்வந் தவர்க ளெவர்க்கு மஃதாமால். உஎ

அண்ணல் வரம்பெற் றினிதுறையு மங்கா ரகனுக் கிப்பல னென், றெண்ணி யளிப்போர்க் கெண்ணருநல் லெழின்மங் களம் வந் தெய்தியிடு, நண்ணும் புகழ்பொன் னவமணியுங் கொழிக்கு மன்னே னன்மகிழ்ச்சி, பண்ணு மதனு லவர்நினைவின் படியே யனைத்தும் பலித்திடுமே. உஅ

வேறு.

அற்புத மிகவங் காரகன் பூசை செய்திடுஞ் சருக்கம்யா னறிந்த, நற்பெரு மகிமை யுரைத்தன னிதன்மே னுதனைக் கலைமதி விதியால், பற்பல மலர்கொண் டருச்சனை புரிந்து பணிந்து வாய்ந் திடுதுதி புகன்ற, பொற்புறு சருக்க மான்மிய மதனைப் புவிக்கிதம் பெறப்புக லுவனே. உகூ

அங்காரகனருச்சனைசெய்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் கூ௦சு.

---

## ௩௩. சந்திரனருச்சனைசெய்சருக்கம்.

எண்ணிலா மகிமை பெற்ற தக்கனுக் கிருபத் தேழு
பெண்ணெழில் கொழிக்க வந்து பிறந்தன ரனையர் தம்மை
விண்ணின்மீ தியங்குந் தூய வெண்மதிக் களித்தா னன்னோன்
கண்மணி யெனவி ளங்கு ரோகிணிக் கன்பு செய்தான். க

ஏனையர் துயரங் கூர்ந்தே யிருந்தனர் சென்றாட் பின்னர்
வானின்வெண் ணிலவு காலு மதியினை நீங்கி வந்து
தேனினு மினிமை வாய்ந்து திகழ்ந்திடு சொல்லாற் றந்தை
தானிதம் பெறவே கேட்பச் சாலவு முரைத்தா ரந்தோ. ௨

பொன்னிளங் கொம்பு போன்ற புதல்வியர் நடந்த யாவும்
முன்னர்நின் றுரைத்த போது முதிர்ந்திடு சினத்த னாகி
வெந்நெருப் பெனவே கண்கள் சிவந்திட விண்ணின் வாழும்
அன்னவன் றனைச்ச பித்தா னடுத்தது கயநோய் வந்தே. ௩

குமுதவாய் விள்ள வெள்ளை நிலவுகொப் பளிக்குந் தூய
அமுதமே னியிற்க ளங்க மடுத்தது கண்டு பார்மேல்
நமதுநோய் நலிவு தீரு மெத்தலத் தென்று னைந்தே
தமதுநே ரரிதாய் மன்னும் வயித்திய நாதஞ் சார்ந்தான். ௪

எய்தரு மகிமை பெற்றே யிருந்திடுந் தீர்த்த மூழ்கி
வைதிக விதிவ ழாது சந்தியுந் தனஞ்செய் தாய்ந்த
துய்யநீ றணிந்து தூய கண்டிகை தரித்துத் துத்திப்
பையரா வணிந்த நாதன் பதமலர் பணிந்து போற்றி. ௫

வேறு.

பூசைக் கமைந்த மஞ்சனமும் புதுமா மலரு நறுஞ்சாந்துந்
தேசிற் பொலிந்த தீபமுஞ்செஞ் சாலி யினிய திருவமுதும்
ஈசற் கேய்ந்த பரிசினு லமைத்தே யிளகி யுருகுமன
நேசத் துடனே பூசைவிதி நியம மாக நிதஞ்செய்தான். ௬

அய்ய னவன்முன் னெழுந்தருளி யடுத்த சாபந் தனைநீங்கச்
செய்து திகழ்பூ ருவபக்கந் தன்னிற்கலைகள் செழித்தோங்க
எய்து மபர பக்கமதி லிறங்கப் பருவந் தனிலிலகித்
துய்ய கலையீ ரெட்டுநிறைந் துலகு துதிசெய் திடவளித்தான். ௭

பெண்ணிற் கமைந்தகற்பினராய்ப்பெருகுமெழில்வாய்ந்திடுமினிய
ஒண்ணித் திலநன் னகைமாத ரிருபத் தேழு பேருமவம்
தண்ணப் புனிமா மதிவாய்ந்த நலஞ்சேர் போகந் தனைநுகரக்
கண்ணெற் றியினிற்படைத்தமணிகண்டனருள்செய்தனனம்மா. ௮

மருந்தாம் வயித்திய நாதனுமாம் வள்ளல் கலைமா மதிக்கருள்கூர்ந்
திருந்தே வாங்ல் இனன்வலன்செய் தினிய துதிபற் பலசெய்து
திருந்து முலகு தனைச்சேர்ந்து செந்தா மரைவாண் முகமலர்ந்து
பொருந்து மனைவியனைவர்களும்புகழ்சேருரிமைபெறச்செய்தான்.

வேறு.

குளிர்தரு மமுத கிரணமா மதியின் கொள்கைமான் மியந்தனை யெடுத்துத், தெளிதர வுரைசெய் தனனிதன் மேற்செங் கதிரவன் மண்டலத் தினிற்போந், தொளிபெற வருவ னென்றெழுந் துயர்ந்து பரந்துவீழ் சடாயுவி னுறுசீர், அளிதரு மன்பர் முகமலர்ந் திலகு மகமகிழ் கூர்தரப் பகர்வேன். கo

சந்திரனருச்சனைசெய்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்—கூகூச.

## ரு௪. சடாயுவருச்சனைசெய்சருக்கம்.

திருந்திய நான்முக னளித்த செல்விசேர்
பெருந்தவ நாரத முனிவன் பேசரும்
அரும்பகை கடிந்திடு மம்ப ரீடன்வந்
திருந்தபே ரவைமகிழ் கூர வெய்தினன். க

பொன்முடி தரித்தர சுரிமை பூண்டிடும்
மன்னவ னருக்கியங் கொடுத்து வந்தனை
நன்னெறி பெற்றிடச் செய்துன் னல்வர
வென்னவெங் குலஞ்செயுந் தவமென் றேத்தினன். உ

இகல்புரி யைம்புலப் பகைக டிந்திடும்
மகதியாழ் முனிவரன் மன்னன் வாய்மையும்
புகன்மொழிப் புரிவையும் பூரித் தன்னவன்
அகமகிழ் தரப்பல வாசி கூறினன். ந

தரணியோர் குடைநிழ றனிற்பு ரந்திடும்
புரவல னிகபரப் பேறு பொற்புற
நரர்சுரர் தமக்கெலா நல்கு நற்றலந்
திரமுற வையனே யருள்செய் யென்றனன். ச

பூவிரித் தோங்குபூம் பொழின்மி குந்திடுங்
காவிரி வடகரை தனிற்கண் டோர்கள்கண்
மேவரி தாம்மகிழ் கூர்வர் விண்ணவர்
யாவரும் புண்ணியத் தலமென் றேத்துவார். ரு

சித்தநன் மகிழ்பெறச் செய்யுஞ் செவ்விசேர்
முத்திமா நகர்தனிற் சடாயு மூக்கிளைக்
கொத்துவாய்ந் திருந்தகூ விளமெ டுத்துளம்
பத்திகூர் சிவார்ச்சனை பண்ணும் வாய்மையால். கூ

தாரணி சடாயுமா நகர மென்றுதான்
பேரணி பெறவுரைத் திடுமெ னப்பெரு
காரண முணர்ந்தநா ரதவ ருந்தவன்
சீரணி வேந்தனுக் களித்தல் செய்தனன். எ

மன்னவ னெழின்முனி வானை நோக்கியித்
தன்மைசேர் சடாயுவின் றந்தை யாவன்மேல்
நன்மையாங் குலவரன் முறைமை யாதெனப்
பன்னரு நன்மொழி பரிந்து கூறினன். அ

தக்கனற் புதல்வியாம் வினதை தன்னையெண்
திக்கெலாம் புகழ்படைத் திலகு காசிபன்
மிக்கநன் மனைவியாய்க் கொடுத்த னன்மிகு
பக்குவ வணங்கரு ணனைப்ப யந்தனள். கூ

பின்னர்நற் கருடனைப் பெற்றெ டுத்தனள்
முன்னவன் மூதறி வுள்ள சேணியை
நன்மணம் புணர்ந்தன னலமி குந்திடும்
அன்னவ ளிருபுதல் வனைய ளித்தனள். க0

தகுதிவாய்ந் திலகுசம் பாதி யென்பவன்
மிகுதிறம் படைத்துமுன் பிறந்த மேன்மையான்
புகழ்பெறு சடாயுவென் றுலகம் போற்றிடும்
மகிமையா னவன்றனக் கிளைய வள்ளலே. கக

சூழ்தரு மிவர்சொலற் கரிய நண்புடன்
வாழ்தரு நாளினிற் கயிலை மால்வரைத்
தாழ்தடஞ் சாரனின் றேறி னார்தடுத்
தாழ்கட லெனக்கிளர்ந் தார்க ளங்குளார். கஉ

பையவெய் யவர்தமைப் பார்த்தி யாங்களிப்
பொய்மயக் குறுபிறப் பொழிக்க வெண்ணினேம்
தெய்வநா யகன்றரி சனஞ்செய் வோர்களைச்
சைவரா யிருந்துநீர் தடுத்த னீதியோ. கங

என்றபின் வாசலி னிருந்த யாவரும்
வன்றிறற் கழுகினுக் கிலகு ஞானம்வந்
தொன்றியே புண்ணிய பாவ வுண்மையை
நன்றுணர்ந் தறியுமோ வெனந கைத்தனர் கச

கன்மம்விட் டிருந்திடுங் கழுகி னுக்கரன்
நன்மைசேர் ஞானநல் குவதுண் டாங்கொலோ
என்னபுன் மதியென விகழ்ச்சி கூறியே
அன்னவர் போவெனப் புகன்ற கற்றினர். கரு

பத்திகூர் தரவவர் தமைப்ப ணிந்துநன்
முத்திசேர் நெறிதனை மொழியு மென்றிரந்
தெத்தனை யோதுதி செய்த தெண்ணரி
தத்துணை நெறியுணர்ந் தளித்தன் மேயினர். கசு

வேறு.

புகழ்பெற நிதஞ்செய் கன்மநன் கியற்றிப் புகலுதற் கரும்பிரவஞ்சந், திகழ்சிவாக் கினையா னடப்பதென் றெண்ணு மவன்சிவ ஞானியா குவன்மேல், நிகழ்தரு மவன்ற னுளத்தினன் னெறிசேர் நிட்டைநீ விவேகமில் பறவை, இகழ்தாக் கடவ தலதுனை யினையோ னுடன்புக விடேமென விசைத்தார். கள

அய்யனுக் கினையைச் செலுத்திடு மவர்க ளறிந்திட வமர்ந்து சம் பாதி, நொய்யதாம் பட்சி சாதியா னுவலும் வேதநன் னெறி தனைக் கேண்மின், வைதிக மறையோர் தமக்குமெய்ஞ் ஞானம் வரும்வழி சிவார்ச்சனைப் பலனுஞ், செய்யவே லரசர்க் கந்தணர் தமைச்சே விப்பது ஞானசா தகமாம். ௧௮

ஒழிந்திடும் வணிகர்க் கந்தண ரரச ரொளிர்மலர்ப் பாதசே வையினுல், மொழிந்திட வரிய ஞானசா தகமா மூறைமையி னுதித்தசூத் திரர்க்குச், செழுந்திரு ஞான சாதக மூவர் சேவையி னுல்வரு முனிவர்க், கெழுந்துசெய் யரிய தவத்தினுன் ஞான மெய்திடுஞ் சாதக மாகும். ௧௯

நலன்கொள்கந் தருவர்க் கின்னிசைப் பாடல் ஞானசா தகம தாஞ் சித்தர்க், கிலங்குநன் மவுனங் கின்னரர்க் கெழில்வாய்ந் திருந்தபூ மாலைகட் டுதனற், பலன்பெறும் வித்தியா தரர்க்குவாத் தியங்கள் பகுத்திசை பெறவடித் திடுதல், நிலம்புக ழினைய வேவி வர்க் கென்று நிலைமையாம் ஞானசா தகமாம். ௨௦

பொருந்திடும் பட்சி சாதிமே லெழுந்து பொற்புறச் சாய்ந்து தாழ்ந் துயர்ந்து, திருந்தும்விண் மீதில் வட்டமிட் டேறிச் செல் வது தெய்வநா யகற்கும், வரும்பெரு மகிழ்ச்சி கூர்தரச் செய்யு மாதலான் ஞானசா தகமாம், அரும்புக ழிலகு மவரவர் சாதி தருமமே யனைவரும் விழைவார். ௨௧

என்றுநின் றுரைப்ப விருந்திடு மவர்க ளெழுந்துநீ பறந்திடும் வேகம், நன்றுணர்ந் தறியக் காட்டிய பின்னர் நாதனைத் தரிசனஞ் செய்ய, வென்றிசூழ் விடையாந் தருகுவ மென்று மேலுமொன் றுரைத்தனர் பானு, வன்றிற விலகு மண்டலம் புகுந்து வருமள வெனவகுத் தம்மா. ௨௨

வியந்துநீ யெழுந்தே யிளையவ னுடனே செல்லுழி வலி மையை விட்டுப், பயந்துவீழ்ந் திடின்மேற் செய்வதென் னென் றூர் பரிந்துசெய் விரதம்விட் டிடுவோன், நயந்தரு புராண நூட ணஞ் செய்வோ னண்ணிடு நரகம்யான் புகநன், றுயர்ந்திடும் பாவ, மெய்திடக் கடவ னென்றுறு தியையுரைத் தனனே. ௨௩

தரித்திடுஞ் சபதங் கூறியே தரையைத் தன்னெழின் மூக்கி னூற் கீறி, விரித்துவன் சிறகை யுளர்ந்திரு வருஞ்சூழ் வேகமாய்ப் பறந்தனர் கதிரோன், எரித்திடுங் கிரணந் தாங்கரி தாகி யிளையவ னிலகிய கந்த, புரிச்சர காண்ட வனத்தின்மந் திரப்பொற் குண்ட மேற் புகழ்பெற விழுந்தான். உச

வன்றிறன் மகிமை சிற்சில வாகத் தாழ்ந்திட வருந்திமே லெழுந்தே, ஒன்றரை முகூர்த்தந் தன்னிலா காய வெளிகடந் தோடிமேற் பானு, தன்றழ லொழுகு மண்டல மணித்தாய் நெருங் குமவ் வளவையிற் றளைந்து, வென்றிசூழ் சிறகு வெந்துசம் பாதி விந்திய வரைதனில் விழுந்தான். உரு

## வேறு.

மணிமந் திரவவு டதகுண் ட மு மி ளை யவள்வண் புகழமு தமதாக, வணிதண் புனலொளிர் தடமும் பிறையர வணியும்பர னையு மிமவான்றன், கணிதம் பெறுதவ மதின்வந் திடுமுமை தனை யும் வளர்முரு கனையுஞ்சூர், தணியுந் தெளிவுறு பொழுதின் னறி குத றருமின் பமுமிக வுளதாக. உசு

## வேறு.

கண்டபின் குண்டந் தனிற்றின மூன்றிற் கவினுறு படிவம் வாய்ந் தெழுந்தே, தண்டகா ரணிய மிதுவென வுணர்ந்து தமனிய வுலகினி லுறையும், அண்டர்போற் றிடுநல் வயித்திய நாத வண் ணலை யருச்சனை புரியு, மண்டுகா தலினுற் றீர்த்தநீ ராடி வந்துமூ வலஞ்செய்து பணிந்தான். உஎ

அதிகமா மகிமை பெறுமுப சார நிறையவே தாகம முரைத்த, விதிமுறை வழாது விருச்சிக மாத மேவுபிற் பக்கவட் டமிநாள், கதிபெறப் பூசை செய்தருள் பெற்றுக் கவின்பெறு தண்டகா ரணி யம், உதிர்கனி யருந்திச் சஞ்சரித் தின்ப முற்றினி திருந்தனன் மன்னோ. உஅ

---

உசு. இளையவள் — வாலாம்பிகை.

அத்தகு புகழ்சூழ் தண்டகா ரணிய மதுதனிற் றசரத னெழில்சேர், உத்தம மான மந்திரத் தலைவ ருடன்பதா திகள்புடை சூழ, முத்தவெண் குடைநீ ழலிற்சிலை வளைத்து முதிர்சின விலங்கினம் வெருவப், பத்திவாய்ந் திருந்த பெருவலை கட்டிப் பலவித வேட்டைதான் செய்தான். உகூ

விரிசுடர் வெயிலின் வெப்பமீ தூர வுண்ணுநீர் வேட்கையால் வருந்திப், பரிசன முழுதுஞ் சோர்ந்திடப் பாரை விருக்கநீ ழலிற் றுயின் றனன்பாங், கரியபுற் றினைக்கா லாலுதைத் தனனு லாவுகண் சிவந்திட வெழுந்து, புரிசினங் கொண்டு வருவது கண்டு பொருக்கென வெழுந்தனன் சடாயு. ௩0

திரண்டகூர் வாய்ந்த மூக்கினு லாவு தீண்டுமுன் கொத்தியே யழுத்தி, இரண்டுதுண் டமதாய்க் கடித்தெறிந் தனனவ் வேல்வையி லரண்டெழுந் தரசன், முரண்டகு காலன் பிடிக்கவந் திருந்தா னென்றடு கணையெடுத் தனன்முட், புரண்டிடச் சடாயு விரைந்துநன் மொழியாற் புகன்றன னடந்தன யாவும். ௩க

உரைத்தபி னினிய கனியுளித் தெழுந்தே யுண்ணுநீ ரெடுத்துயான் வருவன், வரைப்புய மன்ன நின்களை தீரப் பருகிநீ வாழுமூ துரைத், திரைக்கடல் போலுந் தானைகள் சூழச் செல்லினித் தமையனுங் காதல், அரைக்கணப் பொழுது மறந்திடா திருக்க வருள்புரி யென்றுபோற் றினனே. ௩உ

குலமுறை மையுந்தான் வந்திடும் வரவுங் கூறினன் மகிழ்ச்சி கூர்ந் தரசன், இலகிய வெழில்சேர் மார்புறப் புல்லி யினியதீங் கனிபுன லருந்திப், பலதுதி புகன்று சடாயுவை மறவாப் பரிவொடு தன்னக ரணைந்தான், நலமிகு மனைய சடாயுவவ் வனத்தி னுட்பல வுறைந்துசஞ் சரித்தான். ௩௩

---

௩க. முள்புரண்டிட — முள்ளிற்புரண்டெழ.

வேறு.

உளத்தினில்வாய்ந் துருகியபே ரன்பாற் கங்கை யொளிர் புனற்கோ தாவரிநீ ராடி யுண்மை, விளக்கியரும் பலனளிக்க மேவும் பொன்னி வெள்ளநீர் தோய்ந்துசிறை விரித்து ளார்ந்து, வளத் தினைநன் முனிவரர்கள் வாசஞ் செய்யு மகிமையினை யினையதென வகுத்தி யார்க்கும், அளப்பரிய தண்டகா ரணியந் தன்னி லைம்ப தினா யிரம்வருட மிருந்தா னம்மா. நச

இனையநலந் தருவனத்தி லிராமன் சீதை யிலக்குமணன் மூவ ரும்வந் தனரி லங்கும், அனையர்தமை முனிவரர்க ளாசி கூறி யாச்சிரமந் தொறுந்துதித்தா ரிலங்கை யாளும், வனைகழல்சூ ழிரா வணன்மா ரீசன் கூட வரவிரத மேறியவர் வாசஞ் செய்யும், நினை வரிய மகிமைநிறை தானப் பாங்கர் நீடுபெருந் தேர்நிறுத்தி நின்று பார்த்தான். நரு

செஞ்சொல்விடு மாரீசன் சீதை கண்முன் சிறந்தபொன்மான் வடிவெடுத்துத் திகழ நின்றான், கஞ்சமலர்த் திருவனையாள் கா தல் கூர்ந்து கணவனுடன் பிடித்துவரப் புகன்றாள் கையில், வெஞ்சிலையு மடுகணையு மெடுத்து நீங்கா விருப்பமுறு மிலக்கு மணன் றன்னை மேவும், வஞ்சியிடைச் சீதைதனைப் பாது காத்து வைத்துநில்லென் றெழுந்துவரு மான்பின் போந்தான். நசு

அகப்படும்பான் மையதாகி யனேகந் தூர மகன்றபின்வெங் கணைதொடுத்தா னுசீ தாவென், றிகத்தினொடு பரத்தினையு மளிக் கும்வாய்மை யிராமன்வாக் கதுபோலக் கூப்பிட் டெய்த, மிகப் பெரிய கணையுடனே வீழ்ந்த தந்த வெய்யகுரற் சீதைசெவி மே வும் போதிற், றிகைத்துமிகப் பயந்துசேல் விழிநீர் பாயத் திறல் செயிலக் குமணனைச்சீக் கிரம்போ வென்றாள். நஎ

தடுத்துரைத்தான் கொடுமைமொழி புகன்றா ளப்பாற் றமை யனிருந் திடமிடந்தான் றேடிச் சென்றான், அடுத்து நின்ற விரா வணன்சந் நியாசி வேட மதுகொண்டு வந்துபிட்சை யருந்தக் கேட்டான், எடுத்தனன்பின் றன்னுருவ மிராமா வென்று ளென் செய்வா ளவன்பற்றி யெடுத்துத் தேரை, விடுத்தனன்றென் னிலங்கையதில் விரைவிற் செல்ல வெய்துயிர்த்தா டவினையை வெல்வார் யாரே. நஅ

அரக்கன்மடி யினிலிருந்து வருந்திச் சீதை யழுதகுரற் சடாயு செவிக் கனலிற் செம்பை, யுருக்கிவிட்ட தெனக்கேட்ப துணர்ந்து தன்கண் ணொழுகனலிற் சிவந்திடத்தே ரோடா வண்ணம், பருப்பதம்போ னின்றுதடுத் தான்ப ரந்த பாலி நதி த் தீரமதிற் பாவி தள்ளிச், செருக்கினொடு பெண்ணைநெடுங் கரையிற் சேர்ந் தான் சீற்றமிகக் கொத்திமுடி சிதறச் செய்தான். ௩௯

வாம்பரித்தேர் வண்டில்பொடி பட்ட தோங்கு மணிக்குடையின் றலைகீழாய் விழுந்து மண்மேல், ஆம்பிகவிழ்ந் திருந்ததெனக் கிடந்த தம்மா வடல்கிளர்சா ரதியுமிறந் தனன்வில் லம்பு, தூம்பு படு தூணியுந்தூ ளாகச் செய்தான் சுழன்றெழுந்து சிறகைவிரித் தடித்தான் றூயாள், தேம்பியழு திடப்பதகன் றரையில் விட்டுச் சிறகுகா லிரண்டுமறுத் தெறிந்தான் மாதோ. ௪0

கோடியகணை கழுத்துருவி யோட விட்டான் குண்டலம் போற் சடாயுவிழுந் தனன்கோ தண்ட, நெடியவன்ற னருந்ததிக் கற் பனையா டன்னை நீண்டகாத் தாலெடுத்தோர் நிமிடப் போதின், மடியில்வைத்து விரைந்தெழுந்தா காச மார்க்க மாகவிலங் கையையணைந்து வளர சோக, அடிநிழலின் வைத்தனன்மேற் பறவை வேந்தற் கடுத்ததம்பு ரீடனுக்காங் குரைப்ப தானுன். ௪௧

வேறு.

சிந்தை தளர்ந்து சீதைதனைத் தேடி யிராம னிலக்குமனன், வந்து பாலி நதிகடந்து மணிநீர்ச் சுனைகள் பரந்திருந்த, கந்த வரையில் வாம்பரித்தேர் கணைவில் லொடிந்து படுகளம்போன், றிந்த விதம்வீழ்ந் திருந்தனகண் டிறகு சிதைபட் டதுங்கண்டார்.

ஒழுக வுதிர முயிர்த்துடலி னுயிருண் டில்லை யெனக்கிடந்த, கழுகி னுருவங் கண்டிவனே காலன் வேட மாறிவந்து, கொழுதி வரிவண் டரற்றுநெடுங் கூந்தற் சீதை தனைப்பிடித்தே, முழுதுந் தின்று ளிவனுயிரை முடிப்ப னென்று கணைதொடுத்தான். ௪௩

௪0. ஆம்பி — காளான்.

அன்ன வேலை தசரதனுக் கிளையோ னியானென் றுரைத்த தற்கு, முன்ன நடந்த செயலனைத்து மொழிந்து சீதை தனையில ங்கை, மன்னுங் கொடிய விராவணன்றன் மடியி லெடுத்து வைத் துவந்தான், இன்னல் கூரப் பொருதிவிழுந் தேனென் றிவையும் புகன்றனனால். வேறு. உஉ

அன்னநல் வாய்மை மொழிசெவிப் புகுத வன்புமீ தூர்ந்துள முருகி, உன்னுயிர் விடுஞான் றுற்றதான் மனத்தி னொருசிறு துயரமு நினையேல், முன்னநீ பூசை புரிந்திடும் வயித்திய நாதமா நகர்தனின் முதன்மை, மன்னிய சித்தா முதவட பாலின் வயித் திய நாதன்வாழ் தென்பால். உரு

அற்புத மான விபூதிகுண் டத்திற் கணித்துநற் சிதைதனை யடுக்கிப், பொற்புவாய்த் திடுமுத் தரக்கிரி யையினைப் புரிகுவ னென்றனன் பூமி, யிற்குறை காலைப் பரப்பியே தலையைத் தொங்க விட் டிறந்தனன் சடாயு, மற்புய வலிமை யுடையவ னெடுத்து வந்துபின் னம்முறை செய்தான். உசு

சூலவிய மகிமைப் புகழ்பல படைத்துக் குணங்குடி யிருந்திடு மீரேழ், உலகுபோற் றிடுஞ்சித் தாமுதப் புனலின் மூழ்கியுத் தரக் கிரி யையினை, நலமுறச் செய்த விராமன்வெள் ளெருக்கி னீழலி னற்பிதிர் பிண்டம், இலகுதர்ப் பணமும் வேதநன் மனுவா லெ ழில்பெற வியற்றினன் மாதோ. உஎ

வேறு.

அனைய நியமஞ் செய்துமுடித் தாவு மதியுந் தண்புனலும்
புனையும் வயித்திய நாதனடி பணிந்தன் புருவா கிப்பூசை
தனையாய்ந் தரிய வேதவிதி தவறு திலக்கு மணனோடும் [ந்தான்.
நினையு மவைதாம் பெறவியற்றி நெடுங்கா னகத்தென் றிசைபோ

வேறு.

இலங்கெழிற்சீ தையைத்தேடி நடந்தி ராம னினியதிரு வணை யியற்றி யிலங்கை சேர்ந்து, வலன்கொள்கணை தொடுத்திரா வண னைக் கொன்று வந்தடுத்த விபீடணனுக் கிலங்கை வாழும், நலன் கொண்முடி சூட்டிடியருந் ததிக்குக் கற்பு நல்கியிடுஞ் சீதையுடன் விமான மேறிக், கலந்துரிமை மிகுமிலக்கு மணன்பின் சூழக் கன கமதி லயோத்திசென்று காதல் கூர்ந்தான். சக

வேறு.

அற்க ளத்திறை தன்னை யருச்சனை
பொற்பு றச்செய் சடாயு புகழ்த்திற
நற்ச ருக்க நவின்றனன் காலவன்
சொற்றி றங்கொள் சருக்கமேற் சொல்லுவேன். ௫௦

சடாயுவருச்சனைசெய்சருக்கமுற்றிற்று.

ஆகு திருவிருத்தம் ௧0௧௪.

---

## ௫௫. காலவச்சருக்கம்.

நீலமே னியன்றனை நிதமும் போற்றிடுங்
காலவ னெனும்பெய ரிருடி காதையைச்
சாலவே சூதமா முனிவன் றண்மைசேர்
சீலமா முனிவரர்க் குரைத்தல் செய்தனன். ௧

விழுமிய கேள்வியான் மேன்மை பெற்றிடும்
எழுபது சீடர்க ளுடனி ருந்தனன்
வழுவறச் சந்திவந் தனமி யற்றினன்
பொழுதுவீண் போக்குவ திலன்பு கன்றிடின். ௨

இனையவன் றலங்கள்சஞ் சரித்தற் கெண்ணியே
புனைநலம் பெற்றகா விரிப்பு துப்புனல்
தனைவலஞ் செய்துமூழ் கினன்பின் சார்ந்திடும்
வினையொழி சந்த்ரபுட் கரிணி மேவியே. ௩

தோய்ந்தன னரங்கனற் றுணைப்ப தாம்புயம்
எய்ந்திடும் படிதுதித் திறைஞ்சிப் போந்தனன்
வாய்ந்தசீர் முட்டமா நகர மாதியாப்
பாய்ந்திடு நதித்திருப் பதினூற் றெட்டுமே. ௪

ஆங்குள தீர்த்தநீ ராடி வண்டுழாய்
பாங்குறத் தரித்திடு முகுந்த னைப்பணிந்
தோங்கிய காதன்மீ தூரப் போற்றியே
நீங்கிமென் மகேந்திரப் பொருப்பி னின்றனன். ௫

வேங்கையின் ரேல்விரித் திருந்து வேங்கட
லோங்கிய கிரிக்குநே ரொன்று மில்லையென்
றுங்கவ னினைந்துத யத்திற் செய்யவிற்
பரங்குறு புணரிநீர் படிந்து மூழ்கினான். சு

மத்தியா னந்தனில் வளரும் வேங்கடத்
துத்தம சுவாமிபுட் கரிணி யொண்புனல்
சித்தநன் மகிழ்பெறத் தோய்ந்து செவ்விசேர்
பத்தியால் வேங்கட நாதன் பாதமேல். எ

மருக்கமழ் மைந்துழா யணிந்து வந்துபின்
விருப்புறு மகேந்திர கிரியை மேவியே
திருப்பொலி செயன்முறை விசுவ தேவமும்
அருத்திமே லறுசுவை யடிசி லுண்டனன். அ

தரணிமேற் றிசைபுகுஞ் சாயங் காலையில்
அரண்மலி மதுரநா யகனை யன்பினுற்
பரவின னீங்கிதிற் பழுது வந்திடின்
விரவுதீ யினிலுயிர் விடுவ னென்றனன். கூ

இம்முறை யாயிரம் வருட மெய்துஞான்
றம்மறை யிருடிசே துவினி லாய்புனற்
செம்மையா யாடிமேற் சித்த பாதுகை
இம்முறை யேறியுத் தரத்தின் மேயினான். க0

செல்லுழி யுபயகா விரியின் றீரமேல்
மல்கும்வெள் ளெருக்குநல் வனத்தின் பாங்கரின்
எல்லையி னடந்தன னெழுந்தி ராக்கதன்
கொல்லலுந் தவனெனக் கொதித்து நின்றனன். கக

---

சு. விற்பாங்குறுபுணரி — தனுக்கோடி. அ. விசுவதேவம்-பிதிர் பூசை, தேவபூசை, அருத்தி - செய்தென்னும் பொருட்டு. கூ. தரணி— சூரியன். க0. சித்தபாதுகை — முனிவருடைய பாதகுறடு; இதில் ஏறினால் நினைத்த இடத்தில் கொண்டு போய் விடும் என்க.

நாதனே யெனநர சிங்க மந்திரம்
ஓதியொண் புனலெடுத் திறைப்ப வுக்கிரஞ்
சாதக மாகியவ் விருடி தாண்மிசைக்
காதக விராக்கதன் கனிந்தி றைஞ்சினான். ௧௨

இரைகட லுலகிலிவ் வுருவம் வந்தது
புரையறப் பகரெனப் பூரு வந்தனில்
உரைபெறு துந்தில னெனவு ரைப்பரென்
வரையறை பெறும்பெயர் வாய்மை யென்றனன். ௧௩

மல்லிகார்ச் சுனமகா தேவன் முன்னரின்
எல்லைகா ணருஞ்சிவ நிசியி னேர்பெறு
செல்வமா மறையவன் சிவபு ராணநூல்
சொல்லுமா யிடைப்பல தூடணஞ் செய்தேன். ௧௪

கந்தரு வக்குலத் துதித்துக் கானநூல்
வந்ததாற் பாடினேன் மறைவ லோரெலாஞ்
சிந்தைகூர்ந் ததிசயித் தனர்சி வந்தவன்
நொந்துவெஞ் சாபமோர் நொடியிற் கூறினான். ௧௫

அகந்தைசெய் யரக்கனு மைந்து சன்மநீ
சகந்தனி லெடுத்திடத் தக்க தென்றனன்
இகழ்ந்துசீர்ப் புராணநூ லினைப்ப ழித்தலால்
புகன்றது பலித்தது புனித வென்றனன். ௧௬

வேறு.

சென்றபின் னான்கு சென்மஞ் சிவநிசி யதனி னாதன்
தன்றிரு சனத்தா லைந்தாஞ் சனனநீ வயித்திய நாதன்
வென்றிசேர் தலத்த ரக்க னுருவினை யெடுத்து வேதம்
நன்றறிந் திலகு கால வனைப்பிடித் திடந டப்பாய். ௧௭

அன்னவன் மனுவொன் றோதி யரும்புன றெளிப்பான் பின்னர்
இன்னவல் லுருவ நீங்கி யிடுமெனப் புராண வாய்மை
நன்னெறி யறிந்து கூறும் வேதிய னவின்றா னன்னோன்
சொன்னவப் படிச னித்துத் தொடர்ந்தன னென்றா னம்மா. ௧௮

---

௧௨. காதகம் — கொலை. ௧௩. துந்திலன் — இவன் ஒரு கந்தருவன்.

அருட்கிட ஞன வுன்கை யரும்புனல் பட்டபோதே
இருட்பொலி பாவ நீங்கிற் றில்குகந் தருவ லோகம்
பொருக்கெனச் செல்வ னென்று புகன்றுபொற் புறம்வி மானந்
திருத்தக வேறித் தெய்வக் குழாம்புடை சூழச் சென்றான். கக

வேறு.

மங்களவேங் கடநாதன் றரிசனத்தில் விகாதம்வந் ததனால் வெய்ய, அங்கியின்மூழ் குவனென்று சீடர்தமை யழன்மூட்டு மென்றா னன்னோர், எங்கள்குலக் குருவேநின் றனைநீங்கி யாங்களெவ் வா றிருப்போ மென்றே, செங்கைவிரித் தெமையிரட்சிப் பதுசேவை யன்றோவென் றுரைத்தல் செய்தார். உ0

அரிசகிப்பன் பூசாவிச் சதிவந்தா லன்பருக்கென் றருநூன் முன்னந், தெரியவுணர்த் தினையதனைச் சிந்தையில்வைத் தியம்பி னமென் றிரங்கித் தேம்பும், பரிவுடையோர் தமைப்பார்த்துக் காலவனீ ரீதயுத்தப் படியா மென்றே, யுரிமையுறப் புகன்றிடுதெ றவிர்த்தங்கி மூட்டுமென வுரைத்தான் மாதோ. உக

என்செய்வா ரதன்பினெரி யழன்மூட்டி னவத்தனர்கா லவனெ மூந்து, தன்செய்கை யுறுதிமுறை மனுவோதி யங்கியின்மூழ் கினன்றா ழாமல், மின்செய்சிற் றிடையுபய நாச்சியா ரிமையோர்கள் விரைந்து செல்லப், பொன்செய்பாம் பணைநீங்கி யவனெதிர்கார்த் திகைப்பருவம் போந்தான் மாயன். உஉ

மன்னும்வயித் தியநாதன் றனக்கில்கும் வாயுதிசை யதனின் வந்து, நன்மைமிகு காலவனுக் கெதிர்நின்று நளினமலர்க் காம்பிடித் துத், துன்னும்வனக் கனனீக்கி யெடுத்துவரங் கேளென்றான் றயரந் தீர்ந்து, பன்முறைகா லவனன்னோன் றனைப்பணிந்து பரிந்துதுதி செய்தான் பாங்கால். உ௩

இனியதலந் தனிலைய நீயிருத்தல் வேண்டும்பே ரின்ப வீடு, தனையளிக்கு மாதலினுற் றலவாசம் யான்செய்வரந் தருதல் வேண்டும், புனையுநறும் பசுந்துளப வேங்கடநா யகவென்று புகன்றான் னன்னோன், அனையபடி வேண்டுவர மனைத்துமளித் தனனடங்கா மகிழ்ச்சி கூர்ந்தான். உச

உ0. விகாதம் – தடை. உக. விச்சதி – மிகுந்த அழிவு.

வரங்கொடுத்த வாய்மையினல் வரதவேங் கடநாத னெனவா ஞேரும், இரங்குகருங் கடலுடுத்த பூவுலகந் தனிலுள்ளோ ரேனை யோருங், கரங்குவித்துத் துதிசெய்தார் காலவனுக் கருண்முதந் தன் கமல பாதம், பரிந்துபணிந் தவரிட்ட காமியம்யா வையும்பெ றுவார் பலநாள் வாழ்வார். ௨௫

வேறு.

கருத்த மைந்திடு காலவ னாரணன்
திருப்ப தாம்புயம் பூசைநி தஞ்செய்து
மருத்து ழாயணி வள்ளல்வை குந்தம்வாழ்ந்
திருக்கு நற்கதி யின்பமேற் பெற்றனன். ௨௬

தெளிவு பெற்றிடு சீடர்கள் யாவரும்
நளின மங்கைத னயகன் பாதமேல்
தளிர்ப சுந்துழாய் சாத்திய கங்குளிர்ந்
தெளிதின் வைகுந்த மெய்தியின் புற்றனர். ௨௭

வேறு.

மத்தநற் றுழாயணி வள்ள லைத்தொழும்
பத்திகூர் காலவன் பண்பு கூறினேன்
உத்தம மானநல் லுறுதி வாய்ந்திடு
சித்திர கேதுவின் செய்கை சொல்வன்மேல். ௨௮

காலவச்சருக்கமுற்றிற்று.

ஆ௨ திருவிருத்தம்—௧0௪௨.

---

## ௩௯. சித்திரகேதுச்சருக்கம்.

இனிதின்மூ வாறு புராணநன் குணர்ந்தே யெடுத்திதம் பெறப் பகர்சூத, முனிவரன் சவுன காதிமா முனிவர் முகமலர்ந் தகமகிழ் கூரப், புனிதன்வாழ் தெய்வ நாயகன் வுயித்திய நாதனற் பொற் புறு சரிதந், தனிலொரு காதை யுற்புத மாகத் தரும்படி யுரைத் தன்மே யினனல், ௧

வேறு.

தயங்குசவ் வீர தேசந் தனைப்புரந் தளிப்போன் மேலாஞ்
செயம்பெறு சித்திர கேது திகழவன் மனைவி கற்பு
வியந்தறி வரிய மேன்மை விளங்குமே மாங்கி யன்னோன்
நயந்தரும் புதல்வ னின்றி நாடொறும் விசார முற்றான். உ

எண்ணினன் சிவனை மாலை யிந்திரன் முதல்வா னோரை
நண்ணும்வே தியரை முன்னம் பூசனை நயந்து செய்யேன்
திண்ணிய கொடுங்கோ லோச்சித் திரிந்ததாற் சேர்ந்த தென்னைப்
புண்ணியப் புதல்வற் பேறு கிடைத்திடாப் புன்மையென்றே. ௩

இம்முறை யிரங்கு போதிற் காற்கிய முனிவ னென்போன்
செம்மைசேர் சித்திர கேது திருத்தகு மனையிற் போந்தான்
கொம்மென வெழுந்து வேந்த னருக்கியங் கொடுத்துப் போற்றி
விம்மிவெய் துயிர்த்தி ருந்தான் வினவிமேன் முனிவன் மாதோ.

மனத்துறு கிலேசந் தன்னை வகுத்துரை யென்று வேந்தன்
தனக்கிதம் பெறந யந்து கூறின னதன்பின் றக்கோர்
இனத்தினன் மகிமை பெற்றோ யென்குறை புதல்வ னில்லை
நினக்குவே றுரைப்பதென்னென் றிம்மொழிநிகழ்த்தல்செய்தான்.

வேறு.

அரசனுங் குரைப்ப வுணர்ந்திடு முனிவ னகங்குளிர்ந் தெடுத் துரை செய்தான், புரவல புதல்வற் பேறனக் கில்லாக் காரணம் புகலுவன் முன்னம், விரவுநல் வளஞ்சேர் கலிங்கதே சத்தின் வேந் தனீ யாகவீற் றிருந்தாய், திரமுற வேத முணர்ந்தவே தியன் றன் சிவநிசிப் பூசையை யிகழ்ந்தாய். ௬

அன்றவன் பூசைத் திரவிய மதனி லளிந்திடு பழத்தினை யெடு த்துத், தின்றனை யப்பால் வேறிடந் தன்னிற் சிவநிசிப் பூசையை முடித்தான், மன்றவிப் புவியிற் சிறிதுநா ளிருந்தே மரித்தனை யியற்றிய பாவம், ஒன்றியே புதல்வற் பேறனக் கில்லா துளந்து யர் கூர்ந்திருந் தனையே. எ

உனக்குநல் லுறுதி யுபயகா விரியி னுப்பணி லொருதல முளது, மனத்துயர் தீர்க்கு மாயிடை வாத வேங்கட நாதனை வணகித், தனக்கிணை யில்லாத் தையலே வயித்திய நாதனைப் பணியின் ஞென் மூன்று, தினத்தினிற் புதல்வற் பேறு தான் கிடைக்கும் வகைவட மலையவன் செய்வான், அ

வன்றிற லுறுதி வேள்வியா னியற்ற வளர்திர வியமளித் திடு நீ, நின்றுதா ழாமற் செல்லுதி யெனவே நிறையுமா தவனுரைத் தனன்பின், வென்றிசே ராசன் முனிவரன் மனத்தின் விழைந் தன யாவையு மீந்து, தன்றுணை வியைமுன் போந்திடச் செய்து தான்படை யுடனெழுந் தனனே. கூ

நல்லநான் றுற்றுத் தையலே வயித்திய நாதனை விதிமுறை பணிந்தே, செல்வமா முனிவ னுரைத்தவப் படியே செய்தனன் வேங்கட நாதன், சொல்லரும் புகழ்சேர் புதல்வனைப் பெறுவை சூழ்ந்திடுஞ் சிவநிசி விரதம், ஒல்லையிற் றூழா தியற்றுதி வயித்திய நாதனை வணங்கியென் றுரைத்தான். க0

திகழ்ந்திடுந் தலத்தை மூவலஞ் செய்து தெய்வநா யகனருள் பெற்றுப், புகழ்ந்திட மகிமை பெற்றதன் றேசம் போந்துமா தந் தொறும் பொருந்தி, நிகழ்ந்தபே ரன்பாற் சிவநிசி விரத நியமமா வியற்றின னதன்பின், உகந்தொறு மூன்ளோர் துதிசெயப் புதல்வ னுதித்தன னுத்தம தினத்தில். கக

சிறிதுநாட் சென்ற பின்புதல் வனுக்குத் திகழ்தரு மணிமுடி சூட்டி, நெறிமுறை செங்கோல் செலுத்திடச் செய்து நேசமாம் வேங்கட நாதன், பிறிவில்லை குந்தங் கயிலைமால் வரையும் பெற் றன னிக்கதை கேட்போர், அறிவுள புதல்வற் பேறுபெற் றிடு வா ரளப்பரு நிதியுடைத் திடுவார். கஉ

வேறு.

பத்திமீ தூரவெம் பிரான்பு தந்தொழுஞ்
சித்திர கேதுவின் சருக்கஞ் செப்பினேன்
உத்தமன் வீரசே னன்ற னுண்மைசேர்
சுத்தமாஞ் சருக்கமே லெடுத்துச் சொல்லுவேன். கங

சித்திரகேதுச்சருக்கமுற்றிற்று.

ஆகு திருவிருத்தம். க0ருங.

# ௫௭. வீரசேனச்சருக்கம்.

சார்தரு நல்வளந் தழைத்து நாடொறுஞ்
சீர்திகழ் வாலிய தேச மன்னவன்
கார்நிகர் வண்மைசேர் கரத்தி னான்புகழ்
ஆர்சொலற் பாலரெண் ணரிய தாகுமே. ௧

விளங்கிடு மவன்பெயர் வீர சேனன்வாழ்
இளங்கும ரனைவிழைந் திகப ரம்பெற
வளர்ந்திடும் விரதநன் கியற்றி மான்மியம்
அளந்தறி வருஞ்சிவ புராணங் கேட்டனன். ௨

உரைத்திடு புராணிக ருளம கிழ்ந்திட
இரத்தின மிழைத்தவா பரணம் யாவையும்
வரைப்புய மன்னவ னளித்து வண்மைசேர்
தரைக்கண்வீற் றிருக்கவா சனமுந் தந்தனன். ௩

தாழ்ந்திடு புவிதனிற் றானி ருந்தனன்
ஆழ்ந்திடு புராணநற் கதைய னைத்தையும்
வாழ்ந்திட வுணருநாண் மவுன நீங்கியே
சூழ்ந்தபே ருடன்பல சொல்வ ழங்கினான். ௪

இனையமன் னவன்றனக் கிதய ளித்திடுந்
தனயன்வந் துதித்தனன் றகுதி பெற்றநற்
றினமதிற் சித்திர சேன னென்றுபேர்
அனைவரு முரைத்திட விட்ட ழைத்தனன். ௫

அப்புதல் வன்றனக் கீரெட் டாண்டினிற்
செப்பரும் புகழ்சவு ராட்ட தேசம்வாழ்ந்
தப்புவிக் கிதம்செய்மன் னவன ளித்திடும்
மைப்புயற் கூந்தலா டனைம ணஞ்செய்தான். ௬

இருபதாண் டினிற்கய ரோக மெய்திமேற்
பெருகியை யைந்திலென் பெழுந்தி யாக்கையைக்
கருகிடச் செய்துமேற் கனத்த தாதலால்
அருமையாம் வயித்திய மனைத்துஞ் செய்தனன். ௭

---

௨. மான்மியம் — மகிமை. ௭. கனத்தல் — அதிகரித்தன்மேற்று.

நலிவுசெய் ததுதனை நாடி மன்னவன்
மெலியுநுண் ணிடையுடன் விதன மீதுறப்
பொலிவிழந் தெண்ணிடும் பொழுத ருந்தவம்
மலிகவு தமமுனி வரன்வந் துற்றனன். அ

அருக்கிய முதலிய வளித்து மன்னவன்
விருப்புறு முகமனும் விளம்பிப் புத்திரன்
இருக்குமந் நிலைமையு மெடுத்துக் கூறினான்
திருக்கிளர் முனிவரன் றியானஞ் செய்துமேல். கூ

மன்னகேள் சிவகதை மகிழ்ந்து கேட்பவர்
பின்னொரு வர்களுடன் பேசி டாரதை
உன்முக மாகவே யுணர்வர் நீமுனம்
அன்னிய ருடன்பல பேசிக் கேட்டதால். ௧௦

இத்தகு நோய்தொடர்ந் தெய்திற் றீறிலா
அத்தன்மான் மியந்தனைக் கேட்கு மாயிடைச்
சித்தம்வே றுகவே சிலசொற் சொல்பவன்
புத்திரன் கயவியா தியைப்பொ ருந்துவான். ௧௧

ஈதலா துயர்ந்தவா சனத்தி ருந்துமேல்
நாதனற் புராணநூல் கேட்கு நன்மையில்
பாதக மிரவுரவம் பதிய மூழ்கினுஞ்
சாதகம் பெறநெடுங் காலந் தான்செலும். ௧௨

புகன்றிடு புராணநிந் தனைசெய் புல்லறி
வகந்தையர் புத்திர கீன ராகுவார்
இகழ்ந்திடக் கயவியா தியும்வந் தெய்திடும்
நிகழ்ந்துநீ ரிழிவெனு நோய்நி ரம்புமே. ௧௩

விடையுகந் தவன்றல புராண மேன்மைநன்
நடைபெறக் கேட்பவர் நடுவெ ழுந்திடின்
அடைகுவர் குன்மநோ யன்றிக் குட்டமுந்
தடைபடா தெய்திடுந் தளர்ந்து வாடுவார். ௧௪

---

௧௩. கீனம் — இன்மை.

திகைப்பொழித் திடுஞ்சிவ புராணங் கேட்டுமேல்
நகைப்பவ ரௌரவ நரகஞ் சேர்குவார்
வகைத்திறம் விளங்கவா சித்த பேர்க்குநற்
றொகைப்பொரு ளளித்திடார் நரகிற் றோய்குவார். கரு

வண்மைசேர் புராணமான் மியம்வ குத்தெடுத்
துண்மையாய்ப் புகன்றவர்க் குயர்பெ ரும்பொருள்
நுண்ணிழை யாடைநல் கிடார்க ணொந்துதங்
கண்ணிழந் தருநர கழுந்தி யேங்குவார். கசு

பொருந்திட வுரைத்திடு புராணி கர்க்குமேல்
திருந்துமா பரணமுஞ் செம்பொ னுடையும்
பரிந்தளித் திடாதவர் பாரின் மீதினின்
வருந்துவர் சுவானமாய்ப் பிறந்து மன்னகேள். கஎ

முன்னவன் புராணமேன் முழுதுங் கேட்குமந்
நன்மைசேர் நாட்புரா ணிகர்க்கு நன்னிதி
பொன்னினுற் செய்தவா பரணம் போதுசாந்
தின்னபற் பலவளித் திடவி திக்குநூல். கஅ

என்றுமா முனிவர னெடுத்து ரைத்திவன்
பொன்றுவன் மாதமோர் மூன்றிற் போகுமுன்
நன்றிசேர் வயித்திய நாத நற்றலஞ்
சென்றுசித் தாமுத தீர்த்தந் தோய்ந்துபின், கக

புதல்வனல் விருச்சிக மாதம் புண்ணியம்
அதிகமா மபரபக் கத்தி னட்டமித்
திதியினில் வயித்திய நாதன் சீரடி
விதிவழா தருச்சனை செய்து மேன்மைசூழ், உ०

சடாயுகுண் டந்தனிற் றயங்கு நீற்றினை
விடாதமெய் யன்பினு லெடுத்து மேனிமேற்
படாதபா டில்லையென் றுரைக்கப் பண்ணுநோய்
அடாதொழிந் திடுந்தரித் திடுமப் போதினின். உக

செல்லுதி யெனத்தெரிந் தெடுத்துக் கூறினன்
அல்லறீர்ந் திடப்புவி யளிக்கு மன்னவன்
நல்லமா முனிவர னவிலும் யாவையும்
ஒல்லையிற் செய்தன னெழிந்த தன்னநோய். உஉ

இட்டகா மியந்தரு மெழிற்புள் ளூரினில்
திட்டமாஞ் சடாயுகுண் டத்தி னுக்குநற்
பிட்டதி ரசம்வடை பிறங்கு மோதகம்
மட்டிலா நிவேதன மகிழ்ந்து செய்தனன். உங

வேறு.

மிக்கபுகழ் படைத்தோங்கு சடாயு குண்ட வேதிகைநற் பசும்பொன்வைத் திழைத்து மேன்மை, தக்கநவ மணிகுயிற்றி யதன் வெண் ணீறு தனையணிந்து பின்னர்த்தன் புதல்வன் பாரி,தொக் கபரி சனஞ்சூழ நின்று வேந்தன் றொல்புகழ்சேர் தேசமதிற் பாதி தூய, செக்கர்நிற மொளிர்வயித்திய நாதற் கீந்து திருவருள்பெற் றெழிற்கொடிஞ்சித் தேர்மேற் போந்தான். உச

பெருமைபெறு பிரதோட காலந் தன்னிற் பிறங்குசெவ்வாய்க் கிழமையினிற் பிதிர்க்கள் ஞான்றில், அருமைமிகு சடாயுகுண் டத் திலகும் வெண்ணீ றணிந்தால்வெண் குட்டமுத லனைத்துந் தீர்வார், பொருந்தியிடும் பகைவர்தமை வெல்வர் விட்டுப் போகே னென் றுரைத்திடும்பேய் பூத மோடுங், கருதியிடு மிட்டகா மியங்க ணல்குங் கைகண்ட பலனருங் கடல்சூழ் பார்மேல். உரு

வேறு.

கிளர்ந்திடு மூலக மீதிற் கெழுமுசெங் கோல்செ லுத்தி
அளந்துகண் டெடுத்துக் கூற வரியவன் புகழ்ப டைத்து
வளம்பெறு வீர சேன மான்மியச் சருக்க வாய்மை
விளம்பின னிப்பாற் சில விருத்தநற் சருக்கஞ் சொல்வேன். உசு

வீரசேனச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் க0அக.

# ௫௮. சீலவிருத்தசருக்கம்.

குற்றநீத் திலகிய குணமி குந்திடும்
நற்றவ மியற்றுநன் முனிவ னாரதன்
பெற்றிசேர் கதைபிறி துரைத்த தன்றியே
மற்றுமோர் கதைவகுத் துரைத்தன் மேயினான். ௧

வெயில்விரி பசும்பொன்வாய்ந் திலகி விண்டொடும்
எயிலுடுத் தெண்ணரும் புகழ்த ழைத்திசை
பயில்பயி டனிசி தேசம் பார்ப்பனர்
மயிலிய லாரொடும் வாழ்வ தன்னதில். ௨

குலவிய கண்ணுவ கோத்தி ரந்தழைந்
திலகிடப் பிறந்தவன் கபில னென்றுபேர்
உலகுளோர் கூறுதற் குரியன் பாரிபேர்
நலமிகு சுகுணையென் றுரைப்பர் நாட்டினின், ௩

ஏலவார் குழலெழிற் சீல விர்த்தனை
ஆலமுண் டவனரு ளால ளித்தனள்
காலகா லங்களிற் கருதிச் செய்சடங்
கோலநீர்க் கடலுல குவப்பச் செய்துபின். ௪

வேதவே தாங்கமு மோது வித்திடுங்
காதல்கூர் பருவம தறிந்து கற்றுணர்
போதகா சாரியன் புத்தி ரன்றனக்
கேதநீங் கிடவளிப் பதுமி யற்றினான். ௫

இனையவ னூழ்வசத் தியற்கை யென்கொலோ
நினைகிலன் பாவமீ தென்று நிந்தனை
தனைநிதஞ் செய்தனன் றரணி மீதினில்
அனைவரும் பழித்திட மதுவ ருந்தினன். ௬

தண்ணளி புரிந்திடுந் தாயைத் தந்தையை
எண்ணருந் தூடணஞ் செய்தி கழ்ந்துகள்
உண்ணும்வே சியர்நுக ரெச்சி லுண்டனன்
பண்ணிடுங் கொடுமையார் பகுத்துக் கூறுவார். ௭

அன்னவள் சேடம்யான் கொடேன கன்றுநில்
என்னுமப் பொழுதினும் வலிந்தெ டுத்ததைத்
தின்னுத றவிர்ந்திலன் றிருந்து மெல்லினும்
புன்னகை செய்துபுல் லுதலொ ழிந்திலன். அ

பிறங்குவேல் விழியொரு பெண்ணை யீன்றுவைத்
திறந்தன ளவளுநல் லிரதி யாமென
நிறங்கிளர் பருவமெய் தினணிணைப்பினும்
அறஞ்சுடு மெனல்விடுத் தவளைப் புல்லினுன். கூ

எண்ணியென் சொல்வன்யா னவள்பின் னீன்றிடும்
பெண்ணையும் புணர்ந்தனன் பெரிய பாவிதான்
மண்ணினி லாதிமத் தியார்ச்சு னேசுர
அண்ணல்வீற் றிருந்திடுந் தலம டுத்தனன். க0

அனையநற் றலந்தனி லவன்கொ டுந்தொழில்
தனையுரைப் பரிதுநா டொறுந்தன் னெஞ்சினின்
நினைகுவ னிவர்மனை நிதியெ டுக்குமா
றினையதென் றிரவினிற் றிருடி யேகுவான். கக

விடையுகந் தேறுமவ் விமலன் றன்னருள்
உடையவன் மறைக்குலத் துதித்து மாமறை
தடைபடா துணர்ந்தவன் சடாயு குண்டநீ
றிடைவிடா தணிந்திட முடிந்து றங்கினுன். கஉ

அணங்கனு டனைவிடுத் தவன்முன் போலொளித்
திணங்குநல் லிரவினிற் றிருடற் கெய்தினுன்
குணந்தரு சடாயுகுண் டத்தி னீற்றினைப்
பணந்தொகு முடிப்பென வெடுத்துப் பார்த்தனன். கங

உண்ணுதற் கமையவோர் காசு மின்மையால்
துண்ணென வூதியே தூற்றி விட்டுமேல்
வண்மைசே ராடையைக் கவர்ந்து மாதினை
நண்ணுமுன் னமன்கணம் வரவி றந்தனன். கச

சிவகண மியமது தரைச்செ யிர்த்தடர்ந்
திவர்முன நீவிர்வந் திடுவ தென்கொலென்
றவர்தமை விலக்கிமுன் னூது நீறது
தவறியன் னவனுட றன்னின் வீழ்ந்தது. கரு

கண்டிலீர் போலுமென் றுரைத்துக் கண்ணின்முன்
விண்டொடும் விமானமே லேற்றி மேவினர்
எண்டிசை புகழ்ந்திடு சடாயு வின்னெழிற்
குண்டநீ றணிபலன் கூறற் பாலதோ. கசு

வேறு.

திகழுஞ் சீல விருத்தன் றிருத்தமாம்
புகழ்கொள் வாய்மைச் சருக்கம் புகன்றனன்
நிகழ்சு வாசினி மான்மிய நீணிலம்
மகிழும் வண்ண மெடுத்து வகுப்பன்மேல். கஎ

சீலவிருத்தச்சருக்கமுற்றிற்று.

ஆகூ திருவிருத்தம் க0சுஅ.

---

## ருசு. சுவாசினிச்சருக்கம்.

ஆழ்ந்திடு கங்கா தீரமீ திலகு மருமறை யவன்மனை யவள்சீர், சூழ்ந்தெழில் கொழிக்குஞ் சுவாசினி யென்னுந் தூயவ ளாயிடை யுயர்ந்து, தாழ்ந்திடு பணைக டழைந்திடு பராரை விருக்கமுந் தண் மலர் நெகிழ்ந்து, வீழ்ந்திடு பசுந்தே னுடன்முறுக் கவிழ்ந்து விரை கமழ் நலனையும் புகழ்ந்தாள். க

துணைபிரி யாம லிருந்திடு மினிய தோழிய ருடன்பொழி லகத்தில், இணைமலர் கொய்யப் போந்தனள் வந்தோ ரியாவருந் தனித்தனி பிரிந்தார், மணமலி புன்னை நீழலிற் றனித்து நின்றனளம்மாப் பொந்தின், அணைகொடும் பேய்தான் கண்டுமோ கித்தே யடுத்தது பிடித்திட வம்மா. உ

குணதிசை யதனிற் றளிர்விரித் திலகு கோழரைக் கடம்பி னீள் பொருந்தின், அணையும்வே தாளம் வெளியினிற் புறப்பட் டனையண்முன் னின்றதங் கதன்பின், வணமிகு போதி யெனுமரப் பொருந்தின் வசித்திடு பிரமரட் சசுவொன், றிணையிலா வணங்கன் னவளெதிர் நின்ற திவையெலாங் கண்டுவெய் துயிர்த்தாள். ௫

ஈங்கிவ டன்னை யான்முனங் கண்டேன் பின்புநீ கண்டனை யின்று, பாங்கரி னின்று முறைமையா யிவளை யனுபவித் திடும்படி யன்றி, ஓங்கிய வலிமை பேசிடிற் கொல்வே னுனையெயாரு கணப்பொழு ததனில், நீங்கிநீ போவென் றுரன்றிரே டொன்று நெருப்பெழக் கூறி நின்றதுவே. ௬

இனையபற் பலவுஞ் செவிப்புகும் பொழுதி னென்செய்வாள் வெருவினள் மூர்ச்சை, தனையடைந் தீன்ற தந்தையின் கிருகஞ் சார்ந்தன ளுண்டிநித் திரையோர், தினையள வேனு மின்றியே பித்தர் செய்கையை யெய்தின ளப்பால், புனையிழை தன்னை யிருடியாச் சிரமம் புகச்செய்து போந்தனர் தாமும். ௭

மேல்லிய றன்னை மணம்புரிந் தவனும் விருப்புறு மன்னையும் பிதாவும், நல்லமா முனிவ ரிடத்திலோர் மாத நான்குமா தம்மொரு வருடஞ், செல்லுநா ளளவும் விதிமுறை வாசஞ் செய்தனர் வேறுவே றாக, ஒல்லையி லிவர்க ணினைவறிந் தொருபாழ்ங் கிணற்றினிற் றள்ளிநின் றுளித்தே. ௮

அலகைக ளிருந்த வதன்பின்மூ வருங்கா ணதுபோய்த் தேடியே பார்த்து, நிலவரங் கண்டு வெய்துயிர்த் தெடுத்து நின்றனர் முப்பது வருடஞ், செலவரி திதன்முன் செய்தபுண் ணியத்தாற் சேர்ந்தனர் வெள்ளெருக் கிலகி, நலமிக வளிக்கும் வனத்திலப் பொழுதி னடுங்கியே நின்றன புறம்பின். ௯

கண்ணுவ முனிவ னச்சிர மத்தின் கடைப்படு வடதிசை யதனின் எண்ணமுங் குலைந்தே யவையெலா மேங்கி நின்றபின் கணங்குழைப் பதியை, வண்மைசே ரொழுக்க முறைமையாற் றொழுது வணங்கின ளதிசயித் தம்மா, பெண்ணணங் கவளை யீன்றவ ரிருந்த பெரியவே தியர்பதம் பணிந்து. ௮

எ. அரம் – பாதாளம், அது தாழ்ந்த இடத்தை யுணர்த்திக் கிணறு என்பதைச் சுட்டிநின்றது.

கேட்டனர் தலத்தின் மகிமையை மறையோர் கெழுமுசித் தாமுத தீர்த்தம், வாட்டடங் கண்ணுண் முழுகிடச் செய்ம்மின் வலிமைசேர் பசாசனு காது, நாட்டமூன் றுடைய வயித்திய நாத னற்பதம் பணியுமப் பொழுதின், ஈட்டுசெல் வினையா லிகபரம் வேண்டும் யாவையு மளித்திடு மென்றூர். கூ

திலசநான் மறையோ ருரைத்தவப் படியே தீர்த்தநீ ராடிடச் செய்து, நலமிகும் வில்வக் கிளையினுல் வயித்திய நாதனை யருச் சனை புரிய, இலகுதாய் தந்தை செய்தன ரணங்கு மியற்றியே வலம்வரும் பொழுதிற், சொலமகி ழளிக்குஞ் சடாயுகுண் டத்தின் றூயநீ றள்ளியே யணிந்தாள். க0

ஆரமு தனைய வணங்கிவட் கடுத்த வலகைநோ யன்றியே யச் சோ, கோரமாம் வினைக ளியாவையு நீங்கக் குலவுபே ரின்பமெய் தினர்தஞ், சீரணி விளக்கந் தோன்றிட நின்ற டிகழ்ந்திடு மனைய குண் டத்தின், காரண முணர்ந்து மூவரு மெண்ணிக் கரைபெறு மகிழ்ச்சியைப் பெற்றூர். கக

கரங்குவித் திலக மூவலஞ் செய்து காசினி யதனின்மே லான, வரந்தரும் வயித்திய நாதனை வணங்கி வாழுமூ ரெய்தின ரதனுற், புரந்தரன் முதலாங் கடவுளர் போற்றும் பொற்புறு சடாயுகுண் டத்தின், திரம்பெறு மகிமை யரிதரி தென்றே செப்பின னூரத முனிவன். கஉ

வேறு.

தூய வாய்மைச் சுவாசினி வண்மையை
ஏயு மாறு வகுத்தெடுத் தோதினேன்.
ஆயும் வண்புக ழான்றதுச் சீலனண்
பாயி லங்கு சருக்கம் பகர்வன்மேல். கங

சுவாசினிச்சருக்கமுற்றிற்று.

ஆகூ திருவிருத்தம் கககக.

## ௬௰. துச்சீலச்சருக்கம்

திருந்துகாம் பிலிய மென்னுந் தேசம்வாழ் மறையோன் வேதம்
வருந்துதுச் சீல னென்போன் மத்தநாண் மலர்சேர் பித்தன்
அரும்பலன் கொடுப்ப தென்னென் றனேகமா நிந்தை பேசி
இருந்தனன் சோரன் வீட்டிற் பொருள்கவர்ந் தெழிற்றீயிட்டான்.

ஆரிய ரன்றிச் சுற்றத் தார்களு மவனைத் தள்ளிப்
பூரியா போவென் றூரின் புறத்தினில் விடுத்தா ரன்னோன்
பாரிபுத் திரர்பின் போதப் பற்பல வூர்க டோறும்
ஓரியை யொத்துக் கூப்பிட் டோடியே திரிந்தி ரந்தான். ௨

வழிதனி லிடிவீ ழுந்து மாய்ந்தனள் பாரி யன்னாள்
அழியுமுன் மைந்தன் கூட விழுந்திறந் தனனொ ழிந்து
செழியகா னகத்திற் சின்னா டிரிந்தன னதன்பின் செவ்வி
பொழிதரும் வயித்திய நாதம் போந்துபூங் கோயில் சேர்ந்தான். ௩

சிலபகல் சென்ற பின்பு திருந்துமஞ் சனமெ டுக்கும்
இலகிய பணிதான் செய்தே யிருந்தன னவனைத் தூய்
நலமிகு மெதிவ யிற்றி னோய்நலி துன்ப முள்ளான்
குலவுபுண் ணியவி பூதி குண்டநீ றிடுக வென்றான். ௪

செவியினிற் கேளான் போன்றே யிருந்துபின் றேடிப் பார்த்துப்
புவியினின் மருந்து வாங்கித் தின்றிடிற் போமெ டுத்துக்
குவியுமிச் சாம்ப லுன்றன் கொடியநோய் தீர்ப்ப தில்லை
விவிதமாப் பணம்ப றிக்க வேண்டியே வைத்தா ரென்றான். ௫

ஆங்கிகழ்ந் தெடுத்து ரைக்கு மம்மொழி யுணர்ந்து நின்று
தாங்கருங் கோபந் தன்னாற் சபித்தனன் கஞ்சி வந்து
வேங்கையாய்ப் பிறப்பா யென்றே வெளியிலவ்வெதிபோமுன்னம்
நீங்கின னரவந் தீண்டி நெடியவப் பாவி யம்மா. ௬

துணைவினி னரகந் தன்னிற் றோய்ந்திடத் தள்ளி விட்டார்
அணையவ னரகின் வீழா தருஞ்சிவ பணிமுன் செய்த
வினைவச மதனான் மேன்மை விளங்குருச் சுண்மா மூதூர்
தனையனாந் தடல்செ ழித்த தழல்விழி யுழுவை யானான். ௭

---

௪. எதி — சந்நியாசி. ௫. விவிதம் — பலவிதம்.

தேடரு மகிமை பெற்றுத் திகழுமத் தலத்தில் வெய்ய
வேடனவ் விபூதி குண்ட நீறுமே னியின ணிந்து
காடதிற் புகுந்தான் கண்டு பிடித்ததக் கனற்கண் வேங்கை
ஓடினன் குத்தித் தள்ள வொழிந்ததவ் வுருவ மன்னோ. அ

நிறம்பொலி விபூதி குண்ட நீறுபட் டிறந்த வாற்றூற்
சிறந்திடும் விமான மேறிச் சிவகணஞ் சூழ வெள்ளிப்
பிறங்கல்வீற் றிருந்தான் மிக்க பெருமைசேர் குண்ட மேன்மை
கறங்குநீர் கடல்சூழ் பாரிற் கணிப்பரி தன்றோ வென்றான். கூ

இலகிய வெதிவி பூதி குண்டநீ றணிந்தி ருந்து
கலதைசெய் வியாதி நீங்கிக் கருணைசெய் வயித்திய நாதன்
நலமிகு பொற்றாள் போற்றி நவிலரு மகிழ்ச்சி கூர்ந்து
சிலபகல் வாசஞ் செய்து திருந்துமாச் சிரமஞ் சேர்ந்தான். க0

வேறு.

துலங்கும் வண்புக ழோங்குதுச் சிலநல்
நலங்கொள் வாய்மைச் சருக்க நவின்றனன்
உலங்கொ டோளுதங் கன்னுயர் மான்மியப்
பலன்பு கன்ற சருக்கம் பகர்வன்மேல். கக

துச்சீலச்சருக்க முற்றிற்று.

ஆகூ திருவிருத்தம் ககஉஉ.

---

## சுக. உதங்கச்சருக்கம்

பின்னரும் விபூதி குண்டப் பெருமையைச் சூத னென்னும்
நன்முனி வரன்பு கன்றா னுன்மறை யுணர்ந்து நித்ய
கன்மநன் கியற்றிக் காமக் குரோதநீத் தண்ணல் பாதம்
பன்முறை பணிவோன் சீடர் பரிவுகூர் தாவி ருந்தான். க

---

க0. கலதை — கலக்கம். கக. துச்சீலச்சருக்கம் நல் நலங்கொள் வாய்மைச்சருக்கம் எனத்தனித்தனி கூட்டுக.

சற்குண மறையோன் சீட ெனுருவன்றாழ் கயநோ யுற்றுப்
பற்பல துயரு ழந்து வருந்தியே குருவைப் பார்த்துச்
சொற்பெறு கால மூன்றுந் தெரிந்திடுந் தூயோ யிந்நோய்
அற்பக லொழியா தென்னை யடுத்ததை யருள்செய் யென்றான்.

வேறு.

முன்புவை சியனீ மூர்க்க நடைமிகு துரோகி பூசை
அன்புடன் செய்வோர் தம்மை யகந்தையா லிகழ்ச்சி செய்தாய்
தென்புவி யாளுங் கால தூதுவர் சினத்து வந்து
பின்பிடித் திழுத்து வெய்ய பெருநர கத்தில் வீழ்த்தார். ௩

ஆங்கது நீங்கி நாயாய்ப் பிறந்தனை யதன்பின் வந்து
பாங்குள மறைக்கு லத்தி லுற்பவித் தனையப் பாவத்
தோங்கினை கயநோய் தீரு முபாயமொன் றுரைப்பன் கொன்றைத்
தேங்கமழ் வயித்திய நாதன் செவ்விசேர் தலத்தைச் சேர்ந்து. ௪

நிறைந்திடும் விபூதி குண்ட நீற்றினை யணிந்த போதில்
குறைந்துநீங் கிடுமற் றென்றாற் கொடியநோய் தீரா தென்றே
அறைந்தன னனைய மேன்மைத் தலந்தனை யடுத்து வெண்ணீ
றிறைந்திடப் பத்தி யின்றி யெடுத்தவ னுடலி விட்டான். ரு

அடுத்திடும் வியாதி தீரக் கண்டில னசான் றன்னைக்
கடுத்துடல் வெளுத்த தன்றிக் காரிய மில்லை யென்று
தொடுத்தன னனேகம் வார்த்தை துகளுறு சாம்ப லென்ன
கொடுத்திடு மென்றி கழ்ந்து கொடுமொழி பின்னுஞ் சொன்னான்.

ஊத்துரத் துதங்கன் கூறும் வெய்யசொற் பொறுமை லுள்ளத்
திரக்கமில் பாவி காக மாகுவை யென்று சாபம்
அரைக்கணப் பொழுதுந் தாழா திட்டன னவன்வ லாரி
புரத்தினிற் பிறந்து கோயிற் புறத்திலோர் மரத்தி ருந்தான். எ

எ. வலாரிபுரம் — இந்திரநகரம். இந்திரன் பூசித்ததலமாதலின் வலாரிபுரம் எனப்பட்டது. அது 'இந்திரன் பூசைசெய்த, துய்யநாதன்' என முன்னற்கூறுமாற்றானு நன்கு விளங்கும். இதுவே கண்ணார்கோயில் என்னுந் தேவாரம் பெற்ற தலம். இக்காலத்துக் குறுமாணிகுடி என வழங்குகின்றது.

உத்தம மறையோன் சித்தா முதப்புன லுதய காலம்
பத்திமீ தூர மூழ்கிப் பனிமதி யணிந்த வேணி
நித்தியன் றனைப்ப ணிந்து நிறைந்திடும் விபூதி குண்டச்
சுத்தநீ றணிந்து மீதி கொண்டுதன் னகர்க்குச் சென்றான். அ

எய்தும்வே தியன்ம கிழ்ந்தே யிந்திரன் பூசை செய்த
துய்யநா தனைவ ணங்கிச் சூரிய தீர்த்தப் பாங்கர்ப்
பையவத் தண்ட நீற்றுப் பரியபொக் கணத்தை வைத்துப்
பொய்கைபிற் றீர்த்த பானம் பண்ணுதற் கெழுந்து போந்தான்.

அத்தகு பொழுதிற் காக மனையபொக் கணத்தை மூக்காற்
கொத்திச்ட குண்ட நீறு பட்டதாற் கொடியாந் தேகஞ்
சுத்தமாய நீங்கித் தேவர் சூழ்ந்திட விமான மேறி
நித்தன்வாழ் கயிலை சார்ந்து நிலைமைபெற் றிருந்த னம்மா. கo

இப்படி யனேகம் வாய்மை யெய்திய விபூதி குண்ட
மெய்ப்பெரு மேன்மை தன்னை விதிவழா துறுதி யாகச்
செப்பினன் புராண மூவா றுணர்ந்துளந் தெளிந்த தூயோன்
ஒப்பருந் தவத்தோ ரெல்லா முயர்பெரு மகிழ்ச்சி பூத்தார். கக

உதங்கச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் ககஙஙு.

---

# புள்ளிருக்குவேளூர்ப்புராணம்

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

# பிழைகள் திருத்தங்கள்.

| பக்கம் | பாட்டு | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| ௨௦ | ௨௨ | ௩ | தன்னினைந்த | தன்னினினைந்த |
| ௪௦ | ௬௮ | ௪ | பொன்கலம் | பொன்கல் |
| ௪௭ | | ௨௮ | தலவிசேடச் | தலமகிமைச் |
| ௫௫ | ௫ | ௧ | மத்ததி | தத்தி |
| ௯௮ | ௭ | ௧ | ஆகவங் | ஆங்கவ |
| ௧௨௮ | ௧௭ | ௨ | வாகத் | வாகவக் |
| ௧௩௪ | ௧௨ | ௪ | கயகண்ணி | கயற்கண்ணி |
| ௧௫௦ | ௩ | ௪ | செமபொன் | செம்பொன் |
| ௧௬௪ | ௯ | ௩ | வாய்ந்த | வாய்ந்த |
| ௧௬௫ | ௧௯ | ௨ | களுந் | களுந் |
| ௧௯௭ | ௧௦ | ௨ | கொத்திக்ட | கொத்திடக் |

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

வைத்தீசுரன்கோயில்

ச. சோமசுந்தரதேசிகர்

இயற்றிய

# புள்ளிருக்குவேளூர்ப்

# புராணவசனம்.



மேற்படியாரால்

சென்னை கந்தன் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1929.

# சருக்கவகராதி.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# புள்ளிருக்குவேளூர்ப்புராணவசனம்



புள்ளிருக்குவேளூர்ப்புராணஞ் செய்யத் தொடங்கிய ஆசிரியர், தாமெடுத்துக்கொண்ட புராணம் இடையூறின்றி இனிது முடிதற் பொருட்டும், பெரியோ ரொழுக்கம பேணுதற் பொருட்டும், மாணுக்கர்க்கு அது தப்பாமற் செய்தல் வேண்டுமென்று அறிவித்தற் பொருட்டும் செய்யுள் ரூபமாகக் கூறிய விநாயகர் காப்பு முதலியவற்றை யாம் ஈண்டு வசன ரூபமாகக் கூறுகின்ருேம்.

கற்பகப்பிள்ளையார்காப்பு

க. திங்கட் கண்ணியுங் கொன்றைப் பூவுஞ் செஞ்சடைச் சேர்த்த "சிவனெனு நாமந் தனக்கே யுடைய செம்மேனியெம்" கோமானும், நித்தியானந்தரும், ஞான சொரூபருமாகிய வைத்தியலிங்கப் பெருமான், தயிரில் நெய் போலச் சர்வ சங்கார காலம் வரையும் விளங்கி நின்று அடியார்கள் செய்யும் வழிபாட்டை யேற்று அருள்புரியு மகத்துவம் வாய்ந்த, புள்ளிருக்குவேளூர்ப்புராணத்தை, இனிய செந்தமிழாற் கூறுதற்கு இடையூறு வாராதவண்ணங் கற்பகப் பிள்ளையார் பொற்பதத்தை யாந் தியானிப்பாம்.

## கடவுள்வணக்கம்

காப்புக் கூறிய ஆசிரியர் "வாழ்த்து வணக்கம் வருபொருளுரைத்தல்" என்னும் இலக்கண விதி பற்றிக் காவியத்திற் கங்கமாகிய வணக்கத்தை முன்னும் வாழ்த்தைப் பின்னும் கூறுகின்றார்.

### வணக்கம்

### வைத்தியலிங்கப்பெருமான்

௧. திருமாலும், திசைமுகனும், ஏனைத் தேவர்களும், சனகர், சனந்தரர், சனாதரர், சனற்குமாரர் முதலிய முனிவர்களும், மற்றை மானுடரும் புள்ளிருக்கு வேளூரிற் போந்து தம்மைப் போற்றவும், அதனாலவர் ஆணவமலம் நீங்கி வீடு பெறவும், தம்மை வணங்குவோர்க்குள்ள வியாதி நீங்கத் திருச்சாந்துண்டை யென்னும் மருந்து கொடுத்துக் கருணை செய்யவுந் திருக்கைலாசமலையினின்றும் புள்ளிருக்குவேளூருக்கு எழுந்தருளிவந்த வைத்தியலிங்கப்பெருமானுடைய திருப்பாதங்களை யாம் நமஸ்கரிப்பாம்.

### தையனாயகியம்மை

௨. சச்சிதானந்த சொரூபமும், நித்தியானந்தமுமுடையராய், சகல லோகங்களுக்கு மாதாவாய், சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகம் என்னும் ஐந்தொழிற்குங் காரணியாய், உமை, வாலாம்பிகை என்னுந் திருநாமங்களையுடையராய்ப் புள்ளிருக்குவேளூரில் விளங்கி வீற்றிருந்து, சகல லோகத்தாரும் உய்யும்வண்ணம் பெருங் கருணை பொழியும் தையனாயகியம்மையாரது திருவடிகளைச் சிரமீது சூடி யாம் வணங்குவாம்.

## வினைதீர்த்தவிநாயகர்

௩. தையனுயகியம்மையின் மூத்த குமாரரும், இளம் பிறையும், ஒரு கோடும், சிந்துரந் தீட்டிய சுந்தர முகமும், கருணை மதமும் உடையவரும், புள்ளிருக்குவேளூரில் எந் நாளும் வீற்றிருப்பவருமாகிய வினைதீர்த்தபிள்ளையாரின் திருப் பாதங்களை யாஞ் சிரமீது சூடி நமஸ்கரிப்பாம்.

## குடவறைவிநாயகர்

௪. மோட்சத்தைக் கேட்டு மனமகிழ்கின்ற அன்பருக் குப் புறவிருளைப் போக்கும் பூதசூரியன்போல அகவிருளைப் போக்கும் ஞானசூரியராய் வரங்கொடுத்து நிலைபெற்றிருக் கின்ற தலைவரும், தம்மை யடைந்த அடியவரை மேலாகிய சிவஞானச் செல்வரென்று சொல்லும்படி செய்கின்ற சித்தி விநாயகருமாகிய குடவறை விநாயகருடைய திருவடிகளைச் சிரமீது வைத்து நமஸ்கரிப்பாம்.

## குமரகுருபரசுவாமி

௫. சகல லோகத்தாரும் வணங்க அவர்களைத் தாங்கு கின்ற இரண்டு பாதாரவிந்தங்களும், பெருங்கருணை பொழி கின்ற ஆறுதிருமுகங்களும், கடப்பமலர்மாலை யணிந்த பன் னிரண்டு திருப்புயங்களும், தம்மிடத்து விளங்க வீற்றிருக் கின்றவரும், காங்கேய னென்னுந் திருநாமமுடையவரும், பரிதிபுரியைவாழ்விக்கின்றவருமாகிய குமரகுருபர சுவாமியை யாந் தியானிப்பாம்.

## முத்துக்குமாரசுவாமி

௬. தேவர், சிறையினின்று மீளவும், உலகமெல்லாம் வாழவும், சுவர்க்கலோகத்தை இந்திரனுளவும், சூரன்மார் பம் போழவும், திருக்கரத்திலே வேலைத் தாங்கிய முத்துக் குமாரசுவாமியின் திருவடிகளை யாந் தியானஞ் செய்வாம்.

## திருநந்திதேவர்

எ. திருநீறணிந்த திருமேனியும், உபவீதந் தரித்த திருமார்பும், சிவந்த திருச்சடையும், மூன்று திருக்கண்களும், நான்கு திருக்கரங்களும், மானும், மழுவும், வாளும், பிரம்பும், தம்பால் விளங்க, கைலாச மலையைக் காத்துச் சிவாஞ்ஞையாகிய செங்கோலை நடாத்துகின்ற திருநந்திதேவருடைய திருவடிகளை யாந் தலையால் வணங்குவாம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

அ. நின்றசீர்நெடுமாறனுடைய வெப்புநோய் நீங்கவும், கூன் நிமிரவும், சமண ரொழியவும், பதினென்குலகத்தாரும் வணங்கித் துதிக்கவும், திருவெண்ணீற்றைத் திருமடைப் பள்ளியினின்றும் எடுப்பித்து மாறனென்னும் பரியாயப் பெயரையுடைய அப்பாண்டியனுக்குத் தரித்துச் சைவசமயத்தை விளங்கச் செய்தவரும், "ஊழிக்கடல் உலகெலாங் கொளினுங் காழியுட் புகா"தென்றுதேவாரத்துள் திருவாய்மலர்ந்தருளினவரும், கௌணியகோத்திரத்தை விளக்கும் இரத்தினதீபம் போன்றவருமாகிய திருஞான சம்பந்தப்பிள்ளையாரை யாம் தியானஞ் செய்வாம்.

## திருநாவுக்கரசுநாயனார்

கூ. சமணர் தாங்களுண்டாக்கிய நீற்றறையில் தம்மை வைத்தலும், நஞ்சு கலந்த பாற்சோற்றைத் தமக்குக் கொடுத்தலும், தம்மைக் கொல்லும்படி யானையைத் தமக்கெதிரே விடுத்தலும், தம்மைக் கல்லோடு சேர்த்துக் கட்டிக் கடலுட் படுத்தலும், ஆகிய தீங்குகள் அடியாராகிய தம்மை யணுகாதென்னும் பெருமையை உலகத்தா ரறியும்வண்ணம் பிரத்தியட்சமாக அறிவித்துக் கடலிலே கல்லே தோணியாக மிதப்ப அதன்மேலிருந்து கரை சேர்ந்த திருநாவுக்கரசுநாயனா

ருடைய திருவடிகளை, பிறவிப் பெருங் கடலினின்றும் முத்திக் கரையிலேறும் பொருட்டு யாந் தியானிப்பாம்.

### சுந்தரமூர்த்திநாயனார்

க0. எமது சிவபெருமான் தமது திருவடிகள் வருந்தப் பரவைநாச்சியார் மாளிகைக்கு அத்தயாமத்திலே ஏவலாளாகத் தூது செல்லும்படி ஏவிய சுந்தரமூர்த்திநாயனாருடைய பொன்போன்ற அருமையும் பெருமையு முடைய திருவடிகளை யாம் வணங்கி வாழ்த்துவாம்.

### மாணிக்கவாசகசுவாமிகள்

கக. அரிமர்த்தனபாண்டியனுடைய செங்கோலை நடாத்தும் முதன்மந்திரியும், அரசனுக்குக் குதிரை வாங்குதற்குக் கொண்டு சென்ற பொருள் முழுதும் திருப்பணியிற் செலவழித்தவரும், திருவாசகம் திருக்கோவையார் என்னுந் திருமுறைகளைச் செய்தவருமாகிய திருவாதவூரடிகளை யாம் வணங்குவாம்.

### சண்டேசுரநாயனார் முதலியோர்

கஉ. மண்ணியாற்றங்கரையிலே, இடையறாத விருப்பங் கொண்டு, சிவபெருமான் றிருமுடிமீது பால் சொரிந்தபிடேகஞ் செய்தவரும், அப்பொழுது பாற்குடத்தைக் காலாலுதைத்த பிதாவின் காலை மழுவால் வெட்டி மிகுமேன்மை பெற்றவருமாகிய சண்டேசுர நாயனாருடைய திருவடிகளையும், ஏனைச் சிவனடியார்களுடைய திருவடிகளையும் யாஞ் சிரமேற் கொள்வாம்.

### புள்ளிருக்குவேளூரைப்புந்திவைக்குந்திருத்தொண்டர்

கந. வெள்ளெருக்குவனத்திலே, விளரிப்பண்ணை, கள்ளருந்தும் வண்டினங்கள் கவின் பெறப்பாடும் விண்ணளக்கும் பூஞ்சோலை விரிந்த புள்ளிருக்கு வேளூரைப் புந்திவைக்

குந் திருத்தொண்டர்களுடைய, திருப்பாதங்களை யாஞ் சிந்தை வைத்து வணங்கி வாழ்த்துவாம்.

## வாழ்த்து

கச. உலகமெல்லாம் அரசனது நீதி நீடூழி வாழுக. அதனல் வேதப்பிராமணர்கள் யாகங்களை விதிப்படி செய்க. அதனல் முகில் மாதம் மும்மழைபெய்க. அதனல் முறை பிறழாது கற்ற கல்வியும், நுண்ணறிவுமுடைய வித்துவான்கள் எங்குஞ்சூழுக. அதனல் இராசாங்கத் தமர்ந்த சைவமோங்கி விளங்குக.

## நூற்பயன்

கரு. திருவிளங்கிய சீர்சால் இந்நிலவுலகத்திலே புகழ் விளங்கிய புள்ளிருக்கு வேளூர் மான்மியத்தை, அன்பு வைத்துப் படிப்போருங் கேட்போரும் அளவிடற்கரிய செல்வத்தினராய், எதிர்த்துவரும் பகையை வெல்லுபவராய், வித்தை விரும்பும் மக்களைப் பெறுபவராய், அரோகதிடகாத்திரராய் வாழ்ந்து, முடிவிலே சிவபெருமான் றிருவடியைப் பெற்றுப் பேரானந்த முற்றிருப்பார்கள்.

## அவையடக்கு

கசு. எனது தமிழ்ப்பாடல் வித்துவ சபையின் முன், பூரண சந்திரனுக்கு முற்பட்ட நட்சத்திரம்போல விளக்கமுறுமெனப் பாடா தொழியக்கருதினேனுயினும், என்னுடைய மனத்திற் பொருந்திய பேராசையானது நீ! இதனைப் பாடுக வென்று பிடர்பிடித்துந்துதலினல் யான் அதன் வசப்பட்டு நின்று, சிவபெருமானுடைய மகிமை என்பாடலிற் கலக்கப் பெறுதலின், வித்துவான்கள் எனது சொற்குற்றம் நோக்காது அம்மகிமைப் பொருட்குணம் நோக்கிக் கைக்கொள்வரெனத் துணிந்து, இப்புராணத்தை அவர் முன்பு பாடுவேனுயினேன்.

## கடவுள்வணக்கமுற்றிற்று

# பாயிரம்.



கடவுள் வணக்கமும், வாழ்த்தும், நூற்பயனும், அவை யடக்கும் கூறிய ஆசிரியர், இப்பாயிரத்தால் புராண வரலாற்றை முன்னர்க் கூறி, இப்புராணத்தில் விரித்துக் கூறுஞ் சரித்திர வரலாறுகளைப் பின்னர்த் தொகுத்துக் கூறுகின்றார்.

## புராணவரலாறு

திருக்கைலாசபதியாகிய சிவபெருமான் ஆதியிலே பதி னெண்புராணங்களையும் திருநந்தி தேவருக்குத் திருவாய் மலர்ந்தருள, அவர் சனற்குமாரருக்கும் சனற்குமாரர் சத்திய வதியின் புத்திரருக்கும் உபதேசித்தனர். அவர் சூதமுனிவ ருக்கு உபதேசித்தார். சூதமுனிவர் யாவருங் கதிபெற நைமிசாரணிய முனிவர்களுக்கு உபதேசித்தருளினார்.

பதினெண்புராணங்களாவன :—1. பிரமபுராணம், 2. பதுமபுராணம், 3. விஷ்ணுபுராணம், 4. சைவபுராணம், 5. பாகவதபுராணம், 6. பவிடியபுராணம், 7. மார்க்கண்டேய புராணம், 8. நாரதீயபுராணம், 9. ஆக்கினேயபுராணம், 10. பிர மகைவர்த்தபுராணம், 11. இலிங்கபுராணம், 12. வராகபுரா ணம், 13. காந்தபுராணம், 14. வாமனபுராணம், 15. கூர்ம புராணம், 16. மற்சபுராணம், 17. காருடபுராணம், 18. பிர மாண்டபுராணம், என்பனவாம். இப்பதினெட்டும் நான்கிலக் கங்கிரந்தமுடையன.

இவற்றுள் சிவபுராணங்கள் மூன்றிலக்கங்கிரந்த முடை யன. விஷ்ணுபுராணம், பிரமபுராணம், சூரியபுராணம், ஆக்கி னேயபுராணம் என்னும் நான்கும் ஓரிலக்கங்கிரந்தமுடையன.

சிவபுராணங்களாவன :—1. சைவபுராணம், 2. பவிடிய புராணம், 3. மார்க்கண்டேயபுராணம், 4. இலிங்கபுராணம், 5. காந்தபுராணம், 6. வராகபுராணம், 7. வாமனபுராணம், 8. மற்சபுராணம், 9. கூர்மபுராணம், 10. பிரமாண்டபுராணம் இப்பத்துமாம்.

விஷ்ணுபுராணங்களாவன :—1. வைணவபுராணம், 2. காருடபுராணம், 3. நாரதீயபுராணம், 4. பாகவதபுராணம் இந்நான்குமாம்.

பிரமபுராணங்களாவன :—1. பிரமபுராணம், 2. பதுமபுராணம் இவ்விரண்டுமாம்.

சூரியபுராணமாவது :—பிரமகைவர்த்தபுராணம் இவ்வொன்றேயாம்.

அக்கினிபுராணமாவது :—ஆக்கினேயபுராணம் இவ்வொன்றேயாம்.

சிவபுராணம்பத்தினுள், காந்தபுராணம் ஓரிலக்கங் கிரந்தமும், ஆறுசங்கிதையும், ஐம்பதுகாண்டமும் உடையது. ஆறு சங்கிதைகளாவன :—1. ஐம்பத்தையாயிரங் கிரந்தமுடைய சனற்குமார சங்கிதை, 2. ஆறாயிரங் கிரந்தமுடைய சூத சங்கிதை, 3. முப்பதினாயிரம் கிரந்தமுடைய சங்கரசங்கிதை, 4. ஐயாயிரங் கிரந்தமுடைய விண்டுசங்கிதை, 5. மூவாயிரங் கிரந்தமுடைய பிரமசங்கிதை, 6. ஆயிரங் கிரந்தமுடைய சூர சங்கிதை என்னு மிவ்வாறுமாம்.

சூதமுனிவர் பதினெண் புராணங்களுள் பவிடியம், பிரமாண்டம், காந்தம், சைவம் என்னும் நான்கு புராணத்தினின்றும் புள்ளிருக்குவேளூர்மான்மியத்தை வெவ்வேறாக எடுத்துத் திரட்டி நைமிசாரணிய வாசிகளுக்குச் சிறப்பாகவும், உபதேசித் தருளினார்.

புராணவரலாறு கூறிய ஆசிரியர் பின்னே விரித்துக் கூறுஞ் சரித்திர வரலாற்றை இங்கே தொகுத்துக் கூறுகின்றார்.

## சரித்திரவரலாறு.

கடவுள்வணக்கம், பாயிரம், நாட்டுச்சிறப்பு, நகரச்சிறப்பு என்னுமிவைகளை விடுத்து, 1. நைமிசாரணியச்சருக்கம், 2. தலமகிமைச்சருக்கம், 3. சித்தாமிர்ததீர்த்தச்சருக்கம், 4. இருடியர் முறைமைகூறியசருக்கம், 5. கங்கைபாவந்தீர்ந்தசருக்கம், 6. மாதபலன்கூறியசருக்கம், 7. தருப்பணபலன்கூறியசருக்கம், 8. தக்கனருள்பெறுசருக்கம், 9. இரணியவன்மச்சருக்கம், 10. சதானந்தச்சருக்கம், 11. புருடனைக்கொன்றபாவந்தீர்ந்தசருக்கம், 12. பாரியைக்கொன்ற பாவந்தீர்ந்தசருக்கம், 13. சத்தியசன்மச்சருக்கம், 14. முனிவர்தீர்த்தச்சருக்கம், 15. வீரகத்திதீர்ந்தசருக்கம், 16. பிரம தீர்த்தச்சருக்கம், 17. சூரிய தீர்த்தச்சருக்கம், 18. தக்கதீர்த்தச்சருக்கம், 19. வித்தியாதர தீர்த்தச்சருக்கம், 20. சுதரிசனன்சாபநீங்குசருக்கம், 21. வில்வ தீர்த்தச்சருக்கம், 22. கௌதமதீர்த்தச்சருக்கம், 23. கபில தீர்த்தச்சருக்கம், 24. சோமதீர்த்தச்சருக்கம், 25. பராசரதீர்த்தச்சருக்கம், 26. இராமதீர்த்தச்சருக்கம், 27. துசீலச்சருக்கம், 28. ஆதிகாவேரிதீர்த்தச்சருக்கம், 29. கந்தருவர்சாபநீங்குசருக்கம், 30. மிருதசஞ்சீவனதீர்த்தச்சருக்கம், 31. சனார்த்தனச்சருக்கம், 32. சூலதீர்த்தச்சருக்கம், 33. சேடதீர்த்தச்சருக்கம் 34. எண்டிசைத்தீர்த்தமகிமைச்சருக்கம், 35. இந்திரன் சாபநீங்குசருக்கம், 36. துருவாசர்பிராந்திதீர்ந்தசருக்கம், 37. அங்கசந்தானமகிமைச்சருக்கம், 38. சிவதன்மன்பிரமராட்சசுநீங்குசருக்கம், 39. திருச்சாந்துண்டைசெய்முறைமை கூறியசருக்கம், 40. செவ்வேள்திருவவதாரச்சருக்கம், 41. செவ்வேள்வரம்பெறுசருக்கம், 42. சங்கரன்தலமகிமைகாட்டிய சருக்கம், 43. தாரகன் போர்புரிசருக்கம், 44. தாரகன்

வதைச்சருக்கம், 45. அசரீரிவாக்களித்தசருக்கம், 46. தேவ ரருச்சனைசெய் சருக்கம், 47. வாலாம்பிகை யருச்சனைசெய் சருக்கம், 48. திருவிழாச்சருக்கம், 49. குமரநாயகனருச் சனைசெய்சருக்கம், 50. ஆதித்தனருச்சனைசெய்சருக்கம், 51. வேதமருச்சனைசெய்சருக்கம், 52. அங்காரகனருச்சனைசெய் சருக்கம், 53. சந்திரனருச்சனைசெய்சருக்கம், 54. சடாயுவருச் சனைசெய்சருக்கம், 55. காலவச்சருக்கம், 56. சித்திரகேதுச் சருக்கம், 57. வீரசேனச்சருக்கம், 58. சீலவிருத்தச்சருக்கம், 59. சுவாசினிச்சருக்கம், 60. துச்சீலச்சருக்கம், 61. உதங்கச் சருக்கம் ஆகச் சருகத்தொகை அறுபத்தொன்று. அவற்றைச் சூதமுனிவர் திருவாய் மலர்ந்தருளியபடி யானுங் கூறுகின்றே னென்று கூறிய வழிநூலாசிரியர் நாட்டுச்சிறப்புக் கூறத் தொடங்குகின்றார்.

பாயிர முற்றிற்று

# திருநாட்டுச்சிறப்பு.



"பாயிரமில்லது பனுவலன்றே" என்னும் விதிபற்றிப் பாயிரங் கூறிய ஆசிரியர் நாட்டுவர்ணனையுங் காவியத்திற்கு அங்கமெனக் கூறும் இலக்கணம் பற்றி நாட்டு வர்ணனை கூறத் தொடங்குகின்றார்.

சோணாடு

சோழநாடு, உமாதேவியார் பற்பல தலங்களிலே சிவ பெருமானைப் பூசிக்கப்பெற்றது. நல்லறிவும் நல்லொழுக்கமு முடைய பெரியோர்களும் இரப்பவர்க்கில்லை யென்னுதீயும் பெருங்குடி வள்ளல்களும் வசிக்கப் பெற்றது. தஞ்சமென வந்திடு சிறுபுறவின் பொருட்டுத் தயை பெரிதுமுடைய

சிபிச்சக்கிரவர்த்தி தன்தசையை அரிந்து வேடனுக்குக் கொடுக்கப் பெற்றது. மனுநீதிகண்டசோழன் தன்னேக புத்திரன் தேர்மீதேறி வீதியிற் செல்லும்பொழுது ஒரு பசுக்கன்று அவனை யறியாமற் றுள்ளிக்கொண்டு வந்து தேர்க் காலிற் பட்டிறந்தமையால் அவனையுந் தேர்க்காலின்கீழ் வைத்தூர்ந்து தேவரும் பூமாரிபெய்யச் செங்கோல் செலுத் தப்பெற்றது. மாதமும்மாரி பெய்து குறைவில்லாத பல வளங்களையும் எவர்க்குங் கொடுத்து மிக்க புகழடைந்து அழகு பொலிந்துள்ளது.

## குறிஞ்சி

குறிஞ்சிநிலத்தில் மலையருவிகள் இரத்தினங்களைப் புடைத்துக்கொண்டு நாற்புறத்திலுஞ் சூழுதலும், தலைவனுந் தலைவியும் ஊடல்நீங்கிக் கூடல்மிக்கு உவகையிற்றிளைத் திருத் தலும், குறத்தியர் தினைக்கதிர் கவருங் கிளிகளை யோட்டுதலும், முருகவேளுக்கு வெறியாட்டயர்தலும், அகின்மரங்களையும், குங்குமமரங்களையும், அகழ்ந்தெறிந்து இரத்தினங்களைப் போ ராகக் குவித்துத் தினை விதைத்தலும் மிக்கிருக்கும்.

## முல்லை

முல்லைநிலத்தில் பஞ்சகௌவியப் பசுக்களும் கான்யாறு களும் சேர்ந்திருத்தலும், தலைவி தலைவனைப் பிரிந்திருத் தலும், இடைச்சியர் மிடாவிற் பசுத்தயிர் கடைதலும், பாற் சோற்றையும் வேறு பல்வகை யுணக்களையும் பரப்பி வைத் திருத்தலும், இடையர்கள் கம்பளத்தினலே தங்கள் உடம் பைப் போர்த்துக் கொள்ளுதலும், கொன்றைக் குழல் வேய்ங்குழல் ஊதுதலும், மழவிளங் கன்றுகள், மேயச் சென்ற தாய்ப்பசுக்கள் வரும் வழியைப் பார்த்துக் கொண்டு நின்று உருகுதலும் மிக்கிருக்கும்.

### நெய்தல்

நெய்தனிலத்தில் பலவிதமீன்குவைகள் செறிதலும், தலைவரைப் பிரிந்த தலைவியர் அவரை நினைந் திரங்குதலும், பரத்தியர் முத்துக்களைக் குவித்தலும், பரதவர் சுறுமுள்ளை நட்டு வருணனுக்கு விழாச் செய்தலும், கடற்கரையிற் பரந்த வெண்மணல் நிலாவீச அதன் பக்கத்திற் பொருந்திய கருங் கடல் இருள் பரந்தாற் போன்றிருக்க அவ்விரண்டற்கும் மத்தியிற் பொருந்திய பவளக்கொடியினடுவிலே கண்கள் பொருந்திய வலைக்குவியல்கள் சூழ்ந்துகிடத்தலும் மிக்கிருக் கும்.

### மருதம்

மருதநிலத்தில் காவிரிப் புனலும் புகழும் பரத்தலும், தலைவனுந் தலைவியும் ஊடுதலும், கடைசியர்கள் தூற்றுத நெல்லைக் குவித்தலும், குவித்த நெல்லைக் கொழித்தலும் இந் திரனைக் குறித்து வள்ளைப்பாட்டுப் பாடுதலும், வண்டுக ளாகிய பாடகர் சூழ்ந்து மருதப்பண்ணைப் பாட, தாமரைக ளாகிய தாதாக்கள் அதனைக் கேட்டு உபகாரமாகத் தேனைச் சொரிதலும், நீரோடைகளிலேயுள்ள வள்ளையிலைகளை எருமை களுண்டு நித்திரைசெய்தலும் மிக்கிருக்கும்.

## நிலமயக்கம்

### குறிஞ்சியும் முல்லையும்

ஒருபாற் குறிஞ்சிநிலமும், முல்லைநிலமும் கலத்தலாற் குறிஞ்சிநிலக்கருப்பொருளாகிய மயில் முல்லைநிலக் கருப் பொருளாகிய காயாமரத்திலிருந்து கலாபத்தை விரித்தாடுதல் கண் ணுக் கழகா யிருக்கும்.

### நெய்தலும் மருதமும்

ஒருபால் நெய்தனிலமும், மருதநிலமும் கலத்தலால் மருதநிலக்கருப்பொருளாகிய தாமரையிலிருக்கும் வண்டின்

கூட்டங்கள் நெய்தனிலக்கருப்பொருளாகிய தாழைமலரின் மகரந்தத்தைக் குடைந்து அதனைத் தம்மீது அப்பிக்கொண்டு செவ்வழிப்பண்ணைப் பாடுதல் காதுக்கு இனிமையா யிருக்கும்.

## நான்கு நிலங்கள்

ஒருபால் குறிஞ்சி, முல்லை, நெய்தல், மருதம் என்னும் நான்கு நிலங்களும் ஒருங்கே கலந்த கலப்புநிலங்களும் மிக்கிருக்கும்.

## பாலை

ஒருபால் நான்கு நிலத்துள் "முல்லையுங் குறிஞ்சியும் முறைமையிற் றிரிந்து, நல்லியல் பழிந்து நடுங்கு துயருறுத்து, நண்பகற் பொழுதொடு விரவிப் பாலை யென்பதோர் படிவங் கொண்" டிருக்கும்.

## நானிலமாக்கள் வாழுநிலங்கள்

ஆறலைத்திடும் பாலைநிலமாக்களும், அத்தொழில் புரியுங் குறிஞ்சி நிலமாக்களும், ஆனேறு மேய்த்திடும் முல்லைநிலமாக்களும், மீனேறுபடுத்திடும் நெய்தனிலமாக்களும், உழுதூண் கொள்ளும் மருத நிலமாக்களும் அவ்வவ் நிலங்களிலே வேறு வேறு குழாங் குழாமாய் விளக்கமுற்று வாழ்வார்கள்.

## முகில் வளப்பம்

வெண்ணிற முகில் நீலநிறக் கடலினைக் குடித்துக் கருநிற முகிலாய்ப் பொன்னென்று சொல்ல மின்னி நல்வள நிறைந்த சையமால் வரைமேல் வெள்ளி விழுதைப் போல நல்ல மழைத் தாரையைப் பொழிந்தது.

சையகிரியினின்றும் இழிகின்ற வெள்ளருவியானது செழித்த மாணிக்கங்களைத் திரைக்கையால் வாரிக்கொண்டு அம்மலையின்மேற் பரந்து சூழ்ந்தோடி அதன் சாரலிலுள்ள

குறிஞ்சிநிலத்தை மலைவாணராகிய குறவர்கள் மனந்தளர்ந்து கூச்சலிடும்படி பிளந்து முல்லைநிலத்திற் சென்றது.

அதிற் சென்ற அருவி குங்குமமரத்தின் கோடுகளை முரித்துச், சந்தனமரங்களைத் தகர்த்து, அகிற்கட்டைகளை எறிந்து, ஆசினிப்பலாவைப் பெயர்த்து மருதநிலத்திற் சேர்ந்தது.

அதிற் சென்ற காவிரிநீர், குறிஞ்சிக்கும் முல்லைக்கும் இடையேயுள்ள பாலை நிலத்தில் இருக்கும் வடவாமுகாக்கினி போலச் சிவந்த பருக்கைக் கற்கள் செறிந்திருந்த நிலப்பிளப்பிற் புகுந்து பாதலத்தினடிவரை ஆழ்ந்து மேலெழுந்து பக்கத்திலே பரந்து சூழ்ந்து அந்நில வெப்பத்தையும் நீக்கிற்று.

பின்னர் நெய்தனிலத்திற் சென்று அது மருதநிலமாகும்படி அதன் உவர் முழுதும் மாற்றிச் சமுத்திரத்தின் புலால் நாற்றமும் மாற்றுதற் பொருட்டு அதிற் சென்றது.

காவிரிநீர் விரைந்தோடி மதகினுள் மோதி வாய்க்கால்களின் இருமருங்கும் வழிந்து தாமரைத் தடாகங்கள், குளங்கள் பலவற்றையும் நிரப்பி வயல்கள் தோறுஞ் சூழ்ந்து நிறைந்து மடைகளை உடைக்கக் கண்ட மள்ளர்கள், விரைந்தோடிப் பரந்து நின்று மகிழ்ச்சியோடு தடைசெய்து எவ்விடங்களிலும் உழுவார்கள். உழுத சேற்றிலே நென்முளைகளை விதைப்பார்கள். கடைசியர்கள் நாற்று முடிகளை யெடுத்துக் கொண்டு வந்து இந்திரனை வணங்கி, வயல்கள் பயிராற் பொலிந்து பயன்றருக வென வாழ்த்தி, மகிழ்ச்சியோடு நடுவார்கள்.

கடைசியர்கள் கள்ளைவார்க்க, மள்ளர் மகிழ்ந்துண்ணும் போது வழிந்து வயல்கள்தோறும் பெருகிய கள்ளை வாளை

மீன்கள் குடித்துத் துள்ளி யெழுந்து மதுமயக்கத்தால் தாமரை மலரில் நித்திரை செய்யும்.

மள்ளர்கள் களைபிடுங்கும் பருவமறிந்து கடைசியர்களுக்குத் தெரிவிக்க அவர்கள் களை பிடுங்கத் தழைந்த நெற்பயிர்கள் கருமுதிர்ந்து வெளிற்றறிவினரைப் போலக் கதிர்த்தலை நிமிர்ந்து மேலு மேலு முயர்ந்து பின் பெரும் பயன் மிக்க அன்பரொருவரை யொருவர் வணங்குதல்போல அரிசியாகிய பெரும்பயன் கொண்டு ஒன்றை யொன்று வணங்கி நின்றன.

நெற்பயிர் விளைந்து வளைந்தமையைக் கண்ட மள்ளர்கள் பலர் பரந்து நின்று அதனை யறுப்பார்கள். பலர் மலைகளைப் போல நெற்போரைச் செய்வார்கள். பலர் எருமைக் கடாக்களை நிரை நிரையாகக் கயிற்றிற் பூட்டி, சூட்டை மிதித்து, அரசனுக்கு ஆறிலொரு பங்கு கொடுத்து, ஐந்து பங்கில் தான தருமங்களுக்கும் வரையறுத்தபடி கொடுத்து எஞ்சிய நெல்லை வண்டியிலேற்றித் தத்தம் ஊர்களுக்குக் கொண்டு போவார்கள்.

திருநாட்டுச்சிறப்புமுற்றிற்று

---

# திருநகரச்சிறப்பு



நாட்டு வருணனை கூறிய ஆசிரியர் நகரவர்ணனையும் காவியத்திற்கங்க மெனக் கூறும் இலக்கண விதிபற்றி நகரச் சிறப்புக் கூறத் தொடங்குகின்றார்.

## புள்ளிருக்குவேளூர்

இத்தகைய வளமும், புகழும் நிறைந்த சோழநாட்டிலே வைத்தியநாத மென்னும் புண்ணிய ஸ்தலம் மாடமாளிகைகள் பொலிந்து பொன்னுலகத்தினும் அழகு மிக்கிருக்கும்.

சந்திரகாந்தத்தாற் செய்த மேடைகளும், பொற்குடங்களிருக்கும் வேதிகைகளும், நவரத்தினங்கள் பதித்துச் செய்த சித்திரத்தூண்கள் பொருந்திய மண்டபங்களும், நீண்ட நிலையையுடைய பலகணிகளும் அந்நகரமெங்கணும் விளங்கா நிற்கும்.

அன்ன சத்திரங்களும், சிவாகமம் பயின்றிடும் சைவர் மடங்களும், பிரமசாரி, கிருகஸ்தன், வானப்பிரஸ்தன், சந்நியாசி என்னும் நால்வகை ஆச்சிரமிகளும் வசிக்கும் இருக்கைகளும் வீதிகளின் இருமருங்கிலும் நெருங்கி யிருக்கும்.

அந்தணர் இல்லந்தோறும் மந்திரவிதிதவறாது செய்கின்றயாக குண்டத்து ஓமப்புகை நறுமணங்கமழும். அரசர், வணிகர், சூத்திரர்களுடைய இல்லந்தோறும் அவரவர் வருணத்திற்கியைந்த நல்ல சடங்குகள் பொலிந்திருக்கும். மேன்மாடங்கள் பொருந்திய வீடுகடோறும் பொன்னும், வெள்ளியும், நவரத்தினங்களும் பெண்களணிந்திருக்கின்ற ஆபரணங்களும் ஒளியை வீசி அங்கங்கேயுள்ள விருளையோட்டும். கடைவீதி, திரைகள் அசைதலினாலும் கொடிப் பவளங்கள் செழித்திருத்தலினாலும், வெண்முத்தும் வெண்சங்கும் மிக்கிருத்தலினாலும், இலக்குமி வசித்தலினாலும், எண்ணரிய கலன்கள் பரப்பப்பட் டிருத்தலினாலும் கடல்போலப் பொலிந்து விளங்கும்.

குபேரனது அளகாபுரியிலுள்ள செல்வங்க ளெல்லாம் ஒருகடைவீதியிலுள்ள செல்வங்களுக் கொப்பாகா. இலக்குமியும், சரசுவதியும் அந்நகரத்து மனைகள் தோறும் மகிழ்ந்து வீற்றிருப்பார்கள். வீதிகளிலே பரந்தெழுகின்றதுகள் அடங்கும் வண்ணம் பெண்கள் பனிநீரிற் கரைத்த சந்தனக் குழம்பைத் தெளிப்பார்கள். வேதிகைகளின்மேல் இரத்தினங்களைப்பரப்பி, பொன்னினாலும் வெள்ளியினாலும் செய்த பூரண கும்பங்களை வைப்பார்கள்.

பொன்மதில் உயர்ந்திருக்கும் புள்ளிருக்கு வேளூரில் இல்லந்தோறும் நல்ல கலியாணச் சிறப்பு நிலைபெற்றிருக்கும். அங்கே பிறந்த மானுடரும் மற்றைய வுயிர்களுஞ் சிவகணமாம்.

அந்நகரிலே செருந்தி, சண்பகம், பாதிரி, வில்வம், குருந்தம், ஆத்தி, மகிழ், தேமா, தேவதாரம், கோங்கம், மாதுளை, புன்னை என்னும் மரங்கள் பொருந்திய திருநந்தன வனம் அநேகம் உள்ளன.

முற்றிய பலாப்பழம் கனிந்தொழுகும் தேனும், பூக்களிதழ் விரிந்திடப் பெருகுந்தேனும், கண்களிக்கும்படி பூஞ் சோலைகளிலே கவின்பெற விளங்கும்.

புள்ளிருக்குவேளூரின் புராதனச் சிறப்பு முற்றும் சொல்லுதற்குத்தாமரை நள்ளிருக்கும் நான்முகனும், ஆயிரமுகமுறும் ஆதிசேடனும் எண்ணரும் பிறப்பெடுப்பினுஞ் சொல்ல முடியாதெனின், ஒரு முகமுடையே னொருபிறப்பில் ஒரு நாவாற் சொல்லுத லெங்ஙனம்? அங்ஙனமிருத்தலால் அச்சிறப்பிற் சிறிதறிந்தவாறுரைத்தேனென்று வழிநூலாசிரியர் கூறுவாராயினர்.

திருநகரச்சிறப்புமுற்றிற்று.

---

## க. நைமிசாரணியச்சருக்கம்.



இச்சருக்கத்தால், பிரமதேவர் விடுத்த சக்கரநேமி சென்று தங்கினமையின் நைமிசமெனப் பெயர் பெற்ற வனத்திலே சௌனகாதி நாற்பத்தெண்ணாயிரம் முனிவர்களுமிருந்து யாகஞ்செய்து தவமியற்றினமை கூறப்படுகின்றது.

சிருட்டிகர்த்தராய், திசைமுகராய், வேதவிற்பன்னராய், தாமரையாசனராய், கலைமகள்காதலராய், கண்ணுதற்கடவுட்கு நண்ணுமோர் சத்தியாய் விளங்கும் பிரமதேவர், தமது மனத்திருளாகிய அஞ்ஞானம் நீங்கித் தெளிவடையும் பொருட்டுச் சரசுவதி தேவியோடு காஞ்சீபுரத்தை யடைந்து கச்சபாலயம் என்னும் சிவாலயத்திலே சிவாகம விதிப்படி சிவபெருமானைப் பூசை செய்துகொண்டிருந்தார்.

இருக்கு நாளிலே சௌனகாதி முனிவர்கள், காஞ்சித் திருநகரத்தையடைந்து பிரமதேவரைத் தரிசித்து நமஸ்கரித்து, சற்காரவசனங் கூறி, அஞ்சலியஸ்தராய் நின்று, மனமுருகி, அவரைப் பார்த்து, சிருட்டி கர்த்தரே! அடியேங்கள் பிரமசரிய விரதமநுட்டித்து, பின்பு கிருகஸ்தர்களாய் இல்லற தருமத்தையியற்றி முடித்தேம். இனி வானப்பிரஸ்தர்களாய், யாகமும் தவமும் செய்து உய்ய விரும்புகின்றேம்; அவற்றிற்கேற்ற தபோவனம் இஃதெனவொன்றைத் தெரித்தருளல் வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தார்கள்.

அதுகேட்ட பிரமதேவர், ஒரு தருப்பையையெடுத்துச் சக்கரமாக்கி நிலத்திலுருட்டிவிட்டு, முனிவர்களே! நீவிர் இச்சக்கரத்தின் பின் செல்லுங்கள்; இது தங்குமிடத்தைத் தபோவனமாகக் கொள்ளுங்கள்; என்றருளிச் செய்தார். அவர்கள் அவ்வாஞ்ஞையைச் சிரமேற்கொண்டு அதன்பின் செல்ல, அது மேருமலைக்குத் தென்றிசையிலுள்ள ஒரு வனத்திற்சென்று தங்கிற்று. நேமிதங்கினமையின் நைமிசமெனப் பெயர்பெற்ற அவ்வனமே தாங்கள் யாகமும் தவமும் செய்தற்குரிய தானமெனக்கருதி அங்கே இருந்தார்கள். அது நிற்க.

இனி வழிநூலாசிரியர் அந்நைமிசாரணியத்தை வர்ணித்துக் கூறத்தொடங்குகின்றார். அது வருமாறு:—

அவ்வனத்திலுள்ள புன்னையுஞ் செருந்தியும் பூவைச் சொரிதல், சோலையாகியபெண், முனிவரது நல்வரவு கண்டு மகிழ்ச்சிகொண்டு வெள்ளி மலரையும் பொன் மலரையும் அவர்கள் திருவடியில் சொரிதல்போன்றிருக்கும். மரக் கொம்புகள் காற்றினாலடிக்கப்பட்டு அடிக்கடி நிலத்தில் வளைந்து தாழ்ந்தெழுதல், அப்பெண், அவர்கள் திருவடிகளில் தனித்தனி வணங்கி எழுதல்போன்றிருக்கும்.

அங்குள்ள சுனைகளில் வெண்மையான நீர் நிறைந்திருத்தல் முனிவர் நடந்துவந்த இளைப்பாறும்படி அப்பெண், அவர்கள் உண்ணுதற்கு வைத்த அமிர்தம்போன்றிருக்கும்.

சோலையில் வண்டுகள் ஒலித்தல், இங்கே பலாப்பழம், மாம்பழம், வாழைப்பழம், தேன், கிழங்கு முதலியவைகள் இருக்கின்றன; பசிதீர உண்ணுதற்கு வம்மினென்று அப்பெண் அவர்களை அழைத்தல் போன்றிருக்கும்.

இனி, அங்கேயுள்ள பாம்புகளும், மயில்களும் பகையின்றி மகிழ்ச்சியுடன் ஒன்றோடொன்று அன்பாயிருக்கும். பசுவும் புலியும் பகைதீர்ந்து ஒருசுனையில் ஒருங்கே நீருருந்தும்; யானையுஞ் சிங்கமும் ஒன்றையொன்று நினைத்துச் சென்று ஓரிடத்திற்கூடிநிற்கும். காட்டு மல்லிகையாகிய குளவி, பூவை யீன்றெடுக்கும். வேங்கைமரம், பூவாகிய புலிக்குட்டியைப்பெற்றெடுக்கும். குராமரம், மலராகிய பாவையையீன்றெடுக்கும்.

இன்னும் அந்நைமிசவனம் பற்பல வளங்களையும் இளமைப் பருவத்தையும், எட்டுச்சித்தியையும், கொடுத்

தலும், பிறப்பை யொழித்தலுமாகிய பற்பல அற்புதங்களை யுடையது.

அற்புதமாகிய அவ்வனத்தின் மத்தியில் தவாக்கினிச் சொலிப்பினாலும், செஞ்சடைத் தேசினாலும் அநேகஞ் சூரியர் போன்றிருக்கும் முனிவர்கள், சோலைவளங்களைப் பார்த்து, இது யாங்கள் யாகஞ்செய்தற்கேற்ற தானமென்று சந்தோஷமடைந்து, "விண்ணிலிருக்கும் விசுவகன்மனை மண்ணில் வரும்படி யெண்ணினார்கள்." எண்ணுமுன், அவன் அவரெதிரே வந்து நிற்க, அவர்களவனைக்கண்டு மகிழ்ந்து, "இவ்வனத்தில் யாங்கள் யாகஞ் செய்தற்குத் தகுந்த சாலையொன்று செய்யக்கடவா" யென்று பணித்தார்கள்.

விசுவகன்மன் முனிவர்சொல்லை மனத்திலிருத்தி, சிற்பநூல் விதியைச் சிந்தித்து, யாகசாலைக்குப் பதினாயிரம் யோசனைப் பரப்பு உள்ளேவைத்து, நான்குபக்கமுஞ் சுற்றளவு பதினாயிரம் யோசனையாகவும், உயரம் நாலாயிரம் யோசனையாகவும் மதிலையெடுத்து, நாற்றிசையிலும் ஆறாயிரம் யோசனை உயரமுடைய நான்கு சித்திரக் கோபுரங்களை யெழுப்பி, அக்கோபுர வாயில்களில் வச்சிர நிலைகளை நிறுத்தி, மரகதக் கதவுகளை இட்டு, உள்ளிடத்தில் இரத்தினத் தூண்களை வரிசையாக நிறுவி, பொற்றகட்டால் வேய்ந்த மண்டபங்களும், தேவ கோட்டங்களும், நிலாமுற்றங்களும், முனிவரொருங்கிருக்குங் கோயிலும், ஓமகுண்டமும், வேதிகையும், ஓமாக்கினி மூட்டும் தண்டிலத்தானமும், தேவரவியருந்துமிடமும், பலவகைப் பொருளு மொருங்குவைக்குங்களமும், சுருக்குச் சுருவம் தீக்கடைகோலிருக்கு நிலமும், யாகத்தம்பச் சூழலும், யாகப்பசுக் கட்டுந்தேயமும், பூமாலை, பணி

நீர், சந்தனம், பச்சைக் கர்ப்பூரம், பாக்கு, வெற்றிலை, தனித்தனி வைக்கும் வைப்புகளும், அன்னசாலையும், அந்தணர் பன்னசாலையும், பொற்பொக்கிஷ சாலையும், இரத்தின பொக்கிஷ சாலையும், முதிரைத் தானியம் தினை யவை குளநெல் எள்ளு பழவர்க்கம் யாகத்துக்குரிய மற்றைப்பொருள்கள் வைக்கும் இல்லங்களும், யாகசாலையைச்சூழ்ந்து தருப்பை, பொரி, மாவிலை, சமித்து, நெய் இருக்கும் வளாகங்களும், யாகசாலையில் தேவரிருத்தற்குப் பீடங்களும் பொருந்த யாகசாலையை விதிப்படி செய்துமுடித்து, நைமிச முனிவர் செய்ய சேவடி சேவித்து விடைபெற்று, விண்ணுலகத்திற்கு விசுவகன்மன் சென்றான்.

சௌனகர், சநகர், கற்கர், அகத்தியர், வியாக்கிரபாதர், அத்திரி, விசுவாமித்திரர், உரோமசர், குச்சகர், சுகர், துருவாசர், *குணி, பரத்துவாசர், காசிபர், வசிட்டர், சாந்தர், கார்த்தியாயனர், மரீசி, புலத்தியர், ஆணிமாண்டவியர், தாற்பியர், நாசிகேது, ஆத்திரேயர், நாரதர், பருவதாக்கினி, ததீசி, சிலாதரர், வாமதேவர், கிருதமாலிதர், மதங்கர், சுனச்சேபர், சனந்தரர், சனுதிபர், சாண்டில்லியர், பிருகு, இரைவதர், மாதேசர், பினுகி, மிருகண்டு, ஆங்கீரர், வைச்சிரவணர், சம்வர்த்தர், பார்க்கவர், கபிலர், நாதசன்மர், சமதக்கினி, பராசரர், மார்க்கண்டேயர், கண்ணுவர், உத்தாலகர், சாத்தியர், †குசிகோத்திரர், சுனப்புச்சர், வேதாரணியர் முதலிய முனிவர் யாவரும் முன்பு தாந்தாஞ்செய்த தவப்பயனே இவ்வுருவாய் வந்து சித்தித்ததென்று சொல்லிக்கொண்டு யாகசாலையையடைந்து அதனைக் கண்குளிரக்கண்டு இது ஈசுரகற்

* குணி-அஷ்டாவக்கிரர். இவர் கலைக்கோட்டு முனிவரின்சீடர்.

† குசிகோத்திரர்-கௌசிகர் பிதா; கௌசிகர்-விசுவாமித்திரர்.

